முதல் பதிப்பு : மே - 2009

இரண்டாம் பதிப்பு : ஜூலை - 2010



**RUDRA VEENAI (PART - II)**

Indra Soundarrajan

First Edition May - 2009

Second Edition: July - 2010

No. of Pages 472

Paper Used 11.6 N.s. Book Print

விலை ரூ. 250.00

**THIRUMAGAL NILAYAM**
New No.16, Old No.55,
Venkatnarayana Road,
T. Nagar, Cennai - 600 017

Last at : Goodiwll Computers, T. Nagar, Chennai - 17
E-mail goodwilltng@yahoo.co.in Cell 9444006583

அச்சிட்டோர் : மஞ்சு ஆப்செட், செல் : 90940 52427

# 1

## அன்று



**தோ**டிபுரம் வயல்வெளியில் நாற்று நடும் பணி ஒரு புறமும், களை எடுப்பது ஒரு புறமுமாக விவசாயப் பணிகள் மும்முரத்தில் இருக்கும்போது அந்த வயல்வெளியிலும் மெல்லிய அளவில் ஒரு வீணை இசை அவர்கள் காதை வருட ஆரம்பித்தது.

எங்கிருந்து வருகிறது... எப்படி வருகிறது... யார் வாசிக்கிறார்கள் என்பதுகூடத் தெரியாதவர்களாய் வயல்வெளியில் சேற்றுக்கால்களோடு நான்கு பக்கமும் பார்த்தனர்.

அற்புதமான ராகம்... அது அமிர்தவர்ஷினி என்பது அவர்களுக்குத் தெரிய வாய்ப்பில்லை. அதன் எதிரொலியோ, இல்லை தற்செயலாகவோ வானின் வடகிழக்கு மூலையில் மழை மேகக்கூட்டம் தெரிந்தது. அதுவும் திருவாரூர் தேர் திகுதிகுவென இழுக்கப்பட்டு வருகிறாற்போல வந்தபடி இருந்தது. சிறிது நேரத்திலேயே அடித்துப் பெய்ய ஆரம்பித்துவிட்டது மழை.

வயல்வெளிப் பக்கமாக சதாசிவ சாஸ்திரிகளும் வந்திருந்தார். மழை வலுக்கவும் எங்காவது பக்கமாய் ஒதுங்கலாம் என்று நினைத்தவர், பக்கத்தில் இருக்கும் ராசிக்கிணறுகளில் ஒன்றான மிதுனக் கேணியை ஒட்டிச் சென்று நின்றார்.

கேணியை ஒட்டி ஒரு வாதநாராயண மரம். அடர்ந்த அதன் நிழலில் நின்றுகொண்டவர் காதுகளுக்கு மிகத் தெளிவாகக் கேட்க ஆரம்பித்தது அந்த வீணை இசை! ஆச்சரியமாகிவிட்டது.

அவருக்கு மிகப் பரிச்சயமான அந்த ருத்ர வீணையின் இசை! மழைச் சலசலப்புக்கு நடுவிலும் பரம திவ்யமாக காது குளிர ஒலித்தது.

நாடி நரம்புகளை எல்லாம் குடைந்தது.

பாபா அவரை விட்டுச் சென்றுவிட்டாலும் அவரது விருப்பம் யாராலோ ஈடேறுகின்ற மாதிரிதான் தோன்றியது.

அவருக்கும் தெரியும்... வீரேந்திரன் ருத்ர வீணை இருந்த வஸ்திராபரண அறைக்குள் புகுந்து கதவைத் தாழிட்டுக் கொண்டது. அதன்பின் அவன் என்ன ஆனான் என்றே தெரியவில்லை.

அந்தர்யாமி என்பார்கள்.

இப்படித் தனி அறைக்குள் உடம்போடு புகுந்து பின் உடம்போடு ஆகாசம் ஏகுவதைத்தான் அந்தர்யாமி என்பார்கள்.

வீரேந்திரனும் அந்தர்யாமி ஆகிவிட்டானா?

அவரால் விளங்கிக் கொள்ள முடியவில்லை.

குழப்பமாக இருந்தது.

மழையும் சற்று நின்றது. வீணை இசையும் அதைத் தொடர்ந்து நின்றுவிட்டது.

ஒரு வினாடி அந்தக் கிணற்றை எட்டிப் பார்த்தார்.

தெளிவான நீர்ப்பரப்பு. அதற்குமேல் அவருக்கு அங்கே ஒன்றும் விளங்கவில்லை!

அப்படியே அங்கிருந்து சற்றே நனைந்த உடலுடன் ஆலயத்துக்குப் புறப்பட்டார்.

மண் தொடாத வான் நீரில் நனைவது என்பது கங்கையில் நீராடுவதற்கு சமம். கங்கை நீர் ஒன்றுதான் வானில் இருந்து உதிர்ந்து மண்ணில் பட்டு அதன் தன்மைக்கேற்ப மாறாமல் பனிக்கட்டியாக மாறி பின் உறைந்து அதன் பிறகே பூமிக்கு வந்து மண்ணில் படுகிறது.

எனவே மண்ணில் படாத நீரான மழை நீர் என்பது பலவித தோஷங்களைப் போக்கக்கூடியது. அதில் நீராடிய நிலையில் நேராக ஆலயம் செல்வது என்பது, தூய்மையாக நூற்றி எட்டு முறை ஆலயத்திற்கு சென்றதற்கு-சமமாகும்.

எனவேதான் சாஸ்திரங்களில் தலைசிறந்தவரான சாஸ்திரிகளும் நேராக கோவிலுக்குச் சென்றார்.

கோவில் முகப்பை நெருங்கும்போதே செண்டை, நாகராக்களின் தீவிர முழக்கம். மிக புதிய சப்தம். ஆவலாக உள் நுழைந்தவரின் எதிரில் வைஜெயந்தி கும்ப தீபம் ஏந்தியவளாக ஆடிக் கொண்டிருந்தாள்.

*சிவாலயங்களுக்கே உரித்தான தாசிகளின் நாட்டிய முறையிலான வழிபாடு. பார்க்க இரு கண்கள் போதவே போதாது. சாஸ்திரிகளும் அந்த வழிபாட்டைக் கண்குளிரக் கண்டார்.*

*பல மணித்துளிகளுக்குப் பிறகே பன்னிரு கும்ப தீபத்தை உற்சவ, மற்றும் மூலவ மூர்த்திகளுக்குக் காட்டும் வேளை வந்தது.*

*வைஜெயந்தியும் அந்த தீபாராதனையை உரிய முத்திரைகளுடன் முடித்துவிட்டு வெளியே வந்தாள்.*

*சாஸ்திரிகள் அவளையே வெறித்தபடி நின்றுகொண்டிருந்தார். இருவர் பார்வையிலும் சோகம். விழிகளில் அது பளிச்சிட்டது.*

*"என்ன மகளே... பாபாஜியை இழந்த வருத்தம் இன்னமும் உன்னை விட்டு நீங்கவில்லையா?"*

*"இல்லை சாஸ்திரிகளே... என் இரு கண்களில் ஒன்று போய்விட்டது போலத்தான் உணருகிறேன்"*

*"உண்மைதான்! பாபா ஒரு அதிசய மனிதர்..."*

*"அவர் மனிதரில்லை சாஸ்திரிகளே அவர் தெய்வீக புருஷர்!"*

*"ஆம்... ஆம்...! அவர் தெய்வீகமானவர்தான். ஆனால், சிரஞ்சீவியாக வாழாமல் நம்மை விட்டுவிட்டுப் போனதுதான் உறுத்துகிறது."*

*"அதுசரி... ஊர் முழுக்க ருத்ர வீணையின் இசையொலி கேட்கிறதே. அது எப்படி என்று சிந்தித்துப் பார்த்தாயா?"*

*"அப்படியா... நான் இங்கே கேட்டேன். அதுவும் சில மணித்துளிகள். சரி, யாராவது ஒரு வீணை வித்வான் வாசிக்கிறார் என்றே நினைத்தேன்."*

*"என்ன வைஜெயந்தி, இத்தனை சாதாரணமாக சொல்கிறாயே... ருத்ர வீணைக்கும் சாதாரண வீணைக்கும் உனக்கு வித்தியாசம் தெரியவில்லையா?"*

*"அப்படியா... நான் கேட்டது ருத்ர வீணையா?"*

*"ஆம்... அதுவேதான்! உள்ளே அதை அபகரிக்கச் சென்ற உன் சகோதரன் பற்றி ஏதாவது தெரிந்ததா?"*

*"அதுதான் பெரிய புதிராக இருக்கிறது சாஸ்திரிகளே..."*

*"அப்படியானால்...?"*

"வீரேந்திரன் விஷயம் விளங்கவேயில்லை. காபாலிகர்களோடு பழகி மாயமாய் மறையும் வித்தையைக் கற்றுக் கொண்டிருப்பானோ என்று எண்ணத் தோன்றுகிறது."

"அப்படியானால் எப்படி வீணை இசை ஊர் முழுக்க கேட்க முடியும்?"

"தெரியவில்லை சாஸ்திரிகளே... வீரேந்திரனால் திரும்பத் திரும்ப ஊருக்கு பிரச்சினைகள் வந்தபடியே இருக்கின்றன. அவனை எப்படிச் சமாளிப்பது என்றே தெரியவில்லை."

— வைஜெயந்தி உருகினாள். அப்பொழுது அங்கே அவளது வீட்டு சேடிப்பெண் தலைதெறிக்க ஓடிவந்தபடி இருந்தாள்!

## இன்று

**தோ**டிபுரம் போஸ்ட் ஆபீஸ்!

போஸ்ட் மாஸ்டர் 'ஐங்கு ஐங்கு' என்று அன்றைய டெஸ்பாட்ச் கடிதங்களுக்கு முத்திரை குத்திக் கொண்டிருந்தார்.

நடுவில் தொலைபேசி கிணுகிணுத்தது.

அந்த நாளைய தொலைபேசி... கறுப்பாக ட்ரக் வண்டியின் மினியேச்சர் மாடல் போல் இருந்தது.

"ஹலோ தோடிபுரம் போஸ்ட் ஆபீஸ்!" — குரல் கொடுத்தார் போஸ்ட் மாஸ்டர்.

"நான் ராமச்சந்திரன் பேசறேன்..."

"எந்த ராமச்சந்திரன்...?"

"என்ன அர்த்தநாரி... என்னைத் தெரியலியா...? சுந்தராம்பா புருஷன்யா..."

"ஓ.... அண்ணாவா...! அண்ணா எப்படி இருக்கேள்? எங்க இருந்து பேசறேள்?"

"தஞ்சாவூர்ல இருந்துதான். கொஞ்சம் சுந்தராம்பாளை தஞ்சாவூர்ல என் வீட்டுக்கு வரச்சொல்ல முடியுமா?"

"தாராளமா... இப்பவே சொல்லிடறேன்."

"ரொம்ப அவசரம்னு சொல் அர்த்தநாரி."

"அண்ணா! இப்பவே போறேன். நான் எந்த ராமச்சந்திரன்னு கேட்டதுக்காக தப்பா எடுத்துண்டுட வேண்டாம்."

"சேச்சே... அதெல்லாம் ஒண்ணுமில்ல அர்த்தநாரி..."

— ராமச்சந்திரன் மறுமுனையை முடக்க, அர்த்தநாரி என்கிற அந்த போஸ்ட் மாஸ்டர் அப்படியே போஸ்ட் ஆபீஸை போட்டுவிட்டு ஓடினார்.

பத்து வீடு தள்ளி இருந்தது சுந்தராம்பாளின் மனை.

வாசலிலேயே அமர்ந்து காவல் காத்துக் கொண்டிருந்தது அந்த நாய். போஸ்ட் மாஸ்டர் வரவும் ஊர்க்காரர், தெரிஞ்சவர் என்கிற வாஞ்சையுடன் வாலாட்டியது.

படுவேகமாக அவரும் உள்ளே நுழைந்தபோது ஒரு கர்ப்பிணிப் பெண் சுகப்பிரசவம் வேண்டி சுந்தராம்பாள் காலில் விழுந்து எழுந்தபடி இருந்தாள். பின் ஒரு தட்டில் பூ, பழம், ரவிக்கைத் துணி என்று அவள் பெற்றுக் கொள்ள, சுந்தராம்பாள் அதன் பிறகே மூச்சிளைக்க நிற்கும் அர்த்தநாரியை பார்த்தாள்.

"அடடே போஸ்ட் மாஸ்டரா? வாங்க..."

"அதான் வந்துட்டேனே ரொம்ப முக்கியமான விஷயம்மா."

"என்ன சொல்லுங்க."

"உங்க வீட்டுக்காரர் தஞ்சாவூர்ல இருந்து போன் பண்ணினார். நீங்க உடனே புறப்பட்டு வருவீங்களாம்."

"அப்படியா?"

"ஆமா... ரொம்ப அவசரமாம்...

"காரணம் ஏதாவது சொன்னாரா?"

"சொல்லலை... ரொம்ப அவசரம்னு மட்டும் சொன்னார்..."

— அடுத்த நொடி சுந்தராம்பாள் நெற்றியில் வரிக்கோடுகள் விழுந்தன. ஜெபமாலையும் கையுமாக அமர்ந்து ஜெபித்தபடி இருந்த பாட்டிகூட அதைக் கேட்டு விருட்டென்று நிமிர்ந்தாள்.

"ரொம்ப நன்றி போஸ்ட் மாஸ்டரே... நான் இப்பவே கிளம்பறேன்" என்றாள் அவரிடம்!

அவரும் விலக, பாட்டி கலக்கமுடன் பார்த்தாள்.

"என்னம்மா பாக்கறே...?"

"பயமா இருக்கு சுந்தரம்... அவருக்கு ஏதாவது உடம்புக்கு கிடம்புக்கு..."

"ஏம்மா கவலைப்படறே... என்னன்னுதான் போய்ப் பார்த்துட்டு வந்துடறேனே..."

— சுந்தராம்பாள் புறப்பட்டுவிட்டாள்.

அது ஒரு பெரிய பங்களா! முன்னால் போகன்வில்லா அடர்ந்து பரந்திருந்தது. கலீர் என்று பூக்கள். அந்த பங்களா பால்கனியில் கைகட்டியபடி நின்றுகொண்டிருந்தார் ராமச்சந்திரன். அவருக்கு அருகில் அவரது இரண்டாவது மனைவியான விமலா. அவள் முகத்தில் ஏனோ சுரத்தே இல்லை.

எங்கோ வெறித்தபடி அமர்ந்திருந்தாள்.

அவ்வப்போது ராமச்சந்திரனைப் பார்த்து "உங்க குடும்ப சாபம் இப்படிப் பலிக்கணுமா... எதுக்காக நீங்க என்னைக் கல்யாணம் செய்துகிட்டீங்களோ — 'அது வீணாப் போச்சே... என்று புலம்பிக் கொண்டே இருந்தாள்.

"விமலா... கொஞ்சம் சும்மா இருக்கியா?"

"எப்படிங்க இருக்க முடியும்... நினைக்க நினைக்க வயித்தைக் கலக்குதுங்களே..."

"பதட்டப்படாதே... சுந்தராம்பா நிச்சயம் ஒரு நல்ல வழி காட்டுவா பார்."

"காட்டியே தீரணுங்க. அக்கா மட்டும் இப்ப எனக்கு உதவலைன்னா நான் உயிரையே விட்ருவேங்க."

"காட்டுவா... நம்பு. அவ சாதாரண பெண் இல்ல. நம்ம வரைல அவ அந்த அம்பாள்."

"உண்மைதான். இல்லைன்னா ஒரு தம்புரா வாத்தியக்காரியான எனக்கு உங்களை விட்டுக் கொடுத்துருப்பாங்களா? இல்ல நமக்குதான் ஒரு வாரிசு உருவாகியிருக்குமா?"

— விமலா கலங்கிப் பெருகினாள் இதயம் விம்ம அழுதாள், நல்லவேளை! பங்களா முகப்பில் ஒரு ஆட்டோவின் தேக்கம்.

சுந்தராம்பாள் உதிர்ந்து கொண்டிருந்தாள்.

இருவர் கண்களும் அதைப் பார்த்துப் பளபளப்புக்கு மாறின. சுந்தராம்பாள் வேகத்துடன் உள்ளே நுழைந்தாள். விமலா அவளைப் பார்த்த நொடி அங்கிருந்து ஓடிவர ஆரம்பித்தாள்.

"அக்கா..."

— சுந்தராம்பாளும் கட்டி அணைத்துக் கொண்டாள். பின் கூந்தலை வருடியவளாக "விமலா... என்ன இது? என்ன ஆச்சு? எதுக்கு இந்த அழுகை... பதட்டமெல்லாம்..."

"எது நடக்கக்கூடாதோ அது நடந்திடிச்சேக்கா...?"

"என்ன நடந்தது... பதட்டப்படாம சொல்லு..."

"நம்ம பிள்ள அசோகனுக்கு...

"அசோகனுக்கு?" — சுந்தராம்பாளிடமும் பதட்டத் தொற்றுதல்.

"விமலா... நீ கொஞ்சம் சும்மா இரு. நான் சொல்றேன்." — ராமச்சந்திரன், விமலாவை தேற்றிவிட்டு அவர் பேச ஆரம்பித்தார். அதற்குமுன் ஹாலில் கிடந்த சோபாவில் சுந்தராம்பாளுக்கு கையை காட்டினார்.

அவளும் அமர்ந்தவளாக அவரை ஏறிட்டாள்.

விமலா அவளுக்கு அருகே தரையில் அமர்ந்தவளாக அவளது மடிமேல் தலையை சாய்த்துக் கொண்டாள்.

"சுந்தரம்... நான் சொல்றதக் கேட்டு நீயும் அதிர்ச்சி அடைஞ்சிடாதே..."

"என்னன்னு முதல்ல சொல்லுங்க... அசோகனுக்கு என்ன? அவன் இப்ப எங்க?"

"அவன் மனநிலை இப்ப சரியில்ல..."

"மனநிலை சரியில்லயா... அப்படின்னா?"

"பைத்தியம் பிடிச்சாப்பல இருக்கான். உடைச்சு சொல்லணுமாக்கும்?'

"அய்யோ... அவன் இப்ப எங்கங்க?"

"அந்த அறைலதான் இருக்கான். யார் கூடவும் பேச மாட்டேங்கறான். எப்பப் பார், சுவத்துல கரியால ஒரு உருவத்தை வரஞ்சுகிட்டு இருக்கான்!"

— அவர் சொல்லி முடிக்கும் முன்பே சுந்தராம்பாள் கிளம்பிவிட்டாள். அறைக் கதவைத் திறந்து கொண்டு நேரே அவன் எதிரில் சென்று நின்றாள்.

பதினெட்டு வயது இளைஞனாய் ஜீன்ஸ் பேண்ட்டும் டி ஷர்ட்டும் போட்டுக் கொண்டு விக்டர் பைக்கில் தஞ்சாவூர் தெருக்களையே கலக்கிக்கொண்டிருந்தவன் ஒரு பிள்ளைப்

பூச்சி போல உருமாறியிருந்தான். பைஜாமா குர்தா உடுப்பில் நெற்றி நிறைய விபூதிப் பட்டை வேறு.

சுந்தராம்பாளுக்கு அப்படியே கணுக்காலை முதலை கவ்வியது போல இருந்தது. சுவரிலும் அவன் வரைந்திருக்கும் உருவம் அப்படியே பாபாவை எதிரொலித்தது.

"பாபா...!" — திகைப்புடன் சுந்தராம்பாளும் வாயைத் திறந்தாள்.

"ஆமா சுந்தரம்... இந்த உருவம் நம்ம தோடிபுரம் கோவில்லகூட நாயன்மார் சிலை வரிசைல இருக்குல்ல?"

"அ... ஆமாங்க..."

"இந்த பாபாங்கறவர் வந்து நம்ம பங்களா முன்னால நின்னு குடிக்க தண்ணி கேட்டுருக்கார். ஒரு சொம்புல அசோகன் அவருக்கு தண்ணி கொடுத்திருக்கான். அப்ப அவரும் பார்த்து சிரிச்சாராம். அதுக்குப் பிறகுதான் இப்படி..."

"என்னது... பாபா இங்க வந்தாரா?"

"ஆமாம் சுந்தரம். அப்ப தெருவுல நம்ம பங்களா முன்னால தெருச் சலவைக்காரன் சலவை போட்டுக்கிட்டு இருந்தான். அவ்ன் கூர்ந்து கவனிச்சிருக்கான்."

"அப்படியா?"

"ஆமாம் சுந்தரம்... நீயே பார்..."

— அவர் வருத்தமுடன் அவனைப் பார்க்க, சுந்தராம் பாளும் அசோகனைப் பார்த்து, "அசோகா பெரியம்மா வந்துருக்கேன் பாரு" என்றாள். அவன் அவளைப் பார்த்து ஒரு முதிர்ந்த சிரிப்பு சிரித்தான்.

"பெரியம்மாடா... என்னைத் தெரியல...?"

— அவனோ தொடர்ந்து சிரித்தான்.

"டேய்... உனக்கு என்னடா ஆச்சு? ஏண்டா என் வயித்துல கறிவேப்பிலைக் கொத்து மாதிரி வந்து பொறந்துட்டு இப்படி படுத்தறே..."

— விமலா இடையில் ஆவேசத்துடன் ஒருமுறை வெடித் தாள். சுந்தராம்பாள் சமாதானம் செய்தாள் அசோகனை அணைக்க கைகளை நீட்டினாள்.

அவன் உதட்டில் அதே மர்மப் புன்னகை.

"சுந்தரம்... இது இன்னிக்கு நிலை இல்ல. ஒரு வாரத்து நிலை. சைக்கியாட்ரிஸ்ட் டாக்டர்கிட்ட காட்டிட்டேன். அவர் 'பெட்ல அட்மிட் பண்ணுங்க. ஷாக் ட்ரீட்மெண்ட் கொடுக்கணும்' கறார். விமலாவோ பயப்படறா. இவனை தோடிபுரத்துக்கு கூட்டிக்கிட்டு போனா, குறிப்பா இவன் உன்கிட்ட இருந்தாலே குணமாயிடுவான்னு சொல்றா விமலா."

— ராமச்சந்திரன் பக்குவமாக விஷயத்துக்கு வந்தார். சுந்தராம்பாளுக்கு ஹைவோல்ட்டேஜ் ஷாக் அடித்த மாதிரி இருந்தது.

"என்னங்க சொல்றீங்க?" — எகிறினாள்.

"தெரியும் சுந்தரம். நீ இப்படிப் பதறுவேன்னு தெரியும். ஆனா, எனக்கென்னவோ விமலா சொல்றதுதான் சரின்னு படுது."

"இல்லீங்க... அசோகன் அங்க வரக்கூடாதுங்க. எதுக்காக உங்களை நான் அங்க இருந்து போகச் சொன்னேன்? எதுக்கு விமலாவைக் கல்யாணம் பண்ணிவெச்சேன்? எல்லாம் இவனுக்காகத்தானே?"

"எல்லாம் தெரியுது சுந்தரம். ஆனா, இவன் இத்தனை வருஷத்துல ஒரு நாளாவது தோடிபுரத்துக்கு வந்துருப்பானா?"

"அதைத்தான் சொல்றேன்- இனியும் இவன் அந்த ஊருக்கு மட்டும் வரவேண்டாங்க..."

"இதோ பார். நீ சொன்னா அர்த்தமிருக்கும். உன்கிட்ட நான் கேட்க எவ்வளவோ கேள்விகள் இருக்கு. ஆனா நான் இதுநாள்வரை கேட்டதில்லை. சொல்றதா இருந்தா நீ சொல்லிடுவேன்னு எனக்கு தெரியும். அப்படிப்பட்ட நான் இப்ப உன் எண்ணத்துக்கு எதிரா பேசறதா மட்டும் நினைச்சிடாதே. என் பேச்சுக் கேள்."

"ஆமாங்க்கா- டாக்டர், டிஸ்பென்சரி, ஷாக் ட்ரீட்மெண்ட் இதெல்லாம் அவனால தாங்க முடியாதுக்கா. ஊர்ல யார் யார் பிரச்சினை எல்லாமோ தீர்த்து வைக்கிறீங்க. இவன் பிரச்சினையையும் தீர்த்து வையுங்கக்கா..."

— விமலாவும் கட்டிக் கொண்டு அழுதாள். சுந்தராம்பாள் அதற்குமேல் அவர்களிடம் மறுத்துப் பேசமுடியவில்லை.

அந்த நொடி விதியின் வலிமையைத்தான் நினைத்துக் கொண்டாள்!

ஒரு தோளில் வாழைத் தார்... ஒரு தோளில் பலாப்பழம் என்று ஒரு பழமூட்டையோடு அந்த தோப்பு வீட்டுக்குள் நுழைந்து கொண்டிருந்தான் தாண்டவன்.

பிரசிடெண்ட் கல்யாணசுந்தரத்தின் கைத்தடி.

உள்ளே நுழைந்தவனுக்கு ஏதோ தேவலோகத்துக்குள் நுழைந்த மாதிரி இருந்தது. சில தினங்களுக்கு முன் சாணியும், குப்பையுமாக தட்டுமுட்டுச் சாமான்களோடு நாறிக் கொண்டிருந்த இடம் அது.

இப்பொழுது தசாங்க வாசம், குத்துவிளக்குகளின் தீபஒளி என்று ஜெகஜ்ஜோதியாகத் தெரிந்தது. பிளந்த வாயை மூடாமல் பார்த்தவன் வாயினுள் சட்டென்று ஒரு கல்கண்டு வந்து விழும்படி செய்த உபாசகர் அவனைப் பார்த்து சிரித்தார்.

அவனும் நறநறவென்று கற்கண்டை மென்றவனாக "சாமி- சித்துவேலை, சித்து வேலைன்னு கேள்விப்பட்டிருக்கேன்- ஆனா இப்ப நேர்லயே பாக்கறேன் சாமி... எப்படி சாமி என் வாய்க் குள்ளார கல்கண்டு வரவழைச்சீங்க?" என்று கேட்டு சிரித் தான்.

அவர் அதற்கு பதிலேதும் கூறாமல் பழங்களைப் பார்த் தார்.

"யார் கொடுத்தது இது?"

"யாரு... நம்ம பிரசிடெண்ட் அய்யாதான்."

"அவருக்கு நான் நிறைய தர்மசங்கடத்தை கொடுத் துண்டே இருக்கேன்."

"அதெல்லாம் ஒண்ணுமில்ல சாமி. நீங்க வந்த பிறகுதான் அவருக்கே ஒரு தனித் தெம்பு வந்துருக்குது. அது தெரியுங்களா உங்களுக்கு?"

— தாண்டவன் ஒரு புதிய தகவலைச் சொன்னான். உபாசகர் அதற்குமேல் அவனிடம் வாயாட விரும்பவில்லை.

உள்ளுணர்வும் 'உனக்கு ஒரு அரிய காட்சி காத்துக் கொண்டிருக்கிறது. உடனே புறப்படு' என்றது.

"பழத்தை வெச்சுட்டியோல்லியோ... புறப்படு." என்று அவனைப் பார்த்தவர், அவன் விலகிய நொடி தானும் கிளம்பினார்.

குடிசை வாசலுக்கு வந்தவர் ஒரு எலுமிச்சம் பழத்தை எடுத்து நெற்றி முன் வைத்து மந்திரித்தவராக தனக்கு முன் தரையில் வைத்தார். அதுவும் ஏதோ சக்கரம் பொருத்தப்பட்ட மோட்டார் வண்டி போல குடுகுடு என்று ஓட ஆரம்பித்தது.

அதன் பின்னேயே அவரது நடை தொடர்ந்தது.

அது யாராலும் பார்க்க முடியாதபடி ஏதோ காற்றுக்கு உருளுகிற மாதிரிதான் உருண்டது. மேடு பள்ளங்களில் எல்லாம் ஏறி இறங்கிய அது, ஒரு தென்னந்தோப்புக்குள் நுழைந்து ஓடியது.

உபாசகருக்கு மூச்சிளைத்தது. ஒரு இடத்தில் அப்படியே அது தேங்கி நிற்க, அருகில் ஒரு சிறு அரச மரத்துப் பிள்ளையார் கோவில். பிள்ளையாரைப் பார்த்தவர், "கணநாதா..." என்கிற முணுமுணுப்போடு கன்னத்தில் போட்டுக் கொண்டார். குனிந்து எலுமிச்சம் பழத்தையும் எடுத்து இடுப்பில் செருகிக் கொண் டார். அதே சமயம் எதிரில் கார் ஒன்று புழுதிக் கவளங்களோடு வரும் சப்தம்.

சட்டென்று அருகில் உள்ள மரத்துக்குப் பின்னால் ஒளிந்தார்.

கார் பிள்ளையார் கோவில் முகப்பு முன்தான் நின்றது. கதவுகள் திறந்து கொள்ள, உள்ளிருந்து இறங்கிய நபர்களைப் பார்க்கவும் உபாசகருக்கு ஆச்சரியம் அப்பி எடுத்தது.

காரில் இருந்து தாசி சுந்தராம்பாளும், அவளது கணவர் ராமச்சந்திரன், மனைவி விமலா இவர்களுடன் அவர்களது ஆசை மகன் அசோகனும் இறங்கினார்கள்.

அசோகனைப் பார்த்த மாத்திரத்தில் அவன் ஒரு பைத்தியம் என்பது விளங்கிவிட்டது. பித்துப் பிடித்தவர்கள் அண்ணாந்து எங்கோ ஒரு இடத்தை வெறித்துப் பார்ப்பது போல பார்த்தபடி நின்றான்.

வெண்ணிறத்தில் ஜிப்பா பைஜாமா அணிந்திருந்தான். நெற்றி கொள்ளாதபடி திருநீறு. அருகில் அவனையே பார்த்த படி வெறித்துக் கொண்டிருந்தாள் விமலா.

கறிவேப்பிலைக் கொத்துபோல ஒரே ஒரு பிள்ளை. அவனுக்குப் போய் இப்படி ஆகிவிட்டதே என்கிற கவலை அவள் முகம் முழுக்க பரவியிருந்தது. பார்க்க லட்சணமான முகம் இந்த சோகத்தால் கறுத்துப் போய்விட்டிருந்தது.

சுந்தராம்பாளும், ராமச்சந்திரனும் முன்பக்கம் கையைக் கட்டிக்கொண்டு யாரையோ எதிர்பார்த்து காத்துக்கொண்டிருந்தனர். அருகிலேயே அரசமரத்தடி பிள்ளையார். உபாசகருக்கு இருப்பு கொள்ளவில்லை. 'இவர்கள் காத்துக் கொண்டிருப்பது யாருக்காக... அடுத்து என்ன நடக்கப் போகிறது தெரியவில்லையே' என்று அவர் பதைத்தபடி இருக்க, விடையாக ஒரு கூடையோடு திலகம் அவர்களை நோக்கி நடந்து வந்தபடி இருந்தாள் எப்பொழுதும் சுந்தராம்பாளைப் பிரிந்திராத திலகம், இப்படித் தனியாக ஒரு கூடையுடன் வருவது உபாசகர் வரையில் ஆச்சரியத்தை அள்ளி இறைத்தது. அவளும் அவர்களை நெருங்கி சற்று தாமதமாகிவிட்டதற்காக தனது வருத்தத்தை தெரிவித்துக் கொண்டாள்.

"அடடா நீங்க வந்துட்டீங்களா! தவிட்டை வாங்கி கூடைல போட்டு எடுத்துக்கிட்டு வர்றதுக்குள்ளே நேரமாயிடிச்சும்மா..."

"பரவாயில்ல... எத்தனை படி தவிடு வாங்கிட்டு வந்துருக்கே?" — சுந்தராம்பாள் கேட்டாள்.

"நீங்க சொன்னபடி மூணு படி தவிடும்மா..."

"நல்லது திலகம்... முதல்ல பிள்ளையாருக்கு இந்த பூவைப் போட்டு கற்பூரத்தை ஏத்து..."

— சுந்தராம்பாள் சொல்ல, அப்படியே செய்யத் தொடங்கினாள் திலகம்.

பார்த்துக்கொண்டேயிருந்த உபாசகர் கண்களில் ஒரு அதீத கவனிப்பு. அடுத்து அசோகனை கையைப் பிடித்து இழுத்துப் பிள்ளையார் முன் நிறுத்தினாள். கற்பூரம் எரிந்து கொண்டிருந்தது.

இந்தப் பக்கமாய் அசோகனுடன் ராமச்சந்திரனும் விமலாவும் நிற்க, எதிரில் தவிட்டுக் கூடையுடன் திலகம் நின்றாள்.

நடுவில் கற்பூரத்துக்கு முன்னால் சுந்தராம்பாள் நின்று கொண்டு இரு தரப்பையும் பார்த்தாள். எதற்கும் கலங்காதவர்

ராமச்சந்திரன். அவர் கண்களே கலங்கிவிட்டிருந்தன. அதற்கு மேல் விமலா. விசும்பி வெடிக்கத் தொடங்கிவிட்டாள்.

"அழாத விமலா உன் பிள்ளையை நீ ஒரு சம்பிர தாயத்துக்குத்தான் தவிட்டுக்கு விக்கறே; இப்படிச் செய்யாம இவன் தோடிபுரத்துக்குள்ளே வரக்கூடாது. வந்தா..." — எதையோ சொல்ல வந்தவள் அடக்கிக்கொண்டு திலகத்தைப் பார்த்தாள்.

"திலகம்... உனக்கு அசோகனை வாங்கிக்கறதுல ஆட்சேபணை இல்லையே...?"

— திலகம் தலை பதிலுக்கு ஆடியது.

"சரி... இந்த பிள்ளையார் சாட்சிக்கு இருக்க, மூணு படி தவிட்டுக்கு இவங்க தன் மகனை உனக்கு விக்கறாங்க. இனி இந்த அசோகன் உன் மகன்..."

— சுந்தராம்பாள் சொல்ல, அசோகனை திலகம் அழைத்துக்கொண்டாள். கூடையும் அவள் கையில் இருந்து விமலா கைக்கு மாறியது.

அந்த நொடி விமலா அலறிய அலறலில் அந்த பகுதியே நடுங்கியது. சுந்தராம்பாளும், ராமச்சந்திரனும் சமாதானம் செய்தனர்.

"விமலா... என்ன இது? அசோகனுடைய நன்மைக்காகத் தான் இப்படிச் செய்யறோம். சுந்தரம் காரணம் இல்லாம இதையெல்லாம் சொல்லவோ, செய்யவோ மாட்டா... தயவு செய்து உணர்ச்சிவசப்படாம அவ பேச்சைக் கேள். அதுதான் எல்லோருக்கும் நல்லது."

— ராமச்சந்திரன், விமலாவை தேற்றிவிட்டு சுந்தராம் பாளைப் பார்த்தார். அவள் கண்களிலும் லேசான கண்ணீர்!

"சுந்தரம்... நீயுமா அழறே?"

"ஏங்க... எனக்கு இதயம் இல்லையா?"

"வாஸ்தவம்தான்... நீயும் அசோகனுக்கு ஒரு அம்மாதானே... நான்தான் தப்பா கேட்டுட்டேன். சரி, அடுத்து என்ன செய்யணும்?"

"இனி இவன் ஊருக்குள்ற வரலாம். பாதிப்பு இருக்காது. அதே சமயம் இவன் நம்ம வீட்ல தங்கக் கூடாது..."

"அப்படின்னா இவன் இந்த ஊர்ல யார் வீட்ல இருக்க முடியும்?"

"கோவில் பட்டர் வீடு இருக்கு. என் பால்ய ஸ்நேகிதியோட புருஷன்தானே அவர். அவர் மக்களும் என் மக்களைப் போலத் தான். அசோகன் அங்க அவங்ககூட இருந்தாதான் சீக்கிரமா குணமாவான்..."

சுந்தராம்பாள் கூறவும், ராமச்சந்திரனும், விமலாவும் மௌனமாய் காரை நோக்கி நடந்தனர். திலகமும் அசோக னுடன் நடந்தாள்.

ஒளிந்தபடி பார்த்துக்கொண்டே இருந்த உபாசகர் மனதுக்குள் சில புதிய கேள்விகள்.

'யார் இந்த அசோகன்...?'

'இவன் ஏன் தவிட்டுக்கு விற்கப்பட்டான்?'

'இவன் சுந்தராம்பாள் மகனாக ஊருக்குள் ஏன் வரக்கூடாது?'

'இந்த கேள்விகளுக்குப் பின்னால் பெரிய அளவில் ஒரு மர்மம் இருக்கிறது. அது என்ன என்று பார்த்துவிடவேண்டும்' என்று முடிவெடுத்தவர் நேராக பிள்ளையார் அருகே போய் நின்று வணங்கிவிட்டு திரும்பிப் பார்த்தார்.

கார் ஊருக்குள் நுழைந்து கொண்டிருந்தது!

## ௨



## அன்று

**வை**ஜெயந்தி வீட்டுக்குள் ஓடிவந்து நுழைந்த சேடிப் பெண் முகத்தில் அதீத துடிப்பு... அதீத பரபரப்பு! வைஜெயந்தியும் சாஸ்திரிகளும் அதைப் பார்த்தனர்.

"என்னடி... எதற்காக இப்படி ஓடிவருகிறாய்...? என்ன சேதி?"

"அம்மா அம்மா — அவளுக்கு மீண்டும் மூச்சு இளைத்தது.

"முதலில் சற்று ஓய்வுகொள். பிறகு கூறு. எதற்கு இந்த அநாவசியப் பதட்டம்?"

"யாரென்றே தெரியவில்லை. பார்ப்பதற்கு வடநாட்டவர்கள் என்பது மட்டும் தெரிகின்றது. ஆஜானுபாகுவாக இருக்கின்றார்கள் நமது ஆலயத்துக்கு வந்தவர்கள் அங்கு உள்ளவர்களிடம் 'நவாப் ஜான் பாபாவை பார்த்தீர்களா...? எங்கே அவர்' என்று கேட்டனர். அதற்கு அவர்களும் 'அவர் அமரராகிவிட்டார். அவரது சமாதிகூட நவரத்ன மாளிகையில் தான் உள்ளது' என்றனர். அவர்களோ இவர்கள் கூறியதை நம்பாமல் 'பாபா சாகாவரம் பெற்றவர். அவர் உயிரோடுதான் இருக்கிறார். நீங்கள் பொய் கூறுகிறீர்கள்' என்று ஒரே ரகளை... இறுதியில் அது அடிதடி வரை போய்விட்டது. அவர்களை சமாளிக்கவும் முடியவில்லை" என்றாள் சேடிப்பெண்.

வைஜெயந்திக்குள் 'இது என்ன புதிய சிக்கல்' என்கிற முண்டுதல். எதிரே நிற்கும் சாஸ்திரிகளைப் பார்த்தாள்.

"என்ன பார்க்கிறாய் வைஜெயந்தி... நீ இந்த ஊரின் தலையாரி மற்றும் பாளையக்காரர்களுக்கு சமமாக அதிகாரம்

படைத்தவள். ஊரின் நலம்தான் உன் நலம். உடனே புறப்படு என்னவென்று பார்..."

"நீங்களும் வாருங்கள் சாஸ்திரிகளே. இன்று என் கணவர் வேறு இங்கு இல்லை. தஞ்சை சென்று விட்டார்."

"அதனால் என்ன... தாராளமாய் வருகிறேன். உம்... புறப்படு!"

— சாஸ்திரிகள் அவளுடன் புறப்பட்டார்.

**தோ**டிபுரம் ஆலயத்தின்முன் மதர்ப்பாய் ஐந்தாறு புரவிகள். அவைகளின் சேணக்கட்டு முதல், ஆசன இருக்கை வரை எங்கும் காணாத விதத்தில் புதிதாக இருந்தன.

முதலில் அந்த புரவிகளைப் பார்த்த வைஜெயந்தி உள்ளே நுழைந்தாள். உடனே தொடர்ந்தார் சாஸ்திரிகள்.

உள்ளே நுழைந்த மாத்திரத்தில் அவள் கண்ட காட்சி அதிர்ச்சியை அளித்தது. கல்மண்டபத்தில் கோவிலுக்கு வந்த வர்கள் கல்தூண்களில் கட்டிப் போடப்பட்டிருக்க அவர்களைச் சுற்றி ஆறு பேர் நேபாள நாட்டவர்கள்போல சப்பை மூக்கும் பூசினாற்போன்ற கண்களுமாய் தென்பட்டனர். அவர்கள் இடையில் அன்னை துர்காவின் இடையில் இருப்பது போல வளைவான வீரவாள்.

கறுப்பு நிறத்தில் அவர்கள் தலைப்பாகை அணிந்திருந்த னர். கையில் நீண்ட முதலைத் தோல் சவுக்கு. அதில் நாய்ப் பற்களையும், காட்டுப் பூனையின் பற்களையும் பொருத்தி இறுக்கக்கட்டியிருந்தனர். சவுக்கால் முதுகுப்புறம் விளாசும் போது அந்த பற்கள் பட்டால் அப்படியே அந்த விலங்கே முதுகைக் கடித்து கவ்வி இழுப்பது போல இருக்கும்.

'இப்படி கோரமாய் செயல்படுவது சில மலைக்கள்ளர்கள் மற்றும் கடற்கொள்ளையர்களின் வழக்கம். அவர்கள்தான் ஈவு இரக்கமே இல்லாதவர்கள்.

இவர்களும் அப்படிப்பட்டவர்களோ?'

வைஜெயந்தி நினைப்புடன் அவர்களை நெருங்கும்போது தலையாரி முதல் பலரும் அங்கே கட்டப்பட்டிருப்பது தெரிந்தது.

தலையாரி உடனே அவளைப் பார்த்து அலறினார்.

"அம்மா போய்விடு! இவர்கள் ஈவு இரக்கமற்ற அரக்கர்கள் நமது அரசருக்குத் தகவல் கொடுத்து படை வீரர்கள் வந்தால்தான் நாங்கள் உயிர் தப்பிப்போம்..."

— வெகு வேகமாக பேசிய அவர் வாய் மேலேயே ஒருவன் முஷ்டியை மடித்து ஒரு குத்து குத்தினான். அடுத்த வினாடி அவரது வாய் தாம்பூலம் போட்டாற் போல சிவந்துவிட்டது.

வைஜெயந்திக்கு அதைப் பார்க்கவும் உடம்பெல்லாம் நடுங்கியது.

"யார் நீங்கள்...? உங்களுக்கு என்ன வேண்டும்? எதற்காக இவர்களைக் கட்டிவைத்திருக்கிறீர்கள்...? ஊரார் ஒட்டு மொத்தமாய் திரண்டு வந்தால் உங்கள் கதி என்னாகும் தெரியுமா?"

— வைஜெயந்தி சரியாகத்தான் கேட்டாள். ஆனால், அவர்கள் அதற்கு பதிலுக்கு சிரித்தனர். ஒருவன் மட்டும் சற்று முன்வந்தான். அவன் மட்டும் கட்டை குட்டையாக மூன்றடி உயரம்தான் இருந்தான்.

"அம்மணி... இவர்களுக்கு உன் பாஷை புரியாது. இவர்களில் நான் மட்டுமே நீ பேசுவது புரிந்தவன். நான்தான் இவர்களுக்கு துபாஷ்."

"அப்படி என்றால்..."

"மொழிபெயர்ப்பாளன். எனக்கு பதினாறு மொழிகள் தெரியும். நான் குடகுமலையைச் சேர்ந்தவன்."

"சரி... இங்கு வந்து இப்படி இவர்களைக் கட்டி வைத்திருப்பதன் நோக்கம்...?"

"உன்னை இங்கே வரவழைக்கத்தான்..."

"என்னை வரவழைக்கக் காரணம்?"

"அந்த பாபாஜி எங்கே...? அவரை எங்களிடம் ஒப்படைத்துவிடு."

"என்ன பைத்தியக்காரத்தனம் இது! அவர் இறந்து இன்றுடன் மூன்று நாட்கள் ஆகின்றன."

"பொய். அவர் சாகாவரம் பெற்றவர்,"

"அது எனக்குத் தெரியாது. அவரைப் புதைத்த சமாதியின் ஈரம்கூட காயவில்லை. அது சரி... அவரை எதற்கு தேடுகிறீர்கள்...?"

"எங்களிடம் இருக்கவேண்டிய ஒரு அரிய பொக்கிஷம் அவரிடம் இருக்கிறது. அதற்காகத்தான்..."

"எது... அந்த ருத்ர வீணையா?"

“ஆம். அதுவேதான்... அதுவேதான்... அவர் இப்போது எங்கே? அதுவும் எங்குள்ளது?”

“அவர் இறந்துவிட்டார் என்றேனே... எதற்கு இப்படி திருப்பித் திருப்பி கேட்கிறீர்கள்...?”

“நீ பொய் சொல்கிறாய். ருத்ர வீணையை வைத்திருப்பவனுக்கு மரணம் கிடையாது. அதைப் புரிந்துகொள்...”

“ஆச்சரியமூட்டும் பதில் இது. ஆனால், அவர் இறந்துவிட்டதுதான் சத்தியம்.”

“உனக்கென்ன பைத்தியமா...? நான் சொல்வது உன் காதில் விழவில்லை? ருத்ர வீணையை உடையவர்களுக்கு மரணம் கிடையாது. அப்படித்தான் பல நூறு ஆண்டுகள் எங்கள் தலைவர் உயிருடன் இருந்தார் அவரிடம் இருந்து அது எப்படியோ ஒரு இமயமலை யோகியிடம் சென்றுவிட்டது. அங்கிருந்து இந்த பாபா மூலமாக இந்த ஊருக்கு வந்துவிட்டது. எங்களுக்கு அதுவும், அதை அபகரித்த பாபாவும் வேண்டும்.”

“நீங்கள் எந்த நாட்டவர்? முதலில் அதைச் சொல்லுங்கள்...”

“நாங்கள் நேபாளத்து பூர்விகள். ஆனால் மந்திரபுரியான ஷிமோகாபட்டினம் எங்கள் ஊர். வராகதேவி எங்கள் காவல் தெய்வம். எங்கள் பட்டினத்தில் ஆதிகாளியின் பீடம் ஒன்று உண்டு. அங்கே அனுதினமும் ருத்ர வீணையால் இசைவேள்வியும் அதன் பலனாக மாபெரும் விளைவுகளும் நேரிட்டு வந்தன. இந்த பூவுலகின் மூலை முடுக்கில் இருந்தெல்லாம் எங்கள் பட்டினத்துக்கு வருவார்கள். வருபவர்களின் குறையைத் தீர்த்து அனுப்புவதுதான் எங்கள் கடமையும்கூட.”

“நல்லது... ஆனால், நான் இப்பொழுது உங்களுக்கு உதவும் நிலையில் இல்லை. பாபாவும் எங்களைவிட்டுச் சென்றுவிட்டார்.”

“இதை நான் நம்பத் தயாரில்லை. போகட்டும். அவர் இறந்துவிட்டார் என்றால் அவர் வைத்திருந்த அந்த ருத்ர வீணை?”

“அதுவும் மாயமாகிவிட்டது...!”

“என்ன உளறுகிறாய்... மாயங்களுக்கு நாங்கள் விரிவுரை எழுதுபவர்கள். எங்களிடமே அது மாயமாகிவிட்டது என்கிறாயே...”

"ஐயோ... உங்களுக்கு என்ன சொல்லிப் புரியவைப்பேன்!"

"வைஜெயந்தி... இவர்களிடம் என்ன பேச்சு. வா நாம் நம் அரசருக்கு செய்தி தந்து காவல் படைவீரர்களை வரவழைப்போம்."

— சாஸ்திரிகள் இடையில் புகுந்து கர்ஜித்தார். அது அந்த குள்ளனை உசுப்பியது. ஒரு குதிகுதித்து ஓங்கி அவர் கன்னத்தில் அறைந்தான். தடுமாறி விழப்போனவர் தொங்கிக்கொண்டிருந்த கோவில் மணியின் கயிற்றைப் பிடித்துக்கொண்டு நிற்க முயன்றார்.

அதே சமயம் மணியும் ஒலித்தது...

ஓங்கி ஒலித்த அதன் நாதம் வெகு தூரம் கேட்டது. சட்டென்று சாஸ்திரிகளுக்குள் ஒரு புதிய எண்ணம். மிக வேகமாக அந்த மணியை அடிக்க ஆரம்பித்தார் — ஊரில் உள்ளவர்கள் என்னவோ ஏதோ என்று ஒன்றுதிரண்டு வரவேண்டும் என்கிற நோக்கில்... ஆனால், அந்த நேபாளிகளில் ஒருவன் கூர்மையாக சாஸ்திரிகளைப் பார்த்த நொடி அவரது கைகள் செயலிழக்க, அவர் பொத்தென்று கீழே விழுந்தார்.

அவர் சுருண்டு விழவும் வைஜெயந்தி அப்படியே நடுங்கிப் போய்விட்டாள்.

அவள் கண் எதிரில் காணும் ஒரு பெரும் மாயமாக அந்த விஷயம் அமைந்துவிட்டது. சாஸ்திரிகளும் கால் கைகள் செயலிழந்தவராக தரையில் விழ, உதடுகளும் கோணிக்கொள்ள — அவரை அந்த கதிக்கு ஆளாக்கியவன் வைஜெயந்தியைத் தான் இப்பொழுது பார்த்தான்.

அந்த பார்வையே 'நான் எந்த அளவு சக்தி படைத்தவன் என்பதைப் புரிந்து கொள்' என்று சொல்கிற மாதிரி இருந்தது. வைஜெயந்திக்கு சப்த நாடியும் ஒடுங்கிவிட்டது.

தன்னை ஒரு தினுசாகப் பார்த்தவனை வெறித்துப் பார்த்தாள். அவன் துபாஷாக ஒரு 'மொழிபெயர்ப்பாள'னாக திகழும் குள்ள மனிதனைப் பார்த்தான். தனது தாய் பாஷையில் அவனிடம் என்னவோ சொன்னான். குள்ளனும் உடனே அதை வைஜெயந்தியிடம் மொழிபெயர்க்கத் தொடங்கினான்.

"பெண்ணே... எங்களை யாராவது எதிர்க்க நினைத்தால் அவர்கள் நிலை இப்படித்தான் ஆகும். கண்ணால் பார்த்தே

ஒருவரை விழ வைப்பதில் நிகரற்றவர் அவர். இந்த வித்தைக்குப் பெயர் நேத்ர களரி என்பதாகும்.''

குள்ளனின் விளக்கத்தைக் கேட்டு வைஜெயந்திக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. ஒடுங்கிக் கிடக்கும் ஊர் மக்களும் அவளை ஒரு தினுசாகப் பார்த்தார்கள். தலையாரியில் இருந்து எல்லோரும் அடங்கி ஒடுங்கிக் கிடக்க, தோடீஸ்வரர் ஆலயத்திற்கே ஒரு புதுவித சோதனை ஏற்பட்டது போல் தோன்றியது.

“இப்பொழுது கூட ஒன்றும் கெட்டுவிடவில்லை. அந்த ருத்ர வீணை இருக்கும் இடத்தை சொல்லிவிடுங்கள். அது இருக்கும் இடம் தெரிந்தால்போதும், நாங்களே சென்று எடுத்துக் கொள்கிறோம்...''

— அந்த குள்ளன் திரும்பவும் அந்த பழைய பல்லவியையே பாடினான்.

“உனக்கு நான் எத்தனை முறை கூறுவேன். இவ்வளவு பேர் இக்கட்டில் இருக்கும்போது நான் வேடிக்கை பார்ப்பேனா... சத்தியமாகச் சொல்கிறேன்... எனக்கு எதுவுமே தெரியாது.

அந்த வீணையை மட்டுமல்ல — நான் என் உடன் பிறந்தவனையும் இழந்தே நிற்கிறேன்.''

— வைஜெயந்தி கண்ணீர் மல்கினாள். அவள் நின்றிருந்த இடத்திற்கு நேர் எதிரில் இருந்தது தோடீஸ்வரர் சந்நிதி. தீபஒளியில் அதன் லிங்க வடிவம் பளிச்சென்று தெரிந்தது.

வைஜெயந்திக்கு அந்த நொடி இறைவனைச் சரணடை வதைத் தவிர வேறு வழியிருப்பதாகத் தெரியவில்லை. கால் சதங்கை சப்தமிட நேராக சந்நிதி நோக்கி ஓடினாள்.

“தேவ தேவா நடராஜா இந்த சோதனையான கட்டத்தில் இருந்து என்னைக் காப்பாற்று.''

— வாய்விட்டுப் புலம்பியவளாக அப்படியே சந்நிதிக் கதவுமுன் விழுந்தாள். விழுந்த வேகத்தில் மயங்கியும் விட்டாள்.

பார்த்துக் கொண்டேயிருந்த அந்த நேப்பாள மாயாவிகள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். ஊர் ஜனங் களும் பரிதாபமாக பார்த்துக் கொண்டனர்.

தரையில் ஒரு மரவட்டைப் பூச்சிபோல சுருண்டு கிடந்த சதாசிவ சாஸ்திரிகளும் முனங்கினார். அப்பொழுது அங்கே

ஒரு அதிசயமும் நிகழ ஆரம்பித்தது. ஆலயத்து மணியை யாரோ கயிற்றைப் பற்றி இழுப்பது போலத் தோன்றியது. அதுவும் வேகமாக ஒலிக்கத் தொடங்கியது.

அந்த நேப்பாள மயாவிகளுக்கே மணியை ஒலிப்பது யார் என்பதில் குழப்பம் மேலிட்டது. மணியருகே சென்று கயிற்றின் முடிவுப் பாகத்தை பார்த்தனர். அதை புகைபோல ஒரு உருவம் பற்றிக் கொண்டிருப்பது போல் தோன்றியது.

அவர்கள் ஆவிச் சொரூபங்களைப் பார்க்கும் வல்லமை உடையவர்கள் அதற்கான வல்லமையைத் தரும் மையை புருவத்தில் பூசியிருப்பவர்கள். அதனால் அவர்கள் கண்களுக்கும் அந்த உருவம் பளிச்சென்று தெரிந்தது.

அவர்களில் சற்றே வயதில் முதிர்ந்த ஒரு மாயாவி தன் கைகளை அசைத்து சில முத்திரைகளை மேற்கொண்டு அந்த ஆவிக்குரியவர் யார் என்று பார்க்க முனைந்தான். அப்படி பார்த்த மாத்திரத்தில் அவன் முகத்தில் ஏராளமாய் அதிர்ச்சியும் பரவியது.

அவன் உதடுகள் 'பாபா' என்று முணுமுணுத்தன. இதை மற்றவர்களும் கவனித்தனர். அவர்களுக்கும் புரிந்துவிட்டது.

அந்த வயதானவனின் பெயர் திப்பா.

"திப்பா... அது பாபாவா?" ஒருவன் கேட்டான்.

"ஆமாம்... பாபா இறந்துவிட்டது உண்மைதான். அதே சமயம் சூட்சம உடல் கிட்டாத நிலையில் ஆவியாக இங்கேயே சஞ்சரித்துக் கொண்டுமிருக்கிறார். சாதாரணமாக ஆலயங்கள் இருக்கும் பக்கம் யந்த்ர பலமும், மந்திரபலமும் மிகுதியாக இருக்கும். அவை மிகுந்துள்ள இடங்களில் ஆவிச் சொரூபங்க ளால் ஊடுருவ முடியாது. ஆனால், இங்கே பாபாவால் ஊடுருவ முடிந்திருக்கிறது. திடப்பொருளான மணியையும் அசைக்க முடிந்திருக்கிறது என்றால் உண்மையில் அது பெரிய விந்தை... நாம் அறிந்த மந்திர தந்திரங்களை மீறி நடந்திருக்கும் ஒரு செயலாகவே இதனை நான் பார்க்கிறேன்..."

— அந்த திப்பா என்கிற கிழவன் சற்றே நடுக்கத்தோடு முணுமுணுத்த.அதே சமயம் மணிசப்தம் கேட்டு தோடிபுரத்தின் காவல் சாவடி வீரர்கள் முதல் வீட்டுக்குள் அடங்கிக் கிடப்ப வர்கள் வரை ஒன்றுதிரண்டு வர ஆரம்பித்துவிட்டார்கள்.

திபுதிபுவென்று கூட்டம் சேரவும் மணி சப்தமும் ஓய்ந்தது. யாராலும் உணர முடியாத அளவு ஒரு வகை நிசப்தம் சட்டென்று ஆட்கொண்டிட, அந்த நேப்பாளிகள் ஊரே சுற்றிவளைத்து நிற்பதைப் பார்த்து சற்றே அச்சம் கொண்டு அடுத்து என்ன செய்யலாம் என்பதுபோல சிந்திக்கையில் அடுத்த கட்ட அதிசயமாய் ருத்ர வீணையின் இனிய நாதம் காதில் கேட்க ஆரம்பித்தது.

யார், எங்கே, எப்படி வாசிக்கிறார்கள் என்பதே தெரியாதபடி ஒரு அற்புத ராகமாய் அது வெளிப்பட ஆரம்பித்தது. முதலில் யோக போதினி ராகத்தில் உருவான ராக அலைகள் அனைவருக்கும் யோகத்தில் இருக்கும்போது உருவாகும் மனநிலையை உருவாக்கி அளித்துவிட்டு அப்படியே ஹிமாங்கி ராகமாய் அது மாறியது. யோக மனநிலையானது ஹிமாங்கிக்கு ஏற்ப உள்ளத்தைக் குளிர வைத்தது.

அந்த நேப்பாளியர்கள் தேன் குளத்தில் தடுமாறி விழுந்த வண்டைப் போல் ஆகிவிட்டனர். ஹிமாங்கியும் அப்படியே சித்தரஞ்சனிக்கு மாறியது.

சூழ்ந்திருக்கும் அத்தனை பேர் மனங்களிலும் மங்களகர மான எண்ணங்கள் பூக்கத் தொடங்கிவிட்டன.

குறிப்பாக அந்த நேப்பாளியர்கள் முற்றிலுமாக மாறி யிருந்தனர். அவர்கள் கண்களிலும் ஆனந்தக் கண்ணீர்! தரையில் சுருண்டு கிடந்த சதாசிவ சாஸ்திரிகளும் எழுந்து அமர்ந்திருந் தார்.

அவரிடம் பழைய நிலை! ஊர் மக்களும் ஏதோ அமுதம் அருந்தியவர்கள் போல எந்தவித பாதிப்பும் இன்றி பழைய நிலைக்கு வந்து அவர்களைச் சூழ்ந்து நின்றனர்.

அவர்கள் வைஜெயந்தி எதிரில் வந்து ஒருசேர நிற்க 'திப்பா' என்கிற அந்த முதியவன் குட்டை மொழிபெயர்ப்பாள னிடம் ஏதோ சொன்னான். அதை அவனும் மொழிபெயர்க்கத் தொடங்கினான்.

"தாயே தாசி..." அவன் அழைத்த விதமே அபாரமாக இருந்தது.

வைஜெயந்தி பூரித்துப் போனாள்.

"என்ன சொன்னீர்கள்... தாயே தாசியா?"

"ஆமாம்.. அதிலென்ன தவறு?"

"தவறா... என் காதில் அமுதமாக விழுந்த ஒரு ஒலிக்குறிப்பு அது. உங்களை நான் மிகவும் போற்றுகிறேன்... சரி... என்ன என்று கூறுங்கள்."

"நீ கூறியது உண்மைதான். பாபாஜி அமரர் ஆகிவிட்டார். ஆனாலும் அவர் இங்கிருந்து அமர உலகம் செல்லவில்லை. அவர்தான் மணியை அசைத்து ஊரையே வரவழைத்தவர். அதுமட்டுமல்ல... எங்கோ மறைந்து கிடக்கும் ருத்ர வீணை இசைக்கவும் அவரே காரணம். அந்த இசை எங்கள் ஆசை வலையை அறுத்துவிட்டது. அதை நாங்கள் எங்கள் ஊரில் இருக்கும் சிவாலயத்தின் சொத்தாக நினைத்தோம். ஆனால், அது இங்கேதான் இருக்க வேண்டும். அதுவே இறைவன் விருப்பம் என்பதை நாங்கள் புரிந்து கொண்டோம். அதையும் அந்த இசையே சாதித்தது. இசைக்கு அப்படி ஒரு சக்தியா என்று நீ கூட கேட்கலாம். இதோ திரண்டு நிற்கும் ஊரே சாட்சி... எல்லோர் மனதுமே இப்பொழுது உழப்பட்டிருக்கிறது. இங்கு நடந்த துயர சம்பவங்கள் சில நன்மைக்காகவே நடந்துள்ளன என்று கருதுங்கள்...

இனி இந்த ஊரை அந்த வீணையும் அதைக் கொண்டு பாபாவும் காப்பாற்றுவார் என்பது விளங்கிவிட்டது. அவர்கள் காவலில் உள்ள இந்த மண்ணை இனி நாங்கள் துன்புறுத்த விரும்பவில்லை.

பாபாவின் ஆவி மனது வைத்திருந்தால் எங்கள் உயிரை வாங்கியிருக்கலாம். ஆனால், அது கருணை மிகுந்தது. அதனால் தான் எங்களைக் கொல்லாமல் எங்களுக்கு புத்தி வரவைத்து அதற்கு ஊரையே சாட்சியாக்கியுமுள்ளது. நாங்களும் இனி நேர் வழியில் நடக்க முயல்வோம். எங்கள் பிழைகளை மன்னித்து விடுங்கள். வருகிறோம்..."

—அந்த குட்டை மனிதன் நீண்ட விளக்கமளித்து முடித்தவனாக எல்லோரையும் பார்த்து வணங்கினான் அப்படியே அவர்கள் தோடீஸ்வரர் சந்நிதி நோக்கிச் சென்று சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார்கள்.

சாஸ்திரிகள், வைஜெயந்தியை வியப்புடன் பார்த்தார்.

"சாஸ்திரிகளே... பார்த்தீர்களா? பாபாஜி அமரராகியும் நம்மை விட்டு நீங்கவில்லையாம். இவர்கள் கூறியதைக் கேட்டீர்கள்தானே?"

— வைஜெயந்தி படபடத்தாள்.

"கேட்டேன் வைஜெயந்தி.. எனக்கே பெருவியப்பாகத்தான் இருக்கிறது. ஒருவேளை பாபாஜியை நாம் இழக்கவில்லை என்று உணர்த்தவே இறைவன் இந்த மாயாவி மனிதர்களை இங்கே அனுப்பி வைத்தானோ என்றும் எண்ணத் தோன்றுகிறது."

"ஆம்... நானும் அப்படித்தான் நினைக்கிறேன்..."

— தலையாரியும் ஆமோதிப்போடு அவர்களை நோக்கி வந்தார். அந்த மாயாவிகள் தாங்கள் ஏறி வந்திருந்த புரவிகளை நோக்கி நடந்து சென்று கொண்டிருந்தார்கள். ஊர் மக்களும் எந்த சலனமும் இன்றி கலைந்து கொண்டிருந்தனர்.

"இவ்வளவு நடந்தும் வீரேந்திரன் பற்றியோ ருத்ர வீணை பற்றியோ எனக்கு எதுவும் தெரியவில்லையே சாஸ்திரிகளே..." என்று கண் கலங்கினாள் வைஜெயந்தி.

"நிச்சயமாக அது எங்கும் மாயமாகிவிடவில்லை. நமது ஊரில்தான் எங்கோ இருக்கிறது; அதுமட்டும் உறுதி. இல்லாவிட்டால் அதன் இசை நமது காதில் அவ்வளவு துல்லியமாக விழுந்திருக்குமா என்ன?"

— தலையாரி தன் யூகத்தைச் சொன்னார்.

"ஆம்... அது இங்கேதான் இருக்கிறது. அது இந்த ஊரின், இந்த ஆலயத்தின் தனிப்பெரும் சொத்து. இன்றில்லை நாளை அது பற்றிய உண்மைகள் நிச்சயம் தெரியவரும்..." என்றார் சாஸ்திரிகள்.

தெரிய வருமா?

## இன்று

**அ**ந்த கார் பட்டர் வீட்டின்முன் தேங்கி நின்றது. வீட்டு முகப்பில் பெரிய அவரைக் கொடி... அழகிய பெண்களின் காதுகளைப் போல கொடியில் ஏராளமாக அவரைகள்!

பார்க்கும்போதே மனசு நிரம்பும்! அப்படி ஒரு பச்சை அரிசி களைந்த அழுக்கு நீரை எப்பொழுதும் மைதிலி அந்த அவரைக் கொடியின் வேர்களுக்கு நீராக விடுவாள்.

அன்றும் அப்படிச் செய்வதற்காக பித்தளைப் பாத்திர கழுநீரோடு அவள் வெளிப்பட, எதிரில் காரில் இருந்து இறங்கிய சகலரையும் பார்த்து அவள் ஆச்சரியப்பட்டுப் போனாள்.

குறிப்பாக எங்கோ வெறித்தபடி - ஆனால் நெற்றி கொள்ளாத விபூதியோடு தெரிந்த அசோகன் அவளுக்கு அதிர்ச்சி மூட்டினான்.

'யார் இவன்?' அவள் கேள்வியில் விழ சுந்தராம்பாளிடம் இருந்து பதில்.

"என்ன மைதிலி... யாருடா இவன்னு பாக்கறியா... என் பிள்ளைதான்..." என்றாள். சட்டென்று ஏதோ வாய் தவறிச் சொல்லிவிட்டது போல உடனேயே மாற்றி "என் பிள்ளையில்ல, என் பிள்ளையில்ல... இதோ வர்றாளே விமலா இவளோட பிள்ளை" என்றாள்.

குரல் கேட்டு வீட்டினுள் இருக்கும் சங்கரன், பட்டர், காயத்ரி என்று பலரும் எட்டிப் பார்த்தனர். பக்கத்து வீட்டு கோமதிப் பாட்டியும், அவள் பேத்தியான அலமுவும் கூட யார் என்று பார்க்க வாசலுக்கு வந்துவிட்டனர். எல்லோரையும் பார்த்து வணங்கினாள் சுந்தராம்பாள் அவள் கணவர் ராமச்சந்திரனும் பெரிதாக கைகளைக் குவித்து வணங்கினார். விமலா மட்டும் அசோகனை கைத்தாங்கலாக பிடித்தவளாக சோகமாக நின்றாள்.

பட்டர் அவர்களைச் சந்தோஷமாக உள்ளே அழைத்தார். "வாங்கோ... வா சுந்தராம்பா... உள்ற வா! எல்லாரும் வாங்கோ..."

— அவர்களும் உள்ளே நுழைந்தனர். கிராமத்து வீடு. ஆகையால் சோபாவெல்லாம் இல்லை. காயத்ரி பட்டுப்பாய்கள் இரண்டை எடுத்து தரையில் விரித்தாள். அதில் அவர்களும் அமர்ந்து கொண்டனர்.

"என்ன சுந்தராம்பா ஆத்துக்காரர், உன் சக்களத்தி, பிள்ளைன்னு ஒரு கூட்டமா என் ஆத்துக்கு வந்துருக்கே. காரணத்தை தெரிஞ்சுக்கலாமா?"

— பட்டர் ஆரம்பித்தார் இடையில் மைதிலி அவர்களுக்காக காபி போடும் வாசம் மூக்கில் நுழைந்து அவளது வேகத்தை நினைத்து ஆச்சரியமூட்டியது. அசோகன் வீட்டினுள் நுழைந்த நிலையிலும் யாரையும் பார்க்காமல் எங்கோ வெறித்தபடியே இருந்தான்.

"பட்டரே... உங்ககிட்ட ஒரு உதவி கேட்டுதான் நான் இப்ப வந்துருக்கேன்..." — சுந்தராம்பாளும் ஆரம்பித்தாள்.

“உதவியா... நீ என்கிட்ட உதவி கேக்கறீயா?” - பட்டரிடம் ஆச்சரியமான ஆச்சரியம்.

“ஏன்... கேட்கக் கூடாதா?”

“என்ன சுந்தராம்பா... ஊரோட தேவதை நீ. உனக்கு எப்பவுமே ஊருக்கும் மத்தவாளுக்கும் செய்துதானே பழக்கம்...”

— ராமச்சந்திரன் அவரது பதிலை ரசித்தார். “உண்மை தான் பட்டரே... ஆனா, காலம் அப்படியேவா போயிடுது... எவ்வளவு சமயங்கள்ல - எவ்வளவு இடங்கள்ல ஓடம் வண்டியில ஏறுது. நீங்க பார்த்ததில்ல...?”

“ஓடமும் ஒரு நாள் வண்டியில் ஏறுங்கறது கர்வம் பிடிச்சவாளுக்கும், தங்களை அடிச்சுக்க ஆள் இல்லேங்கற வாளுக்கும் சொல்லப்படற சொலவடை, அது எப்படி அம்பாள் சொரூபமான சுந்தராம்பாளுக்குப் பொருந்தும்?”

“போதும் பட்டரே... என்னை அம்பாள்னும் தேவதைன்னும் சொல்லி ஆகாசத்துல வெச்சதெல்லாம் போதும். நான் கொஞ்ச நாளாவது சாதாரண மனுஷியா வாழ ஆசைப்படறேன்...”

— சுந்தராம்பாள் குரலில் வருத்தம் தொனித்தது.

“சரிம்மா... இவன் உன் பிள்ளையாண்டானாச்சே. ஏன் இப்படி இருக்கான்? என்ன உடம்புக்கு?”

“என்னத்த சொல்ல... ஒரு பத்து பதினைஞ்சு நாளாவே இப்படித்தான் இருக்கான். சித்தப்பிரமைங்கறது கடைசியா தெரிஞ்சது.”

“சித்தப் பிரமையா... அடக்கடவுளே! உன் பிள்ளைக்கா?” — பதறினார் பட்டர்.

“டாக்டர்கிட்டர் காட்டினேளா...? சென்னை கீழ்ப்பாக்கம் மெண்டல் ஹாஸ்பிட்டல்ல ஒரு தனி வார்டே இருக்கு...”

சங்கரன் தன் பங்குக்கு வேகமாக முன் வந்தான்.

— சுந்தராம்பாள் மௌனமாக அனைவரையும் பார்த்துவிட்டு மெல்ல வாயைத் திறந்தாள். அதற்குள் மைதிலி காபி தம்ளருடன் இடையில் பிரவேசித்தாள்.

“விமலா தஞ்சாவூர்ல இருக்கற பல டாக்டர்கள் கிட்ட காட்டிட்டா. அவங்க ‘ஷாக் ட்ரீட்மெண்ட் கொடுக்கணும், பெட்ல ஒரு மாசமாவது இருக்கணும்’னுல்லாம் சொல்லி

யிருக்காங்க. ஆனா, விமலாவுக்கு அதுல எல்லாம் நம்பிக்கை இல்லை. நம்ம ஊரான தோடிபுரத்துல ஒரு மாசம் இருந்தா நிலைமை சரியாயிடும்கறது அவ எண்ணம்."

— சுந்தராம்பாளின் பதில் சங்கரனுக்குள் கோபத்தை கிளறியது.

"என்னது இது... பைத்தியக்காரத்தனமான சிந்தனையா இருக்கு. இந்தக் காலத்துல எவ்வளவோ ஃபெசிலிடீஸ் எல்லாம் வந்துடுத்து. அப்படி இருக்கச்சே இந்த ஊர்ல இருந்தாலே சரியாயிடுவான்னுல்லாம் பேசிண்டு..."

— சங்கரன் இந்தக் கால இளைஞன். அவன் அப்படித்தான் பேசுவான். பேசவும் செய்தான்.

சுந்தராம்பாள் அதைக் கேட்டு ஒரு மர்மச் சிரிப்பு சிரித்து விட்டு விமலாவைப் பார்த்தாள்.

"ஊருக்கே வழிகாட்டி என் அக்கா... என் பிள்ளைக்கும் ஒரு வழிய காட்டட்டும்னுதான் நான் இங்க வந்துருக்கேன். எங்கெங்கு இருந்து எல்லாமோ யார் யாரோ இங்க வராங்க. குறையோட வந்து நிறைவோட திரும்பறாங்க. அந்த பாக்கியம் எனக்கு மட்டும் கிடைக்கக் கூடாதா?"

"அது சரிம்மா... அவன் இந்த தலைமுறை. இந்த ஊரோட பெருமை பத்தி அவனுக்கு என்ன தெரியும். அம்பாளே நேர்ல வந்து பிரத்யட்சமா நின்னாலும் டிராமா வேஷம்னு நினைச்சுண்டு சிரிச்சுண்டே போற காலம் இது. அதவிடு! நாங்க என்ன பண்ணணும்? அதைச் சொல்லலையே...?"

"அவன் குணமாகறவரை இந்த வீட்லதான் இருக்கணும்."

"இங்கயா...? இவனா?"

"என்ன பட்டரே... அதிர்ச்சியா இருக்கா?"

"இல்லம்மா இது பாக்கியம். நீ என் குடும்பத்துக்கு எவ்வளவோ செய்திருக்கே. காரணமில்லாம நீ எதையும் சொல்லமாட்டே. நான் இன்பஅதிர்ச்சியில அப்படி கேட்டேன்."

"ரொம்ப சந்தோஷம் பட்டரே... இவனை ஒண்ணும் நீங்க சும்மா வெச்சுக்க வேண்டாம். செலவுக்கு என்ன உண்டோ நாங்க அதைக் கொடுத்துடுவோம்."

— ராமச்சந்திரன் அப்படிச் சொன்னதுதான் தாமதம் பட்டர் முகம் சிவக்க ஆரம்பித்துவிட்டது.

*"ராமச்சந்திரா... என்ன இது? நீ இப்படிப் பேசலாமா? இதே ஊர்ல பொறந்து வளர்ந்து இந்த குடும்பத்தோட உறவாடின உனக்குக் கூடவா நான் எப்படிங்கறது தெரியல..."*

*"இல்ல பட்டரே... சாதாரண ஒருவரை வெச்சுக்கறதுக் கும், ஒரு பைத்தியக்காரனை வெச்சுக்கறதுக்கும் நிறைய வித்தியாசம் இருக்கு. இவன் எதையாவது போட்டு உடைக்க லாம். அப்ப உங்க பசங்க 'என்னப்பா தலையெழுத்து'ன்னு கேட்கலாம்..."*

*— ராமச்சந்திரன் சரியாகத்தான் பேசினார். உடனே பட்டர் பார்வை காயத்ரி, மைதிலி, சங்கரன் என்ற மூவர் மேலும் சென்றது.*

*"நீங்க தப்பா பேசறேள்ணா... அவன் இனி இந்த குடும்பத் துல ஒருத்தன்." என்று அவர் எதிரிலேயே சங்கரன், அசோகனை நெருங்கிச் சென்று அவன் கைகளைப் பற்றி இழுத்து தன் கையோடு சேர்த்துப் பிடித்துக் கொண்டான்.*

*அந்த நொடியே அவன் உடலில் புதிதாக ஒரு மின்சாரம் பாய்வது போல பிரமை. சொல்லி வைத்த மாதிரி அந்த நொடியில் தோடீஸ்வரர் கோவிலில் அறுபத்து மூவர் சிலை களின் வரிசையில் அறுபத்து நான்காவது புதிய நாயன் மாராகவே கருதப்பட்டு சிலையாக அமர்ந்திருக்கும் பாபா ஜியின் சிலைக்கு மாலை போட முயன்ற ஒரு பக்தருக்கும் அவர் கரங்களில் மின்சாரம் பாய்ந்தது போல இருந்தது. துள்ளியபடி விழுந்தார்!*



# 3

# அன்று

**வை**ஜெயந்தியின் தாயான மாலியிடம் சுரத்தே இல்லை. முகத்தை உம்மென்று வைத்துக்கொண்டு அமர்ந்துவிட்டாள். அவள் தாயான மாணிக்கவல்லியும் அதை உணர்ந்தவளாய் அவளை நெருங்கி வந்து காரணத்தை விசாரிக்கத் தொடங்கினாள்.

"மாலி... ஏண்டி ஒரு மாதிரி இருக்கே?"

"ஏய்... உன்னைத்தான்... என்ன குறை உனக்கு?"

"என்னம்மா கேள்வி இது! வாழ்க்கை முறையே மாறிப்போச்சேம்மா..."

"இதுக்காக சந்தோஷப்படுடி.... ஊர் பார்க்க ஒசந்திருக்கோம். இதுக்குபோய் வருத்தப்படறியே..."

"நம்ம குலத்துக்கு கிடைச்சிருக்கற இந்த மரியாதையை நினைச்சா சந்தோஷமாதான் இருக்கு...

தினமும் எந்த ஆண்மகன் வருவான், அவன் எவ்வளவு கொண்டு வருவான்னு உடம்பை பணயம் வெச்சு வாழற நிலை ஒழிஞ்சதை நினைச்சு நான் ஒருபக்கம் குதூகலிக்கறேன். ஆனா, இந்த சந்தர்ப்பத்துல என் வாரிசு என்கிட்ட இல்லாம எங்கயோல்ல போய்ட்டான்."

"ஓ... வீரேந்திரனைப் பற்றின கவலையா?"

"ஆமாம்மா... அவன் என் வயித்துல மகனாப் பிறந்தப்போ, இங்க வந்து பிறந்துட்டியேடா பாவின்னுதான் நினைச்சேன். ஆனா, இப்ப ஒரு நல்ல நிலைக்கு வந்துட்ட நிலைல அவன் கிட்ட இல்லாம எங்கயோ போய்ட்டான்..."

"அவன் எங்கேயும் போயிடல... இங்கதான் இருக்கான். எனக்கு நம்பிக்கை இருக்கு..."

— மாலியும், மாணிக்கவல்லியும் ஒருவருக்கொருவர் ஆறுதல் சொல்லிக்கொள்ளும்போது அந்த நவக்கிரக மாளிகையில் திடும்மென்று வீணை இசை தோன்றி காதை நிறைக்க ஆரம்பித்தது.

மாலியும் மாணிக்கவல்லியும் உடனேயே கூர்மையாகினர். தனது தனியறையில் பரதப் பயிற்சியில் ஈடுபட்டிருந்த அபராஜித வைஜெயந்தியும் அந்த இசையைக் கேட்டு ஓடிவந்தாள்.

மிக மெல்லிய சப்த அலைகளில் அன்னப்பட்சியானது மேகங்களிடையே பறந்து செல்கிற மாதிரி, அந்த இசையொலி சஞ்சரிக்கிற மாதிரி தோன்றியது.

யார் வாசிப்பது?

நிச்சயமாக ருத்ர வீணையின் இசைதான் அது...!

மூவரும் அந்த மாளிகை முழுக்க, அதை வாசிப்பது யார் என்று தேடி அலையத் தொடங்கினர்.

விசித்திரமான மாளிகை அது!

மனிதர்கள் தங்கள் சௌகர்யங்களின் பொருட்டு கட்டிக்கொண்ட மாதிரியே தெரியவில்லை. அரக்கு மாளிகை பற்றி மகாபாரதத்தில் மாணிக்கவல்லி படித்திருக்கிறாள்.

அதனுள் ஒருவர் நுழைந்துவிட்டால் அவர் சென்ற வழியே திரும்பி வெளியே வருவது அவ்வளவு கஷ்டமாம்...

எகிப்திய பிரமிடுகளும் அப்படித்தான். உள்ளே சிறிது தூரம் வரை சென்றுவிட்டு அப்படியே திரும்பி வருவதென்பதெல்லாம் அசாத்தியம். உள்ளேயே நடந்து நடந்து தேய வேண்டியதுதான்.

அந்த நவக்கிரக மாளிகையும் அந்த ரகமாகத்தான் இருந்தது. ஒரு அறையில் தேள் சின்னம், ஒரு அறையில் நண்டு சின்னம், ஒரு அறையில் ஆட்டுச் சின்னம் இருந்து அவை ராசிகளைக் குறிக்கும் அறைகள் என்பதைச் சொல்லாமல் சொல்லின...

இப்படி எல்லாம் இங்கே அறைகள் எதற்கு என்பது விளங்கவில்லை. ஒவ்வொருவரும் ஒவ்வொரு அறைக்குள் புகுந்து யார் வாசிப்பது என்று தேடினார்கள். பலனில்லை. சுற்றின இடத்தையே சுற்றிச் சுற்றி வந்தனர்.

ஒரு இடத்தில் மைய மண்டபம் இருந்தது. சுற்றிலும் தாமரை இதழ் விரிந்து கிடப்பதுபோல தாழ்வாரங்கள். அந்த மண்டபத்துக்கு நேர்மேலே ஒரு விதானம். அதில் புறாக்கள் அடைந்துகொள்ளும் அளவுக்கு மாடங்கள்.

இசை அலையானது ஒருவேளை அந்த மாடங்கள் வழியாக வருகிறதோ என்றும் ஒரு கேள்வி எழும்பியது. இதற்கு நடுவே அந்த நவக்கிரக மாளிகை காப்பாளனும் உள்ளே நுழைந்திருந்தான்.

அவன் கண்களும் அலை பாய்ந்தன.

ஆனாலும் அந்த வீணை இசை எங்கிருந்து வருகிறது என்பதை அறியமுடியவில்லை. அதே சமயம் மாணிக்கவல்லியும் காணாமல் போனவள் போலாகிவிட்டாள்.

ஒரு அறைக்குள் தடுமாறிக் கொண்டிருந்த அவளை காப்பாளன்தான் போய் அழைத்து வந்தான் அவளுக்கு பெருமூச்செறிந்தது.

“ஆமாம்... வீணை இசை கேட்டதே? எங்கிருந்து வந்தது...? யார் வாசித்தது? உனக்குத் தெரியுமா?” என்று ஆவலாக அவனிடம் விசாரித்தாள் மாணிக்கவல்லி.

“தாயே... இந்த மாளிகை மிக விசித்திரமான ஒன்று. இதை மனிதர்கள் கட்டவில்லை; மயன் கட்டியது என்பார்கள். ஒரு காலகட்டத்தில் இதைப் பூட்டி புறத்தில் வேலியும் போட்டு வைத்திருந்தார்கள்.

நவக்கிரக நாயகர்கள் இந்த மாளிகையில் வந்து தங்கிச் செல்வார்களாம்! அவர்கள் ஏகாந்தத்துக்கு பங்கம் வந்துவிடக் கூடாது என்பதால் யாரும் மாளிகைப் பக்கமே வரக்கூடாது என்று இதை சோழ அரசர்கள் பூட்டி வைத்திருந்தனர் என்பர். பின், கால மாற்றத்தில் இது மராத்திய அரசர்கள் கைக்கு வந்து அவர்கள்தான் இதனுள் நுழைந்து இதன் பெருமையைப் புரிந்துகொண்டவர்கள். ஆனால், அவர்களும் இதை மக்களுக்கு உடைமையாக - பொதுவாக ஆக்கிடாமல் தங்கள் அரசவைச் சொத்தாக வைத்துக் கொண்டனர்.

அவர்களது ஜோதிடர்களும், இந்த மாளிகையில் தங்குவதும் நீராடுவதும் நன்மை பயக்கும் என்று கூறியிருந்ததும் ஒரு காரணம்.”

— அந்த காப்பாளன் தனக்கு தெரிந்ததைக் கூறினான்.

"எல்லாம் சரி... இந்த மாளிகை முழுவதும் உள்ளே என்ன இருக்கிறது என்று அறியமுடியாது போல் உள்ளதே...?"

"ஆம் தாயே... எங்கள் பணி இதைக் காவல் காப்பதுதான். இப்பொழுது புதிதாக ஒரு இடையூறும் எங்களுக்கு ஏற்பட்டுள்ளது..."

"இடையூறா?"

"ஆமாம்... இந்த மாளிகை நந்தவனத்தில் இரவுக் காலங்களில் வினோத சப்தம் கேட்கிறது. கோர முகம் கொண்ட உருவம் ஒன்று மரத்திற்கு மரம் தாவுவதை நானும் பார்த்தேன்..."

— அந்த காப்பாளன் சொன்ன மறு வினாடி வைஜெயந்திக்கு புரிந்துவிட்டது. முன்பொரு சமயம் பாபா ஜியிடம் பேசிக் கொண்டிருந்தபோது வங்காள தேசத்து ஜோதிடர் காபாலிகர்களால் கொல்லப்பட்டதால் 'அவர் ஒரு பிரம்ம ராட்சதனாக இங்கே அலைவார்... அந்த அலைச்சலும் நன்மைக்குத்தான்... அவர் ருத்ர வீணைக்கு காவலாகி விடுவார்' என்று பாபாஜி சொன்னதெல்லாம் அவளுக்கு ஞாபகத்தில் வந்தது.

மாலி அதைக் கேட்டு வெளிறிப் போய்விட்டாள்.

"வைஜெயந்தி... இவன் என்னென்னவோ கூறுகிறானே! நான் எதற்கென்று கவலைப்படுவேன்? இங்கே எல்லாமே மாயமாக உள்ளதே!" என்றாள் மிகுந்த பயத்தோடு.

"அச்சப்பட வேண்டாமம்மா. எல்லாம் நன்மைக்குத்தான். அதே சமயம் இங்கே நாம் இனி வாழ்வதும் நல்லதல்ல என்று எனக்குப் படுகிறது" என்றாள் வைஜெயந்தி.

"அப்படியானால்...?"

"நாம் நமது பழைய மனைக்கே சென்றுவிட்டால் என்ன?"

"ஐயய்யோ திரும்பவும் அந்த தாசிகள் வசிக்கும் தெருவுக்கா?"

"அம்மா நீயா மறுக்கிறாய்...? உனக்கே அந்த வாழ்க்கை வெறுத்துவிட்டதா?"

"இப்படி ஒரு அற்புதமான வாழ்க்கை கிடைக்கும் என்று நம்பாத வரை நான் அதைக் கட்டிக்கொண்டு அழுதேன். இப்பொழுது என்ன...? மந்திரியே மருமகன். நீயோ ஊரையே

அதிகாரப் பிடிக்குள் வைத்திருக்கும் கோவிலுக்கே தாசி... இனியும் நான் அதை நேசித்தால் நான் பெண்குலத்தை சேர்ந்தவளாகவே இருக்க முடியாது..."

"அப்படிச் சொல்... இன்றுதான் என் உச்சி குளிர்ந்தது" என்று மாணிக்கவல்லி, மாலிக்கு திருஷ்டியே கழித்தாள்.

பார்த்துக்கொண்டே நின்றுகொண்டிருந்த காவலனும் "ஒரு நல்ல முடிவை எடுங்கள். எனக்குத் தெரிந்து இதை ஆலயமாகக் கருதுவதுதான் சரி. மனிதர்கள் வாழுமிடமாகக் கருதுவது உகந்ததில்லை..." என்றான்.

"நாளையே என் மணாளரிடம் பேசிவிட்டு ஒரு நல்ல முடிவை எடுக்கிறேன்." என்ற வைஜெயந்தியும் அந்த மர்ம மாளிகையை ஆழமாக ஒரு பார்வை பார்த்தாள்.

## இன்று

**தோ**டீஸ்வரர் ஆலயத்தில் துள்ளிவிழுந்த அந்த நபர் தாளமாட்டாத அதிர்ச்சியோடும் ஆச்சரியத்தோடும் பாபாவின் விக்கிரகத்தைப் பார்த்தார்... பிறகு தன் உடம்பில் பாய்ந்த மின்சாரமானது வெறும் பிரமையாக ஒருவேளை இருக்குமோ என்கிற சந்தேகத்தோடு திரும்பவும் பாபாவின் சிலை அருகே சென்று அதை ஏராளமான தயக்கங்களுடன் தொட்டார்.

இந்த முறை அவருக்கு எந்த பிரச்சினையும் இல்லை. எப்பொழுதும் போல் சில்லிட்டது பாபாவின் சிலைத் திருமேனி.

அப்படியானால் இதற்கு முன் தனக்கு நேரிட்ட அனுபவத்திற்கு எது காரணமாக இருக்கும் என்று அவரால் யூகிக்க முடியவில்லை.

சிந்தனைகளோடு திரும்பினார் உபாசகர் வந்து கொண்டிருந்தார். அவரைப் பார்க்கவும் அவரிடம் கேட்டால் என்ன என்றும் ஒரு கேள்வி.

அது அவர் கேட்காமலே உபாசகருக்குப் புரிந்தது.

"என்ன ஓய்... மனசுல ஏதோ சந்தேகம் மூண்டுருக்கு போல தெரியறதே..."

"ஆமாம் சாமி... சரியா சொல்லிட்டீங்க."

"என்ன சந்தேகம்... அதைச் சொல்லு."

"நம்ம பாபா சிலைக்கு மாலை போடப் போனேன். ஷாக் அடிச்ச மாதிரி தூக்கிப் போட்டுச்சின்னா பாத்துக்குங்களேன்."

"ஷாக்கா...?"

"ஆமாம் சாமி... ஆனா இப்ப தொட்டப்போ இல்லை...

"அதுசரி... நீங்க தினசரி பாபாவுக்கு மாலை போட்டு வணங்கறவரோ?"

"ஆமாம் சாமி.. இங்க வந்து நின்னு கும்புட்டுட்டு குறையை சொல்லிட்டா போறும். மிச்சத்தை அவர் பார்த்துப்பார்..."

"அவ்வளவு நம்பிக்கையா?"

"இல்லையா பின்னே... உங்களுக்கு ஒரு குறை இருந்து அதை இங்க சொல்லிப் பாருங்க. அப்புறம் நான் சொன்னதுக்கு அர்த்தம் புரியும்..."

"வேடிக்கையா இருக்கே... அப்ப கோவிலுக்குள் இருக்கற அந்த தோடீஸ்வரர்லாம் சும்மாங்கறேள்....?"

"தப்பு சாமி... பெரியவங்க நீங்க. உங்களுக்கு தெரியாதது இல்ல. அந்த தோடீஸ்வரன்தான் பாபா ரூபத்துல வந்து எங்க குறையைத் தீக்கறான்."

"அப்ப தாசி சுந்தராம்பாள்கிட்ட குறை சொல்றதெல்லாம்?"

"அவங்களே பாபாகிட்டதானே திரும்பி வந்து அந்த குறையை எல்லாம் சொல்றாங்க..."

— அந்த நபர் துளிகூட தடுமாறவில்லை. தயங்கவுமில்லை. பளிச்பளிச்சென்றுதான் பதில் கூறினார்.

"சாமி... உங்க கேள்விக்கெல்லாம் நான் பதில் சொல்லிட்டேன். என் கேள்விக்கு நீங்க பதிலே சொல்லலையே சாமி..."

"நீ என்ன கேட்டே....?"

"ஷாக் அடிச்சா மாதிரி இருந்துச்சு... எது காரணமா இருக்கும்?"

"எல்லா கோரிக்கையையும் பாபாகிட்ட வைக்கற நீ இதையும் வை. அவரே வந்து சொல்லட்டும்."

— உபாசகர் கொஞ்சம் எரிச்சல் கலந்த பதிலைக் கூறிவிட்டு நகர்ந்தார்.

"என்னமோ பெரிய சாமியார்... மனசுல இருக்கறத அப்படியே சொல்றவர் அப்படி இப்படின்னு ஊர்ல பேசிக்கறாங்க

ளேன்னுதான் இவர்கிட்ட கேட்டேன். இவருக்கு ஏன் இவ்வளவு கோபம் வருதுன்னு தெரியலையே..." என்றபடியே அந்த நபரும் விலகிச் சென்றார்!

உபாசகர், சுந்தராம்பாள் குறை கேட்கும் மண்டபம் அருகே சென்று அதில் ஏறி அமர்ந்திருந்தார்.

அவர் அமர்ந்த நேரமோ என்னவோ மெல்லிய வீணை ராகத்தின் ஒலி கேட்க ஆரம்பித்தது. அற்புதமான ஸ்வப்ரகாசினி ராகம் என்பது கேட்கக் கேட்க தெரிந்து போயிற்று.

பளிங்குக் கற்கள்மேல் பன்னீர் நதி தாவிக்குதித்து ஓடுகிற மாதிரி ஒரு சுகம்... ஸ்வப்ரகாசினி ஆன்மீக எண்ணங் களை உள்ளுக்குள் இருந்து இழுத்துப் போட வல்லது. ஸ்வப்ர காசினியைக் கேட்கும்போது இஷ்டதெய்வம் நமக்குள் தோன்றும். சிலர் மனதில் அந்த தெய்வம் நாட்டியமெல்லாம் ஆடும்.

உபாசகர் மனதிலும் அந்த அம்பிகை நிமிர்ந்து எழுந்திருந் தாள். அவரும் கண்களில் ஆனந்தக் கண்ணீர் தேங்க அவளை நினைத்து உருகியபடியே அப்படியே அமர்ந்துவிட்டார்!

**வீ**ட்டுக்குள் ஒட்டடை அடித்துக்கொண்டிருந்தான் சங்கரன். சாமிநாதனின் மொபெட் வரும் சப்தம் கேட்கவும் வெளியே பார்த்தான்.

சாமிநாதனேதான்!

அவனைப் பார்க்கவும் சங்கரன் முகத்தில் சங்கட ரேகைகள்.

உபாசகர் அவனும் பானுவும் இணைய முடியாது என்று கூறியதுதான் அவனுக்குள் முதலில் ஓடியது. நினைவு தெரிந்த நாள் முதலாக பழகி வருபவன். பால்ய சிநேகிதன் என்றால் அதுகூட சும்மாதான். இவன் அதற்கெல்லாம் ஒருபடிமேல்...

இத்தனை நாளில் ஒருவருக்கெதிராக ஒருவர் சந்தித்துக் கொண்டதேயில்லை. ரசனையிலும் நல்ல ஒற்றுமை. அவனுக்கு பிடிக்காத சினிமா இவனுக்கும் பிடிக்காது.

குணாம்சத்தில் மட்டும் சாமி சற்று கோபக்காரன். சங்கரன் அம்மட்டில் நல்ல பொறுமைசாலி. அந்த பொறுமை இப்பொழு தும் சங்கரனுக்குக் கை கொடுத்தது. சாமி வரவும் இறுக்கமான முகத்துடன் பார்த்தான்.

"என்னடா... ஒட்டடைக் கச்சேரியா?"

"ஆமாண்டா. உருப்படியா ஏதாவது பண்ணணும் இல்லியா?"

"சரி, வா... கொஞ்சம் வெளிய போய்ட்டு வருவோம்...

"எங்கடா...?"

"நானும் நீயும் சினிமாவுக்குப் போய் ரொம்ப நாளாச்சுடா... அதுலயும் இந்த உபாசகர் வந்தப்புறம் நாம நாமளாவே இல்லை. தொட்டுத் தொட்டு கண்ட கண்ட விஷயங்கள்லயே போய்க்கிட்டிருக்கோம். கொஞ்சமாவது நாம பழைய அந்த நாளுக்கு போகணும்டா..."

"இப்ப என்னங்கற... சினிமாவுக்குப் போகணும்கிறியா?"

"ஆமாம்... நல்ல லவ் சப்ஜெக்டாம். ட்ரை ஆங்கிள் லவ்வாம்... அப்படின்னா என்னன்னு தெரியுமா?"

"விட்டா என்னை ஒரு எல்.கே.ஜி-யா நினைச்சு பாடமெல் லாம் நடத்த ஆரம்பிச்சிடுவியே..."

"இல்லேன்னாலும் நீங்க பெரிய ஐ.ஏ.எஸ். பாருங்க..."

சாமிநாதனுக்குள் அந்த பழைய கிண்டல் ஊற்றெடுக்க ஆரம்பித்தது. உள்ளிருந்து ஒரு மெல்லிய மையலுடன் மைதிலி அதை ரசித்துக் கொண்டிருந்தாள்.

நடுநடுவே சாமிநாதன் ஜலதோஷத் தும்மல் வேறு தும்மினான். அவளை அது சடைத்தது. அவளுக்குள் அவன் மேலான அன்பு மளமளவென்று ஊற்றெடுக்க ஆரம்பித்தது. கைகள் வேகமாக இயங்க, ஸ்டவ்வில் சுக்குக் காபி உருவாக ஆரம்பித்தது.

சங்கரனோ ஒட்டடைக் குச்சியும் கையுமாகவே இருந்தான்.

"டேய் கிளம்புடா... உன்னைத்தான் நான் சினிமாவுக்கு கூப்பிடறேன்." - என்று சாமிநாதன் சற்று சீரியஸானான்.

"ஸாரிடா... நீ போய்ட்டுவா. எனக்கு இங்க நிறைய வேலை இருக்கு..."

அப்படி ஒரு பதிலை அவன் சொன்னது பாடம் படித்தபடி மௌனமாக இருந்த காயத்ரிக்கே ஒரு ஆச்சரியம்.

நிமிர்ந்து பார்த்தாள்.

சங்கரன் தொடர்ந்து ஒட்டடையோடு போராட ஆரம்பித்துவிட்டான். சாமிநாதனிடம் சிவுசிவுவென்று கோபம்.

"அப்ப நீ வரமாட்டே... அப்படித்தானே?"

"ஆமாண்டா...

"நிஜமா...?"

"ஏண்டா இப்படி உசுரை வாங்கறே... சங்கரன் தலையிலடித்துக்கொள்ள, சாமிநாதனுக்கு கன்னத்தில் அறை விழுந்த மாதிரி ஆகிவிட்டது.

திரும்பத் தொடங்கினான். கைதட்டி அவனை மடக்கி நிறுத்தினாள் மைதிலி. அருகில் சென்று சுக்குக்காபியை நீட்டினாள்.

வாசம் அவன் மூக்கில் புகுந்து அவன் முகத்தில் ஒருவித பரவசத்தை உருவாக்கிடப் பார்த்தது. இருந்தும் கோபத்தை இழக்காமல் "வேண்டாம் மைதிலி... எனக்காக நீ எதுக்கு சிரமப்படறே?" என்றான்.

அவளது கூர்மையான கண்களோ அவனைக் குத்துவது போல பார்த்தன. அதில் பலவித பாஷைகள்; கோரிக்கைகள்.

சாமிநாதனால் ஒரு அளவுக்கு மேல் அதை சந்திக்க முடியவில்லை. அவள் நீட்டிய சுக்குக் காபியை வாங்கிப் பருகத் தொடங்கியிருந்தான். பார்த்துக்கொண்டிருந்த சங்கரனுக்கே அவனிடம் அப்படிப் பேசியது சங்கடமாகத்தான் இருந்தது.

இருந்தும் லவ் சப்ஜெக்ட் படத்துக்குப் போன இடத்தில் காதல் பற்றிப் பேசி, அது அப்படியே பானுவையும் தொட்டுப் பிடிக்கும்போது ஏற்படும் தர்மசங்கடத்தை எப்படியாவது தவிர்த்துவிடுவதே நல்லது என்று தோன்றியது.

சாமிநாதனும் சுக்குக்காபியைக் குடித்து முடித்துவிட்டு "ரொம்ப நன்றி." என்றபடியே புறப்பட்டான்.

காயத்ரிக்குள் அந்த நொடி கணேசன் ஞாபகம் மூண்டிருந்தது.

கணேசனும் அவன் சொன்ன அதே சினிமாவுக்கு அவளைக் கூப்பிட்டிருந்தான். யாராவது பார்த்துவிட்டால் விபரீதமாகிவிடும் என்று காயத்ரி போகாமல் இருந்துவிட்டாள்.

இப்பொழுதோ போயிருக்கலாமோ என்று நினைத்தாள். அது எவ்வளவு இன்பமாகவெல்லாம் இருக்கும் என்றும் யோசித்தவளுக்கு படிப்பே ஓடவில்லை. மனதில் கணேசன் அவளோடு டுயட் பாடத் தொடங்கியிருந்தான்.

**க**ணேசன் வீடு!

வீட்டு வாசலில் ஒரு மஞ்சள் பெயிண்ட் கூரையுடன் கூடிய டாக்ஸி ஒன்று தேங்கி நிற்க, அதிலிருந்து உதிர்ந்து கொண்டிருந் தார்கள் கணேசனின் மாமாவும் மாமியும். கூடவே ஒரு இளம்பெண். இந்த மிடி, சுடிதார் யுகத்தில் அவள் பாவாடை தாவணியில் பார்க்க படு லட்சணமாக இருந்தாள். அவளையும் மாமா மாமியையும் பார்த்துவிட்டு கணேசனின் தாயான அன்ன பூரணி "அண்ணா..." என்றபடியே வாசலுக்கு ஓடிவந்தாள்.

அந்தப் பெண்ணையும் பார்த்து, "வசந்தி... நன்னா யிருக்கியா" என்று திருஷ்டி கழித்து சொடக்கும் ஒடித்தாள்.

உள்ளிருந்து அதைப் பார்த்துக்கொண்டேயிருந்த கணேசனுக்கு பகீர் என்றது.

'கணேசன்.... உன் முறைப் பொண் வசந்தி வரப்போறா. அவளுக்கு நீ, உனக்கு அவள்னு சின்னதுல இருந்தே பேச்சாக் கும்...' - என்று அன்று அவன் அம்மா பேசியதும் ஞாபகத்திற்கு வர, கணேசன் அதிர்ந்தான்!

அதிர்வுடன் நிற்கும் கணேசனைப் பார்த்துக் கொண்டே நடந்தாள் அந்த இளம்பெண் வசந்தி.

கொண்டையில் தாழம்பூ இல்லை. ஆனால், நெஞ்சிலே வாழைப்பூவும் வாலிப வனப்புமாக அவனைப் பார்த்து கன்னங் குழிய சிரித்தாள்.

மெல்லிய கிசுகிசு குரலில் "அத்தான்... எப்படி இருக்கே?" என்றாள். சற்றே அசடுவழிய ஒரு சிரிப்பு சிரித்தான் கணேசன்.

மாமாவும் மாமியும்கூட அவனைப் பெரிதாகப் பொருட் படுத்தும் விதத்தில், "என்ன மாப்ள... எப்படி இருக்கேள்?" என்றுதான் விசாரிப்பையே தொடங்கினர்.

முன்பெல்லாம் 'டேய் கணேசா... மூக்கொழுக்கி' என்று எலிக்குரலில் கிண்டல் செய்வதில் இந்த சுந்தரேசன் மாமா பலே கில்லாடி. இன்று அவரிடம்தான் இத்தனை பவ்யம்.

எல்லாம் மாப்பிள்ளை உறவு படுத்தும்பாடு. "என்ன கணேசா! இப்படி இளைச்சுப் போயிட்டே?" என்கிற யூஷுவல் டயலாக்கை மாமி பாக்யம் விடவில்லை.

"அதான் வசந்தி வந்துட்டாளே... இனிமே அத்தானை பார்த்துப் பார்த்து கவனிச்சுண்டா அவன் நன்னா கிண்ணுன்னு தேறிட்டுப் போறான்..." என்று கணேசனின் அம்மாவேறு பின்பாட்டு பாடினாள்.

கணேசனுக்குள் தீப்பிடித்துக் கொண்டுவிட்டது.

காயத்ரி அந்த தீ ஜ்வாலைகளுக்கு நடுவில் குறுக்கும் நெடுக்குமாக ஓடினாள்.

ஒரு விதத்தில் அச்சமாகக் கூட இருந்தது.

வசந்தி ரூபத்தில் காலம் தன்னைக் கவிழ்க்க வந்திருக்கிறதா? மருண்டு போனான்.

அன்னபூரணி அவன் மருண்டு கிடப்பதை மயங்கிவிட்டது போல தவறாக உணர்ந்தவளாக உள்ளே கையைப் பிடித்து இழுத்துச் சென்றாள்.

"அன்னம் ஒரு தட்டு எடுத்துண்டு வாயேன்..." என்று அவன் மாமா சுந்தரேசன் சொல்ல, ஓடிப்போய் தட்டும் எடுத்து வந்தாள்.

அதில் அவர் தான் வாங்கி வந்திருந்த பூ பழம் இத்யாதி களோடு ஒரு பட்டுவேட்டி ரெடிமேட் சட்டை என்று புதுப்புது அயிட்டங்களை வேறு அடுக்கினார்.

கணேசனுக்கு புரிந்துவிட்டது — மாமா கவிழ்க்கத்தான் வந்திருக்கிறார் என்பது. "அன்னம்... எடுத்துண்டு போ. நல்ல விஷயம் பேச வந்துருக்கேன். அதான் வெறும் கையோட வராம இப்படி பட்டுவேஷ்டி சட்டைன்னு வாங்கிண்டு வந்துருக்கேன்." என்று உள்ளே நுழைந்து ஐந்து நிமிடம்கூட ஆகவில்லை — கணேசன் வயிற்றில் புளியைக் கரைக்கத் தொடங்கிவிட்டார்.

கர்ணமும் அதைப் பார்த்து ரசித்து சிரித்தவர், "ஏம்ப்பா சுந்தரேசா... இதெல்லாம் நீ வாங்கிண்டு வரலைன்னா வசந்தி என் மாட்டுப் பொண் இல்லேன்னு ஆயிடுவாளா என்ன?" என்று பதிலுக்கு கேட்டபோது கணேசனுக்கு குப்பென்று வியர்த்தேவிட்டது.

"எல்லாம் சரி மாப்ளை... அன்னிக்கு இளம்பிராயத்துல சும்மா ஒரு ஆசைல பேசிண்டதுதானேன்னு ஆகிடக் கூடாது பாருங்கோ..."

"இப்ப என்ன பண்ணணும்கறே...?"

"இல்ல... வசந்தி ஜாதகத்தை யதார்த்தமா ஜோசியர் ஒருத்தர்கிட்ட காட்டினேன். 'சீக்கிரமா கல்யாணத்த முடி யுங்கோ. ரொம்ப நல்ல பீரியட் நடந்துண்டு இருக்கு. இதை

விட்டா மூணு நாலு வருஷம் டைம் சுத்தமா சரி இல்லை'ன்னார். அதான்..."

"நான் இப்ப சொல்றேன் அந்த ஜோசியர் என்ன சொல்லியிருந்தாலும் சரி. என் பிள்ளைதான் உனக்கு மாப்ளை. வேணும்னா உன் திருப்திக்கு இந்த வாரத்துலயே ஒரு நல்ல நாள்ல லக்னப் பத்திரிகையை எழுதிடுவோம்..."

— கர்ணம் நேராக கல்யாணத்திலேயே போய் நின்றது கணேசன் மனதைக் குத்திக் கிழித்தது.

அதற்குமேல் வீட்டில் அவனால் இருக்க முடியவில்லை.

"மாமா... அத்த... நான் கோவில்வரை போய்ட்டு வந்துட்றேன்" என்று பிய்த்துக் கொண்டான்.

"அத்தான் நானும் வரட்டுமா?" என்று கேட்ட வசந்தியைப் பார்த்து ஒரு முறைப்பு.

அவள் அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டாள்!



# 4

## அன்று

அந்த மாளிகை வாசம் என்பது ஒரு முள்படுக்கை போலாகிவிட்ட நிலையில் அபராஜித வைஜெயந்தியும் அவள் குடும்பமும் தவித்துக் கொண்டிருக்க, ஒரு தீர்வைத் தருபவர் போல மந்திரி மகாதேவரும் அபராஜிதாவைக் காண வந்தபடி இருந்தார்.

அவரது வருகைக்கான கட்டியங்கள் காதில் ஒலித்ததில் அபராஜிதம் முகத்தில் மகிழ்ச்சி பெருக்கெடுத்தது.

மாடத்தில் போய் நின்று பார்த்தாள்.

முன்னும் பின்னும் மராத்திய வீரர்கள் குதிரையில் அணிவகுத்து வர, மகாதேவரின் சாரட் நடுநாயகமாக வந்து கொண்டிருந்தது.

மாளிகை முன்னால் அது தேங்கி நிற்கவும் மகாதேவரும் சாரட் திரைச் சீலையை விலக்கிக்கொண்டு வெளியே பார்த்தார்.

ரதஓட்டி வேகமாக இறங்கி கதவைத் திறந்துவிட்டு பின் ஒரு முக்காலியையும் முன்னால் எடுத்துப்போட அதில் கால்வைத்து மகாதேவரும் இறங்கினார்.

அதே சமயம் கால் கொலுசு சப்திக்க மிக உற்சாகமாக வைஜெயந்தி ஓடிவரும் அரவம் கேட்டது. நிமிர்ந்து பார்த்த மகாதேவரின் எதிரில் ஒரு மயிலாக மானாக துள்ளலுடன் வைஜெயந்தி.

அவள் கண்களில் இன்பத்தின் ஒளி!

"வைஜெயந்தி..."

"ப்ராணநாதரே..."

"எப்படி இருக்கிறாய்?"

"நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்?"

"நான் உன்னைக் கேட்டால் நீ என்னைக் கேட்கிறாயா?" — மகாதேவர் அவள் தோளில் கை போட்டு சற்றே பக்கவாட்டில் அணைத்தபடி மாளிகைக்குள் நுழைந்தார். முகப்பு வாயிலை ஒட்டி மாலியும், சற்று தள்ளி மாணிக்கவல்லியும் நின்று பணிவாக வணங்கி "வாருங்கள் வாருங்கள்..." என்றனர்.

மைய மண்டபம் போன்ற விஸ்தாரமான இடத்தில் ஊஞ்சல் தொங்கியபடி இருந்தது. அதில் சென்று அதன் மேலுள்ள மெத்தை மேல் மெல்ல அமர்ந்தார் மகாதேவர்.

சிரம பரிகாரத்தின் பொருட்டு அவருக்கு திராட்சை ரசக் குடுவையை ஏந்திவந்து அதை ஒரு கிண்ணத்தில் ஊற்றி நீட்டினாள் தாதிப்பெண் ஒருத்தி.

"வேண்டாம். நான் இன்று விரதம் பூண்டுள்ளேன்" என்று மகாதேவர் கூறவும், வைஜெயந்தி முகத்தில் ஒரு புது மின்னல் பாய்ந்தது போல் இருந்தது.

"விரதமா.... தாங்களா?" என்றாள் ஆவலாக.

"ஆமாம் வைஜெயந்தி. இன்று சனிக்கிழமை அல்லவா. என்னை இன்றைய தினம் உபவாசம் இருக்கச் சொல்லியிருக்கிறார் ஜோதிடர் ஒருவர்."

"எதற்கு?"

"கிரகங்களில் சனியின் தீய பார்வை என்மேல் படுகிறதாம். உபவாசம் இருந்தால் அதன் வீர்யம் குறையுமாம்..."

— அடுத்த நொடியே வைஜெயந்தியின் கண்கள் கலங்கி விட்டன.

"நீ எதற்கு கலங்குகிறாய்?"

"கலங்காமல்...? உங்களுக்கு ஒன்று என்றால் என்னால் எப்படித் தாங்கிக்கொள்ள முடியும்?"

"இப்பொழுது என்ன ஆகிவிட்டது...?"

"இனி ஏதாவது ஆகிவிட்டால்...?"

"அதற்கு யார் என்ன செய்ய முடியும்? வருவதை சந்தித்துதான் தீர வேண்டும். அதுதானே வாழ்க்கை." — அவர்கள் பேசத் தொடங்க - மற்றவர்கள் இங்கிதமாக ஒதுக்கிக் கொண்டனர்.

"ஆமாம்... இந்த மாளிகை வாசம் உனக்கு பிடித்திருக்கிறதா?" — வைஜெயந்தி எதுகுறித்து பேச விரும்பினாளோ அது

குறித்தே மகாதேவர் கேட்கவும், வைஜெயந்தி கூர்மையாகப் பார்த்தாள்.

"என்ன பார்க்கிறாய்?"

"என்னை மன்னியுங்கள்..."

"எதற்கு?"

"எனக்கு இந்த மாளிகை வாசம் உடன்பாடாக இல்லை."

"ஏன் அப்படி கூறுகிறாய்?"

"இது நம்மைப்போல மனிதர்கள் வாழக்கூடிய இடமாகவே தெரியவில்லை..."

"ஓ... நீ அந்த வங்காள ஜோதிடரின் ஆவிச் சொரூபத்தை நினைத்து அச்சப்படுகிறாயா?"

"அது மட்டுமல்ல... அவ்வப்போது இதனுள் வீணை நாதம் கேட்கிறது. ஆனால், எங்கிருந்து யாரால் என்றுதான் தெரியவில்லை..."

"என்ன சொல்கிறாய் நீ...?"

— மகாதேவர் அப்படிக் கேட்கும்போதே வைஜெயந்தி விரிவாகக் கூறும் அவசியங்கள் இன்றி வீணை இசை ஒலிக்க ஆரம்பித்தது.

அற்புதமான செஞ்சுருட்டி ராகம். ஆடு மாடுகளைக்கூட அப்படியே மயக்கி கல்லாக நிலைநிறுத்திவிடும் ராகம்.

மகாதேவரும் அந்த ராக இசை பாயும் வரை தன்னையே மறந்துதான் போனார். ஒருவழியாக இசை ஒலிப்பது நின்றது.

மகாதேவரும் சிலிர்ப்புடன் வைஜெயந்தியைப் பார்த்தார்.

"கேட்டீர்களா இப்படித்தான் அவ்வப்போது கேட்கிறது..."

"அற்புதம்... பிரமாதம்...

"இது என்ன பாராட்டு... முதலில், யார் வாசிக்கிறார்கள், எங்கே இருந்து வாசிக்கிறார்கள் என்பது விளங்க வேண்டுமே...?"

"இவ்வளவுதானா...? இந்த மாளிகையின் அந்த மர்மத்தை நானறிவேன்."

"அப்படியா...? உங்களுக்குத் தெரியுமா?"

"வா... இப்பொழுதே என்னுடன் வா! எனக்கும் அதை வாசிக்கும் அந்த இசை மேதையைப் பார்க்கும் ஆவல் வந்துவிட்டது."

"நீங்கள் இங்கே இல்லாத சமயத்தில் நிறைய அசம் பாவிதங்கள் நடக்க இருந்தன. இறை அருளால் தோடிபுரம் தப்பித்தது."

"தெரியும். அன்றாடம் எனக்கு புறாவின் மூலம் தகவல்கள் வந்துவிடும். அனைத்தையும் அறிவேன். உன் சகோதரன் ஆபரண அறைக்குள் நுழைந்து கதவைத் தாழிட்டுக் கொண்டு மாய மானதில் இருந்து, அந்நிய நாட்டு மிலேச்சர்கள் பாபாஜியை தேடிக்கொண்டு வந்தது வரை அனைத்தையும் அறிவேன்."

— மகாதேவரின் விளக்கத்தை தொடர்ந்து சட்டென்று அவரது மார்பில் முகத்தைப் புதைத்துக்கொண்டு தனது மகிழ்ச்சி - துக்கம் இரண்டிற்கும் ஒரு வடிகாலை தேடிக்கொண் டாள் வைஜெயந்தி.

"சரி, வா... இந்த இசைக்கான மூலத்தைக் கண்டறிவோம்..."

"வருகிறேன்... ஆபத்தான செயல் எதுவும் இல்லையே இதில்...?"

"நான் இருக்கும்போது ஆபத்து உன்னை நெருங்குமா என்ன?" மகாதேவர் அவளை ஆதரவாக அணைத்துக் கொண்டு அந்த ரகசியமான இடம் நோக்கி நடந்தார்.

ஒரு அறைக்குள் விவேகமாக ஒடுங்கிக் கிடந்தாலும் மகாதேவரும் வைஜெயந்தியும் பேசிக் கொண்டிருந்தது மாலி யின் காதுகளிலும் விழுந்து கொண்டுதானிருந்தது.

அவளையும் இப்பொழுது ஆர்வம் தொற்றிக்கொண்டது. அவர்கள் இருவரும் எங்கே செல்கிறார்கள் என்று பார்க்க விரும்பி பின்தொடர்ந்து சென்றாள்.

மாணிக்கவல்லியின் கரம் தடுத்து நிறுத்தியது.

"வேண்டாம் மாலி... மாப்பிள்ளை நம்மை அழைத்திராத நிலையில் செல்லக் கூடாது. அது தவறு."

"தெரியும்... இருந்தும் இந்த வீட்டு மர்மத்தை அறியும் துடிப்பு என்னைத் தள்ளிவிடுகிறதே..."

"பொறுத்திரு... அவர் உன் மாப்பிள்ளை மட்டுமல்ல. இந்த நாட்டுக்கு மந்திரி. எனவே அவரது செயலை நீ வேவு பார்ப்பது ராஜ துரோகமாகக் கருதப்பட்டுவிடும்..."

"என்னம்மா நீ... தேவையில்லாததைப் பேசி குழப்ப மூட்டுகிறாயே..."

"தவறாகக் கருதாதே மாலி. இப்பொழுதுதான் நமக்கு விடிந்திருக்கிறது. அதைக் கெடுத்துக்கொள்ள வேண்டாம். வைஜெயந்திதான் செல்கிறாளே, அவள் உண்மையை அறிந்து வந்து கூறுவாள்..."

"சரி, உன் பேச்சைக் கேட்கிறேன். வீணை இசைத்தது என் மகனாக இருக்க வேண்டும். அவனும் இதே மாளிகையில் இருக்க வேண்டும். இதுதான் இப்போது என் பிரார்த்தனை..."

— மாலி கண்களை மூடி பிரார்த்தித்துக் கொண்ட நிலையில் மீண்டும் திறந்தபோது அவர்கள் இருவரும் எந்த பக்கம் எப்படிச் சென்றார்கள் என்றே தெரியவில்லை.

மாலியை சற்றே திகைப்பும் வருத்தமும்கூட ஆக்கிரமிக்கத் தொடங்கின!

# இன்று

**வி**டிந்துவிட்டது!

காவிரி ஆற்றில் மார்பளவு நீரில் நின்றுகொண்டு சந்தி செய்து கொண்டிருந்தார் உபாசகர்.

"நமஸ்காரம் சாமி." - குரல் கேட்டது. திரும்பினார். வாயில் வேலங்குச்சியுடன் பிரசிடெண்ட் கல்யாணசுந்தரம். ஒரு கைகளில் வாரிவாரி அர்க்யமாக விட்டு ஒருவழியாக சந்தியை முடித்தார்.

ஈர உடலுடன் கரையும் ஏறினார்.

அந்த வேளையில் காவிரிக்கு யாரும் வந்திருக்கவில்லை. கல்யாணசுந்தரம் வந்து நிற்பதுகூட தற்செயலாகத் தோன்ற வில்லை. அவர் தன்னைத் தேடி வந்திருக்கிறார் என்பது புரிந்து போயிற்று.

"என்ன புத்தகம்?" — பார்வை புத்தகத்தின் மேல் செல்ல, உதடு கேள்வி கேட்டது.

"நீங்களே பாருங்க சாமி..." — கல்யாணசுந்தரம் புத்தகத்தை நீட்டினார் காலைச் சூரியனும் கதிர்க்கிரணங்களை நீட்ட ஆரம்பித்திருந்தான். அதன் ஒளி பட்டதில் புத்தக அட்டை பளிச்சென்று தெரிந்தது.

அதில் சுந்தராம்பாளின் புகைப்படம்!

நல்ல புன்னகை பூத்த முகத்துடன்... தம்புராவுக்கு சுருதி கூட்டியபடி அவள் அமர்ந்திருந்த கோலத்தில் ஒரு தேஜஸும் பவித்ரமும்கூட தென்பட்டது.

"ஓ... சுந்தராம்பாளா..."

"ஆமாம் சாமி- என்னைப் பேட்டி காண வந்து போட்டோவும் எடுத்துக்கிட்டுப் போய்ட்டு — இவ படத்தை பெருசா போட்ருக்காங்க..."

"எப்பவும் பொம்மனாட்டி படத்தைதான் கல்யாண சுந்தரம் போடுவா..."

"அது சரி... உள்ளுக்குள்ள கட்டுரை எழுதி பத்மஸ்ரீ விருது கொடுக்கணும், பத்மபூஷண் விருது கொடுக்கணும்னுகூடவா எழுதுவாங்க..."

"ஓ... விஷயம் அப்படிப் போறதா?"

"வயித்தெரிச்சலா இருக்குது சாமி... ஒண்ணு மட்டும் சொல்லிக்கறேன். இவ இந்த ஊர்ல இருக்கற வரை என்னால தலை எடுக்கவே முடியாது."

கல்யாணசுந்தரத்தின் பேச்சிலும் மூச்சிலும் அனலடித்தது. உபாசகருக்கும் புரிந்து போய் சிரிப்பு வந்தது. கூடவே முதல் நாள் அசோகனை அவள் தவிட்டுக்கு விற்றதும் நினைவில் வந்தது.

"நடங்க கல்யாணசுந்தரம். நானே உங்ககிட்ட நிறைய பேசணும்னு இருந்தேன்..."

— உபாசகர் ஈர மணல்வெளியில் நடந்தபடி தனது பீடிகையை ஆரம்பித்தார்.

"சொல்லுங்க சாமி..."

"நேத்து ஒரு ரசமான காட்சியைப் பார்த்தேன்..."

"விளக்கமா சொல்லுங்க..."

"சுந்தராம்பாளுக்கு ஒரு சக்களத்தி இருக்கா இல்லியா?"

"ஆமாம். விமலா!"

"அவளுக்குதான் ஒரு பையனோ...?"

"ஆமாம்... அவனுக்கென்ன?"

"அவனை அவ அந்த திலகத்துக்கு தவிட்டுக்கு வித்ததை நான் பார்த்தேனே..."

"சாமீஈஈ..." - காலில் முள் தைத்தது மாதிரி தேங்கி நின்றார் கல்யாணசுந்தரம்.

"என்ன கல்யாணசுந்தரம்?"

"சுந்தராம்பாளா தவிட்டுக்கு வித்தா?"

"ஆமா... நான் என் கண்ணால பார்த்தேன்."

"அந்த ராமச்சந்திரன் ஒண்ணும் பண்ணலியா?"

"பொம்மை மாதிரி நின்னு வேடிக்கை பார்த்தார். ஆமாம்... ஏன் அப்படி அவ செய்தாள்னு நீங்க நினைக்கறேள்...?"

"புரியலியே சாமி... சுந்தராம்பா விஷயத்தை பேச ஆரம்பிச்சா திருவிழால தொலைஞ்ச குழந்தை மாதிரி தவிக்க வேண்டியிருக்கும். அவளை உயிருக்கு உயிரா காதலிச்சவன் நான். என்னைக் கட்டிக்கறேன்னு சொல்லிக்கிட்டிருந்தவ அப்படியே பல்ட்டி அடிச்சுட்டா. கடைசில அந்த ராமச் சந்திரனைப் போய் கல்யாணம் பண்ணிக்கிட்டா.

அவன் ஒரு சபா புரோக்கர். இந்த ஊர்க்காரன்தான். ஆனா என் அந்தஸ்துக்கு உறைகூட போட முடியாது அவனால..."

— கல்யாணசுந்தரம் குமுற ஆரம்பிக்க - அதில் உபாசகர் கற்பனைகூட செய்து பார்த்திராத நிஜங்கள்.

குறிப்பாக கல்யாணசுந்தரம் சுந்தராம்பாளை காதலித்த அந்த தகவல்!

அடக் கடவுளே...!



# 5
## அன்று

**மா**ளிகையில் மாணிக்கவல்லியும், மாலியும் எங்கே வைஜெயந்தி என்கிற தேடலில் தவித்தபடி இருக்க, மகாதேவரும் வைஜெயந்தியும் மாயமாகியிருந்தார்கள்.

அப்பொழுது அந்த மாளிகையின் பிரதான காவலாளி ஒருவன் அவர்களை நோக்கி வந்தான்.

"தாயே... உங்களுக்கு எதுவும் உதவி தேவையா?" என்றும் கேட்டான்.

"எதற்கு இப்படிக் கேட்கிறாய்..."

"இல்லை... இப்படித் தவிப்போடு நிற்கிறீர்களே... அதனால் அப்படி கேட்டேன்."

"என் மகளும் மாப்பிள்ளையும் இந்த பக்கமாகத்தான் போனார்கள். ஆனால், அவர்கள் எங்கே என்று தெரியவில்லை. இப்பொழுது நான் அவர்களைப் பார்க்க வேண்டும்" என்றாள் மாலி.

"அது மட்டும் முடியாது..."

"முடியாதா... ஏன்"

"இது நவக்கிரக மாளிகை. எப்படி ஒன்பது கிரகங்களும் ஒன்றுக்கொன்று பார்த்துக் கொள்ளாதோ அப்படி இங்கு அறைகளும் வடிவமைக்கப்பட்டுள்ளன. இதை மனிதர்கள் திட்டமிட்டுக் கட்டவில்லை. அந்த இந்திரலோகத்து மயன் இதைக் கட்டியதாகக் கூறுவார்கள்.

அதோ இந்த மாளிகை மைய்த்தில் நீராழி இருக்கிற தல்லவா? இதற்குள் வரும் காவிரி நீரும்கூட ஆற்றில் வரும் வெள்ளத்திற்கு ஏற்ப கூடிக் குறையும் தன்மை உடையது.

இதில் நீராடிவிட்டு தனக்கு உரிய ராசி எதுவோ அதற்குரிய அறைக்குள் சென்று அமர்ந்து தியானிப்பதால் கிரக பலம் ஏற்படும் என்பதெல்லாம் இந்த மாளிகையின் சூட்சுமங்கள். இதை எல்லாம் கடந்து மோட்சம் என்கிற பெயரில் இங்கே ஒரு ரகசிய அறை உண்டு. ஒன்பது கிரகங்களுக்குரிய ஒன்பது வாயில்களைக் கொண்ட அறை அது. அதற்குள் சென்று வருவது - எல்லோருக்கும் சாத்தியமில்லை. மந்திரி மகாதேவர் மட்டுமே இப்பொழுதுள்ள நிலையில் அதை அறிவார்."

— என்று ஒரு நீண்ட பேருரையை நிகழ்த்தி முடித்தான், அந்த பிரதான காவலாளி.

"ஆச்சரியமாக இருக்கிறதே... அது எப்படி கண்ணுக்குத் தெரியாதபடி ஒரு அறை இருக்க முடியும்?" என்று மாலியும் அவனை விடவில்லை.

அவள் அப்படிக் கேட்டதுதான் தாமதம் — வீணை ஒலி சட்டென்று கேட்க ஆரம்பித்தது. சற்று முன் கேட்டு, பின்னர் அடங்கி, இப்பொழுது திரும்பவும் கேட்கிறது. அந்த ஒலியும் ஒரு உன்னத ராகத்தில் பரவத் தொடங்கியது. அனேகமாக அது ஆரபியாக இருக்கவேண்டும். ஆரபி ராகத்துக்குத்தான் தீய குணங்களை அழித்து மனதுக்குள் நல்ல எண்ணங்களை தோற்றுவிக்கும் சக்தி உண்டு. அது அந்த நொடி வேலை செய்ய ஆரம்பித்தது.

மாலியும், மாணிக்கவல்லியும் அதன்பின் வாயே திறக்க வில்லை. அப்படியே மௌனமாகிவிட்டனர். அவர்கள் மனதுக் குள்ளேயும் வைஜெயந்தி பற்றியோ, மகாதேவர் பற்றியோ, அவர்கள் எங்கே போனார்கள் என்பது பற்றியோ எல்லாம் எந்த எண்ணமும் இல்லை.

அப்படியே மனது பெட்டிப்பாம்பு போல் அடங்கி விட்டது. அருகிலேயே ஒரு மெத்தை விரிப்பும் திண்டும் போடப் பட்டிருந்தது. அதில் போய் இருவரும் சப்பணமிட்டு அமர்ந் தனர். அந்த பிரதான காவலாளியும் தன்னை மறந்து கண்களை மூடிக் கொண்டு ரசிக்க ஆரம்பித்தான்.

அரை நாழிகை, முழு நாழிகை என்று நாழிகைக் கணக்கு போய் ஏறத்தாழ பதின்மூன்று நாழிகை நேரத்துக்கு ஆரபி வெள்ளமாகப் பாய்ந்து — பின் மிக நிதானமாக ஓய்ந்து அடங்கியது. அதன்பிறகு ஒரு மாபெரும் நிசப்தம்.

சாதாரணமாக மாளிகைக்கு வெளியில் எல்லாவிதமான மரங்களும் உடைய ஒரு நந்தவனம் உண்டு. அதில் பருவ

காலங்களுக்கு ஏற்ப புதுப்புது பட்சியினம் வந்து அடைந் திருக்கும்.

சீனத்து வால்குருவி, பனிக்காட்டு வெள்ளைக்கிடாரி, சமுத்திர மீனா என்னும் ஒருவித மீன் தின்னும் கொக்கு இனங் கள், மேலும் மேற்கத்திய நாடுகளான ஐரோப்பிய நாட்டு பல்பல், பஞ்சவர்ணம், பர்மா நாட்டின் தலைக்கொத்தி, கறுப்பு மனிதர்களின் ஆப்பிரிக்க நாட்டு தட்டவாயன், ஒருகாலன் முனிநோக்கி என்று விதம்விதமான பறவைகள் அந்த மாளிகை வனத்து மரங்களில் அடைந்துகிடக்கும். குறிப்பாக வாழைத் தோப்பில் சொல்ல முடியாத அளவு கிளிக்கூட்டமும் இருக்கும். சீப்பு சீப்பான வாழைத் தார்களை பழுக்கவே விடாது. அப் படியே அதன்மேலேயே அமர்ந்து தோலை உரித்துப்போட்டு விட்டு உள்ளிருக்கும் பழத்தை ஏதோ அமிர்தத்தை உண்ணுவ தாக பாவித்துக் கொண்டு விழுங்கிவிட்டுச் சென்றுவிடும். வந்து பார்த்தால் தோல்கள் மட்டுமே தொங்கும் வாழைத் தார்களாக அவை இருக்கும். இதனால் எப்பொழுதும் அந்த மரக்கூட்டங்களில் பட்சிகளின் கூக்குரல் கேட்டபடியே இருக்கும். அதை அனுபவித்துக் கேட்பதும் ஒரு சுகம்தான்.

இப்படிப் பல சிறப்புகள் கொண்ட மாளிகைத் தோட்டத் திலும் பட்சிகள் எல்லாம்கூட ஆரபி ராகத்தால் வாயடைத்துப் போயிருந்தன. நிசப்தம் என்பது எப்படி இருக்கும் என்பதற்கு சான்றாக இருந்தது அப்போதைய அந்த நிலை.

யாரும் அப்படி ஒரு நிசப்தமான சூழலை எந்தக் காலத் திலும் உணர்ந்திருக்க வாய்ப்பில்லை என்கிற மாதிரியும் இருந்தது.

அதன் பிறகு மெல்ல வாய் திறந்தவன் காவலாளிதான்.

“ஆஹா என்ன ஒரு அற்புதமான ராகம். இந்த மனதிற்குள்தான் எத்தனை அமைதி...”

— அவன் கருத்தை ஆமோதிப்பதைப்போல அவனைப் பார்த்தாள் மாலி.

“இப்படித்தான் அவ்வப்போது ராகங்கள் காதில் விழுந்து எங்களைக் கட்டிப்போட்டு விடுகின்றன. எவ்வளவு கொடிய மனமுள்ளவனும் இங்கு வந்தால் இந்த இசை கேட்டு மாறிவிட வேண்டும்.

சில நாட்களாகவே நாங்கள் நாங்களாக இல்லை." தொடர்ந்தான் அவன்.

அதே வேளையில் மந்திரி மகாதேவரும், வைஜெயந்தியும் அங்கே அவர்களை நோக்கி வந்தபடி இருந்தனர். இருவரிடமும் அசாத்தியமான ஒரு மௌனம்.

குறிப்பாக வைஜெயந்தி முகத்தில் ஒரு வித கலக்கம். மாலி அதை கச்சிதமா உணர்ந்து அவளை நெருங்கினாள்.

"வைஜெயந்தி... எங்கே போய்விட்டாய்? நாங்கள் திரும்பு வதற்குள் நீங்கள் இருவரும் மாயமாகி விட்டீர்கள். ஆமாம்... ஏன் உன் முகம் ஏதோபோல் இருக்கிறது...?"

"ஒன்றுமில்லை."

"ஒன்றுமில்லையா... அதுசரி... ஒரு தேவராகம் கேட்டதே... அதை யார் வாசித்தது?"

"அது... அது..."

"சொல்... வீரேந்திரன்தானே?"

"அ... ஆமாம்..."

"நான் யூகித்தேன்... அம்மா பார்த்தாயா? என் யூகம் சரியாகிவிட்டது. ஆமாம்... எங்கே இருக்கிறான் வீரேந்திரன். அவனை நான் பார்க்க வேண்டும்."

-மாலி பரபரத்தாள். மாணிக்கவல்லியும் துடித்தாள்.

"அம்மா..."

"என்ன...?"

"நீ..."

"நான்...?"

"அதை... அதை..."

"அதை...? - நீ என்ன சொல்ல வருகிறாய்?"

"நீ... நீ வீரேந்திரனைப் பார்க்காமல் இருப்பதே நல்லது..."

"இது என்ன உளறல்?"

"இல்லை.. உன் மனம் வேதனைப்படும். அதனால் அப்படிச் சொன்னேன்."

"வீரேந்திரனைப் பார்த்தால் என்மனம் வேதனைப் படுமா...? நீ என்னதான் சொல்ல வருகிறாய்? நான் அவனது தாய்."

*“அதனால்தான் சொல்கிறேன். வீரேந்திரன் இப்பொழுது உன் மகனல்ல... அவன்... அவன்...”*

*“அவன்?”*

*“அவன் இப்பொழுது ருத்ரன்!”*

*“ருத்ரனா?”*

*-மாலி கேட்ட விதத்தில் அழுத்தம். ஆனால், எதனால் அவனை ருத்ரன் என்கிறாள் என்பது விளங்காமல் மாலி திகைத்தபோது “அம்மா...” என்றொரு குரல். திரும்பினாள் மாலி!*

*அவள் எதிரில் வீரேந்திரன்தான்!*

*ஆனால், பழைய வீரேந்திரனாக இல்லாமல் இடையில் ஒரு கௌபீனத்துடன் நெற்றி நிறைய விபூதித் தீட்டலுடன் அவன் தெரிந்த விதம் மாலியை விழிகள் விரியவிட்டது. எதிர்ப்பட்ட வீரேந்திரன் கைகளிலும் பனைஓலை ஏட்டுக்கட்டு ஒன்று...!*

## இன்று

*உபாசகர் முகத்தில் ஏராளமாக அதிர்ச்சி. அது அப்படியே தாராளமாகவும் பரவத் தொடங்கியது.*

*“என்ன உபாசகரே! அப்படியே ஸ்தம்பிச்சு நின்னுட்டீங்க?”*

*“நிக்காம...? நீங்க சுந்தராம்பாளைக் காதலிச்சவர்னா அதைக் கேட்க அதிர்வாகத்தானே இருக்கும்...?”*

*“காதல் ஒரு பொதுவான உணர்ச்சிதானே உபாசகரே...? யார் மனசுல காதல் இல்ல? சொல்லுங்க பார்ப்போம்...?”*

*“அதுசரி... அதுசரி... ‘எந்த புத்துல எந்த பாம்பு இருக்கோ யாருக்குத் தெரியும்’னு ஒரு பழமொழி உண்டு. உங்களைப் பாக்கற இந்த நிமிஷம் அந்த பழமொழிக்கு அழுத்தமா ஒரு பதில் கிடைச்ச மாதிரி தோண்றது.”*

*“என்ன உபாசகரே! நீங்க... முக்கியமான விஷயத்தை விட்டு எங்கேயோ போய்ட்டீங்களே?”*

*“ஆமாம்ல்ல... சரி, விஷயத்துக்கு வருவோம். சுந்தராம்பா தன் பிள்ளையை ஏன் தவிட்டுக்கு வித்தான்னு நீங்க நினைக்கறேள்?”*

"என்னைக் கேட்டா...? சாஸ்திரம் தெரிஞ்ச நீங்கதான் சொல்லணும். பொதுவுல எதனால தவிட்டுக்கு விப்பாங்க? அதை சொல்லுங்களேன் முதல்ல."

"அது ஒரு தந்திரம் கல்யாணசுந்தரம். சிலருக்கு புத்ர தோஷம் இருக்கும். அதனால பசங்க பொறந்தா அவங்களுக்கு தங்காது. இறந்துபோயிடும். தங்கணும்னா பொறந்த குழந்தையை தன்னது இல்லேன்னு அவங்க யாருக்காவது ஒரு அற்பமான பொருளுக்கு வித்துடணும்."

"அப்ப சுந்தராம்பாளும் தன் மகன் தனக்கு இல்லாம போய்டுவான்னுதான் வித்துட்டாளா?"

"கரெக்ட்... கூட்டிக்கழிச்சா அப்படித்தான் தோணுது. இத்தனைக்கும் அந்த அசோகன் அவ வயித்துல பொறந்த பிள்ளை இல்லையே..."

"இந்த நேரத்துல எனக்கு ஒரு விஷயம் ஞாபகத்துக்கு வருது சாமி."

"என்ன?"

"சுந்தராம்பாளை நான் காதலிச்ச சமயம் அது. ஒரு நாள் என்கிட்ட அவ 'என்னை ஆசைநாயகியா வெச்சுக்கப் போறீங்களா? இல்லை கல்யாணமே பண்ணிக்கப்போறீங்களா?'ன்னு கேட்டா..."

"அதுக்கு நீங்க என்ன சொன்னீங்க?"

"நான் தோடீஸ்வரர் கோவிலோட பரம்பரை வித்வான். எங்க பரம்பரையிலயே யாரும் யாரையும் வெச்சுகிட்டதெல்லாம் கிடையாது. உன்னோட சேர்ந்து ஒரு நல்ல குடும்ப வாழ்க்கை வாழ்ந்து பிள்ளை குட்டிங்க பெத்துக்க விரும்பறேன்'னுதான் சொன்னேன்..."

"சாபஷ்... அதுக்கு சுந்தராம்பாள் என்ன சொன்னா?"

"'அப்ப நீங்க வேற யாரையாவதுதான் கல்யாணம் பண்ணிக்கணும்'னு பட்டுன்னு சொல்லிட்டா."

"ஏன்... பிள்ளைகுட்டின்னு பெத்துக்க அவளுக்கு விருப்பமில்லையா... இல்ல...?"

"முதல்ல நானும் அப்படித்தான் நினைச்சேன். ஏன்னா அவளுக்கு வாரிசு உருவானா அது அந்த தாசி பங்களா பூஜைக்கு போயாகணும். அந்த பூஜை தன்னோட முடிஞ்சு போயிடட்டும்னு அவ நினைச்சிருக்கலாம்..."

“அப்படின்னா அவ வயித்துல பொறக்கற அவ வாரிசுக்கும் அந்த தாசி பங்களாவுக்கும்கூட ஒரு தொடர்பு இருக்குன்னு சொல்லுங்க.”

“இல்லாமலா பரம்பரை பரம்பரையா அவங்க கைலயே அந்த தாசி பங்களா இருக்குது.”

கல்யாணசுந்தரத்தின் கேள்வி உபாசகரை யோசிக்க வைத்தது.

“என்ன சாமி...?”

“இல்ல... தொட்டுத் தொட்டு எல்லாம் அந்த தாசி பங்களாவுலயே போய் நிக்கறதேன்னுதான் யோசிக்கறேன்.”

“எனக்கும் அதே கேள்விதான்... ஆனா அந்த தாசி பங்களா பத்தி நினைச்சாலே ஆபத்துதான். நீங்க நம்புனா நம்புங்க, நம்பாட்டி போங்க. ஒரு மாடு மேய்க்கற பையன் அந்த பங்களா பக்கமா தெரியாத்தனமா போயிட்டான். போன இடத்துல ஒரு ஓரமா மூத்திரம் வந்துச்சுன்னு மூத்திரம் போயிருக்கான். அதுக்கப்புறம் அந்த பையன் மூணு மாசத்துக்கு எழுந்திருக்கலை. நடமாட முடியலை. அப்புறமா சுந்தராம்பாகிட்ட கோரிக்கை நாளன்னிக்கு வந்து அவனோட அம்மாக்காரி சொல்லி அழுவ, சுந்தராம்பாளும் ‘நான் பார்த்துக்கறேன்’னு சொன்ன பிறகுதான் சரியாச்சு.”

“சரி... இப்ப நீங்க என்ன சொல்ல வரேள்?”

“என்னாலயோ இல்ல எங்களாலேயோதான் அந்த பங்களா மர்மத்துக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்க முடியலை. நீங்களாவது வைக்கலாமில்லியா?”

“அப்படி வெச்சுட்டா...?”

“சுந்தராம்பா பத்தின உண்மைகள் ஊர் உலகத்துக்கு தெரியவரும்னு சொல்லவரேன்.”

“அப்ப... இப்ப அவ அங்க ஏதோ தப்பு பண்ணிண்டு இருக்கறதா நீங்க நினைக்கறீங்களா..?”

“தப்போ சரியோ... அவ இந்த ஊரைவிட்டுப் போகணும். அவ இருக்கற வரை எனக்கோ என் நாதஸ்வரத்துக்கோ மரியாதை கிடைக்கப்போறதே இல்லை. இதுதான் உண்மை.”

கல்யாணசுந்தரம் இறுதியாக எங்கே வருகிறார் என்பது உபாசகருக்குப் புரிந்தது.

*கலைஞர்களுக்குள் போட்டி இருக்கலாம். ஆனால் பொறாமை இருக்கக்கூடாது. அது மிக ஆபத்தானது என்பார் கள். கல்யாணசுந்தரத்துக்கு இது புரியவில்லையே என்பது போல அவரைப் பார்த்தவர், அதை அவரிடம் சொன்னால் இப்போதுள்ள சூழலில் அதை சரியாக எடுத்துக் கொள்ள மாட்டார் என்றும் யூகித்தவராக ஒருமாதிரி மழுப்பலாக சிரித்தார்.*

*"என்ன சாமி... நீங்க சிரிக்கறத பார்த்தா 'இந்த பொறாமை உங்களுக்கு ஆகாது'ங்கற மாதிரி இருக்குதே."*

*-கல்யாணசுந்தரமே அப்படிக் கேட்கவும், உபாசகருக்கு சுருக்கென்றது.*

*"உண்மைதான் கல்யாணசுந்தரம். நான் அப்படித்தான் நினைச்சேன்."*

*"தப்பு சாமி... என் உணர்ச்சி பொறாமை உணர்ச்சி கிடையாது."*

*"அப்படின்னா அதுக்கு வேற பேர் என்னவாம்?"*

*"அவளோட இசையே ஒரு மாயம்னு நினைக்கறேன். அந்த ருத்ர வீணை இசைமாதிரின்னு வையுங்களேன்."*

*"மாயமா... புது கோணமா இருக்கே?"*

*"ஆமாம் சாமி... ருத்ர வீணை இசை மாயம்தானே? மனுஷங்க செஞ்ச வீணையா அது...?"*

*"இசைல மாய இசை, சாதாரண இசைன்னுல்லாம் கிடையாது கல்யாணசுந்தரம்... யார் எப்படி வாசிக்கறாங்கங் கறதும், வாசிக்கறவாளோட இசைஞானமும் ஈடுபாடும்தான் முக்கியம்..."*

*"இல்ல சாமி... இது சால்ஜாப். இந்த ஊரைவிட்டு வெளிய போய் சுந்தராம்பா கச்சேரி பண்ணி பேர் எடுக்கட்டும். நான் அவளை பெரிய பாடகின்னு ஒத்துக்கறேன்."*

*"சரி. உங்க மனசுல அவ இசை மேலயே ஒரு சந்தேகம் வந்துடுத்து. பொறாமை கிடையாதுங்கறது ஒரு சந்தோஷமான விஷயம்தான். பார்ப்போம்."*

*"என்ன சாமி பார்ப்போம்னு சாதாரணமா சொல்றீங்க. ஒரு உறுதியா சொல்லுங்க. உங்களை மாதிரி மாயம் மந்திரம் தெரிஞ்சவங்களாலே அவளைக் கட்டிப்போட முடியாட்டி வேற யாரால முடியும்?"*

மிக வெளிப்படையாக 'சுந்தராம்பாளை அடக்குவதற் காகவே நான் உங்களோடு பேசிப்பழகி உங்களுக்கு உதவி செய்து கொண்டிருக்கிறேன்' என்கிற மாதிரி இருந்தது கல்யாண சுந்தரத்தின் பேச்சு. இருந்தும் சகித்துக் கொண்டு 'முயற்சிக் கிறேன்' என்றார்.

கல்யாணசுந்தரத்துக்கும் ஒரு பெரிய பாரம் மனதை விட்டு இறங்கினதுபோல இருந்தது.



# 6

# அன்று

பனை ஓலை ஏட்டுகட்டும் கையுமாக கௌபீனத்துடன் தெரிந்த வீரேந்திரனைப் பார்த்து ஒரு வினாடி மாலி திக்கு முக்காடி விட்டாள்.

அவள் கற்பனைகூட செய்து பார்த்திராத கோலம்.

"வீரேந்திரா... என்ன இது அலங்கோலம்?"

"தவறு அம்மா... இதுதான் இனி என் கோலம்."

அவன் அவளைத் திருத்தினான் மகாதேவரும் வைஜெயந்தியும்கூட அவன் பேச்சால் அதிர்ந்து ஆச்சரியத்தைச் சொரிந்தனர்.

"என்னடா கூறுகிறாய் நீ... இங்கே... நீ எங்கேதான் இருந்தாய்?"

"பிராண அறையில்..."

"பிராண அறையா...? அப்படி என்றால்?"

"அம்மா...! இந்த மனை ஒரு கோவில். இங்கே ஒவ்வொரு இடத்தில் ஒவ்வொருவித சக்தி உள்ளது. அப்படி ஒரு திட்டமுடன் கட்டப்பட்ட இடம் இது. இப்பொழுது நீ நிற்கும் இடம் நைருதி பாகம். அங்கே நீ நின்றுகொண்டு எதைச் சொன்னாலும் அது பலித்துவிடும். அப்படி ஒரு சிறப்பு இங்குள்ளது."

"என்ன உளறுகிறாய்? இடத்திற்கெல்லாம் சக்தி என்கிறாயே.. உன்னை இந்த கோலத்தில பார்க்கும் பொழுது என் நெஞ்சே வெடித்துவிடும் போல் இருக்கிறது. என் வரையில் ஒரு நல்ல வாழ்க்கை நமக்கு அமைந்திருக்கும் பொழுது உன்னை நான் இழந்துவிட்டேனோ என்று தோன்றுகிறது. இது என்னடா சாபம்?"

“சரியாகச் சொன்னாய்... சாபம்தான்! எத்தனை ஆண் மக்கள் வேசி சுகத்துக்காக தங்களை உன்னிடமும் உன் வம்சா வளியிடமும் இழந்திருப்பார்கள். அதை நீ எண்ணிப் பார்த் தாயா?”

“அய்யோ... நான் ஒரு பேச்சிற்கு சொன்னால் நீ அதையே பிடித்துக்கொள்கிறாயே. சாபம் என்றால் அது தலைமுறை தலைமுறையாக அல்லவா தொடரும்?”

“அத்தை... தயவுசெய்து எது பேசுவதாக இருந்தாலும் வீரேந்திரன் கூறியதுபோல சற்று இந்த பக்கமாக வந்து நின்று பேசுங்கள். இந்த மனைக்குள் அவன் கூறியது போல் பலவித மான சுக்திகள் உள்ளன. இங்கே பலநூறு தேவதைகள், தேவர் கள் வசிப்பதாகவெல்லாம் நானும் கேள்விப்பட்டிருக்கிறேன்.”

-என்று மந்திரி மகாதேவரும் வக்காலத்து வாங்கினார்.

“போதும் மாப்பிள்ளை... எனக்கு இப்பொழுது யார் எது சொன்னாலும் புரியாது. இவன் மாறவேண்டும். உங்களால் எங்கள் தலைமுறை மாறிவிட்டதாக நான் கருதினேன். ஆனால், இவனோ அவ்வளவுதான் என்கிறான். நான் இந்த ஊரை விட்டே என் மகனுடன் எங்காவது போய்விடத்தான் விரும்பு கிறேன்.”

-புலம்பினாள் மாலி. அவளிடமா இவ்வளவு பாசம் என்று வைஜெயந்திக்கே ஆச்சரியமாகிவிட்டது.

“காலம் கடந்துவிட்டது தாயே... நான் இப்பொழுது பொறுப்பில்லாத அந்த பழைய வீரேந்திரனில்லை. நான் இப்பொழுது ருத்ரன்...”

“ருத்ரனா...? இது என்ன புது விளக்கம்?”

“ஆம்... ருத்ர வீணையை மீட்ட முடிந்தவர்கள் ருத்ரர்கள். நானும் அதனால் ருத்ரன்...”

“இப்பொழுது எதற்கு இதை எல்லாம் கூறுகிறாய்...?”

“இப்பொழுது கூறாமல் வேறு எப்பொழுது கூறமுடியும். எதைக் களவாட வேண்டும் என்று கண்ணி வைத்தேனோ அது என்னைக் களவாடிவிட்டது.”

“புரியவில்லை உன் பேச்சு.”

“கோவிலின் காப்புப் பெட்டக அறைக்குள் இருந்த இந்த வீணையைக் களவாட அந்த அறைக்குள் ஒளிந்தேன். அதற்கு முன் என்னை வழிநடத்திய காபாலிகனால் மதியிழந்து

அவனாலேயே ருத்ர வீணை மீது எனக்கு ஆசை வந்தது. ருத்ர வீணை என்பதை சிவன் மக்களாலேயே தீண்ட முடியும். அதாவது சிவன் சொத்தாக எவர் ஒருவர் தன்னையே ஒப்புக் கொடுக்கிறாரோ அவராலேயே ருத்ர வீணையைத் தீண்ட முடியும். மற்றவர்களால் அதை தொட்டுத் தூக்கக்கூட இயலாது. இந்த நுட்பமான ரகசியத்தை கபாலிகன் எனக்குக் கூறியதில் நான் விழுந்தேன். ஒருவகையில் என்னை ஒப்புக்கொடுத்தேன் என்றும் கூறலாம். இல்லாவிட்டால் இந்த ஊரே இங்கு வந்த மாயாவி மனிதர்களால் சுடுகாடாகியிருக்கும். அவர்களைக் காப்பாற்ற, இதைக் களவாட முயன்ற பாவத்துக்கு கழுவாய் தேட என்று தீர்க்கமாக முடிவெடுத்து அந்த தோடீஸ்வரன் சந்நிதிக்கு சென்று 'நானும், இனி என்னைத் தொடரும் என் மக்களும் உன் அடிமை. உனக்கே ஊழியம் செய்வோம். திருமணம், மக்கட்பேறு என்கிற இல்லற சுகங்கள் எதுவும் இனி எங்களுக்குக் கிடையாது' என்று சத்தியம் செய்து கொண்ட பிறகே காப்புப் பெட்டக அறையில் ஒளிந்தேன். ருத்ர வீணையும் என் வசமானது. அந்த அறைக்கும் இந்த மாளிகைக்கும் ஒரு ரகசியப் பாதை உள்ளது. அதன் மூலம் இங்கே வந்து இந்த மாளிகையின் பிராண அறையில் ருத்ரனாய் தினமும் அந்த ஈசனுக்கு இசை ஆராதனை செய்ய முடிவு செய்துவிட்டேன். ருத்ர வீணையைப் பொறுத்தவரை இசைக்கத் தொடங்கி விட்டால் அதை நிறுத்தக்கூடாது. தொடர்ந்து இசைத்தாலோ இசைக்கப்படும் ஊரே கைலாயத்திற்கு நிகராகிவிடும்... இந்த உண்மைகளை காப்புப் பெட்டக அறையில் உள்ள 'கோயிலொழுகு' என்னும் கோவிலைப் பற்றிய தகவல்களைக் கூறும் ஏட்டின் மூலம் அறிந்தேன்." வீரேந்திரன் தனது நீண்ட விளக்கத்தால் அங்குள்ள அவ்வளவு பேரையும் ஸ்தம்பிக்கச் செய்துவிட்டான்.

"வீரேந்திரா... ஒரு வகையில் நீ செய்ததும் நல்ல காரியமே.. ஊரைக் கெடுத்துவந்த பாவத்தில் இருந்து விடுபட்டு ஊரை ரட்சிக்கும் பணிக்கு நானும் நீயும் காலத்தால் நிர்ப்பந்திக்கப் பட்டிருக்கிறோம். அம்மா... இதற்காக நீ பெருமைதான் பட வேண்டும்" என்றாள் வைஜெயந்தியும்.

"எல்லாம் சரி... அதற்காக திருமணம் கூடாது, இல்வாழ்க்கை கூடாது என்பதெல்லாம் எந்த அளவுக்கு சரி... அங்கே தானே எனக்கு குழப்பமே?" - மாலியிடம் மீண்டும் விசாரம்.

"தவசிகளுக்கு எப்படி பிரம்மச்சர்யம் லட்சியமோ அப்படித்தான் இதுவும்." மந்திரி மகாதேவரின் விளக்கமும் சேர்ந்தபோது வெகுவேகமாக அங்கு ஒரு காவல்வீரன் வந்து நின்றான்.

"என்ன சங்கதி?"

"நமது நந்தவனத்தில் உள்ள வேப்பமரம் ஒன்றில் இருந்து பால் பெருக்கெடுத்து வடிகிறது, மகாமந்திரி அவர்களே.. அதைப் பார்த்து காவல்வீரர்கள், தோட்டக்காரர்கள் அனைவரும் கலங்கிப் போயுள்ளனர்."

"அப்படியா... வாருங்கள் போய்ப் பார்ப்போம்."

-மகாதேவர் புறப்பட்டார் ஆனால், வீரேந்திரனோ திரும்பி நடந்தான்.

"வீரேந்திரா... நீயும் வா." - மாலி அழைத்தாள்.

"இல்லை அம்மா... இந்த மாளிகையை விட்டு என் பிணம் மட்டும்தான் வரலாம். இனி வாழ்நாளெல்லாம் என் உலகம் என்பது இந்த மாளிகை மட்டுமே..." என்ற அவனை மேலும் அதிர்வோடு பார்த்தாள் மாலி!

## இன்று

**க**ல்யாணசுந்தரம் சற்று நம்பிக்கையோடு அதன் பின் அங்கிருந்து கிளம்பிச் சென்றார். உபாசகர் மனதுக்குள்தான் சூறாவளி!

காவிரி ஆற்றில் குளித்ததால் உருவாகியிருந்த வேட்டி ஈரம் கல்யாணசுந்தரத்திடம் சுவாரஸ்யமாக பேசிக் கொண்டிருந்ததில் அப்படியே காய்ந்து விட்டிருந்தது.

அப்படியே தன் தோட்டத்து குடிசை நோக்கி நடக்கத் தொடங்கினார் காவிரிக்கும் ஊருக்குமான பாதை ஒரு மண்பாதை!

அதே பாதை சிறிது தூரத்தில் வளைந்தும் நெளிந்தும் சென்று தஞ்சாவூர் செல்லும் தார்ச்சாலையை எட்டிப்பிடித்தது. அப்படிப் பிடித்த இடத்தில் PRESS என்று ஸ்டிக்கர் ஒட்டப்பட்ட ஒரு ஜீப் நின்றுகொண்டிருக்க அந்த ஜீப் பானட் மேல் சாய்ந்தபடி இரண்டு பேர் சிகரெட் பிடித்துக் கொண்டிருந்தனர். ஒருவன் கழுத்தில் காமிரா தொங்கிக் கொண்டிருந்தது.

அதுவே அவர்கள் பத்திரிகையாளர்கள் என்று சொல்லி விட்டது. உபாசகர் வரவும், அவர்கள் இருவரும் அவரைப் பார்த்தனர்.

கச்சம் உடுத்திய கம்பீரமான தோற்றம் அவர்களை பேசத் தூண்டியது.

"வணக்கங்க..."-ஆரம்பித்து விட்டனர்.

"நமஸ்காரம்..."

"நீங்க இந்த ஊரா?"

"எதுக்கு கேக்கறேள்?"

"இல்ல... இந்த ஊரா இருந்தா உங்ககிட்ட சில கேள்விகள் கேட்கணும். அதான்."

"எந்த மாதிரி கேள்வி...? எதுக்குன்னும் தெரிஞ்சா தேவலை..."

"நாங்கள் பிரபலமான 'சீனியர் ரிப்போர்டர்' பத்திரிகைல இருந்து வர்ற ரிப்போர்டர்ஸ்..."

"அஃப்கோர்ஸ்... எங்க பத்திரிகைக்கு இந்த ஊர் பத்தின வித்தியாசமான பல தகவல்கள் வந்துச்சு. அதெல்லாம் எந்த அளவு உண்மை, பொய்னு தெரிஞ்சுக்கத்தான் வந்துருக்கோம்..."

"அப்படியா... உங்களை மாதிரி பல பத்திரிகைக்காரங்க இந்த ஊருக்கு வர்றதும் எழுதறதுமாதானே இருக்கா இந்த வாரம்கூட ஏதோ ஒரு பத்திரிகைல எங்க ஊர் சுந்தராம்பா பத்தி பெருசா வந்துருக்குன்னு கேள்விப்பட்டேன்."

"அந்த பத்திரிகை இலக்கிய பத்திரிகை. சொல்றதை கேட்டு அப்படியே எழுதறவங்க. ஆனா, நாங்க அப்படிக் கிடையாது. புலனாய்வுப் பத்திரிகை எங்க பத்திரிகை."

"அப்படியா... அப்ப உங்களுக்குப் பிடிக்காத ஒரு வி.ஐ.பி. கொஞ்சம் நேரம் முதுகு சொறிஞ்சுகிட்டிருந்ததைப் பார்த்தா கூட போறும், அவருக்கு எய்ட்ஸ் இருக்குன்னு எழுதிடுவேள்னு சொல்லுங்கோ..."

"சந்தேகம் வந்தா எழுதவேண்டியதுதானே?"

"அவாளுக்கு ஏற்படற பாதிப்புக்கு என்ன பதில்..."

"அவர் எனக்கு எய்ட்ஸ் இல்லைன்னு சொல்லட்டும். அதையும் போடுவோம்."

"இதைத்தான் ஒரு கல்லுல இரண்டு மாங்காய்ங்க றாளோ..."

"சாமி பேசறதைப் பார்த்தா பத்திரிகைன்னாலே பிடிக்காதுங்கற மாதிரி தெரியுதே..."

"ரொம்ப தப்பு... நீங்கள்லாம் அந்த மாதிரி ஒண்ணுன்னா அதை ஒன்பதுன்னு எழுதலைன்னா பலருக்கு பயமே விட்டுப்போயிடும். ஒரு வகைல அது நல்லதுதான்."

"என்ன சாமி பண்றது... டி.வி-ன்னு ஒண்ணு எப்ப வந்துச்சோ அப்ப இருந்தே யாரும் புத்தகமே படிக்கக்கூடாதுன்னு முடிவு எடுத்துட்ட மாதிரிதான் நாங்க நினைக்கிறோம். அந்த காலத்துல கல்கி, சாண்டில்யன், லட்சுமி கதைன்னு எப்படி விழுந்து விழுந்து படிப்பாங்க. இப்ப என்னடான்னா மெட்டி ஒலி, அண்ணாமலை, காவ்யாஞ்சலி, கல்யாணின்னு மெகா சீரியல்களைல்ல கட்டிக்கிட்டு அழுவுறாங்க."

"மாறிண்டே இருக்கறதுக்கு பேர்தான் காலம். குதிரைல போன மனுஷன் கார்ல போகலாம். புத்தகம் படிக்கறவங்க டி.வி-ல சீரியல் பார்க்கப்படாதோ?"

"சீரியல் பாருங்க. அப்படியே புத்தகமும் படியுங்க. அதை மறந்துடாதீங்கன்னு சொல்றதுதான் எங்க பத்திரிகை நோக்கம். ஒரு தடவை எங்க புத்தகத்தை ஒருத்தன் வாங்கிப் படிச்சா அடுத்து கட்டாயம் வாங்கிப் படிக்கணும்."

"சரி, விஷயத்துக்கு வாங்கோ இந்த ஊரைப் ப,த்தி உங்களுக்கு என்ன தெரியணும்?"

"இந்த ஊர்ல திடீர் திடீர்னு வீணை இசை கேட் .குமாமே... அப்படியா?"

"ஆமாம். அது என்ன பெரிய விஷயம்? எங்கயானா யாராவது வாசிச்சா காதுல விழத்தானே செய்யும்?"

"அதுக்கு ஒரு அளவு இருக்குல்ல... ரேடியோ குழாய் கட்டினா ஊர் பூரா கேட்குமே, அந்த மாதிரியா கேட்கும்?"

"அப்ப உங்களுக்கு இப்ப அந்த வீணை இசை எப்படி ஊர் பூரா கேட்குதுங்கறதுதான் கேள்வியா?"

"ஆமாம்... அடுத்து இந்த ஊர்ல தாசி பங்களான்னு ஒண்ணு இருக்கறதாவும் அங்க யாருமே போறதில்லைன்னும் கூட கேள்விப்பட்டோம்."

"பரவால்லியே...கொஞ்சம் தயாராத்தான் வந்திருக்கேள்..."

“பதில் சொல்லுங்க. அந்த தாசி பங்களாவுல அப்படி என்ன இருக்கு...? பேயா, பிசாசா இல்லை வேற ஏதாவது கெட்ட சக்தியா?”

“மன்னிக்கணும். நான் போனதில்ல. அதனால எனக்குத் தெரியாது.”

“நீங்க போகலைன்னா விடுங்க... இந்த ஊர்ல ஒருத்தர் கூடவா போய் அங்க என்ன இருக்குன்னு பார்த்ததில்லை?”

“ஒருத்தர் இல்ல... தினம் இரண்டு பேர் அந்த பங்களாவுக்கு போய்ட்டுதான் வராங்க. நீங்க அவங்ககிட்ட கேக்கறதுதான் சரி.”

“யாரு... தாசி சுந்தராம்பாளும், அவங்க வேலைக்காரி திலகமுமா?”

“உம்... எல்லாத்தையும் தெரிஞ்சுண்டே என்னை ஆழம் பாக்கறேளா?”

“எங்க கடமை சாமி... நடந்துகிட்டிருக்கிறது 21 ஆம் நூற்றாண்டு. இந்த காலத்துல போய் ஒரு பங்களா இப்படி இருக்குன்னா ஆச்சரியமா இல்லை?”

“இந்த தேசத்துல ஆச்சரியங்களுக்கா பஞ்சம்? திருப்பதி கோவிலுக்கு வர்ற கூட்டம் கூடதான் ஒரு ஆச்சரியம்.”

“அதுக்கெல்லாம் பக்தின்னு பளிச்சுன்னு ஒரு விடை இருக்கு. இதுக்கு அந்த மாதிரி என்ன இருக்கு?”

“எதுக்கு இவ்வளவு கேள்வி... பேசாம நீங்களே போய் பார்த்துடுங்களேன்.”

-உபாசகர் அப்படி ஒரு பதிலைச் சொல்லுவார் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை. குட்டியாக திக்கு முக்காடினர்.

“என்ன பதிலைக் காணோம். 21 ஆம் நூற்றாண்டு அப்படி இப்படின்னீங்க. உங்களுக்கும் அங்க இருக்கற மர்மத்தை நினைச்சு பயமா?”

“பயமா... எங்களுக்கா... சேச்சே... அதெல்லாம் ஒண்ணு மில்லை.”

“அப்ப போய்ப் பாருங்கோ அதான் காமிரா வேற இருக்கே. இதால நடக்கறத படமும் எடுத்துடுங்கோ. எதுக்கு என்னை மாதிரி போற வர்றவாகிட்டே வாயைப் புடுங்கிண்டு.”

-உபாசகர் சொன்னது நன்றாக வேலை செய்ய ஆரம்பித்தது. இரு பத்திரிகையாளர்களும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

"என்ன யோசனை?"

"இல்ல... அந்த பங்களா திறந்திருக்குமா, மூடியிருக்குமா?"

"அது எப்படித் திறந்திருக்கும். பூட்டித்தான் இருக்கும்."

"அப்ப எப்படி உள்ள போய் பார்க்க முடியும்?"

"அது சரி... இதுக்காக நான் என்ன கள்ளச்சாவியா போட்டுக் கொடுக்க முடியும்?"

-உபாசகர் லேசாக கிண்டலும் செய்தார். உடனேயே ஒருவனுக்கு தீக்குச்சியை உரசின மாதிரி தீப்பிடித்தது.

"என்ன சாமி... கள்ளச்சாவி அதுஇதுன்னு தப்பா எடுத்துக் கொடுக்கறீங்களா... ஸ்ட்ரெய்ட்டாவே போகவும் வழி இருக்கு சாமி."

"அப்படியா... எப்படி?"

"தினம் தினம் சுந்தராம்பாளும் அவங்க வேலைக்காரியும் அங்க போறதா சொன்னீங்கல்ல...?"

"ஓ... நீங்க அப்படி வரேளா.. சரிதான். அப்ப நீங்க அவாகூடவே உள்ள போய் என்ன ஏதுன்னு பாத்துடப் போறேள்னு சொல்லுங்கோ..."

"அதான் ரைட்ராயலா சரியான வழியும்கூட.

"உங்களுக்குச் சரியான வழியா இருக்கலாம். சுந்தராம்பா உங்களை கூட்டிக்கிட்டு உள்ளபோக சம்மதிக்கணுமே..."

"சம்மதிக்க வைப்போம்... இல்லேன்னா உள்ள கள்ளக்கடத்தல் பண்ணி ஊரை ஏமாத்தறதா எழுதுவோம்னு சொல்வோம்."

"சபாஷ்.. சரியான கொக்கிதான். போங்கோ. போய் ட்ரை பண்ணிப் பாருங்கோ உங்களோட சேர்ந்துண்டு என்ன நடக்கறதுன்னு நானும் பாக்கறேன்."

-உபாசகர் அவர்களை ஒரு வழியாக உசுப்பேற்றி அனுப்பிவிட்டு ஒரு பெருமூச்சு விட்டார்.

சற்று முன் கல்யாணசுந்தரம் பேசியதெல்லாம் காதில் எதிரொலித்தது.

'சாமி... நீங்க எப்படியானா அந்த மர்மத்தைக் கண்டுபிடிச்சு சுந்தராம்பா இந்த ஊரைவிட்டே போயிடணும்...' என்றாரே!

'அது எனது முயற்சியின்றியே நடந்து விடுமோ? அந்த ருத்ர வீணை பற்றிய மர்மத்தை இவர்கள் ஒரு வேளை இன்று கண்டுபிடித்துவிடுவார்களோ?' உபாசகருக்கு அன்றைய பொழுது ஒரு அனல் பறக்கும் பொழுதாகிவிட்டது!

# 7



## அன்று

**தா**சி பங்களாவின் நந்தவனத் தோட்டத்தில் வேப்ப மரத்தில் இருந்து அப்படியே வெள்ளைக் கோடு போட்டது போல பால் பெருகிக் கொண்டிருந்தது. திவானும் வைஜெயந்தியும் அதைப் பார்த்து ஆச்சரியப்பட்டதோடு கையால் தொட்டு வாயிலும் வைத்து நக்கிப் பார்த்தனர். பால் சர்க்கரை போட்டது போல தித்தித்தது. வேப்ப மரத்துப்பால் குழம்பு போல இருக்கும். அனைத்துக்கும் மேலாக வாயில் வைக்க முடியாது... ஆனால், அந்த பாலோ தலை கீழாக இருந்து தித்தித்தது - மந்திரி மகாதேவரை மிகவும் சிந்திக்க வைத்தது.

"என்ன சிந்தனை... இது ஏதும் தெய்வீகச் செயலா இல்லை இயல்பான ஒன்றுதானா?" வைஜெயந்திதான் அப்படிக் கேட்டவள்.

"தெரியவில்லை அபராஜிதம்... இதுபற்றி தஞ்சை ஜோதிடர்களிடமும், ஆகம விதி அறிந்தவர்களிடமும்தான் பேச வேண்டும்."

"உடனே அதற்கான ஏற்பாடுகளைச் செய்யுங்கள்." வைஜெயந்தி துரிதப்படுத்தினாள். அப்படியே அங்கே இருக்கும் பாபாவின் சமாதியைப் பார்த்தாள். அந்தப் பால் பெருகி ஓடி பாபா சமாதி அருகில் தேங்கிக் கொண்டிருந்தது.

அதாவது, அந்த காட்சியே வித்தியாசமானதாக இறந்தவர்களுக்கு பாலூற்றும் ஒரு சடங்கை இயற்கையே அங்கு வந்து செய்து கொண்டிருப்பது போலத் தோன்றியது வைஜெயந்திக்கு...

அந்தப் பாலை நாவில் வைத்த வேளையோ என்னவோ... வயிற்றிலும் ஒரு சிறு பிரட்டல் அவளுக்கு. அது எதனால்

என்பது உடனே விளங்கிவிட்டது. உடனேயே வெட்கத்துடன் மந்திரி மகாதேவரைப் பார்க்கத் தொடங்கினாள்

## இன்று

இரவு நேரம்!

தோடீஸ்வரம் கோவில் நடையை சாத்துவதற்கு முன் இறுதியாக ஸ்வாமிக்கு பள்ளியறை பூஜை நடைபெறும். அதை அறிவிக்குமுகமாக திண்டாக ஊருக்கே கேட்கிற மாதிரி மணி ஒலிக்கும்.

அன்றும் அந்த சப்தம் கேட்டது.

பத்திரிகைக்காரர்கள் இருவரும் தங்கள் கைக் கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டனர். மணி ஒன்பது!

அவர்கள் இருவரும் தாசி பங்களாவுக்குப் போகும் பாதையில் ஒரு கல்மண்டபத்தில் அமர்ந்து கொண்டிருந்தனர். கழுத்தில் தொங்கிக் கொண்டிருந்தது கேமரா. பாக்கெட்டிலும் மினி டேப்ரிக்கார்டர். குண்டூசி விழும் சப்தத்தையும் ரிக்கார்ட் செய்து கொள்ளும் அளவுக்கு அதனிடம் ஒரு அக்யூரசி.

அவர்கள் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. கோவில் மணி சப்தம்தான் தாசி சுந்தராம்பாளுக்கும் சமிக்ஞை போலும். அவளும் திலகமும் இடுப்பில் வாழை இலையால் மூடிய கூடையுடன் கையில் ஒரு லாந்தர் விளக்குடன் வந்தபடி இருந்தனர். ஊருக்குள் சென்றபடி இருக்கும் சிலர் அவர்களைப் பார்த்துவிட்டு ஏதோ சாமி சப்பரத்தைக் கும்பிடுவது போல அவர்களைப் பார்த்து கும்பிட்டுவிட்டு சென்றனர். பத்திரிகைக் காரர்களுக்கு அதெல்லாம் வியப்பாகத்தான் இருந்தது.

"எவ்வளவு பயம் பார்த்தியா?"

"இந்த காலத்துலயும்... படிப்பறிவில்லாத இந்த கிராமத்து மக்களோட பயத்தை உடைச்சு இந்த சுந்தராம்பாளோட மாய்மாலத்தை அம்பலம்படுத்தியே தீரணும்."

— அவர்கள் தங்களுக்குள் வீராவேசமாக ஒருவருக் கொருவர் பேசிக் கொண்டனர். அதற்குள் சுந்தராம்பாள் வரவும், சட்டென்று அமைதிவசப்பட்டனர்.

சுந்தராம்பாள் அருகில் வந்தாள். அவர்களையும் பார்த் தாள் ஊர்க்காரர்கள் யார், அந்நியர்கள் யார் என்பதை

பார்க்கும் விதத்திலேயே சிலர் உணர்த்திவிடுவார்கள். சுந்தராம்பாளும் அதைத்தான் செய்தாள்.

அவர்களுக்கும் புரிந்தது.

ஒரு வினாடி நின்று உற்றுப் பார்த்துவிட்டு தொடர்ந்து நடந்தாள்.

காவிரி ஆற்றின் வாய்க்கால் பாலம் இடையிட்டது.

அதைக் கடக்கும்போது ஒருமுறை திரும்பிப் பார்த்தாள்.

அவர்கள் ஸ்டைலாக சிகரெட் பிடித்துக் கொண்டு அவளை பின்தொடர்ந்து கொண்டிருந்தனர்.

திலகம் திணறினாள்.

“அம்மா அவங்க...”

“பேசாம வா... கருப்பன் பார்த்துப்பான்...”

- சுந்தராம்பாள் கருப்பன் என்று சொன்னது சுடுகாட்டுப் புலையன் கருப்பனை. இடுப்பில் ஒரு வேட்டி, திறந்த மார்பில் ஒரு அழுக்குத்துண்டு, தலையில் ஒரு தலைப்பாகை என்று பார்க்க பங்கரையாக அவன் தெரிந்தாலும் நெற்றியில் விபூதிப் பட்டை, கழுத்தில் ருத்ராட்சைக் கொட்டையோடு கொஞ்சம் வித்தியாசமாகவும் விளங்கினான்.

வாய்க்கால் பாலத்தைக் கடந்தால் கருங் கும்மென்று அடர்வான மரங்கள் சூழ்ந்த மயானப்பகுதி வந்துவிடும். சின்னக் குழந்தைகள் துள்ளலாய் ஓடி விளையாடுகிற மாதிரி வெந்து கொண்டிருக்கும் பிணத்தின் புகை அங்கே சுற்றிக் கொண் டிருக்கும்.

மயானத்துக்கு நடுவில் ஒரே ஒரு மெர்க்குரி விளக்கை பஞ்சாயத்தில் போட்டிருக்கின்றனர். அந்த வெளிச்சத்தையும் அடர்வான மரங்கள் சல்லடை போட்டு சலித்தது போல வடிகட்டி கொட்டுவதால் மிக மங்கலான வெளிச்சம்தான் அங்கெல்லாம் இருக்கும்.

தனியாக யார் வந்தாலும் உள்ளே நுழைய அச்சப்படு வார்கள்.

சில சமாதிகளும் அதன் தலைபாகத்து சுவரும் யாரோ ஒருவர் குத்துக்காலிட்டு இருளில் அமர்ந்திருக்கிற மாதிரி எல்லாம் பிரமையை உருவாக்கும்.

இதெல்லாம் சுந்தராம்பாளுக்கோ திலகத்துக்கோ ஒரு விஷயமில்லை. ஆனால், அந்த பத்திரிகையாளர்களுக்கு அது

லேசான நடுக்கத்தைத்தான் வரவழைத்திருந்தது. என்ன தான் விஞ்ஞான வித்தகம் பேசினாலும் மனிதன் என்பவன் மனதுக்குள் ஒரு பயந்த கோழைதான் என்பதே நிஜமோ...?

அவர்கள் பம்மிப் பம்மி பின்தொடர்ந்து ஒரு இடத்தில் நிற்க, சுந்தராம்பாளை புலையன் கருப்பன் கும்பிட்டபடி பார்த்துக் கொண்டிருந்தான். அவனை அருகில் அழைத்து அவளும் எதையோ சொல்லிவிட்டுப் போவதையும் அவர்கள் பார்த்தனர்.

"மாப்ள அந்த தாசி, புலையன் கிட்ட என்னவோ சொல்றா பார்."

"நம்மள பத்தி கூட இருக்கலாம். பின்னாடி இரண்டு பேர் ஃபாலோ பண்றாங்க. கவனிச்சுக்கன்னுகூட சொல்லலாம்..."

"அவன் மட்டும் நம்மை தடுத்து நிறுத்தட்டும்... அப்புறமா வெச்சுக்குவோம்..."

- இருவரும் ஏகமனதாக ஒரு முடிவுக்கு வந்தனர். அப்படியே மௌனமாக நடையைத் தொடர்ந்தனர். அவர்கள் நினைத்தது சரிதான் என்கிற மாதிரி எதிரில் சதங்கை கட்டிய கழியுடன் அந்த புலையன். ஆனால், அவர்களைத் தடுத்து மிரட்டாமல், "கும்புட றேன் சாமி" என்றான். அவர்களுக்கு பொசுக்கென்றாகிவிட்டது.

"யாருப்பா நீ...?"

"என்னங்க... பார்த்தா தெரியலீங்களா? புலையனுங்க."

"எங்களை எதுக்கு கும்புடறே...?"

"சாமிங்க தாசி பங்களா பக்கம் போற மாதிரி தெரியுது."

"அதுக்கென்ன இப்போ... அந்தப் பக்கமெல்லாம் போகக் கூடாதுங்கறியா?"

"ஏங்க போகக் கூடாது? தாராளமாக போகலாம். அதுலயும் தாசி பங்களா ஒரு கோவில் மாதிரி. வெளியூர்க் காரங்க அவசியம் அங்க போய்ப் பார்த்து பாபா சாமியை கும்புடணும்."

அவன் பதிலால் அவர்களிடம் திணறல். அதேவேளை அவர்களை அவர்களுக்கே தெரியாமல் தொடர்ந்து வந்து கொண்டிருந்த உபாசகரும் புலையன் கருப்பன் பேச்சைக் கேட்டு மூக்கில் விரலை வைத்தார்.

"அப்ப சரி... வழிய விடு. நாங்க போய் பாபா சாமியையும், பாபா சமாதியையும் பாக்கறோம்." கிண்டலாக அவனுக்கு

ஒரு பதிலைச் சொல்லிவிட்டு இருவரும் நடையைத் தொடர்ந்தனர்.

உபாசகரும் தொடர்ந்தார்.

ஏனோ அந்த புலையன் அவரை மட்டும் தடுத்தான் அதுவும் சற்று மூர்க்கமாக...

"சாமி கொஞ்சம் நிக்கறீங்களா...?"

"ஏம்பா... என்னை மட்டும் தடுக்கறே?"

"உங்க நல்லதுக்குத்தான்."

"அடேங்கப்பா... அப்ப முன்ன போற இரண்டு பேருக்கும் நீ நல்லது நினைக்கலியா...?"

"அவங்க விஷயம் வேற சாமி..."

"என்ன வேற விஷயம்? நான் தெரியாமதான் கேக்கறேன். அப்படி என்னதான் அந்த தாசி பங்களாவுல இருக்குது."

"உங்களுக்கு எதுக்கு சாமி அதெல்லாம். சந்தேகம், பேராசை இதெல்லாம் பெரிய சத்ரு சாமி..."

"என்னப்பா எனக்கே உபதேசமா... அதுவும் சுடுகாட்ல."

"என் மனசுல பட்டதைச் சொன்னேன் சாமி. அவ்ளதான்."

"இதோ பார்... உன் வேலை எதுவோ அதை மட்டும் பார். இப்படி வேண்டாத விஷயத்துல தலையிடாதே..."

"சாமி..."

"திரும்பவும் சொல்றேன், உன் வேலை என்னவோ அதைப் பார்..."

உபாசகர் அவனை அடக்கிவிட்டு வேகமாக அவர்களைப் பின்தொடர்ந்தார். அதற்குள் சுந்தராம்பாளும் திலகமும் தாசி பங்களாவை எட்டியிருந்தனர்.

கூடையில் இருந்தது பெரிய சாவிக் கொத்து. அதை எடுத்து திலகம்தான் கதவுகளைத் திறக்கத் தொடங்கினாள்.

பின்னாலேயே வந்து சேர்ந்திருந்த அந்த பத்திரிகையாளர்கள் இருவரும் மெல்ல வெளியே நின்று எட்டிப் பார்த்தனர்.

சுந்தராம்பாளும் திரும்பிப் பார்த்தாள்.

அவர்களை அவள் பார்க்கவும் கொஞ்சம் மிரண்டு போய் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

"உள்ற வாங்க.." சுந்தராம்பாள் கையசைத்து குரல் கொடுத்து அழைத்தாள்.

அவர்களிடம் தீப்பற்றியது போல ஒரு ஆச்சரியம்.

தயங்கியபடி அந்த மாளிகை வீட்டினுள் காலடி வைத்தனர். அவளையும் நெருங்கியவர்கள் தயங்கியபடியே கும்பிட்டனர்.

"வணக்கம்மா..."

"வணக்கம்... நீங்க."

"பத்திரிகைக்காரங்க..."

"என்ன... இந்த மாளிகைல மர்மம் இருக்கறதா நினைச்சு அதைக் கண்டுபிடிக்க வந்திருக்கீங்களா?"

"அம்மா..."

"சும்மா சொல்லுங்க."

"ஆமாம்மா... தப்பா எடுத்துக்காதீங்க. அது எங்க கடமை."

"நான் இப்ப உங்களை ஒண்ணும் சொல்லலியே."

"அதுக்கில்ல... தினம் இப்படி ராத்திரி ஒரு விளக்கோட நீங்க இங்க வர்றதும், அதே சமயம் இந்த பக்கம் யாருமே வராம இருக்கறதும் எதனாலன்னு சொல்ல முடியுமா?"

"இது எங்க வீடு... வீடுன்னா அது பொய். மாளிகைன்னு சொல்லலாம். இங்க பாபா வாழறதா நாங்க நம்பறோம். அவருக்கு தினமும் படையல் போட்டு பூஜை செய்ய நாங்க வருவோம். விஷயம் அவ்வளவுதான்."

"என்னம்மா பெரிய ஒரு விஷயத்தை ரொம்ப சாதாரணமா சொல்றீங்க."

"சரி, எப்படிச் சொல்லணும்னு சொல்லுங்க. நான் அப்படியே சொல்றேன்."

சுந்தராம்பாளின் பட்டென்ற பதிலால் இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். பின்...

"அதுக்கில்ல... நீங்களோ சாதாரணமா சொல்றீங்க. ஆனா, ஊர்ல யாரும் ஏன் இந்த பக்கம் வரவே பயப்படறாங்க..."

"இதுக்கு நான் என்ன பண்ண முடியும்? இங்க வந்தா கெடுதல் நடந்துடும்னு ஒரு நம்பிக்கை ரொம்ப நாளா இருக்கு. அது காரணமா இருக்கலாம்."

"நம்ப முடியலியே..."

"சரி, நம்பாதீங்க..."

"நாங்க பத்திரிகைக்காரங்க... உண்மை எதுவோ அதைக் கண்டுபிடிக்காம விடமாட்டோம்."

"தாராளமா கண்டுபிடியுங்க. நான் இப்ப என்ன செய்யணும்னு மட்டும் சொல்லுங்க."

திரும்பவும் சுந்தராம்பாளிடம் அவர்கள் துளியும் எதிர்ப்பார்த்திராத பதில். அதன் காரணமாக அவர்கள் முகத்தில் மீண்டும் திணறல்.

"ம்... சீக்கிரம் சொல்லுங்க. எனக்கு நேரமாகுது."

"அப்ப இந்த பங்களாவுக்கு நீங்க பூஜை பண்ண மட்டும் தான் வர்றீங்களா?"

"நீங்க வேணுமானால் கூட வந்து பாருங்களேன்..."

-சுந்தராம்பாள் பேசும் விதமும் பதில் சொல்லும் விதமும் அவள் எதையும் மறைக்கவில்லை என்கிற மாதிரியே இருந்தது. அந்த தாசி பங்களா வாசல் வரை வந்துவிட்ட உபாசகரும் காதைக் கூர் தீட்டியபடி கேட்டுக் கொண்டிருந்தார்.

அவர் நின்றுகொண்டிருந்த இடத்திற்கு நேர் மேலே ஒரு தென்னை மரம். அதில் பருத்த தென்னங்குலையில் ஒரு தேங்காய் மட்டும் எந்த நொடியும் கீழே விழுந்து விடுவது போல் தெரிந்தது.

உள்ளே தொடர்ந்து வாக்குவாதம்.

"அப்ப உள்ள நிஜமா எதுவும் இல்லையா?"

"எதுக்கு இவ்வளவு சந்தேகம். இந்தாங்க சாவி. போய் பார்த்துக்குங்க."

சுந்தராம்பாள் சாவியை நீட்டினாள். அவர்களும் துணிச்சலாக வாங்கிக் கொண்டனர்.

மெல்ல நடந்து உள்பக்கக் கதவைத் திறக்க ஆரம்பித்தனர். கதவின் கம்பி இடுக்கின் வழியாக நல்ல பாம்பு ஒன்று மெல்ல தலையை உயர்த்தி அவர்களைப் பர்ர்த்தது. அவர்களுக்குள் அடுத்த நொடி இதயத்தில் ஒரு டிராஃபிக் ஜாமே ஏற்பட்டது. சட்டென்று பின் வாங்கினர்.

சுந்தராம்பாள் உடனே ஓடிச் சென்று அந்த பாம்பை கொஞ்சமும் அச்சமின்றி பிடித்து வேறு பக்கமாக விட்டவளாக "நீங்க போங்க" என்றாள்.

"இது என்ன... கண்ட இடத்துல பாம்புங்க."

"மனுஷங்க குடியிருந்தா இது வராது. யாரும் இல்லேல்ல. அது வந்து போய்க்கிட்டிருக்கு."

"உங்களை அது கடிக்கலையே..."

"ஏன்? கடிக்கணும்னு ஆசையா இருக்கா?"

"நாங்க எதைக் கேட்டாலும் எதிர்பாராத பதிலையே சொல்றீங்க..."

"அப்படியா?"

"இப்ப நீங்க கேட்ட அப்படியா உட்பட..."

-அவர்கள் சொல்ல "ஆ." என்று ஒரு அலறல் சப்தம் உள்வரை கேட்டது. உடனே அவர்கள் பார்வை வெளியேதான் திரும்பிப் பார்த்தது.

திலகம் மட்டும் பார்த்ததோடு நில்லாமல் ஓடவும் செய்தாள். பங்களா வாசலில் உபாசகர் தலையில் தேங்காய் விழுந்ததில் அவரிடம் மயக்கம்!

அவள் உடனே திரும்பி ஓடி வந்தாள்.

"அம்மா... அந்த உபாசகர் வந்துருந்துருக்காரு போல... தலைல தேங்காய் விழுந்து மயக்கமாயிட்டார்..."

"அடிப்பாவி. அதைப் பாத்துட்டு சும்மாவா வந்தே...

கேள்வியோடு சுந்தராம்பாள் விரைந்து வாசலுக்கு வந்தாள். அந்த பத்திரிகையாளர்களும் வந்தனர்.

அவர்களும் மயக்கத்தில் இருந்த உபாசகரைப் பார்த்தனர். அதிர்ந்தனர்.

"என்ன... இவரை உங்களுக்குத் தெரியுமா?"

"தெரியும். இவர்தான் உங்கள பத்தி, இந்த பங்களா பத்தி சொன்னவர் நாங்க இங்க உங்களோட வந்து உண்மையை தெரிஞ்சுக்கப் போறோம்னு சொன்னப்போ, நல்லா செய்யுங்கன்னு அனுப்பி வெச்சவர்."

"அப்படியா சேதி..."

-சுந்தராம்பாள் கேட்ட தொனியே சரியில்லை.

அவர்களோ கண்களை தேய்த்துக் கொண்டனர்.

"நல்லது... இவர் இங்கயே கிடக்கட்டும். கொஞ்ச நேரத்துல மயக்கம் தெளிஞ்சு எழுந்துடுவார். இவர் விஷயத்தை பிறகு பார்த்துக்கலாம். நீங்க உள்ற போய் என்ன பாக்கணுமோ பாத்துட்டு வாங்க. புகைப்படம் மட்டும் வேண்டாம்."

"ஏன்..."

"காரணமாத்தான் இந்த மாளிகையை கோவிலா நினைக்கறோம். இதை படம் எடுத்து பத்திரிகைல போட்டா பிறகு அது மலிவாயிடும்."

-சுந்தராம்பாள் மெய்வருத்தத்தோடுதான் பேசினாள் அவர்களும் புரிந்து கொண்டனர். அவள் சொன்னபடி அந்த மாளிகை முழுக்க உள்ளே சென்று அனைத்து இடங்களையும் பார்க்கத் தொடங்கினர். அந்த நாளைய கட்டடம்.

பனை வெல்லம், முட்டை, விளாங்காய், சுண்ணாம்பு, நெல்லிச்சாறு, கொழிஞ்சிக் கொட்டை என்று விதம்விதமான கலவையைக் கலந்து மொழுமொழுவென்று பூசி உருவாக்கி யிருக்கும் சுவர்கள்!

பழமை பளிச்சென்று தெரிந்தது. புராதனம் நன்கு புலப்பட்டது. நடுஹாலில் பாபாவின் ஓவியமும் அதன்முன் ஒரு விளக்கும் எரிந்து கொண்டிருந்தது. ஒரு வினாடி பாபா படத்தை நின்று உற்றுப் பார்த்தனர். அப்படியே அந்த ஹாலில் வரிசையாக பல பெண் தாசிகளின் படங்கள்.

அபராஜித வைஜெயந்தி, அவளுக்குப் பின் அனந்தமணி, அவளுக்கும் பின் லலித சுந்தரி என்று வரிசையாக அவர்களது ஓவியப் படங்கள் உற்றுஉற்றுப் பார்த்தவர்கள் மொத்த மாளிகையையும் சுற்றினர். பல இடங்களில் தேன்கூடுகள், சில இடங்களில் சர்ப்பங்கள், இன்னும் சில இடங்களில் குளவிகள் என்று சகலத்தையும் பார்த்துக் கொண்டவர்கள், அப்படியே தோட்டத்துப் பக்கமாய் சென்று அந்த சமாதியையும் பார்த் தனர். வரிசையாக மொத்தம் பதினொரு சமாதிகள். அதன்மேல் சிவலிங்கம். நடுநாயகமாக பச்சைத் துணி போர்த்தப்பட்ட நிலையில் பாபாவின் சமாதி. அந்த காட்சியே அதிர்ச்சியும் ஆச்சரியமும் அளித்தது.

சுந்தராம்பாளும் பின்தொடர்ந்து வந்தாள்.

"இந்த சமாதிங்கள்லாம்...?"

"எங்க முன்னோர்கள்..."

"இந்த பச்சைத் துணி சமாதி?"

"பாபா நவாப் ஜான் என்பவரோடது. அவர் ஒரு முஸ்லிம் ஆகையால அவரது விருப்பப்படி புதைச்சிருக்காங்க..."

"அது எப்படி ஒரு முஸ்லிம் சமாதி இந்து சமாதிகளுக்கு நடுவுல?"

"என்ன... மதமும் ஜாதியும் உங்களை இப்படிக் கேட்க வைக்குதா?"

"நிச்சயமா... அதுலயும் இப்ப இந்து - முஸ்லீம் வெறி தலை தூக்கிக்கிட்டு திரியற இந்தக் கால கட்டத்துல..."

"நல்லவேளை... 300 வருஷத்துக்கு முந்தி இப்ப இருக்கற துவேஷம் இல்லை. அதான் இங்க பேதமில்லாம இருக்கு..."

"அதான் எப்படிங்கறேன்..."

"அது இங்க நின்னு பேசற விஷயமில்ல. பெரிய கதை. என் வீட்டுக்கு வாங்க சொல்றேன்." -சுந்தராம்பாளின் ஒவ்வொரு வார்த்தையும் அவள் அளந்து மட்டுமல்ல, அர்த்தத்தோடும் பேசுவதாகத்தான் அவர்களுக்கு தோன்றியது. அவளை மிகமிக ஆச்சரியத்துடன் பார்த்தனர்.

வெளியே மயங்கிக் கிடந்த உபாசகரோ மெல்ல கண்விழித்து எழத் தொடங்கியிருந்தார்.



# 8

## அன்று

**வெ**ட்கத்துடன் சிரித்த வைஜெயந்தி எதற்காக அப்படி சிரித்தாள் என்பது சற்று நேரத்திலேயே மந்திரி மகாதேவருக்கு விளக்கி விட்டது.

வைத்தியரும் வந்து அவளது நாடியை பிடித்துப் பார்த்து 'இரட்டை நாடி துடிக்கிறது. வைஜெயந்தி கருவுற்றிருக்கிறாள்' என்றார்.

மகாதேவரின் மகிழ்ச்சிக்கு ஒரு அளவே இல்லை.

மகாதேவர் மகாராஷ்ட்ர வம்சாவளியில் வந்தவர் வீரசிவாஜியின் சகோதரர் சாந்தாஜி தஞ்சை அரசராக உள்ள நிலையில் தனக்கு ஏற்ற மதியூகி மகாதேவரே என்று மகாதேவரை வடக்கே இருந்து அழைத்து வந்துவிட்டிருந்தார்.

மகாதேவர் மனம் துள்ளி மகிழ்ந்தது.

வானத்துக்கும் பூமிக்குமாக குதித்தார்.

அதன் எதிரொலிகளும் வினோதமாக இருந்தன உடனடியாக கஜானா காப்பாளனுக்கு தன் சம்பளப் பங்கில் இருந்து ஒரு லட்சம் பொன்னைக் கேட்டு தஞ்சைக்கு ஓலை அனுப்பினார்-தானம் செய்வதற்காக!

பின் அந்த நவக்கிரக மாளிகையின் ஒட்டுமொத்த பாது காவலர்களையும் அழைத்து தன் கழுத்து, காதில் கிடந்த நகைகளை எல்லாம் வழங்கினார்.

அப்பொழுதே தோடீஸ்வரர் ஆலயத்தில் அபிஷேக ஆராதனைகளுக்கும் சொல்லிவிட்டார் அவரது தகவலை சுமந்தபடி நாலாபுறமும் சேவகர்கள் பறந்து கொண்டிருந்தனர்.

வைஜெயந்திக்கே அவரது துடிப்பு ஆச்சரியத்தைக் கொடுத்தது... அந்த இதமான வேளையில் பிராண அறைக்குள்

தன்னைத் தானே சிறை வைத்துக் கெண்டிருந்த வீரேந்திரனும் சூழ்நிலைக்கு ஏற்ற மாதிரி ஒரு ராகத்தை வாசிக்கத் தொடங்கி னான். வித்தியாசமான 'சுநாத விநோதினி' ராகம்.

எப்பொழுது இந்த ராகத்தை யார் கேட்டாலும் அவர்கள் மனதில் தாயன்பில் திளைப்பது போல ஒரு உணர்ச்சி தோன்றும். கூடவே தென்றல் காற்றின் ஸ்பரிசத்தை உடல் உணருகிற மாதிரி இருக்கும். உடம்பு எவ்வளவு வெப்பத்துக் கிடையே இருந்தாலும் மனது இப்படி உணருவதில் குறை ஏற்படாது.

வைஜெயந்தியும் அப்படி ஒரு இனிமையை அனுபவித் தாள் வீரேந்திரனும் நெடு நேரம் வரை அதை வாசித்து முடித்தவனாக மெல்ல வாசிப்பை நிறுத்தினான். வைஜெயந்திக்கு உடனேயே ஒரு வெறுமை ஆட்கொண்டது போல இருந்தது. நேராக பிராண அறை நோக்கிச் செல்லத் தொடங்கினாள்.

பிராண அறைக்குள் செல்லும் சூட்சுமம் எல்லோருக்கும் வசப்பட்டு விடாது. நல்லவேளை மகாதேவர் அதை வைஜெயந் திக்கு மட்டும் சொல்லிக் கொடுத்திருந்தார் அது அவளுக்கு வழியினைக் காட்டியது.

ஆனால், வைஜெயந்தி கருவுற்ற மகிழ்ச்சி செய்தி கேட்டு ஓடிவந்த மாலிக்கு வைஜெயந்தி எங்கே போயிருக்கிறாள் என்றே தெரியவில்லை. அந்த நவக்கிரக மாளிகையைச் சுற்றிச் சுற்றி வந்தாள். மாணிக்கவல்லியும் இன்னொரு புறமாக சுற்றி வந்தாள். அவர்கள் பார்வையில் காலியாக இருக்கும் அறைகளே கண்ணில் பட்டன. எங்கும் வைஜெயந்தி இல்லை.

**பி**ராண அறையில்...

காவிரி ஆற்றின் வெள்ளப் போக்கில் சற்றே மாறுதல். நீரின் மட்டம் கூடியிருந்தது. அதன் எதிரொலியாக பிராண அறையின் நடுவில் உள்ள நீராழியில் நீர் மட்டம் அதிகரித்து பின் நீராழி சுவரின் துவாரங்கள் வழியாக ராசிக்கிணறுகளுக்கு செல்லும் துவாரங்களிலும் நீரின் போக்கு கூடியிருந்தது.

இந்த நொடி பன்னிரண்டு ராசிக்கிணறுகளுக்கும் சென்று பார்த்தால் அவைகளில் நுட்பமாக நீர் மட்டம் உயர்ந்து கொண்டிருப்பதைப் பார்க்க முடியும். அந்த அரிய காட்சியில் மனதைப் பறிகொடுத்தவனாக அமைதியாக அமர்ந்து

கொண்டிருந்தான் வீரேந்திரன். நீராழியின் நடுவிலுள்ள மேடை மேல் தெய்வ விக்கிரகம் போல அந்த ருத்ர வீணை.

வைஜெயந்தி அங்கே பிரவேசித்ததைக் கூட வீரேந்திரன் உணர்ந்திருக்கவில்லை. அவளுக்கும் அமைதியாக அவன் அமர்ந்திருப்பது ஆச்சரியமளித்தது.

"வீரேந்திரா... மென்மையாக அவள் அவனை அழைத்தாள்.

"யாரது...? ஓ... சகோதரியா...?"

"நானேதான்... என்ன செய்து கொண்டிருக்கிறாய்?"

"இங்கே நான் செய்ய என்ன இருக்கிறது. இதோ இந்த நீரின் போக்கை இங்கிருந்து கொண்டே ரசித்துக் கொண் டிருக்கிறேன்."

"நீ இப்படிச் சொல்வது எனக்கு எவ்வளவு வியப்பாக இருக்கிறது தெரியுமா?"

"எனக்கே நான் இப்பொழுது ஒரு வியப்பின் சின்னம் தானே சகோதரி."

"உண்மைதான். ஆமாம்... இந்த நீரோட்டம், இங்குள்ள துவாரங்களில் அதன் பிரவேசம் இதெல்லாம் எதனால் என்று உனக்குத் தெரிகிறதா?"

"ஏன் தெரியாமல்...? சூரியன் வானில் தவழ்ந்து செல்லும் போக்கில் கீழே நிழல் விழும். அது விழும் நீள அளவைக் கொண்டு கால நேரத்தை கணக்கிட்டுக் கொள்வது ஒருமுறை.

அதேபோல இங்கே உள்ள பன்னிரண்டு துவாரங்களில் ஒவ்வொன்றிலும் நீரின் போக்கு மாறுபடுகிறது.

நீயே பார்... முதல் ராசி துவாரமான மேஷ துவாரத்தில் கால் பாகம் அளவு நீர் போய்க் கொண்டிருக்கிறது. அடுத்து ரிஷபத்திலும் கிட்டத்தட்ட அதே அளவுதான். கூர்ந்து பார்த் தால் ஏழாம் ராசியான துலாமில்தான் அதிக அளவு நீர் புகுந்தபடி உள்ளது. துலாக்கேணியிலும் இதனால் நீர் மட்டம் உயர்ந்து கொண்டிருக்கும். அங்கே சென்று அது இருக்கும் அளவைக் கொண்டு துலா ராசியினர்க்கு இன்ப துன்பங்கள் இன்று எந்த அளவு கிடைக்கும் என்பதைக் கூறிவிடலாம். எனக்கென்னவோ துலா ராசிக்காரர்கள் மிகமிக மகிழ்ச்சியில் இருப்பார்கள் என்று தோன்றுகிறது."

*வீரேந்திரன் அப்படிச் சொன்ன நொடியே வைஜெயந்தி முகம் மத்தாப்பு போல ஒளியுடன் மாறி, "நீ கூறியது உண்மை. இந்த ராசிக் கிணறுகளும் உண்மையை அப்படியே எதிரொலிப் பவைதான்" என்றாள் மிக வேகமாக.*

*"எதை வைத்து அப்படிக் கூறுகிறாய்?"*

*"நானும் துலா ராசிக்காரிதானே...? இன்று நான் மிகமிக மகிழ்ச்சியாக உள்ளேன். உனது 'சுநாத வினோதினி' ராகம்வேறு என் மனதின் மகிழ்வை பல மடங்கு அதிகரித்துவிட்டது.*

*"அப்படியா நான் வாசித்த ராகத்திற்கு பெயர் சுநாதவினோதியா?" வீரேந்திரன் ஆச்சரியமாகக் கேட்டான்.*

*"என்ன ராகம் என்றுகூடத் தெரியாமலா நீ வாசித்தாய்?"*

*"நான் எங்கே வாசித்தேன்... என்னுள் புகுந்துகொண்டு அந்த தோடீஸ்வரன் அல்லவா வாசிக்கிறான்...?"*

*"வீரேந்திரா... நீ இப்படி எல்லாம் பேசுவாய் என்று நான் கனவில்கூட நினைத்துப் பார்க்கவில்லை."*

*"நானும்தான் சகோதரி... உன் வாழ்க்கைகூட அப்படியே மாறிவிட்டதே.*

*"உண்மைதான்... நமது வம்சத்தின் போக்கே அப்படியே திசை திரும்பிவிட்டது. சேற்றுப் புழுக்களாகவே இருந்து மடிந்து விடப்போகிறோம் என்று கருதிக் கொண்டிருந்தேன். அன்றில் பறவைகளாய் மாறியது யார் செய்த புண்ணியமோ...?"*

*"எல்லாம் அந்த பாபாஜி இந்த மண்ணிற்கு வந்த நேரம். இதோ இந்த ருத்ர வீணை திரும்ப வந்ததால் வந்த வினை என்றும் கூறலாம்."*

*"அதுதான் உண்மை. முதலில் நான் அந்த ருத்ர வீணையை வணங்கிவிட்டு உன்னிடமும் ஒரு நல்ல செய்தியைக் கூறப் போகிறேன்."*

*"என்ன சகோதரி அது?"*

*"பொறு... முதலில் வணங்கிவிட்டு வருகிறேன்... வைஜெயந்தி அந்த வீணை அருகே சென்று அதைக் கைகளால் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டாள். பின் திரும்பி வந்தாள். மௌனமாக வீரேந்திரனை சற்று வெட்கத்துடன் பார்த்தவள் "வீரேந்திரா... நீ தாய்மாமன் ஆகப் போகிறாய்..." என்றாள். அவ்வளவுதான்-வீரேந்திரன் அடைந்த மகிழ்ச்சிக்கு ஒரு அளவே*

இல்லை... கண்களில் ஆனந்தக் கண்ணீர் திரள அவளைப் பார்த்தான்.

ஆனால், அதே செய்தியை மந்திரி மகாதேவர் தஞ்சை அரண்மனை ஜோதிடரான வேதகிரிநாதரிடம் கூறவும், வேதகிரிநாதர் முகத்தில் பலத்த அதிர்ச்சி.

"ஜோதிடரே... என்னாயிற்று உங்களுக்கு? ஏன் உங்கள் முகம் மாறுகிறது..."

"ஒன்றுமில்லை மகாதேவரே... நீங்கள் என்னிடம் உங்கள் வாரிசு பற்றிக் கூறிய நொடிப்பொழுது துளியும் சரியில்லை. பாவம் அந்த சிசு..."

ஜோதிடர் சொன்னதில் ஏராளமான உட்பொருள் மகாதேவர் முகத்திலும் பலத்த அதிர்ச்சி.

## இன்று

**க**ண் விழித்து எழுந்திருந்த உபாசகர் தலையை ஒரு உதறு உதறிக் கொண்டார்... கீழே பார்த்தார். அவர் தலையில் விழுந்து அவரது மயக்கத்திற்கு காரணமாக விளங்கிய தேங்காய் ஒரு ஓரத்தில் கிடந்தது.

நிமிர்ந்தார்.

எதிரில் சுந்தராம்பாளும் திலகமும் அந்த பத்திரிகைக் காரர்களுடன் தாசி பங்களாவை விட்டு போய்க் கொண் டிருந்தனர். சகஜமாக பேசிக் கொண்டு அவர்கள் போவதைப் பார்த்தவருக்கு ஆச்சரியமாகிவிட்டது.

'அப்படியானால் அந்த பங்களாவினுள் எதுவுமே நிகழவில்லையா?' என்ற ஒரு பெரிய கேள்வி எழும்பியது. 'என் வரையில் ஒரு தென்னைமரம்கூட என்னைத் தடுக்கிறது... ஆனால், அவர்கள் வரையில் எதுவுமே நடக்கவில்லையே-எப்படி?'

'சுந்தராம்பாள் ஒருவேளை அவர்களுக்கே 'அல்வா' கொடுத்து அவர்களையும் தன்வசப்படுத்திக் கொண்டு விட்டாளோ?'

கேள்விகளும் குழப்பமுமாக மெல்ல தலையை தேய்த்துக் கொண்டே தாசி பங்களா முகப்பு முன்னால் போய் நின்றார்.

அதற்குள் சுந்தராம்பாளும், திலகமும் அந்த பத்திரிகைக் காரர்களுடன் நெடுந்தூரம் போய்விட்டிருந்தார்கள்

இருந்தும் கச்சிதமாக திரும்பி ஒரு பார்வை பார்த்தாள் சுந்தராம்பாள்.

பங்களா முன்னால் சற்றே வீங்கிய தலையுடன் உபாசகர் அவளுக்கு சற்று சிரிப்பாகக்கூட வந்தது. ஆனால், உபாசகர் பார்வையோ உள்ளேயே கவனமாக இருந்தது.

உதடிரண்டும் சில விசேஷமான காயத்ரிகளை ஜெபிக்க ஆரம்பித்திருந்தன எப்பொழுது எங்கே மந்திரம் கூறத் தொடங்கினாலும் உடனே ஒரு திறம் மனதுக்கு வந்து விடும். மனதின் திறம்தான் மந்திரம்... அதிலும் உபாசகர்கள் என்பவர்கள் வேத மந்திரங்களை கரைத்துக் குடித்திருப்பார் கள் ஹோமங்கள், யாகங்கள் எல்லாம் எதற்காக என்பதில் இருந்து எங்கே எந்த மாதிரி மந்திரத்தைக் கூறவேண்டும் என்பது வரை அவர்களுக்கே தெரியும்.

உபாசகரும் அங்கே சப்த கன்னியர்களில் ஒருத்தி யான வராஹியின் காயத்ரியைத்தான் ஜெபிக்கத் தொடங்கி யிருந்தார்.

வராஹி தேவதைகளில் துடியானவள்.

காற்றாய் - புயலாய் நொடியில் ஓடி வரக்கூடியவள். நமது ஜெபத்தில் மட்டும் அட்சரப்பிசகு இல்லாமல் ஆத்மார்த்தம் இருந்தால்போதும்... ஒரு பன்றி எங்கிருந்தாவது நம்மைத் தேடி வந்து நமக்கு முன்னால நிற்கும். அதுவே நாம் நேர்மை யாகவும் ஒருமையாகவும் ஜெபித்தோம் என்பதற்கு சாட்சி யாகிவிடும்.

அங்கேயும் அந்த அதிசயம் நடந்தது.

எங்கிருந்தோ ஒரு பன்றி வெகுவேகமாக வந்து உபாசகரைக் கடந்து ஓடியது. உபாசகருக்கும் அம்பாள் அங்கே காவலுக்கு வந்துவிட்டது துல்லியமாக விளங்கிவிட்டது... அதன் எதி ரொலியாக அவருக்குள் ஒரு புதிய தெம்பு. அந்த தெம்புடன் அந்த தாசி பங்களாவின் எல்லைக்குள் காலை வைத்தார் பக்கவாட்டில் ஒரு நாகம் புரண்டு கொண்டிருந்தது... அது விருட்டென்று நிமிர்ந்தது. ஆனாலும் அது அவரைக் கொத்த வில்லை. ஏதோ சத்தியத்துக்கு கட்டுப்பட்டது போல படம் விரித்த நிலையில் பார்த்தது.

உபாசகரும் அதை அலட்சியம் செய்துவிட்டு பங்களா முகப்புக் கதவு வரை சென்றார் பெரிய பூட்டு அவரை

வரவேற்றது. பக்கவாட்டில் ஜன்னல். அதன் வழியாக உள்ளே பார்க்க முடிந்தது. உள்ளே மிகப்பெரிய கூடம். மையத்தில் கிழக்கு பார்த்த சுவரில் பாபாவின் படம். அதற்கு புத்தாடை அணிவிக்கப்பட்டிருந்தது. முன்னால் விளக்கு ஒன்று ஏற்றப் பட்டு எரிந்தபடி இருந்தது. 'சுந்தராம்பாள் இதற்காகவா தினம் வருகிறாள்?' என்கிற கேள்வியும் எழும்பியது.

கேள்வியோடு மாளிகையை சுற்றிவரத் தொடங்கினார் வித்தியாசமான கட்டடம்... இந்தக் காலத்து சுண்ணாம்புக் கலவையையோ, சிமெண்டுக் கலவையையோ எங்கும் காண முடியவில்லை. அங்குலத்துக்கு அங்குலம் புராதனம்தான்.

இறுதியாக அந்த தோட்டப் பகுதிக்கு வந்தார். நடுநாயக மாக பாபா சமாதி. சுற்றிலும் சிறு சிறு லிங்கங்கள் பதிக்கப்பட்ட சமாதிகள். ஆச்சரியமூட்டும் காட்சி. பாபா சமாதியில் இருந்து நேர் மேற்கில் அந்த வேப்பமரம்!

'300 வருடங்களாக நானும் எந்தவித பாதிப்பும் இன்றி வளர்ந்து கொண்டேயிருக்கிறேன்' என்பதுபோல ஏகாந்தமாய் தலைவிரித்தபடி நின்றுகொண்டிருக்கும் அந்த மரத்தையும் உபாசகர் பார்த்தார் மற்றபடி அங்கே பட்சி ஜாலங்கள்கூட இல்லை. அவ்வளவு அமைதி!

இந்த அமைதிக்குப் பின்னால் இருக்கும் மர்மத்துக்குள் எப்படி நுழைவது? அது தெரியாமல் ருத்ர வீணையை அறிய முடியாதே...

அவருக்குள் குழப்பங்கள்!

**தோ**டீஸ்வரன் ஆலயம்!

கணேசன் தன் மாமா மாமியுடன் கூடவே மாமன் மகளான வசந்தியுடன் வேண்டாவெறுப்பாக கோவிலுக்கு வந்திருந்தான்.

வசந்தி தொணதொணவென்று பேசிக்கொண்டே வந்தாள். பட்டணத்துப் பெண் என்பதற்கு ஏற்ப சுடிதார் அணிந்து சிகை அலங்காரத்திலும் போனிடைல்போட்டிருந்தாள். உதட்டிற்கு லிப்ஸ்டிக் வேறு. அவளிடம் வளர்ச்சியிலும் நல்ல வாளிப்பு; தளதளப்பு.

ஆனால், கணேசனுக்குத்தான் குறுகுறுவென்று இருந்தது. எங்கே காயத்ரியும் கோவிலுக்கு வந்து தன்னை வசந்தியோடு பார்த்துவிடுவாளோ என்கிற பயம்.

அவன் பயம் வீண்போகவில்லை. காயத்ரி வழக்கம் போல் பட்டருக்குப் பூ கொடுப்பதற்காக பூவைக் கட்டி எடுத்துக் கொண்டு உள்ளே நுழைந்து கொண்டிருந்தாள். கணேசன் திணற ஆரம்பித்துவிட்டான். மாமா, மாமி, வசந்தி மூவரையும் விட்டுவிட்டு அப்படியே ஓடிவிடலாமா என்றுகூட நினைத்தான். ஆனால், வசந்தி விடவில்லை. காயத்ரி எதிரிலேயே அவன் கையைப் பிடித்து இழுத்து தன் இரு கைகளோடு சேர்த்து வைத்துக் கொண்டவளாக, "அத்தான்... இந்தக் கோவில் ரொம்ப அழகா இருக்கு. இதோட பூர்வீக வரலாறு என்னன்னு கொஞ்சம் சொல்லுங்களேன்" என்று கிழவி மாதிரி ஆரம்பித்து விட்டாள் கணேசனுக்குள் பல்ஸ் எகிறத் தொடங்கியது. காயத்ரியும் கண்களில் கனலைக் காட்டினாள். நல்லவேளை உபாசகர் வந்துகொண்டிருந்தார் அவரைப் பார்க்கவும் கணேசன், வசந்தியிடம் இருந்து விடுவித்துக் கொண்டு அவரை நோக்கி வேகமாக நடந்தான். காயத்ரி அவன்மேல் வைத்த விழியை எடுக்கவேயில்லை. அவனுக்கும் தெரிந்தது. உபாசகரும் கவனித்தார். க்ஷணத்தில் புரிந்து கொண்டுவிட்டார். சமீபித்தவனிடம் ஆரம்பித்தார்.

"என்ன கணேசா... வள்ளி தெய்வானைன்னு ரெண்டு பேரோட ரொம்ப கஷ்டப்படறே மாதிரி தெரியறதே..."

"சும்மா இருங்கோ ஸ்வாமி. நீங்க கலாட்டா பண்ண இது நாழியல்ல. நான் என் மாமா பொண்ணு வசந்தியை கொஞ்சம் கூட எதிர்பார்க்கல."

"எதிர்பாராததெல்லாம் நடக்கறதுக்குப் பேர்தான் லைஃப்..."

"வியாக்யானம் அப்புறம். நீங்கதான் இந்த இக்கட்டில் இருந்து என்னைக் காப்பாத்தணும். அன்னிக்கு இதே கோவிலில் கட்டாத பூவை கட்டின மாலையாக்கி சித்துவிளையாட்டு காமிச்ச மாதிரி இப்பவும் எதானா பண்ணுங்களேன்."

"என்னப்பா வரவர என் சித்து விளையாட்டை நீ ரொம்பதான் மலிவாக்கப் பாக்கறியே. உன் காதல்ல கஷ்டம் வரும்போதெல்லாம் நான் என் சித்தை காட்டணுமாக்கும்? சித்து என்ன உன் வரைல விலைக்கு வாங்க முடிஞ்ச கடைச் சரக்கா...?"

"அய்யோ ஸ்வாமி! நான் அப்படி எல்லாம் நினைப்பேனா...? எனக்கு எங்காத்தை சுத்தி சுத்தி வந்துண்டு இருக்கே சர்ப்பம்

ஒண்ணு அதுகூட பயத்தைத் தரலை. ஆனா, இந்த வசந்தி ஆனாலும் பயமுறுத்தறா. மேல விழுந்து விழுந்து பழகறா. நானும் இளவயசுக்காரன்தானே..."

- கணேசன் எதார்த்தமாக உண்மையை ஒப்புக் கொண்ட அதேசமயம் தன் வீட்டுப் பாம்பு என்று அந்த மனைநாகம் பற்றி குறிப்பிட்டதை ஒரே ஒரு வினாடிதான் நினைத்தார். அந்த பாம்பு பாதுகாத்து வரும் 'ராக மந்த்ரம்' ஏடு சட்டென்று அவர் ஞாபகத்திற்கு வந்தது. முதல் நாளன்று தாசி பங்களாவில் அவர் பார்த்த பாபாவின் படமும் மற்ற காட்சிகளும் கூடவே ஞாபகம் வந்தன.

அந்த ஏட்டுக்கட்டை எடுத்து அதில் என்ன இருக்கிறது என்பதையும் பார்த்துவிட வேண்டும் என்பது அவரது ஆசை. அதற்குத் தீனிபோடுகிற மாதிரி கணேசனும் எடுத்துக் கொடுக்கவும் சட்டென்று ஒரு முடிவிற்கு வந்தவர் கணேசனுக்கு உதவி செய்யத் தயாரானார்.

அவன் காதருகே யாருக்கும் கேட்காதபடி சொல்லத் தொடங்கினார்.

"கணேசா உன் மாமா, மாமி, இந்த வசந்தி இவர் எல்லாரையும் துண்டைக் காணோம், துணியைக் காணோம்னு நான் துரத்தி அடிக்கறேன்... பதிலுக்கு நீ எனக்கு ஒரே ஒரு உதவி செய்யணும். செய்வியா?"

"என்ன ஸ்வாமி?"

உபாசகர், கணேசனிடம் தன் தேவை என்ன என்பதை சொல்லத் தொடங்கினார் இல்லையில்லை வலைவீசத் தொடங்கிவிட்டார்.

"கணேசா உங்காத்தை ஒரு சர்ப்பம் சுத்திச்சுத்தி வர்றதுன்னு சொன்னேல்ல...?"

"ஆமாம்...

"இந்த விஷயம் தோடிபுரத்துக்காராளுக்குத் தெரியுமா?"

"நன்னா தெரியும்... முந்நூறு வருஷத்து சமாசாரம் ஸ்வாமி. அது எப்படித் தெரியாம போகும்...?"

"அது சரி... எதுக்கு சுத்திவர்றதுன்னு தெரியுமா?"

"அதுவும் தெரியும். அது ஒரு ஏட்டுக்கட்டுக்கு காவல்ங்கறதுதான் ஓபன் சீக்ரெட் ஆச்சே..."

"அதுசரி... அந்த ஏட்டுக்கட்டுல அப்படி என்னதான் இருக்கு?"

"தெரியாது... திறந்து பார்த்து தெரிஞ்சுக்கவும் கூடாது..."

"இது என்ன வினோதம்?"

"இப்படித்தானே முந்நூறு வருஷமா எங்க முன்னோர்கள் இருந்துருக்கா..."

"உனக்கு அந்த ஏட்டுல என்ன இருக்குன்னு பாக்கற ஆசை இல்லையா?"

"எதுக்கு ஸ்வாமி... வேலியில போறத எடுத்து எதுக்கு வேஷ்டியில விடடுக்கணும். அதுசரி... நான் உங்ககிட்ட உதவி கேட்டா நீங்க என்கிட்ட இப்படி வளவளன்னு பேசிண்டே போனா என்ன அர்த்தம்?"

"வளவளன்னு போய்ண்டு இருக்கறது நீதான். எனக்கு எதுலயும் வெட்டு ஒண்ணு, துண்டு ரெண்டுதான்."

"இப்ப எனக்கு ஒரு வழியை சொல்லுங்கோ ஸ்வாமி. ஒரு பக்கம் காயத்ரி, ஒரு பக்கம் வசந்தி... நான் மாட்டிண்டு தவிக்கறேன்..."

"பண்றேன். அவாளை இந்த ஊரை விட்டே ஓட வைக்கறேன். அது மட்டுமில்ல உன்னையும் காயத்ரியையும் கூட நானே சேர்த்து வைக்கறேன் அதுவும் உன் அப்பா சம்மதத்தோடயே.."

"ஸ்வாமி... நிஜமாவா?" பரவசப்பட்டுப் போனான் கணேசன்.

"ஆனா, எனக்கு அவசியம் நீ ஒரு உதவியைச் செய்தே தீரணும்."

"என்ன செய்யணும்? நான் உதவி செய்யற அளவுக்கு உங்களுக்கு ஒரு தேவை இருக்கா என்ன?"

"இருக்கு... அதே சமயம் நான் கேக்கப் போறத நினைச்சு நீ அதிர்ச்சி அடைஞ்சுடக் கூடாது..."

"எதுக்கு இவ்வளவு பீடிகை... ஐயாயிரம் பத்தாயிரம்னு உங்க சித்து வேலைக்கு ஃபீஸ் கேட்கப் போறேளா? சொல்லுங்கோ. திருடியாவது தந்துடறேன்."

-உடனேயே உபாசகர், கணேசனைப் பார்த்து முறைத்தார். "என்ன ஸ்வாமி... எதுக்கு இந்த அக்னிப் பார்வை."

"பின்ன.. என்னைப் போய் ஒரு சராசரி மனுஷனா நினைச்சு பணம் காசுக்கு ஆசைப்படறவனா நினைச்சுட்டியே.. நான் மனசு வெச்சா இங்க என்னைத் தேடி பணத்தை வரவைப்பேன்... பாக்கறியா?"

உபாசகர் கேட்டுவிட்டு அடுத்த நொடி நெற்றிப் பொட்டருகே தன் கை விரலைக் கொண்டு சென்று ஏதோ முணுமுணுத்தார்.

சில விநாடிகளில் அவரைத் தேடி ஒருவர் வந்தார் கோவிலுக்கு ஸ்வாமி தரிசனம் பண்ண வந்தவர் அவர். சட்டைப் பாக்கெட்டில் இருந்து நூறு ரூபாய தாள்களாக எடுத்து உபாசகரை நோக்கி நீட்டினார்.

"என்ன இது?"

"ரூவா... உங்களுக்கு கொடுக்கணும்னு ஆசைப்படறேன்."

"ஏன்?"

"தெரியல... என் மனசு சொல்றது. இன்னும் வேணும்னாலும் கேளுங்கோ... தரேன்..."

-அந்த நபர் சொன்னதோடு உபாசகர் காலிலும் விழுந்து எழுந்தார். உபாசகர் அவரிடமே பணத்தை திருப்பிக் கொடுத்து அனுப்பி வைத்தார்.

கணேசனுக்கு அப்படியே பரபரவென்று ஆகிவிட்டது.

அவர் விலகவும் உபாசகர் முகத்திலும் ஒரு சுழித்த சிரிப்பு...

"ஸ்வாமி..."

"இப்பவாவது என்னை புரிஞ்சிண்டியா?"

"நன்னாவே.. உங்களுக்கு நான் என்ன செய்யணும் அதைச் சொல்லுங்கோ..."

"எனக்கு உங்காத்துல நாகம் காவல் காக்கற அந்த ஏடு வேணும்..."

"ஸ்வாமி ஈ ஈ..."

"பதட்டப்படாதே... அதை நான் பார்த்துட்டு தந்துடுவேன்..."

"அது... அது..."

"என்ன தயக்கம்?"

"அது... அது எதுக்கு உங்களுக்கு?"

"ஏன்... காரணம் தெரியாம நீ எனக்கு அந்த உதவியை செய்ய மாட்டியா...?"

"என்ன ஸ்வாமி இது... எங்காத்துல ரொம்ப வருஷமா இருக்கற அதை நீங்க அடைய ஆசைப்படலாம்... ஆனா, நான் எதுக்குன்னு தெரிஞ்சுக்கக் கூடாதா?"

-கணேசன் ஒரு வித உதறலுடன்தான் இப்படிக் கேட்டான். கோவிலில் மெல்ல நகர்ந்தபடியே தாசி சுந்தராம்பாள் அமர்ந்து குறை கேட்கும் கல் மண்டபத்தை அடைந்து விட்டிருந்தனர். உபாசகரும் மண்டபத்தில் ஏறி அமர்ந்தார். ஆனால், கணேசன் அமராமல் அவரையே பார்த்தான்.

"வா... இப்படி உட்கார்..."

"இல்ல... இந்த மண்டபத்துல நான் உட்காரமாட்டேன். நான்னு இல்லை... யாருமே உட்காரமாட்டா..."

"ஏன்... இது உட்கார கட்டின மண்டபம்தானே?"

"உண்மைதான். ஆனா, தாசி சுந்தராம்பா மட்டும்தான் உட்காரலாம். வேறு யாரும் உட்காரக் கூடாது."

"உட்கார்ந்தா இடிஞ்சு விழுந்துடுமா..?"

கணேசன் அந்த கேள்விக்கு மௌனத்தை பதிலாக வைத்தான்.

"அந்த தாசிக்கு... ஆனாலும் இவ்வளவு மதிப்பு ஆகாது. இருந்தாலும் ஒரு சக்தி உபாசகனா ஒரு பொம்மனாட்டி, அதுலயும் தாசி குலத்துல பொறந்த ஒருத்திக்கு இங்கு கிடைக்கற மட்டு மரியாதைக்காக ரொம்ப சந்தோஷப்படறேன் நான்."

உபாசகரின் விளக்கத்தை கணேசனால் விளங்கிக் கொள்ளவே முடியவில்லை. வெறித்தான்... அதற்குள் தரிசனம் முடிந்து காயத்ரியும், வசந்தியும் வந்து கொண்டிருந்தனர் அவர்களைப் பார்க்கவும் அடங்கிய பதட்டம் திரும்பப் பெருக ஆரம்பித்தது. உபாசகர் அடுத்த நொடி அவன் முன்னால் விசுக்கென்று கையை அசைத்ததில் அவன் மேல் ஒரு துண்டு முட்டாக்காக விழுந்து அவனை மூடிக் கொண்டது.

அவனுக்குள் அடுத்த கட்ட அதிர்ச்சி.

"பயப்படாதே... அவா உன்னைப் பாக்காம இருக்கத்தான் இப்படிச் செய்தேன்..." - உபாசகர் சமாளித்தார்.

அவர்களும் அவனைக் காணாதது போல வேறு பக்கமாக கடந்து போயினர். அவனிடம் நிம்மதிப் பெருமூச்சு.

கூடவே உபாசகரின் ஒவ்வொரு செயலாலும் ஏற்பட்ட வியப்பு.

"என்ன கணேசா... நான் கேட்ட உதவியை செய்வியா?"

உபாசகர் திரும்பவும் அந்த ஏட்டுக் கட்டடமே வந்தார். அவனிடம் ஏனோ மௌனம் தொடர்ந்தது.

"என்ன... என்னைப் பார்த்தா பயமா இருக்கா?"

"பயமா மட்டுமில்ல... சித்து வேலை பண்ணி என் னென்னமோ பண்ற நீங்க அந்த ஏட்டுக்கட்டுக்காக என்கிட்ட மடங்கி நிற்கறதை நினைச்சா மலைப்பாவும் இருக்கு..."

"மடங்கி நிற்கலை... மதிச்சு நிக்கறேன்..."

"மதிச்சா..?"

"நம்ப முடியலையா. சித்து வேலை பண்றதால என்னை மலிவான ஒரு மாயாவியா நீ நினைச்சுட்டே போல இருக்கு...

சித்து பண்றதுல இப்படிச் சில சங்கடங்களும் இருக்கு. மனுஷாளை அட்ராக்ட் பண்ற அதே சமயம் மனுஷா மனசுக் குள்ள ஒரு அந்நியத் தன்மையையும் பயத்தையும் அது ஏற்படுத்திடும். உன்வரைலயும் கூட அப்படித்தான் ஆகியிருக்கு."

உபாசகர் பேசின விதத்தில் மிக உயர்ந்த ஒரு தெளிவு. கணேசனிடம் இப்பொழுது பயம் விலகத் தொடங்கியிருந்தது.

"கணேசா... நான் நேரடியாவே இப்போ விஷயத்துக்கு வந்துடறேன். நான் இந்த ஊருக்கு எதுக்கு வந்துருக்கேன்னு நீ நினைக்கறே?"

"தெரியல... ஏதோ வீணை வாசிச்சு நேர்த்தி கடன் செலுத்தணும்னும், அதுக்காக நீங்க வந்துருக்கறதாகவும்தான் என் காதுல விழுந்தது..."

"ஒரு வகைல அது உண்மைதான். ஆனா, கூடவே வேற ஒரு விஷயமும் இருக்கு."

"என்ன ஸ்வாமி அது..."

"உன் ஊர்ல ஒரு அபூர்வ வஸ்து ஒண்ணு இருக்கு...

"நீங்க ருத்ர வீணையைச் சொல்றேளா...?" கணேசன் கேட்ட நொடி உபாசகரிடம் இந்த முறை வியப்பு.

"என்ன ஸ்வாமி அசந்துட்டேள்...?"

"ருத்ர வீணை பத்தி உனக்குத் தெரியுமா?"

"தெரிஞ்சதாலதான் கேட்டேன்..."

"எப்படி... எப்படி உனக்குத் தெரியும். உனக்கு மட்டும்தான் தெரியுமா? இல்லை... ஊர்ல நிறைய பேருக்கு தெரியுமா?"

"இப்போதைக்கு எனக்குத் தெரியும். காயத்ரிதான் ஒரு நாள் சொன்னா... அவ காதுபட சங்கரனும், சாமிநாதனும் பேசிண்டு இருந்துருக்கா. அதை வெச்சு அவளுக்கு தெரியும்."

"அப்ப... சங்கரன், சாமிநாதனுக்கெல்லாமும் ருத்ர வீணை பத்தி தெரியுமா?"

"தெரியாமதான் பேசினாளாக்கும்...?"

உபாசகரிடம் ஒரு மௌனம் கட்டிக் கொண்டது. அவர் ஸ்தம்பித்த மாதிரியும் தெரிந்தது.

"ஸ்வாமி... ஸ்வாமி..."

"உம்... சொல்லு."

"என்ன ஒரு மாதிரி ஆகிட்டேள்? ருத்ர வீணை விஷயம் உமக்கு மட்டும்தான் தெரியும்னு நினைச்சிண்டு இருந்தேளா?"

"ஆமா... கிட்டத்தட்ட அப்படித்தான்னு வெச்சுக்கோயேன்."

"சரி... அதெல்லாம் இருக்கட்டும். எங்க ஊர்ல அப்பப்ப வீணை இசை கேக்கறதே, அது ருத்ர வீணை இசையா?"

"ஆமாம் கணேசா..."

"அது எப்படி இப்படி ஊர் பூரா கேக்கறதுன்னு தெரியலியே... உங்களுக்கு தெரியுமா?"

"அதைத் தெரிஞ்சுக்கவும் அந்த வீணையைப் பார்க்கவும் தானே துடிச்சிண்டு இருக்கேன்."

"அப்படி என்ன அந்த வீணைல சிறப்பு இருக்கு?"

"முட்டாளே... அது வீணை இல்ல. அம்பாள் அந்த அம்பாள்தான் வீணையா மாறி இருக்கா..."

"அப்படியா...?"

"என்ன அப்படியா... உன் ஊர்ல நடக்கற அதிசயங்களுக்கெல்லாம் அதுதான் காரணம். அதையும் தெரிஞ்சுக்கோ..."

"சரி... எங்காத்து ஏட்டுக்கட்டு...?"

"அதுலதான் இருக்கு வீணையோட ராகக் குறிப்புகள் "

"ராகக் குறிப்பா... அப்படின்னா...?"

"ஒரு அணுகுண்டுன்னா அதுக்கு ஒரு ஃபார்முலா இருக்கற மாதிரிதான் இதுவும்."

"அப்படின்னா அந்த ஏட்டுல உள்ள ராகங்களை அந்த ருத்ர வீணைல வாசிச்சா அதிசயம் நடக்குமா?"

"நடந்துண்டு இருக்கற ஊர்ல இருந்துண்டு இது என்ன கேள்வி..."

"இல்லையே... சுந்தராம்பாம்மாதானே எங்க பிரச்சினைகளைத் தீர்த்து வைக்கறதா நாங்க நினைச்சுண்டு இருக்கோம்..."

"அந்த பாபாவை ஏன் விட்டுட்டே... அவரையும் சேர்த்துக்க வேண்டியதுதானே?"

"உம்... அதுவும் வாஸ்தவம்தான். பாபாவும் ஒரு காரணம்."

"ஆனா, பிரதான காரணம் ருத்ர வீணைதான்..."

"சரி... அப்படின்னா வீணை இருக்கற இடத்துலதானே அந்த ஏடு இருக்கணும். எங்காத்துல எப்படி இருக்க முடியும்?"

"எல்லாத்துக்கும் ஒரு சரியான காரண காரியம் இருக்கு கணேசா. இப்ப அந்த ஆராய்ச்சியை எல்லாம் விடு. சட்டுன்னு விஷயத்துக்கு வா. எனக்கு அந்த ஏட்டுக் கட்டை தருவியா...?"

"அது பாம்போட காவல்ல இருக்கும்போது நான் எப்படி எடுக்க முடியும்?"

"அந்த பாம்பைப் பிடிக்கற வழியை நான் உனக்குச் சொல்லித் தரேன்... அப்ப சம்மதமா?"

"பாம்பை நான் பிடிக்கறதா?"

"ஆமாம்... நாக பந்தனம்னு அதுக்குப் பேர்..."

"நாகபந்தனம்... அதை... அதை நீங்களே பண்ணலாமே..."

"ஏன்... இரண்டு பேருமே சேர்ந்து பண்ணுவோமே...

"அதுவும் சரிதான்..."

"அப்ப... இப்ப நீ கிளம்பு. நாளைக்கு உன் மாமா, மாமி, அத்தைன்னு அந்த கூட்டம் ஒடும். கூடவே உன் அப்பாவும் அம்மாவும் கூட கிளம்பிடுவா. பிறகு நம்ம ராஜ்யம்தான்..."

"ஸ்வாமி..."

"என்ன... ஏதாவது ஏட்டிக்குப் போட்டியா நடந்துடும்னு பயமா இருக்கா?"

"ஆமாம்..."

"எதுவும் நடக்காது. எனக்கு கெடுக்கவெல்லாம் தெரியாது கணேசா..."

"சரி, ஸ்வாமி... ஒரே ஒருகேள்வி."

"என்ன... அந்த ருத்ர வீணையை நான் பார்த்து என்ன பண்ணப் போறேன்னு கேட்கப் போறியா?"

"ஆமாம்..."

"இதுக்கு பதிலை நான் உனக்கு அப்புறமா சொல்றேன். இப்ப நீ கிளம்பறியா?"

- உபாசகர் கச்சிதமாக கத்தரி போட்டார்.

அவனும் அரை மனதாக தலையாட்டிவிட்டு கிளம்பினான். அவன் தலை அந்த பக்கம் மறைந்திருக்கும். இந்த பக்கமாக சாமிநாதனும், சங்கரனும் கோவிலுக்குள் நுழைந்திருந்தனர்.

சங்கரன் கையில் ஒரு எண்ணெய் தூக்கு.

பட்டரிடம் கொடுப்பதற்காக அவன் வந்திருக்கிறான்.

உடன் சாமிநாதன்.

உபாசகரை கல் மண்டபத்தில் பார்த்துவிட்டு சாமிநாதன் அவரை நோக்கி திரும்பினான்.

உபாசகரும் அவன் அருகில் வரவும் நிமிர்ந்தார்.

"என்ன சாமி... கல் மண்டபத்துல உக்காந்துட்டீங்க."

"மண்டபம் இருக்கறதே உக்கார்றதுக்குதானேப்பா..."

"ஆனா, இந்த மண்டபத்துல உக்காந்தா அர்த்தமே வேற உங்களைப் பார்த்து யாரும் எதுவும் சொல்லாததுதான் ஆச்சரியம்."

"அது சரி... நீ எங்கே இந்த பக்கம்? ஸ்வாமி தரிசனம் பண்ண வந்தியாக்கும்?"

"இல்ல சாமி... சங்கரன் கூப்பிட்டான்... வந்தேன்."

"சாமிநாதன் பதில் ஆச்சரியமளித்தது."

"என்னப்பா... கோவிலுக்கு எல்லாரும் ஸ்வாமி தரிசனம் பண்ணத்தானே வருவா?"

"நான் அப்படி இல்லை சாமி..."

"அப்ப உனக்கு கடவுள் நம்பிக்கை இல்லையா?"

"என்னை நான் நம்பலைன்னா வெளிய உள்ளத நம்பணும். எனக்கு என் மேல நிறைய நம்பிக்கை இருக்கும்போது எனக்கு எதுக்கு சாமி இன்னொரு நம்பிக்கை."

"ரொம்ப புத்திசாலித்தனமா பேசறதா நினைப்பா?"

"பின்ன என்ன சாமி... முட்டாள்தனமாகவே இருந்துடணும்கறது உங்க எதிர்பார்ப்பா?"

"வார்த்தைக்கு வார்த்தை... பதிலுக்கு பதில் இருவரும் மோதிக் கொண்டார்கள்; சங்கரனும் எண்ணெய் தூக்கை கொடுத்துவிட்டு வந்தபடி இருந்தான்."

"என்ன உபாசகர் ஸ்வாமி... சாமிநாதன் உங்களை ரொம்ப டபாய்க்கறானா?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லை. நாத்திகத்தை வேற விதமா என்கிட்ட பேசிப் பார்க்கறான்."

"சாமி... கடவுள் நம்பிக்கையோட இருக்கறது சுலபம் சாமி. தன்னை நம்பிக்கிட்டு தன்னம்பிக்கையோட மட்டும் இருக்கறதுதான் கஷ்டம்..."

"அதுசரி... யாரையும் நம்பறதுக்கு தைரியம் இல்லாதவா, அச்சப்படறவா இப்படித்தானே சொல்லிண்டாகணும்?"

உபாசகர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே கோவிலுக்குள் மைதிலியும் நுழைந்திருந்தாள்.

அமைதியாக ஒரு பூந்தோட்டம் நடந்து போவது போல இருந்தது. அவள் போவதை பார்த்துவிட்ட சாமிநாதனிடமும் சட்டென்று ஒருஅமைதி.

எவ்வளவோ முறை அவளைப் பார்த்து பேசியிருக்கிறான். ஆனால், அப்பொழுதெல்லாம் புலப்படாத ஒரு தோற்றமும் தாக்கமும் அந்த நொடி அவள் மேல்...

சங்கரனும் கவனித்தான்.

"உபாசகரே... இன்னிக்கு மைதிலிக்கு ஜென்ம நட்சத்திர தினம்" என்றான்.

"ஓ... பொறந்த நாளாக்கும்?"

"ஆமாம். அதுல என்ன ஒரு ஆச்சரியம்னா தேதி, கிழமை, நட்சத்திரம் மூணுமே அவ பிறந்தப்ப இருந்த மாதிரி அதே வரிசைல வந்துருக்கு..."

சங்கரனின் பதிலைக் கேட்டு உபாசகரிடம் ஒரு வித அதிர்ச்சி. அதை சாமிநாதன் துல்லியமாக கவனித்தான்..

"என்னசாமி... என்னமோ கேக்கக்கூடாதத கேட்டமாதிரி ரீஆக்ஷன் கொடுக்கறீங்க..."

"கேக்கக்கூடாதது இல்லப்பா இது.. அபூர்வமானது இது."

"நாள், கிழமை, நட்சத்திரம் ஒண்ணா வர்றதுங்கறது அபூர்வமா...?"

"நிச்சயமா... ஒரு ஒரு ரூபா நாணயம், ஒரு இரண்டு ரூபா நாணயம், ஒரு ஐந்து ரூபா நாணயம்... இதை ஒரு ஆத்துல பல மைல் இடைவெளில வீசி எறிஞ்சுடு. பிறகு அதே வேறு ஒரு இடத்துல ஆத்தங்கரைல - பக்கத்துல பக்கத்துல கண்டெடுத்தா அது அதிசயம் இல்லாம சாதாரணமாக நடக்கல சம்பவமா என்ன?"

"என்னென்னவோ சொல்றீங்க. சரிங்க சாமி! இதனால யாருக்கு என்ன... அட்லீஸ்ட் மைதிலிக்குதான் என்ன பிரயோஜனம்?"

"அபூர்வமான ஒரு விஷயம் ஒருத்தருக்கு சிந்திக்கும் போது அபூர்வமாகவே அதைத் தொட்டு எல்லாம் நடக்கும்..."

"நான் உங்களை ஒண்ணு கேட்கவா?"

"என்ன...?"

"நீங்க சாதாரணமாவே எதையும் பேசமாட்டீங்களோ...?"

"உபாசகர், சாமிநாதனின் பேச்சுக்கு சிரிப்பை பதிலாக வைத்தார். அப்போது கோவிலில் பெரிய மணி சப்தம் கேட்கத் தொடங்கியது. அதைத் தொடர்ந்து ஒரு பெரிய மூங்கில் கம்பு ஒன்றை எடுத்துக்கொண்டு இரண்டு பேர் வெளியே போகத் தொடங்கினர்."

அந்த மூங்கில் கம்பு காவி வண்ணம் பூசப்பட்டிருந்தது. உபாசகரும் பார்த்தார்.

"சங்கரா என்னடா கொடி மரத்தை தூக்கிகிட்டுப் போறாங்க..." - சாமிநாதன் அதைப் பார்த்துவிட்டுக் கேட்டான்.

"ஆமாண்டா சிவராத்திரி வரப்போறது இல்லியா அதுக்கு இப்பவே தயாராகறா போல இருக்கு."

சங்கரன் சொன்ன பதில் உபாசகரின் உச்சி முடியைப் பிடித்து ஒரு இழு இழுத்தது. அவரது கண்களிலும் ஒரு அசாத்ய விரிவு. அதையும் சாமிநாதன் கவனித்தான்.

"என்ன சாமி... சிவராத்திரின்னு சொன்ன உடனேயும் ஒரு அதிர்ச்சியைக் காட்றீங்க...?"

"என்னப்பா பண்றது... இன்னிக்கு என் காதுல விழுற விஷயங்கள் எல்லாமே அதிர்ச்சி தரக்கூடியவையாதான் இருக்கு-"

"சிவராத்திரில என்ன சாமி அதிர்ச்சி இருக்கு?"

"சிவராத்திரில அதிர்ச்சி இல்ல... அது இவ்வளவு சீக்கிரம் வந்துடிச்சாங்கறதுதான் நான் அதிரக் காரணம்..." உபாசகர் சமாளிக்க மாட்டாமல் சமாளிக்கும்போது மைதிலி சுவாமி சந்நிதியில் இருந்து ஈசான்ய பாகத்தில் உள்ள அம்பாள் சந்நிதி நோக்கி சென்றபடி இருந்தாள். அதே சமயம் பொழுது வெளுத்துக் கறுத்து அந்தி வந்துவிட்ட நிலையில் வானத்தில் இருந்து நட்சத்திரம் உதிர்கிறாற்போல ஒரு தோற்றம். அப்படி உதிர்ந்து விழுந்த நட்சத்திரமும் நேராக மைதிலியின் சிரசில் விழுந்து அவளை அப்படியே ஆகர்ஷித்துக் கொண்டுவிட்டது போல தோன்றியது.

இயற்கை எப்பொழுதுமே இப்படித்தான் பேசும். அதன் பாஷையே வேறு... அது எல்லோருக்கும் புரியாது. புரிந்தவர்களோ மிரண்டு போவார்கள்.

மைதிலி வரையில் ஒரு பெரிய மாற்றத்திற்கு அவள் உள்ளாகப் போவது நிச்சயம் என்று உபாசகருக்குத் தோன்றியது... சட்டென்று வித்யா உபாசனா மந்திரத்துக்குள் மனதைப் போட்டு மூடினார். அவர் இப்படி கண்களை மூடிக் கொண்டு பேசிக் கொண்டு இருக்கும்போதே தியானத்தில் அமிழ்வது சங்கரனுக்கும் சாமிநாதனுக்கும் ஆச்சரியமாக இருந்தது.

"டேய்... நாம கிளம்புவோம். சாமி நிஷ்டைல நுழைஞ்சிட்டார்..." என்று சொல்லிக்கொண்டே சங்கரன் நகர்ந்தான். சாமிநாதனும்.

உபாசகரின் நிஷ்டைக்குள்ளான மனசுக்குள் கலகலவென்று ஒரு சிரிப்பொலி. அது உபாசகரையே கேலி செய்வது போல் கேட்டது.

உபாசகருக்குப் புரிந்துவிட்டது. சட்டென்று கண்களைத் திறந்தவர் விறுவிறுவென்று அந்த ஈசான்ய பாகத்து அம்பாள் சந்நிதி நோக்கித்தான் நடந்தார்.

ஆனால், அவர் அங்கே போனபோது மைதிலி அங்கே இல்லை. மாறாக அம்பாளின் முகத்தில் மைதிலியின் முகம் தெரிந்தது.

உபாசகருக்குப் புரிந்துவிட்டது.

அவரது காதுகளுக்கு மட்டும் கேட்கிற மாதிரி ஒரு அசரீரி வேறு.

'நரசிம்ம பாரதி... நானே நேர்ல வந்துட்டேன். இனி தோடிபுரம் அதிசயங்கள் நடக்கிற ஊர் மட்டுமில்ல... நான் நடமாடற ஊரும்கூட!'

உபாசகரின் கரங்கள் கூம்பத் தொடங்கின. கண்களிலும் ஆனந்தக் கண்ணீரின் பிரவாகம்!



# 9

## அன்று

மகாதேவரும் வைஜெயந்தியும் அதிர்ச்சியுடன் ஜோதிடரைப் பார்க்க - அவரும் தொடர்ந்தார்.

"மகா மந்திரியாரே... இந்த நொடி நீங்கள் கூறிய சந்தோஷ மான தகவலுக்கான பலனை நான் பிரசன்ன ஜோதிட முறையில் பார்த்தபோது தங்கள் துணைவியார் வயிற்றில் கருக் கொண்டிருப்பது ஒரு ஆண் உயிர். அது மட்டுமல்ல... அது இந்த உலகின் எந்த விதமான இன்பத்தையும் சரி, துன்பத்தையும் சரி, அனுபவிக்கப் போவதில்லை. பிறந்தது முதலே அது ஒரு யோகியைப் போலத்தான் வளரும் என்று தெரிகிறது" என்றார்.

"யோகியைப் போலவா... அப்படியானால் என் மகன் ஒரு பிரகலாதன்போல, துருவன் போல விளங்குவானா...?"

"அப்படியல்ல... பிரகலாதனும் துருவனும் இறை நாட்டம் உடையவர்கள். அதே சமயம் இன்ப துன்பங்களிலும் கடுமையாக உழன்றவர்கள். ஆனால், இந்த உயிரோ இன்பத்தை யும் சரி, துன்பத்தையும் சரி... என்னவென்றே அறிந்து கொள்ளப் போவதில்லை... இன்னும் சொல்லப்போனால் இப்படி ஒரு ஜாதக அம்சத்தை நான் இதுநாள் வரையில் பார்த்ததே இல்லை..." என்றார் ஜோதிடர்.

மகாதேவர், வைஜெயந்தியைப் பார்த்தார். அவள் முகத்தில் ஏராளமான குழப்ப அலைகள்.

"வைஜெயந்தி..."

"எனக்கு மிக கலக்கமாக இருக்கிறது."

"கலங்காதே... நடப்பதை யாரால் மாற்ற முடியும்?"

மகாதேவரின் ஆறுதலைத் தொடர்ந்து வைஜெயந்தி அங்கிருந்து விலகி நேராக தோட்டத்துப் பக்கம் சென்றாள். தோட்டத்தில் தான் இருந்தது பாபாவின் சமாதி.

அதன் முன் போய் அமர்ந்தாள்.

மனதுக்குள் அவரோடு பேசத் தொடங்கினாள்.

"பாபாஜி... என் வாழ்வின் முக்கியமான ஒரு கட்டத்தில் இப்படி தாங்கள் இல்லாமல் போய் விட்டீர்களே... எனக்கு கலக்கமாக இருக்கிறது. ஒரு பெண் தாய்மையின்போது தான் முழுமை அடைகிறாள். எனக்கு அந்தப் பேறு கிடைக்குமோ கிடைக்காதோ என்று கலங்கியிருந்தேன். அதைக் கொடுத்து அருள் செய்தீர்கள். ஆனால், நான் கருக் கொண்ட நேரம் சரியில்லை என்று ஜோதிடர் கூறுவது எனக்கு விளங்கவில்லை."

"உங்கள் அருள்தான் எனக்கு வழிகாட்ட வேண்டும்." மனக்கலக்கத்தோடு அப்படியே சமாதிமேல் சாய்ந்துவிட்டாள்.

சமாதியில் போடப்பட்டிருந்த மலர்கள் காய்ந்து விட்டிருந்தன. அவைகளைப் பார்த்தபடியே கண்ணீரை உகுத்துக் கொண்டிருந்தாள்.

அப்படியே களைத்து உறங்கிவிட்டாள்.

சிறிதுநேரம் கழித்து மகாதேவரே அவளை தேடிக் கொண்டு வந்தார். சமாதிமேல் மயங்கியது போல் கிடப்பளைப் பார்த்து 'வைஜெயந்தி' என்றபடியே நெருங்கினார்.

அருகே அமர்ந்து அவளை அப்படியே தொட்டும் தூக்கினார். அப்பொழுது அந்த சமாதி மலர்களிடமும் ஒரு வித மலர்ச்சி... அப்பொழுதுதான் பறித்ததுபோல அந்த மலர்கள் இருந்தன... சுகந்தவாசமும் நன்றாகவே வீசியது.

அதை வைஜெயந்தியும் பார்த்தாள்.

அவள் முகத்தில் வேகமாக ஆச்சரிய ரேகைகள் ஓடத் தொடங்கின.

"என்ன வைஜெயந்தி... எதை அப்படிப் பார்க்கிறாய்?"

"இந்த மலர்களைத்தான் அன்பே. இவை நான் இங்கு வந்தபோது வாடியிருந்தன. ஆனால், இப்பொழுதோ மலர்ந்து காணப்படுகின்றன..."

"நீ தெளிவாக கவனித்திருக்க மாட்டாய்..."

"இல்லை... நீங்களே பாருங்கள்! பாபாவின் சமாதிக்குப் போடப்பட்ட மலர்கள் இன்று போடப்பட்டவை அல்ல...!"

"அப்படியானால்...?"

"எனக்குப் புரிந்துவிட்டது... பாபாவின் ஆன்மா மலர்கள் மூலம் எனக்கு சேதி சொல்லிவிட்டது. 'வாடாதே... உன் வாழ்க்கை மலர்ந்து மணம் வீசும்' என்று கூறுகிறார்..."

வைஜெயந்தியின் விளக்கம் மகாதேவருக்கும் ஒரு நிறைவைத் தந்தது.

"நீ சொல்கிறபடியே அனைத்தும் இருக்கட்டும். புறப்படு..." வைஜெயந்தியை நிம்மதியுடன் அழைத்துச் செல்லத் தொடங்கினார் அந்த நொடி வீணை இசையும் காதில் கேட்கத் தொடங்கியது.

வீரேந்திரன் பிராண அறையில் வாசிக்கத் தொடங்கி விட்டதன் எதிரொலி.

அற்புதமாய் இருந்தது அந்த ராகம்... அந்த மாலை வேளையில் அந்த வேளைக்கேயுரிய தென்றலுடன் அதன் ராகமும் சேர்ந்துகொண்டபோது தேனுடன் தினை மாவு சேர்ந்துகொண்டது போல் இருந்தது.

அனுபவித்துக் கொணடே நவக்கிரக மாளிகைக்குள் நுழையத் தொடங்கினர்.

**அ**தே சமயம் தோடிபுரத்தின் எல்லையில் ஒரு வாஸ்து சாஸ்திர நிபுணர் விநாயகராமன் என்கிற பெயரில் காலெடுத்து வைத்திருந்தான்.

தென்னை, வாழை என்று ஓங்கி உயர்ந்த வயல்வெளி ஒருபுறம், விரிந்து பரந்து கிடக்கும் பச்சை நெல்வயல்கள் ஒரு புறம், நடுவில் நெடிதுயர்ந்து நிற்கும் தோடீஸ்வரர் ஆலயத்து கோபுரம் ஒரு புறம்...

'ஊரென்றால் இதுவல்லவா ஊர்' என்றது அவன் மனது. அவனது தோளில் ஒரு துணிக்கட்டு மூட்டை இருந்தது. அவனும் மராத்தியர்கள் போல தலைப்பாகை எல்லாம் தரித்திருந்தான்.

ஆனால், அவர்களைப்போல சொக்காய் ரக மேலாடையும், பைஜாமா போல கீழாடையும் அணியாமல் வேட்டியை

கச்சம் வைத்துக் கட்டியிருந்தான். மேலே ஒரு ஆறு முழத் துண்டு மார்பை பூணூல் போல குறுக்குப் போக்கில் போய் மூடியிருந்தது.

ஊர் ஊராய் போய் வாஸ்து ஆராய்ச்சி செய்வதுதான் அவனது வேலையே... அவன் வரையில் பஞ்ச பூதங்களில் நிலம் தான் முதன்மையானது. அது மேடு பள்ளம் இல்லாமல், சரியான திசை அமைப்போடு, உரிய நீள அகலங்களோடு ஒருவருக்குக் கிடைத்துவிட்டால் அவரது வாழ்வில் எல்லா இன்பங்களும் இருந்தாக வேண்டும் என்பது அவனது கண்டுபிடிப்பாகும். அதே போல ஒரு ஊரானது மிகவும் பேசப்படுகிறது என்றால் அதற்கும் அங்கே ஒரு வலுவான காரணம் இருந்தாக வேண்டும் என்பதும் அவனது தீர்மானம்.

இதுவரை ஆயிரம் நகரங்களுக்கு மேல் சென்று அந்த நகரங்களைப் பார்வையிட்டு அவன் கண்டறிந்து வைத்திருக்கும் விஷயங்களுக்கு ஒரு அளவே கிடையாது. தோடிபுரம் பற்றியும் கேள்விப்பட்டுத்தான் அதைக் காணவந்திருக்கிறான்.

எவ்வளவோ ஊர்களைப் பற்றி அவன் கேள்விப்பட்டிருக் கிறான். ஆனால், எந்த ஒரு ஊரைப் பற்றியும் தோடிபுரம் அளவிற்கு அவன்கேள்விப்படவில்லை.

'ஊரென்றால் அது ஊர்...

வாழ்ந்தால் அங்குதான் வாழ வேண்டும்...

பச்சைப் பசேல் என்ற வளமான சூழல்...

பாய்ந்து செல்கின்ற வண்ணமிகு காவிரி...

மனதை வருடுகின்ற தோடிபுரம் ஆலய மணி ஓசை...

அவ்வப்போது காதில் விழும் வீணை நாதம்...

வறியவர்களே கண்ணில் படாத ஒரு வளமான வாழ்க்கை முறை...

திண்ணைக்கு திண்ணை கடம், மிருதங்கம், வயலின் என்கிற நாதமிகு சப்தங்கள்...

அணையாத அடுப்பு கொண்ட அன்ன சத்திரம்.

இத்தனைக்கும் மீறி ஏதும் குறை என்றால் அதை தீர்த்து வைக்க ஒரு வள்ளலைப் போல் காட்சிதரும் தோடீஸ்வர மூர்த்தி.

எங்கும் இல்லாதபடி நவக்கிரகங்கள் குடிகொண்டிருக்கும் மாளிகை. அந்த கிரகங்களின் ஆளுமையில் உள்ள ராசிக்

கிணறுகள். அதில் நீராடினாலே எப்படிப்பட்ட தோஷமும் நீங்கி விடும் ஒரு உன்னதம்...'

இப்படி ஊரின் சிறப்பை ஒரு பட்டியல் போட்டு அவனைத் தோடிபுரத்திற்கு அனுப்பியிருந்தார்கள்.

ஊர் எல்லையில் நுழையும்போதே அதெல்லாம் ஞாபகத்திற்கு வந்தது. வயல்வெளிகளுக்கு அப்பால் மேற்குத் திசையில் ஒரு ரத்தப் பழமாய் சூரியன் அமிழ்ந்துகொண்டிருந்தான். அரிய காட்சி.

வெண்ணிறக் கொக்குகள் கூட்டமாகப் பறந்துகொண்டிருந்தன. அவற்றை எண்ணிப் பார்த்தான்.

முப்பத்தி இரண்டு கொக்குகள்.

உடனே அவனுக்குள் குருச்சந்திர யோகம்தான் நினைவுக்கு வந்தது.

காலடியில் மண்ணானது நன்கு சிவந்த நிறத்தோடு அவனைப் பார்த்தது. ஒரு ஓரமாய் ஏராளமாய் எறும்புகள் ஊர்ந்து கொண்டிருந்தன. சாலை ஓரமாக ஆவாரை தழைத்திருந்தது. துளசியும் மண்டிக் கிடந்தது. ஆனால், ஒரு எருக்கஞ் செடியும் இல்லை. அப்படியே பசலைக் கொடியும், சீந்தல் கொடியும் கணவன் மனைவி போல கட்டிக் கொண்டு கிடந்தன. அந்த சாலை ஓர நிலத்துக்கு அப்பால் வயலில் வாய்க்காலில் தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. வாய்க்கால் கரை ஒருஅடி உயரம் இருந்தது. அதில் நண்டுகள் விளையாடிக் கொண்டிருந்தன. ஓடும் வாய்க்கால் நீருக்குள்ளோ பளபளவென்ற கண்ணாடி உடம்பு கொண்டு அயிரை மீன்கள்... நன்கு சதைப் பிடித்த வாளை மீன்களும் கூடச் சேர்ந்து ஓடிக்கொண்டிருந்தன. ஒரு நெல்வயலில் இப்படி இத்தனை ஜீவராசிகள் இருப்பது என்பது வளத்திற்கு ஒரு சான்று.

நெல் முற்றி விளைந்து, கதிர் அடித்து, பின் சுத்தம் செய்யப்பட்டு கடைக்குச் சென்று விற்பனைக்குப் பிறகு தான் சோறாகி உயிர் காக்கிறது. ஆனால், இங்கோ அதற்கு முன்பே அந்த வயலில் ஏராளமான ஜீவராசிகள் நிம்மதியாக ஓடி ஆடிக்கொண்டிருந்தன. அவனை ஆச்சரியம் தாலாட்டத் தொடங்கியது.

அப்படியே தொடர்ந்து நடந்தான்.

சில இடங்களில் சாலை ஓரமாக மாமரங்கள் கண்ணில் பட்டன. மரங்களில் ஏராளமாய் காய்கள் உருண்டிருந்தன அணில் கூட்டம் ஒன்று துள்ளிக் குதித்துக் கொண்டு ஓடியபடி இருந்தது. பிறந்தால் அணிலாகப் பிறந்து இப்படி ஒரு ஊரில் - இப்படி ஒரு மாமரத்தில் தாவிக் குதித்து வாழ்ந்தபடி இருக்க வேண்டும் என்று தோன்றியது.

வளம்...

வளம்...

வளம்...

பார்க்குமிடமெல்லாம் வளம்!

அவன் கண்களுக்குள் ஜில்லிப்பு. மனதில் ஒரு நிறைவு. காற்றிடமும் தோலால் தாங்க முடிந்த அளவுக்கு குளுமை. மண்ணுக்கெல்லாம் வாசம் உண்டு. ஒவ்வொரு இடத்தில் அது வேறுபடும். அதை சலித்து நுகர்ந்து இனம் பிரிக்கத் தெரிய வேண்டும்.

அவனும் பிரித்தான்.

சந்தனத்தை சற்று சுட்டுப் பின் உள்ளங்கையில் அதைப் பரபரவென்று தேய்த்துவிட்டு அந்த உள்ளங்கையை முகர்ந்து பார்த்தால் வெளிப்படும் வாசம் போல் இருந்தது அந்த வாசம்.

ஒருவர் வண்டி கட்டி அதன் கூரைமேல் நூற்றுக்கணக்கான சட்டி பானைகளைக் கட்டிக் கொண்டு போனபடி இருந்தார். மாடுகள் திம்மென்று இருந்தன. கொம்புகளில் சலங்கைகளின் ஜல்ஜல் சப்தம். மாடுகள் இரண்டும்கூட சுருதி பிசகாமல் ஒரே மாதிரி காலஇடைவெளியில் காலைத் தூக்கி வைத்து ஓடியபடி இருந்தன.

அதையும் ரசித்தான் அவன்... தொடர்ந்து நடந்தான். கிட்டத்தட்ட மாலைச் சூரியன் முழுவதுமாக மறைந்துவிட்ட நிலையில் மொத்த வானிலும் ஒரு மெல்லிய கரும் பூந்துகில் விழ ஆரம்பித்திருந்தது.

முழுவதுமாக இருட்டிவிட்டாலோ அப்படியே ஒரு ஓரமாக தங்கிவிட வேண்டி வரலாம்.

அது அத்தனை நல்லதல்ல... இவ்வளவு வளமான ஊரில் எறும்புகள் முதல் ஜலராசிகள் வரை திளைத்துக் கிடக்கும் போது அந்த ஜலராசியைத் தன் முழு உணவாகக் கொண்ட

பாம்புகளும் வாழ்ந்து கொண்டுதானிருக்கும். அவை வெளியே வரும் நேரமே அந்த சந்திதான் நள்ளிரவு வரை உணவு வேட்டை... பின் உகந்த இடத்தில் அப்படியே சுருண்டுவிட வேண்டியதுதான் அதன் வாழ்க்கை முறை.

எனவே அவன் வேகமாக நடக்கத் தொடங்கினான்.

இடையிட்டது காவிரி ஆற்றின் படித்துறை.

அதில் சதாசிவ சாஸ்திரிகள் குளித்துக் கொண்டிருந்தார்.

படிமேல் ஒரு பித்தளைக் குடம்.

'அப்பாடா... ஒரு அந்தணர் கண்ணில் பட்டுவிட்டார். இவர் மூலமாக ஊர் பற்றி முழுமையாக அறிந்துகொள்வதோடு எங்கே தங்குவது என்பதற்கும் இவர் மூலமாகவே விடை காணலாம்' என்று எண்ணிக் கொண்டான். சாஸ்திரிகளும் குளித்துவிட்டு ஈர உடம்புடன் அதே சமயம் குடம் நிறைய நீரை மொண்டு கொண்டு கரை ஏறினார்.

"நமஸ்காரம்..." - விநாயகராமனின் கும்பிடு சாஸ்திரிகளை நிமிர்த்தியது.

சாஸ்திரிகள் முகத்தில் அதிசயமாக தாடி மீசை வேறு... எப்பொழுதும் மழுங்கச் சிரைத்த தலையோடு இருப்பவர் முற்றிலும் மாறிப்போயிருந்தார்.

தன்னைக் கும்பிட்ட விநாயகராமனை ஆழமாகப் பார்த்தார். பின் ஒரு சிறு புன்னகையை உதிர்த்துவிட்டு மௌன மாக குடத்து நீருடன் நடக்கத் தொடங்கினார். விநாயக ராமனுக்கு அவரது மௌனம்; அதைத் தொடர்ந்து கண்டு கொள்ளாதபடி அவர் நடந்து சென்றது - இரண்டுமே விளங்க வில்லை. தோடிபுரத்தில் தான் சந்தித்த முதல் மனிதனே இப்படி புதிரானவனாக இருக்கின்றானே என்கிற ஆச்சரியமும் அதிர்ச்சியும் அவனை சாஸ்திரிகளைத் துரத்தத் தொடங்கியது.

"ஐயா நில்லுங்கள்... நான் நமஸ்கரித்தும் பதில் நமஸ்காரம் செய்யாமல் ஒரு வார்த்தைகூட பேசாமல் நீங்கள் இப்படிப் போகலாமா? நான் ஒரு வாஸ்து நிபுணன் ஆயிரக் கணக்கான ஊர்களை வாஸ்து ஆராய்ச்சி செய்துவிட்டு இந்த ஊருக்கு வந்திருக்கிறேன். இந்த ஊரின் வடிவமைப்பே மிகச் சிறப்பானதாக உள்ளது. இங்கே இனி நிறைய அதிசயங்கள் நடக்க இருப்பதாக என் உள்ளுணர்வு சொல்கிறது. தயவுசெய்து நில்லுங்கள். என் கேள்விகள் சிலவற்றுக்கு பதில் தாருங்கள்..."

விநாயகராமனின் விடாத பேச்சு சாஸ்திரிகளை நிறுத்தியது. நீர்க்குடத்துடன் திரும்பிப் பார்த்தார். பின் வாயைத் திறந்தார்.

"ஐயா நீங்கள் யாராக இருந்தாலும் சரி... நான் இப்பொழுது நவக்கிரக மாளிகைக்கு சென்று அங்குள்ள பாபாவின் சமாதியை வழிபட்டுத் திரும்பும்வரை எதுவும் பேசாதீர்கள். பிறகு நீங்கள் எது கேட்டாலும் நான் கூறுகிறேன்" - என்றார்.

விநாயகராமனையும் அடுத்த வினாடியே ஆச்சரியம் தொற்றிக் கொண்டுவிட்டது. நவக்கிரக மாளிகை என்று அவர் குறிப்பிட்டது கவ்வி இழுத்தது. ஆவலோடு பின்தொடர்ந் தான். சாஸ்திரிகளும் நவக்கிரக மாளிகையை நெருங்கினார். அதற்கு முன் அவர் மயானம் வழியாக செல்லும்போது மயான அமைப்பை எல்லாம் நன்றாக கவனித்துக் கொண்டான். விநாயகராமன் வசம் ஒரு காந்தப்புலன் இருந்தது. கடலில் பயணம் செய்யும் மாலுமிகள்தான் திசையைத் தெளிவாக அறிவதற்காக அதை கைகளில் வைத்திருப்பார்கள். ஒரு வாஸ்து நிபுணனுக்கும் திசையறிவு மிக முக்கியம். திசைகளை வைத்தே பலாபலன்களைக் கூறமுடியும். எனவே தன் வசமிருந்த காந்தப்புலனை எடுத்துப் பார்த்தான். தென்கிழக்கு மூலையில் மயானம் அமைந்திருப்பது தெரிந்தது. அதாவது அக்னி மூலையில்... அக்னி மூலையில்தான் எப்பொழுதும் எரிகின்ற விஷயங்கள் இருக்க வேண்டும். நான்கு திசை முனைகளில் அக்னி மூலையில் சேரும் அனலை நெருப்பில் சேர்த்துப் பிடித்து எரித்துவிடுவதால் அந்த நெருப்பு அணைக்கப்படும்போது அதோடு சேர்ந்து அனலும் அணைக்கப்பட்டு விடும். அப்படி நடவாதபோது அந்த அனலானது கொஞ்சம் கொஞ்சமாகப் பெருகி மெல்ல தனக்கு நேர் எதிரில் உள்ள கோணமான கன்னி மூலை நோக்கிப் பரவி, கன்னி மூலையின் விசை மிகுந்த கதிர்களை எரித்துவிடும். அப்படியே பக்கவாட்டில் பரவி ஈசான்யம், நைருதி இரண்டிலும் கூட ஒன்றுசேர்ந்து அந்த சக்திகளை எல்லாம் எரித்து அனலாக்கிவிடும்.

அக்னி மூலையின் சக்தி அப்படிப்பட்டது.

அந்த சக்தியை தோடிபுரத்தில் பிணமெரிக்கப் பயன் படுத்திக் கொள்ளும் விதமாக மயானத்தைத் தென்கிழக்கு

மூலையில் அமைந்திருக்கும் புத்திசாலித்தனத்தை அந்த நிலையிலும் விநாயகராமன் கணிக்கத் தவறவில்லை.

அந்த கணிப்போடு நவக்கிரக மாளிகை முன்போய் சேர்ந்தபோது வாசலில் சில காவலர்கள் தெரிந்தனர்... அவர்கள் பணிவாக சாஸ்திரிகளை உள்ளே விட்டனர். அவரும் மாளிகை நந்தவனப் பகுதிக்குச் சென்று அங்கு பாலைப் பெருக்கிய வேப்ப மரத்தைச் சுற்றி வணங்கிவிட்டு பாபா சமாதிக்கு சென்று தனது குடத்து நீரால் சமாதியை அபிஷேகித்தார். பிறகு அப்படியே சமாதி முன் விழுந்து வணங்கினார் சமாதி மேல் போர்த்தி யிருந்த பச்சை நிற வஸ்திரமும் அதில் தெரிந்த பிறைச் சின்னமும் அது ஒரு இஸ்லாமியர் சமாதி என்பதை விநாயகராமனுக்கு உணர்த்திவிட்டது. கண்கள் அகண்டு விரிந்துகொண்டன. சாஸ்திரிகளும் குடத்துடன் திரும்பத் தொடங்கினார்.

அவர் வந்திருக்கும் சேதி அறிந்து வைஜெயந்தியும் வெளியே வந்திருந்தாள். கைகளைக் கூப்பி நமஸ்கரித்தபடி "சாஸ்திரிகளே தயவுசெய்து உள்ளே வாருங்கள்" என்று அழைத்தாள்.

"இல்லை மகளே... என்னை விட்டுவிடு. பாபா இல்லாத இந்த உலகில் என்னால் எதிலும் ஒரு ஈடுபாட்டை ஏற்படுத்திக் கொள்ள முடியவில்லை. இந்த வாழ்க்கையே எனக்கு ஒரு பாரமாக இருக்கிறது. உயிர் வாழவே எனக்குப் பிடிக்கவில்லை. ஒரு பிராமணன் தற்கொலை செய்துகொள்வது என்பது மகாபாவத்தோடு சேர்ந்தது. எனவேதான் நான் உயிரை விடவில்லை..."

சாஸ்திரிகள் வைஜெயந்தியிடம் மனம் உருகப் பேசிவிட்டு மெல்ல அங்கிருந்து நகரத் தொடங்கினார். பார்த்துக்கொண்டே இருந்தான் விநாயகராமன்.

அவர் அவனருகே வரவும், மீண்டும் ஒருமுறை வணங்கி னான்.

"வாருங்கள்... என் இல்லத்திற்கு சென்று அங்கு அமர்ந்து பேசுவோம்..." சாஸ்திரிகள் அவனை விருந்தோம்பலுடன் அழைத்துக் கொண்டு நடந்தார்.

வழக்கம் போல் மயான வழியிலேயே சென்றார் மயானத்தைக் கடக்கும்போது அங்கு புலையன் ஒரு தப் பட்டையை தட்டி பாடியபடி இருந்தான். நல்ல தாளகதியில்

அவன் பாடிய நாட்டுப்புறப்பாடலில் நல்ல இனிமை. விநாயக ராமனை அவனது குரல்வளம் பெரிதும் கவர்ந்துவிட்டது. ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டே நடந்தான்.

அடுத்து ஊர் வந்தது. அழகாக நூல் பிடித்து வடிவமைத் தது போல் தெருக்கள். எல்லா வீடுகளிலும் திண்ணைகள். ஒரு ஆச்சரியம் போல கிழக்குப் பார்த்து வீட்டு வரிசை முழுவதிலும் திண்ணை இருந்தது. அதே சமயம் முன்புறம் கூரைச்சரிவு இருந்தது.

அதே மேற்குப்புறத்தில் உள்ள திண்ணை வீடுகள் அவ்வளவுக்கும் கூரைச்சரிவு இல்லை. அந்தத் திண்ணைகள் காற்றாட திறந்த திறப்பில் இருந்தன.

வடக்குத் திசை பார்த்த வீடுகளோ முன்புறம் நிறைய இடப்பகுதி விடப்பட்ட நிலையில் திண்ணை ஏதும் இன்றி எடுத்த எடுப்பில் அனைவரும் வீட்டுக்குள் செல்லும் விதத்தில் இருந்தது.

தெற்குப் பார்த்த வீடுகள் அவ்வளவும் வீட்டு முகப்பில் நீராழி ஒன்றுடன் தோட்டமும் போட்டிருந்தனர்.

என்ன ஒரு அற்புதமான திட்டமிடல்!

பொதுவில் வாஸ்து என்றாலே வாசசாஸ்திரம் என்பதன் சுருக்கம்தான். வாசசாஸ்திரம் என்பதே மண்மீது வாழும் மனிதன் அந்த மண்ணின் குணம் தெரிந்து அதைப் பயன் படுத்திக் கொண்டு சிறக்க வேண்டும் என்கிற நல்ல நோக்கத்தின் அடிப்படையில் கூறப்படுகின்ற ஒன்றுதான்.

எத்தனை மனிதர்கள் மண்ணைப் புரிந்துகொண்டு, அதன் குண இயல்பைத் தெரிந்துகொண்டு அதற்கேற்ப தங்களுக்கான வீடுகளைக் கட்டிக்கொண்டு வாழ்கிறார்கள்.

குடி இருக்க இடம் கிடைத்தால் போதும், கால்நீட்டிப் படுக்கத் தரை கிடைத்தால் போதும் என்று இருப்பவர்கள் தானே அநேகம் பேர். ஆனால், தோடிபுரமே வாஸ்து சாஸ் திரத்துக்கு இலக்கணம் கூறுகிற மாதிரி இருந்தது.

“ஐயா... உங்கள் ஊரை வடிவமைத்தது யார்? உண்மையில் அவர் ஒரு புவியியல் மேதை...” என்று நடந்து கொண்டிருந்த சாஸ்திரிகளின் காதில் பலமாக விழும் வண்ணம் பேசினான் விநாயகராமன். சாஸ்திரிகளும் பதிலுக்கு திரும்பிப் பார்த்தார். முற்றிலுமாய் இருட்டிவிட்ட நிலையில் தெருவின் கல்விளக்குத்

தூண்களில் வேப்பெண்ணெய் சேர்த்து அதில் திரி தீபம் போட்டபடி போய்க்கொண்டிருந்தான் ஊரின் இரவுப் பாராக்காரன்.

விளக்குத் தூண்கள் எல்லாம் கூட நைருதி பாகமாய் பார்த்துப் பார்த்து அமைக்கப்பட்டிருந்தன. நைருதியில்தான் நிலையானவை - ஓங்கி உயர்ந்து வளருபவை இருக்க வேண்டும். அதை முன்பே புரிந்துகொண்டு ஊரை வடிவமைத்துவிட்ட அந்த மேதை யார் என்று மீண்டும் ஒரு முறை கேள்வி எழும்பியது அவனுக்குள்.

அதற்குள் சாஸ்திரிகளின் வீடு வந்துவிட்டது. கிழக்குப் பார்த்த விஸ்தாரமான வீடு. முன்புறமும் பின்புறமும் நிறைய இடம் இருந்தது. ஆனால், பக்கவாட்டில் வலது பாகத்தைவிட இடதுபாகத்தில், அதாவது தெற்கில் நிறைய இடம் இருந்தது. அங்கேதான் கிணறும் அமைந்திருந்தது.

அவ்வளவையும் கவனித்தபடியே சாஸ்திரிகள் வீட்டுக்குள் நுழைந்தான் விநாயகராமன். சாஸ்திரிகளின் மனைவி எதிர்ப்பட்டாள்.

"பாலா... இவர் ஒரு வாஸ்து சாஸ்திர நிபுணராம். நமது ஊருக்கு வந்திருக்கிறார் என்னோடு பேச விரும்பினார் அழைத்து வந்திருக்கிறேன்." என்று மனைவியிடம் அவனைப் பற்றிக் கூறவும், விநாயகராமனின் கரங்கள் கூப்பின.

பதிலுக்கு பாலாவும் வணங்கினாள். அவள் கண்களிலோ ஒளியே இல்லை.

"அமருங்கள்... சாஸ்திரிகள் கைகாட்டி ஒரு பாயை விரித்தார். விநாயகராமனும் அமர்ந்தான். சிம்னி விளக்கின் ஒளியில் நன்றாகவே இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ள முடிந்தது. ஒரு ஓரமாக அந்த வீட்டில் ஏட்டுக்கட்டைக் காவல்காக்கும் சர்ப்பமும் மெல்ல வளைந்து நெளிந்தபடி சென்று கொண்டிருந்தது. அதைப் பார்க்கவும் விநாயகராம னுக்கு சற்று பகீரென்றது.

"ஐயா! பாம்பு... பாம்பு... என்றான் உரத்த குரலில். உடம்பெல்லாமும் நடுங்கியது. ஆனால், சாஸ்திரிகளோ "பதட்டப்படாதீர்கள். அது மனைப் பாம்பு. காவல் நாகம். எதுவும் செய்யாது" என்றார் சாதாரணமாக.

"மனைப்பாம்பா...?"

"ஆம்... ஏன்... நீங்கள் கேள்விப்பட்டதில்லையா?"

"கேள்விப்பட்டிருக்கிறேன். அதே சமயம் மனைப்பாம்பு வசிக்கும் மனைக்கு என்று வேறு சில அம்சங்களும் உள்ளன. வாஸ்துப்படி அவையும் அல்லவா வந்துவிடும்...?"

"நீங்கள் வாஸ்து நிபுணர் என்றீர்கள் நீங்கள் வந்த விஷயத்தைக் கூறுங்கள்."

"அதற்கு முன் உங்களிடம் நான் சில கேள்விகள் கேட்கலாமா?"

"கேளுங்கள்..."

"உங்களுக்கு என்ன குறை...? ஏன் உங்கள் முகத்திலோ கண்களிலோ ஒரு ஒளியுமில்லை?"

"தயவுசெய்து என்னைப் பற்றிய கேள்விகளை விட்டு விடுங்கள். ஊரைப்பற்றி எது வேண்டுமானாலும் கேளுங்கள்."

"உங்களைப் பற்றிய கேள்வியும் எனக்கு மிக முக்கியம். ஏன் என்றால் 'தோடிபுரத்தில் இந்த நொடி எல்லாரும் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். அங்கே ஒருவர்கூட துன்பத்தில் இல்லை' என்று எனக்கு சொல்லப்பட்டது. இந்த ஊருக்குள் வந்து ஊர் அமைப்பைப் பார்த்ததில் அதில் உண்மை இருப்ப தாகவே தெரிகிறது.

அதே சமயம் நீங்கள் சோகமாக இருப்பதற்கும் உங்கள் மனையிலேயே காரணம் இருக்கிறது. தென்புறத்தில் கிணறு இருக்கிறது. தென்புறம் அகண்டு விரிந்தும் கிடக்கிறது. வடக்கு சுருங்கிவிட்டது. இதுதான் உங்கள் துன்பத்திற்கு காரணமாக இருக்க வேண்டும்..."

விநாயகராமனின் விளக்கம் கேட்டு சிரித்தார் சாஸ்திரிகள்.

"ஏன் சிரிக்கிறீர்கள்?"

"உங்கள் விளக்கம் எனக்கு சிரிப்பைத் தருகிறது. உண்மை யில் என் மனவேதனைக்கு நீங்கள் சொன்ன காரணங்கள் எதுவும் பொருந்தாது. சிலபல தினங்களுக்கு முன்வரை இந்த வீடு ஒரு கோவிலாக இருந்தது. இங்கே ஒரு தெய்வாம்சமுள்ள மனிதரும் எங்களுடன் வாழ்ந்து கொண்டிருந்தார். இப்பொழுது அவர் எங்களைவிட்டுப் பிரிந்துவிட்டார். அவரது

பிரிவு தாளாமல்தான் நான் சோகத்தில் இருக்கிறேன். அதற்கு நிலம் என்ன செய்யும்..."

"ஓ... நீங்கள் மயானத்தை ஒட்டிய மாளிகையில் உள்ள ஒரு முகம்மதியரின் சமாதிக்கு சென்று வந்தீர்களே... அந்த சமாதிக்குள் அடங்கிக்கிடப்பவர்தானே அந்த தெய்வாம்ச முள்ள மனிதர்...?"

"ஆம்... என் வரையில் அந்த சமாதிதான் ஆலயம். அதை வணங்குவதில்தான் எனக்கு நிறைவு."

"ஒரு பிராமணராகிய நீங்களா சமாதியை வழிபடுவது?"

"அது சமாதியல்ல... ஆலயம். என் வரையில் எனது பாபா வாழும் ஆலயம் அது..."

"ஐயா... நீங்கள் ஒருவித உணர்ச்சி மிகுதியில் பேசுகிறீர்கள். எந்த நாளும் சமாதிகள் ஆலயங்கள் ஆகமுடியாது. அதிலும் மனிதர்களைப் புதைத்த சமாதிகளை இஸ்லாமியர்கள் பெரிதாக கருதக்கூடாது. அவர்கள் இறைவனைத் தவிர யாரையும் எதையும் பெரிதாக நினைக்காதவர்கள்."

"நீங்கள் எவ்வளவுதான் எடுத்துக் கூறினாலும் என்னால் பாபாவைக் கடவுளாகக் கருதாமல் இருக்க முடியாது. அவர் சிறிது காலம்தான் என்னுடன் இருந்தார்.

ஆனால், அவரைப் போல ஒரு புனிதரை நான் பார்த்த தில்லை. மதங்களுக்கு அப்பாற்பட்டது அவர் மீதான என் னுடைய பக்தி."

"நல்லது... அதை விடுங்கள். அந்த சமாதியுள்ள மாளிகை அமைப்பே விசித்திரமாக இருந்தது. அது யாருடையது?"

"அது அரசாங்கச் சொத்து. தற்போது அது தோடீஸ்வரன் ஆலயச் சொத்து. அதை மனிதர்கள் கட்டவில்லை. மயன்தான் கட்டினான் என்பார்கள்."

"மயனா...?"

"ஆம்... இந்திர சபையில் இந்திரனின் ஏவலுக்கு கட்டுப்பட்ட அதே தேவமயன்தான்."

"அதனால்தான் இந்த ஊரே வாஸ்து சிறப்புடன் இருக்கின்றதோ...?"

"வாஸ்து என்றால் என்னவென்றே எனக்குத் தெரியாது."

"அது ஒரு புவியியல் கல்வி. கேள்விப்பட்டதில்லையா?"

"இங்கே மனைசாஸ்திரம் என்று குறிப்பிடுவார்கள் இல்லங்களைக் கட்டித்தரும் கொத்தனார்களுக்கு அது தெரிந்திருந்தால் போதும் என்பதுதான் எங்கள் எண்ணம்."

"தவறு... மிகப் பெரிய தவறு. உங்களுக்கு உங்கள் தாய் தந்தையர் எவ்வளவு முக்கியமோ அதற்கு துளியும் குறையாத சிறப்புக் கொண்டது மனை."

"அப்படி என்ன சிறப்பு அதில் உள்ளது?" - சாஸ்திரிகள் கேட்க, விநாயகராமனும் தனது ஆய்வுபூர்வமான வாழ்க்கையில் தான் சேகரித்த தகவல்களை எல்லாம் உற்சாகமாகச் சொல்லத் தொடங்கினான்.

"வாழும் வகையுடைய சாஸ்திரம் என்பதே சுருக்கமாக வாஸ்து எனப்படுகிறது. இது ஒருவகையில் நிலம் பற்றிய ஞானம்..."

"நிலம் பற்றிய ஞானமா... நிலம் பற்றி அறிந்துகொள்ள அவ்வளவு விஷயங்கள் உள்ளதா என்ன?"

"என்ன அப்படிக் கேட்டுவிட்டீர்கள். ஜடமாகக் கிடப்பதாகவும், உயிரற்றுக் கிடப்பதாகவும், மலையையே தூக்கி வைத்தாலும் தாங்கும் தன்மை உடையதாகவும் நாம் கருதிக் கொண்டிருக்கும் நிலப்பரப்புதான் உண்மையில் அசாதாரணமானது. அற்புதமானது."

"கல்லும் மண்ணுமான நிலம் அற்புதமானதா...? எப்படி?"

"அப்படிக் கேளுங்கள். முதலில் இது இந்த உலகில் வாழும் எல்லா விஷயங்களை விடவும் சிரஞ்சீவியானது. என்ன புரியவில்லையா?"

"ஆமாம்..."

"நீங்களும், நானும், மற்ற மனிதர்களும் இன்று இருப்போம். நாளை இல்லாது போய்விடுவோம். ஆனால், இந்த நிலம் அப்படி இல்லை. இது எந்த நாளும் அழியாது; அப்படியே இருக்கும்."

"ஜடம் என்றாலே அப்படித்தானே?"

"எது ஜடம்...? இந்த நிலமா? இதில் நீங்கள் ஒரு தென்னையை நட்டுப் பாருங்கள். ஆயிரமாயிரம் தேங்காய்களைத் தரும். மாமரம் நட்டால் மாம்பழம், கீரை விதைத்தால் கீரை- ஒரு இடம்தான்... ஆனால் இதில் எதை வேண்டுமானாலும் விதைத்து அதைப் பன்மடங்கு அதிகமாகப் பெறலாம். ஜடமாக இருந்தால் இது சாத்தியமா?"

- விநாயகராமனின் கேள்வி முதல் தடவையாக சாஸ்திரிகளின் வாயை சற்று அடைத்தது. விநாயகராமனை ஆச்சரியத்துடன் பார்த்தார் இடையில் அவர் மனைவி பாலா ஒரு கிண்ணத்தில் பாலும், ஒரு தட்டில் வாழைப் பழங்களும் வைத்து எடுத்து வந்தாள். நன்கு தடித்து வளர்ந்த பழங்கள்.

"சாப்பிடுங்கள். சாப்பிட்டுக் கொண்டே பேசுங்கள்."

"நான் பேசுவது இருக்கட்டும்... என் கருத்துக்கு பதில் கருத்து கூறுங்கள்."

"நீங்கள் கூறுவது உண்மைதான் மனிதனைவிட நிலமானது சிரஞ்சீவியானது என்பதை ஒப்புக் கொள்கிறேன். இது எப்படி மனிதனுக்கு மேலும் பயன்படுகிறது...?"

"வீடு என்பது என்ன?"

"மனிதன் வாழும் இடம்."

"உலகில் பரந்து விரிந்த நிலப்பரப்பில் ஒரு மனிதன் எங்கு மனம் லேசான நிலையில் காற்றைப் போல சுதந்திரமாக இருப்பான்?"

"அவனது கிருகத்தில்தான்..."

"அங்கேதானே அவன் அதிக கால நேரமும் இருப்பான்?"

"நிச்சயமாக... அவன் இல்லத்தில்தானே அவன் நிதமும் படுத்து உறங்க வேண்டும். அதே போல அவன் இல்லத்தில் தானே அவன் அமுது உண்ண வேண்டும். குளிப்பது, உடை மாற்றுவது, மலஜலம் கழிப்பது, காமசுகம் கொள்வது என்று எல்லாமே கிருகத்தில்தானே?"

"நிச்சயமாக...!"

"நான் குறிப்பிட்ட விஷயங்கள் அவ்வளவும் அந்தரங்கமானவை; தவிர்க்க முடியாதவை அல்லவா?"

"நிச்சயமாக...!"

"இதிலிருந்து, ஒருவன் எங்கே சென்றாலும், எப்படி இருந்தாலும் மனையில் கிடக்கும் காலமும், அங்கே வாழும் நேரமும்தான் அதிகம் என்பது திண்ணமாகிவிடுகின்றதா?"

"உண்மை... உண்மை...!"

"இப்படி ஒரு மனிதனை முழுவதுமாகத் தாங்கி அவனுக்கு நிழல் தரும் கூரையுடைய மனையானது அதற்குண்டான சிறப்போடு இருக்க வேண்டும் என்பது முக்கியமான ஒன்றுதானே?"

"முக்கியமானதுதான்...!"

"இப்பொழுது நான் அடுத்து கூறப்போவதை கேட்டுக் கொள்ளுங்கள் நிலப்பரப்பின்மேல் எப்பொழுதும் ஒரு விசைப்பாடு இருக்கிறது. அது தெற்கில் இருந்து வடக்கு நோக்கிச் செல்லக்கூடியது. இந்த விசைப்பாடுதான் கடல் மேல் மனிதன் திசையறியவே காரணம். இந்த விசைப்பாடு மட்டும் இல்லாவிட்டால் ஒரு மனிதனால் கடல்வெளிமேல் எந்த நிலையிலும் பயணம் செய்ய முடியாது என்பதே உண்மை. அந்த விசையை உங்களுக்கு நான் காட்டவா?"

விநாயகராமன் கேள்வியுடன் தனது காந்தப்புலனை வெளியில் எடுத்தான். சீனக்கண்ணாடியால் மூடப்பட்ட நிலையில் கண்ணாடிக்குள் ஒரு அம்புபோன்ற முள் சுழன்றபடி இருந்தது. அதில் கிழக்கு, வடக்கு, மேற்கு, தெற்கு என்று குறிப்புகள். அம்புக்குறியின் கூரியமுனையே வடக்கு என்கிற எழுத்துகளின் மேல் இருந்தது. இதுதான் வடதிசை என்று அது காட்டிக் கொண்டிருந்தது.

சாஸ்திரிகளும் பார்த்தார்.

"இந்த காந்தப்புலன் கருவியை நீங்கள் எப்படிச் சுழற்றி யடித்தாலும் இது வடக்குத்திசையைத்தான் காட்டும். காரணம், வடதிசை நோக்கித்தான் ஈர்ப்புவிசை உள்ளது. அது காந்தத்தை இழுக்கிறது. அந்த ஈர்ப்பு விசைக்கு நடுவில்தான் நாம் காற்றைச் சுவாசித்துக் கொண்டு கைகால்களை அசைத்துக் கொண்டு வாழ்ந்து கொண்டிருக்கிறோம்."

"நல்லது... பூமி மேல் ஒரு விசை சக்தி இருப்பதை இந்த புலன் காட்டிக் கொடுத்துவிட்டது. அது எப்படி மனையில் மனிதனுக்குப் பயன்படுகிறது?"

"பொதுவில் நிலம் முழுக்க அதன் சக்திதான்... வீடு என்று வரும்போது நான் சொல்வது போல் கற்பனை செய்து கொள்ளுங்கள். ஒரு ஆற்றில் நீர் ஓடியபடி உள்ளது. அந்த நீரோட்டத்திற்கு நடுவில் ஒரு நாற்புறச்சுவர் எழுப்பி சதுர அமைப்பு ஒன்றை உருவாக்குகின்றீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள்."

"நல்லது..."

"அந்த சதுர அமைப்புக்குள்ளும் நீர் இருக்கும் புறத்தில் ஆற்று நீர் ஓடியபடி இருக்கும். சதுர அமைப்புக்குள்ளோ குளம் குட்டையில் இருப்பது போல நீர் தேங்கியிருக்கும்... அல்லவா?"

"நிச்சயமாக...!"

"அப்படி தேங்கியிருக்கும் நீர் போலத்தான் வீட்டுக்குள் ஈர்ப்பு விசையும் இருக்கும். புறத்தில் ஓடிக்கொண்டிருக்கும் நீரைப் போல பிரபஞ்ச விசையானது இருக்கும். இதை உங்களால் புரிந்துகொள்ள முடிகிறதா?"

"தாராளமாக...

"இந்த விசை திசைக்கு திசை மாறுபடுகிறது... அது மட்டுமல்ல... நாளுக்கு நாள் அன்றைய நட்சத்திரம் திதி இவைகளுக்கு ஏற்பவும் மாறுகிறது..."

"அப்படியா...?"

"ஆமாம்... இந்த விசை வடகிழக்கு மூலையில் குவியும் போது ஈசான்ய சக்தியாக மனதுக்கு அமைதியும் தெம்பும் தருவதாக உள்ளது. அதுவே தென்கிழக்கு மூலையில் அக்னியாகி வெப்பம் கொள்கிறது. தென்மேற்கிலோ நைருதி என்கிற பெயர் கொண்டு விளங்குகிறது. சொல்லப் போனால் ஈசான்ய கதிர்கள் நைருதி வழியாக வெளியேற முயலும் அதாவது பள்ளம் கண்ட இடம் நோக்கி வெள்ளம் பாய முயல்வது போன்றது இது... அப்படியே வடமேற்கு மூலையாகிய வாயு மூலையும் குளிர்ந்த தன்மை கொண்டது. உயிர் ஆதாரமான பிராணவாயுவும் மற்ற சிறப்புகளும் இந்த மூலையில்தான் மண்டும்..."

"ஒரு இல்லத்துக்குள் இத்தனை சிறப்புகளா இருக்கின்றன?"

"எங்கே நான்கு சுவர் எழுப்பப்பட்டு ஒரு கூரையும் உருவாகிவிடுகிறதே அங்கெல்லாமும் இந்தத் தன்மைகள் வந்துவிடுகின்றன."

விநாயகராமனின் விளக்கம் ஆழ்ந்த பொருளுடன் அசைக்க முடியாத கருத்தும் கொண்டிருந்தது. சாஸ்திரிகளிடம் வியப்பான வியப்பு.

"நல்லது... இந்த கதிர்கள் மனித மனங்களை எப்படி மேம்படுத்துகின்றன அல்லது தாழ்வுபடுத்துகின்றன?"

- முக்கியமான கேள்விக்கு வந்தார் சாஸ்திரிகள்.

"இந்த வீட்டையே உதாரணமாக வைத்துச் சொல்லட்டுமா?"

"தாராளமாக..."

"என்றால் நான் சொல்லச் சொல்லக் கேட்டுக் கொள்ளுங்கள். கிழக்கில் அதிக திறப்பு இருக்கிறது. எனவே புகழுக்கு பங்கமில்லை. அதே சமயம் வடக்கில் இடம் குறைந்து ஈசான்யம் பங்கப்பட்டுள்ளது. எனவே இங்கே ஆன்மீக நெறியை அருளோடு வைத்துக் கொள்ள முடியாது. அடுத்து தெற்கு விரிந்து அதில் ஒரு கிணறும் உள்ளது. இந்த மனையில் வாழ்பவர்களுக்கு துர்மரணம் இதனால் நிச்சயம். மேற்கு கூரையின்றி ஓரளவு பங்கமின்றி உள்ளதால் இந்த மனையின் வாரிசுகள் காலத்தால் நல்ல உயர்ந்த வாழ்க்கை வாழ்வார்கள். ஆனால், நிகழ்காலம் சோதனைகள் மிகுந்ததாக இருக்கும்."

- விநாயகராமனின் விளக்கம் சாஸ்திரிகளை அப்படியே குறுக்கி கட்டிப் போட்டு விட்டது. விநாயகராமன் விடாமல் தொடர்ந்தான்.

"இனிதான் நான் ஒரு முக்கியமான கருத்தினைக் கூறப் போகிறேன்."

என்ன அது என்கிற மாதிரி சாஸ்திரிகள் பார்த்தார். அவர் மனைவி பாலாவும். அவளைப் பார்த்தவன், "கொஞ்சம் தண்ணீர் கொண்டு வர முடியுமா?" என்று கேட்க, அவளும் அதன் நிமித்தம் விலகினாள்.

உடனேயே அந்த இடைவெளியில் சாஸ்திரிகளிடம் தான் கூறவந்ததை கூறத் தொடங்கினான்.

"ஐயா, சாஸ்திரிகளே தாங்கள் இந்த இல்லத்தில் இனியும் இருக்காதீர்கள். வேறு கிருகத்திற்கு மாறிவிடுங்கள்."

"எதனால் அப்படிக் கூறுகிறீர்கள்?"

"இங்கே நீங்கள் வாழ்ந்தால் துர்மரணம் நிச்சயம்..."

- அவன் பதிலில் அதிர்ந்தது அவர் இதயம்!

## இன்று

**வ**ழக்கம்போலவே அழகாக பொழுது புலர்ந்துவிட்டது. கால்களால் மரக்கிளைகளை ஒரு உந்து உந்தித் தள்ளிய படி வானம் ஏறத்தொடங்கிவிட்டன தோடிபுரத்து பட்சி யினங்கள்.

காலைவேளை என்பது பிரம்ம முகூர்த்த வேளை. அந்த வேளையில் உச்சியில் தண்ணீர்பட குளிப்பது மிக விசேஷமானது. உச்சி நாடி என்று ஒன்று உள்ளது. அதில் பச்சை நீர் படும்போது உடம்பின் எல்லா நாடியிடமும் ஒரு துடிப்பு ஏற்படும். துடிப்பின் வேகமும் சீர்படும், உடம்பு ஒரு முறை உதறிவிட்டுக் கொள்ளும். அதிலும் ஓடும் நதியின்மிசை குளிப்பது என்பது உடம்புக்கு அவ்வளவு நல்லது. நதி நீரில் குளிக்கும்போதுதான் ஒருவன் ஒரு முறை குளித்த நீரில் மறு முறை குளிப்பதில்லை.

கடலிலோ, குளத்திலோ குளிக்கும்போதுகூட இந்தத் தன்மை ஏற்படுவது கிடையாது.

அதனால்தான் நதிநீராடல் என்பது மிக புண்ணியச் செயலாக நமது முன்னோர்களால் கூறப்பட்டுள்ளது. வீட்டில் நின்று குளிக்கும்போதுகூட தலையில் பட்ட நீர் உருண்டு உடல் முழுக்க ஓடும். இது மறுமுறை படுவதற்குச் சமம். ஆனால், ஓடும் நீரில் இது சாத்தியமில்லை. அதே சமயம் உடம்பானது காற்றுத் தொடர்பில்லாமல் நீருக்குள் அமிழ்ந்து கிடப்பதும் நதிநீராடலின்போதுதான்... பஞ்சபூதங்களில் வாயு, அக்னி, ஆகாயம், நிலம் ஆகிய தொடர்புகளின் ஆழ அகலங்கள் குறைந்துவிட நீருக்குள் மட்டுமே உடம்பு இருக்கும்போது சுரப்பிகள் உள்ளே சுரக்கும் விதத்தில் நிறைய மாறுபாடுகள் ஏற்படுகின்றன.

எல்லோரது உடம்பிலும் அக்னி இருக்கின்றது. அதன் அளவு மாறுபடுவது உடம்பு நீருக்குள் இருக்கும்போது தான்... இப்படி ஆற்றில் நீராடும்போது ஒரு மனித உடலும் மனமும் சந்திக்கின்ற விஷயங்களுக்கு ஒரு அளவே இல்லை.

இதெல்லாம் உணர்ந்துதானோ என்னவோ, உபாசகர் காலையில் நதியில் நீராடுவதை ஒரு வழக்கமாகவே கொண்டுவிட்டார்.

ஒரு ஊரில் ஓடும் ஒரு நல்ல நதியிருந்து, அதில் நாள் தவறாமல் அதிகாலை நீராடும் வழக்கம் உள்ளவர்கள் உடல் உண்மையில் நல்ல திடத்துடன் இருக்கும். அதுமட்டும் அல்ல - அவர்கள் மனத்தெளிவும்கூட பிறரைக் காட்டிலும் கூடுதலாக இருக்கும்.

இதனால் உபாசகருக்கும் காலமெல்லாம் தோடிபுரத்திலேயே இருந்துவிடலாமா என்றெல்லாம் தோன்றியது. ஆனால்,

*தனது ஊரான சக்திபுரத்தின் ஞாபகம்தான் ஓடும் நீரில் முங்கி எழும்போது தோன்றியது.*

*வறண்டு பாலைவனமாகிவிட்ட தனது ஊர் எங்கே? திரும்பின பக்கமெல்லாம் வளமுள்ளதான இந்த ஊர் எங்கே?*

*மண்ணில்கூட எவ்வளவு வேற்றுமை!*

*அதில்கூட இனபேதம் வறுமை செழிப்பு என்கிற வித்தியாசங்கள்! சிந்தித்தபடியே நீரில் மூழ்கி எழுந்தவர் கரை ஏறும்போது கரைவெளியில் கர்ணத்தைப் பார்த்தார். கணேச னின் அப்பா! அந்த நொடி அவனுக்கு முன்தினம் செய்து கொடுத்த் வாக்குறுதிதான் ஞாபகத்திற்கு வந்தது.*

*அதற்கு அப்பொழுதே வேளை வந்துவிட்டதாகவும் தோன்றியது. கர்ணமும் வாயில் வேலங்குச்சியுடன் காவிரியில் காலை வைத்திருந்தார். வேட்டி ஜிப்பா என்று தெரிந்தவர் ஆற்றில் குளிக்க வந்தது போலவே தோன்றவில்லை. உபாசகரையும் பார்த்தார். பார்த்தபடியே வாய் கொப்பளித்தார்.*

*"என்ன கர்ணம்... குளிக்கலையாக்கும்?"*

*"இல்ல ஸ்வாமி... வயக்காட்டுக்கெல்லாம் போய் ஒரு பார்வை பார்த்துட்டு ஆத்துக்குப் போய் வெந்நீர்ல குளிக்கறது தான் என் வழக்கம்."*

*"அற்புதமா காவேரில தண்ணி போயிண்டிருக்கும்போது இப்படி ஒரு பழக்கமா?"*

*"காவேரி எங்க போயிடப் போறது... நினைச்சா வந்து குளிச்சுக்க வேண்டியதுதான்..."*

*"இல்ல கர்ணம். இது ஒரு விதத்துல அக்ஞானம். ஆறு ஓடற ஒரு ஊர்ல முதல்ல பொறக்கக் குடுத்து வெச்சிருக்கணும். அடுத்து அதுல குளிக்கக் குடுத்து வெச்சிருக்கணும். இருந்தும் நீங்க அலட்சியமா இருக்கேள் இதுகூட பரவால்ல... கையெடுத்து சேவிக்க வேண்டிய காவேரி தண்ணிய பல் தேய்க்கவும் வாய்கழுவவும் பயன்படுத்தறது மகாபாவம்."*

*உபாசகர் மிக சீரியஸாக சொல்லவும், கர்ணம் முகம் மாறிவிட்டது.*

*"என்ன சொல்றேள் ஸ்வாமி நீங்க... ஜலம்கறதே நம்ம சௌகர்யத்துக்குத்தானே... நீர் சொல்றத பார்த்தா ஜலத்துல காலே படக்கூடாதே..."*

"தப்பா புரிஞ்சுண்டுட்டேள்... ஆறுங்கறது வயலுக்கெல்லாம் சோறு. இதை நீர் அன்னம்னு சொல்வா. நமக்கும் இது தாகத்துக்கு அன்னம்தானே? இதுல காலோ கையோ படணும்னா முதல்ல மானசீகமா நமஸ்காரம் பண்ணிண்டு தலைல தண்ணிய தெளிக்கணும். அப்புறம்தான் ஆத்துல இறங்கணும். இதை செய்யத் தவறினா அது தோஷம். தோஷம் அதிகரிச்சா வறட்சி வரும். வறட்சி வந்தா, ஜலத்துக்காக வருணஜெபம்லாம் பண்ற சூழ்நிலை வரும்."

- உபாசகர் ஆற்றுக்கும் அதன் நீருக்கும் பௌராணிகமாய் உள்ள சக்தி பேசப் பேச கர்ணத்திடம் வியப்பு.

"யாரெல்லாம் ஜலத்தை மதிக்காம அதைத் தவறா பயன் படுத்தி தோஷத்துக்குள்ளாகறாளோ அவாளுக்குத்தான் ஜலதோஷமே வரும். ஜலதோஷம்கற வார்த்தையிலேயே தோஷம் இருக்கு பாருங்கோ..."

"போறும் ஸ்வாமி... இனி இந்த காவேரி ஆத்தை சேவிக்காம கால் வைக்க மாட்டேன். போறுமா..." என்றபடி கரை ஏறினார் கர்ணம்.

அவர் தலை மறையவுமே அவரது மச்சினன் - கணேசனின் மாமன் தலை தெரிந்தது.

அவர் குளிக்கத்தான் வந்து கொண்டிருந்தார். கணேசன் வரையில் துரத்தி அடிக்கப்பட வேண்டிய நபர். பளிச்சென்று அதுதான் உபாசகர் ஞாபகத்துக்கு வந்தது.

அவரோ உபாசகரை அறியாமல் ஆற்றில் திபுதிபுவென்று இறங்கி பல் விளக்கத் தொடங்கினார்.

ஆற்றில் தண்ணீர் ஓடிக் கொண்டிருக்கும் வரை அதன் மதிப்பு தெரிவதேயில்லை என்பதற்கு சான்றுபோல இருந்தார்.

உபாசகரும் அவரைத் தன் கவனத்துக்குக் கொண்டுவர விரும்பியவராகக் கைகளைக் கூப்பி வானத்தில் சூரியனைப் பார்த்தார். பின்னர் உரக்க ஒரு ஸ்லோகத்தைச் சொன்னார் அவர் கவனமும் திரும்பியது.

"ஸ்வாமின் இந்த ஊராக்கும்?"

"இதே ஊர்தான்... நீங்க எந்த ஊராக்கும்?"

"அடியேன் மெட்ராஸ்ல மைலாப்பூர் இங்க கர்ணம் கைலாசநாதன் - அடியேன் தங்கை ஆத்துக்காரர்"

“இப்பத்தான் வந்துட்டு போறார்...”

“ஆமாமாம்... வயல்வரப்பு பக்கம் போகணும்னார். உமக்கு நல்ல பழக்கமோ...?”

“நன்னா... ஜோதிடரீதியா ஏதாவது தெரியணும்னா என்னைப் பார்க்க வருவார்...”

“அப்படியா... உங்களுக்கு ஜோசியம் தெரியுமாக்கும்?”

“நான் சக்தி உபாசகன். பிரசன்னத்துலயே நடந்தது, நடக்கப்போது, நடந்துண்டு இருக்கறதுன்னு எல்லாத்தையும் சொல்லிடுவேன்.”

“பலே... நீர்தான் அந்த உபாசகரா...? என் மாப்ளை நிறையவே உங்களைப் பத்தி சொல்லியிருக்கார்...”

“சந்தோஷம். உங்களுக்குகூட ஏதாவது தெரியணும்னா கேட்கலாம்.”

“ஆஹா... அது என் பாக்கியம்னா... எனக்கு இப்ப தேவை யெல்லாம் என் பொண்ணுக்கு நல்லபடியா கல்யாணம் நடக்க ணும். என் தங்கை பிள்ளைக்குத்தான் அவளை கொடுக்கப் போறேன். இந்த கல்யாணம் நல்லபடியா நடந்து அவா ரெண்டு பேரும் நன்னா இருந்தா போறும். இருப்பாதானே?”

- அந்த மனிதர் எது உபாசகருக்குத் தேவையோ அதைப் பற்றியே பேசினார் உபாசகரும் கிடைத்த சந்தர்ப்பத்தை விடுவதாக இல்லை.

“உம்ம பொண்ணோட நட்சத்திரம்?” - கேட்டார்.

“கேட்டை...”

“கணேசன் நட்சத்திரம்...?”

“அதுவும் கேட்டைதான்.”

“அடடா... சக நட்சத்திரம் கூடாதே...

“அப்படியா?”

“அதுமட்டுமில்ல... கணேசனுக்கு ஏழுல ராகு இருக்கற படியால உம்ம பொண்ணுக்கு மாங்கல்ய தோஷம் ஏற்படறது. ஏழுல ராகு அவ்வளவு நல்லதில்லையே ஸ்வாமி...”

“என்ன உபாசகர் ஸ்வாமி... குண்டைத் தூக்கிப் போடறீர்! கணேசனுக்குத்தான் என் பொண்ணுன்னு சின்ன வயசிலயே முடிவு பண்ணதாச்சே ஸ்வாமி...”

"அது சரி- கல்யாணம்கறது நீங்களும் நானும் முடிவு பண்ற விஷயமாக்கும்? அது தேவலிபி ஸ்வாமி. யாரால மாத்த முடியும் அதை?"

"ஜாதகமே பார்க்காம கல்யாணம் பண்றாளே, அவாள் லாம் என்னாவாம்?"

"இது என்ன கேள்வி? கண்ணாடிங்கறது தெரிஞ்சு போட்டாலும் உடையும். தெரியாம போட்டாலும் உடையும். அந்த மாதிரிதான் இதுவும். பொருத்தமில்லாத ஜாதகம்னா சண்டை சச்சரவுதான்."

"ஏதாவது பரிகாரம் கிரிகாரம் பண்ணினா பிரச்சினை சரியாகாதா?"

"அவ்வளவு சிரமம் எதுக்கு... கேட்டை நட்சத்திரப் பொண்களுக்கு காலை அமுக்கி விடறேங்கற மாப்பிள்ளை களே மாட்டுவா. எப்பவுமே தேள் ராசிக்காரா புருஷாளை வசியம் பண்ணி முந்தானைல முடிஞ்சிண்டுடுவா. ஆனா, இவாளோ சகநட்சத்திரத்துல பண்ணிண்டா பருப்பு வேகாது ஸ்வாமி..."

- உபாசகர் நன்றாகவே கலக்கிவிட்டார். அதேசமயம் அது உண்மையும்கூட. அந்த மனிதர் முகத்தில் பூச்சி பறக்க ஆரம் பித்தது.

"என் ஆத்துக்காரி அவ அண்ணா பையனைத்தான் என் பொண்ணு கல்யாணம் பண்ணிக்கணும்னு ஆசைப்பட்டா. நான்தான் தோடிபுரத்துக்கு என் பொண்ணு வாழவந்தா ரொம்ப நன்னா இருப்பான்னு நினைச்சேன் ஆனா, நீங்க இப்படிச் சொல்றேளே..."

"நான் சொல்லலை... ஜாதகம் அப்படிச் சொல்றது. பேசாம உங்க ஆத்துக்காரி விருப்பப்படி உங்க மச்சினன் பிள்ளைக்கே கொடுங்க. அதுதான் சரி..."

- உபாசகர் சொன்ன நொடி அவரது கருத்துக்கு ஆதரவாக மணி சப்தம் ஒலித்தது.

தோடீஸ்வரர் கோவில் மணிசப்தம்!

"பார்த்தேளா... சகுனங்கள்லாம்கூட அந்தப் பக்கம்தான் இருக்கு..." - உபாசகர் கூர் தீட்டினார். அந்த மனிதர் முகத்திலும் அதுதான் சரியான வழி என்கிற முடிவு.

"ரொம்ப நல்லது ஸ்வாமி... ஏதோ உங்களைச் சந்திக்க முடிஞ்சது; புது விஷயங்களையும் தெரிஞ்சுக்க முடிஞ்சது.

நான் குளிச்சுட்டு இன்னிக்கே ஊருக்குக் கிளம்பறேன்" என்றபடியே ஓடும் தண்ணீருக்குள் இடுப்பளவு ஆழத்தில் போய் நின்றார். அப்படியே ஒரு முங்கு போட்டார். அதே சமயம் கணேசனும் ஆற்றில் குளிக்க வந்து கொண்டிருந்தான். ஆற்றை விட்டு கிளம்பிய உபாசகர்' அவனைப் பார்த்து சிரித்தபடியே முன்சென்றார்.

"ஸ்வாமி... என்ன சிரிப்பு இது?"

"வெற்றிச் சிரிப்பு கணேசா!"

"வெற்றிச் சிரிப்பா... புரியலை எனக்கு?"

"உன் மாமா ஆத்துலதான் குளிச்சிண்டுருக்கார். இன் னிக்கே அந்த வசந்தியோட ஊருக்கு மூட்டை கட்டிடுவார். நீயே போய் குறுக்க விழுந்து தடுத்தாலும் அவரைத் தடுக்க முடியாது."

"நிஜமாவா....?" - பரவசமானான் கணேசன்.

"பாக்கத்தானே போறே...!"

"என்ன பண்ணேள்? தப்பா எதுவும் செய்துடலையே?"

"இந்த உபாசகன் தப்பா மட்டும் எதையும் செய்ய மாட்டான். உன் ஜாதகமே எனக்கு துணை செய்யும்போது யாரால என்ன பண்ணமுடியும்?"

"என் ஜாதகம் உமக்குத் தெரியுமா?"

"முகத்தைப் பார்த்தே ஒரு உபாசகன் ஒருத்தரோட ஜாதகத்தை சொல்லிவிடுவான் அப்படிச் சொன்னாதான் அவன் நல்ல உபாசகன்."

"அப்பாடா... ஒரு பிரச்சினை தீர்ந்தது. ரொம்ப நன்றி ஸ்வாமி உங்களுக்கு."

"அவசரப்பட்டு நன்றி சொல்லிடாதே... முக்கியமான விஷயமே இனிமேதான் இருக்கு..."

உபாசகர் அந்த ஏட்டுக்கட்டை அவன் ஞாபகத்திற்குக் கொண்டு வந்தார். அவன் முகமும் க்ஷணத்தில் மாறியது.

அம்மட்டில் அந்த உபாசகர் என்ன செய்வார்; எதைச் செய்வார் என்பதை அவனால் யூகிக்க முடியவில்லை. அவரையே வெறித்தான்.

உபாசகர் சிரித்துக் கொண்டே சொன்னார்.

"இன்னிக்கு சரியா 11 மணிக்கு உங்காத்துக்கு ஒரு தந்தி வரும். அது உன் அப்பாவையும் அம்மாவையும் தற்காலிகமா

இந்த ஊரை விட்டுத் துரத்தும். நீ எங்கேயும் போய்டாமே ஆத்துல இரு. சரியா உச்சி வேளைக்கு நான் உங்காத்துக்கு வருவேன். நான் வந்த அரை மணி நேரத்துல அந்த ஏடு என் கைக்கு வரப்போறத நீ பார்க்கப் போறே... ஒரு காலிப் பானையை மட்டும் தயாரா வெச்சுக்கோ."

- உபாசகர் சொன்னதைக் கேட்டு கோவில் மாடு போல தலையசைத்தபடியே ஆறு நோக்கி நடந்தான் கணேசன் உபாசகர் முகத்தில் வெற்றிப் புன்னகை.

**ச**ரியாக பத்து மணி!

சாப்பிடுவதற்காக இலையைப் போட்டுவிட்டாள் அன்ன பூரணி. மாமாவும் மாமியும் சாப்பிடவும் உட்கார்ந்துவிட்டனர். வசந்தியையும் இழுத்துப் பிடித்து உட்கார்த்தி வைத்தார் மாமா.

அன்னபூரணி முகத்தில்தான் வாட்டம்.

"ஆனாலும் நீ மோசம்ணா... இப்பவே கிளம்பறேன்னு சொல்றியே... அதுகூடப் பரவாயில்ல. வசந்திக்கும் கணேச னுக்கும் ஜாதகப்பொருத்தம் இல்லேன்னு சொல்றபாரு... அதைத்தான் என்னால ஜீரணிக்க முடியலை..."

- அன்னபூரணி அன்னம் பரிமாறிக் கொண்டே மூக்கைச் சிந்தினாள். வசந்தியின் கண்கள் கலங்கியிருந்தன. அவளைப் பார்க்க கணேசனுக்கே கலக்கமாகத்தான் இருந்தது.

அவன் பார்த்துக் கொண்டேயிருக்க, அவர்கள் சாப்பிட்டு முடித்தனர். அன்னபூரணியும் குடும்ப வழக்கப்படி வெற்றிலை பாக்கில் தன் மன்னிக்கு ஒரு புடவை ரவிக்கையும், அண்ணாவுக்கு வேட்டி துண்டும், வசந்திக்கு ஒரு பவுன் தங்கக் காசும் வைத்துக் கொடுத்தாள்.

"சீக்கிரம்... 11 மணிக்கு ஒரு பஸ் இருக்காம். அதைப் பிடிச்சா ராத்திரி இருட்றதுக்குள்ற ஆத்துக்கு போய் சேரலாம். இல்லன்னா சிரமம்தான்..." - என்று வெற்றிலை பாக்கை வாங்கிப் போட்டுக் கொண்டு மூவரும் நடக்கத் தொடங்கினர்.

கர்ணமும் எதுவும் சொல்லவில்லை. உபாசகர் சொல்லி யிருந்தால் அர்த்தமிருக்கும் என்ற நம்பிக்கையில் விட்டுவிட்டார்.

அவர்களை அழைத்துச் செல்ல தோடிபுரத்தில் உள்ள ஒரே ஒரு குதிரைவண்டியும் தயாராக இருந்தது. ஏறி அமரவும்

“ஹை... ஹை” என்ற சப்தங்களுடன் அது புறப்பட்டும் போனது.

பின்னாலேயே தந்தியும் வந்தது.

பதட்டத்துடன் வாங்கிப் பார்த்தார்.

மும்பையில் உள்ள கர்ணத்தின் மாமாவுக்கு ஹார்ட் அட்டாக் என்கிற செய்தி.

“ஐயோடி அன்னம்... என் மாமாவுக்கு ஹார்ட் அட்டாக்காம். உயிர் பொழைக்கறது கஷ்டமாம். கிளம்பி வரச்சொல்லி தந்தி வந்திருக்கு பார்...” என்று காட்டினார்.

அன்னமும் பதறினாள். அடுத்த அரை மணியில் அவர் களும் புறப்பட்டு விட்டனர். வீட்டில் யாரும் இல்லை. கணேசன் மட்டும்தான்! அவனுக்கு பக்பக் என்று இருந்தது. அடுத்து உபாசகர் வந்தால் என்ன ஆகுமோ ஏது ஆகுமோ என்றெல்லாம் மனதும் படபடத்தது.

மெல்ல ஸ்வாமி சந்நிதி உள்ள பூஜை அறைக்கு சென்று பார்த்தான் அந்த ஏட்டுக்கட்டு பச்சைத் துணி ஒன்றால் சுற்றப்பட்டு காட்சியளித்தது. அது மட்டும் தனியாக இருந்தது. காவலுக்கான சர்ப்பத்தைக் காணவில்லை.

எப்பொழுதும் அதை தீண்டப்போகும்போது மட்டும் அது எங்கிருந்தோ வந்துவிடுவதைப் பார்த்திருக்கிறான் இப்பொழுதும் அப்படி ஏதும் ஆகுமோ என்றபடியே கையை நீட்டி அந்த கட்டை எடுக்கப்போனான். கட்டின்மேல் அவன் கைபட்ட நொடி பொத்தென்று ஒரு வளையம்போல அந்த சர்ப்பம் விழ அவனும் அப்படியே உறைந்த நிலையில் திரும்ப உபாசகரும் கச்சிதமாக உள்ளே நுழைந்து கொண் டிருந்தார்.

கணேசனின் வீட்டுக்குள் நுழைந்து கொண்டிருந்த உபாசகர் தன் கண் எதிரே கணேசன் பாம்பும் கையுமாக நிற்பதைப் பார்த்து அதிர, அவனும் பயத்தில் கைகளை உதற, பாம்பும் சொத்தென்று கீழே விழுந்து அப்படியே சீற்றம் குறையாமல் நிமிர்ந்து எழுந்தது.

உபாசகரும் வீட்டுக்குள் நுழைந்து கணேசன் எதிரில்தான் நின்றார் அவனும் வேகமாக வந்து அவர் அருகே நின்று கொண்டான்.

"என்ன கணேசா... என்ன நடக்கறது இங்கே?"

"ஒண்ணுமில்ல ஸ்வாமி, நீங்க வரதுக்கு முந்தி அந்த ஏட்டுக்கட்டை எடுத்துப் பார்ப்போமேன்னு தைரியத்தை வரவழைச்சுண்டு எடுக்கப் போனேன். கரெக்டா ஏட்டுக்கட்டு மேல கைபடவும் பாம்பு வந்துடுத்து..."

"சரி... நீ ஒண்ணும் பயப்படாதே. இப்பவே இதை வசப்படுத்த உனக்கு வழி சொல்லித்தரேன். அதுக்கு முந்தி சீக்கிரமே ஓடிப்போய் ஒரு மண் பானையையும் ஒரு வெள்ளைத் துணியையும் கொண்டுண்டு வா."

- உபாசகர் அவனை துரிதப்படுத்தினார். அந்த சர்ப்பமோ சீற்றமுடன் பார்த்தபடியே இருந்தது. உபாசகர் முகத்திலும் 'உன்னை இந்த முறை பிடிக்காமல் விடப் போவதில்லை' என்கிற மாதிரி ஒரு கூர்மை.

கணேசனும் ஓடிச்சென்று ஒரு காலி மண்பானையையும் ஒரு வெள்ளைத் துணியையும் கொண்டு வந்தான். நடுக்கூடத்தில் அதை வாங்கி வைத்த உபாசகர், அதன் அருகே ஒரு மரப்பலகையைக் கொண்டு வரச் சொல்லிப் போட்டு அதில் அமர்ந்து கொண்டார்.

கணேசன் கவனிக்கத் தொடங்கினான்.

அவன் இப்படிப்பட்ட காட்சிகளை எல்லாம் அவனது வாழ்நாளில் கதைகளில் கூட படித்திராதவன்.

நாகபந்தனம் என்பது ஒரு அபூர்வ வித்தை.

மந்திரமாகிய சப்தத்தால் ஓரறிவுடைய ஒரு ஜீவனை வசப்படுத்தும் வித்தை.

சப்தம் என்றாலே ஏழு!

ஆறுக்கு அடுத்து வருவது ஏழு.

அதாவது ஆறாவது அறிவு உடையவர்களாலேயே ஏழாவதாகிய சப்தத்தை அடைய முடியும். அதனால்தான் உயிர்களில் மனிதன் மட்டும் பேசுகிறான். ஆறறிவு மனிதன் ஏழாகிய சப்தத்தை எட்டுவதால்தான் எட்டாகிறான். அடுத்த அவனது நிலைப்பாடு ஒன்பதாகிய இறைநிலை. இறை நிலைக்குத்தான் ஆண்-பெண் பேதமில்லை. அது ஒன்றே இரண்டும் கடந்த நிலை. இரண்டும் கலந்த நிலையும்கூட.

இதை உணர்த்தவே அந்த இறைவன் அர்த்தநாரியாக காட்சி தருகிறான்.

இப்படி இறைநிலை அடைய வழிகாட்டும் சப்தமாகிய ஏழு எப்படி ஓருயிராகிய நாகத்தை வசப்படுத்த முடியும் என்பதில்தான் சூட்சுமம் இருக்கிறது. சப்தத்திற்கு மூன்று நிலைப்பாடு... அதன் சமன நிலைதான் நாம் பேசும் பேச்சாகிய மொழி. உச்சநிலை என்பது இசையாகிய பாட்டு. நீச்ச நிலை என்பது நம்மால் வார்த்தைப்படுத்த முடியாத சப்தங்கள். ஒரு பொருள் கீழே விழுந்து சப்திக்கிறது. அதை அப்படியே நம்மால் வார்த்தைப் படுத்த முடியாது. நம் உணர்வு நிலைக்கு ஏற்ப 'பொத்'தென்று விழுந்தது. 'டமார்' என்று சப்தம் கேட்டது என்றுதான் குறிப்பிடுவோம். இப்படிப்பட்ட சப்தங்களே மிருகங்களைத் தீண்டி அவைகளைக் கட்டுப்படுத்தக் கூடியவை. வெடி சப்தம் யானையையே அச்சப்பட வைக்கும். பாம்புகூட நாகபந்தனத்தின்போது நாகபந்தனத்தின் மந்திர சப்தத்தால் ஒரு குறுகுறுப்புக்கு உள்ளாகிறது. அதை நீக்கிக் கொள்ள அது அந்த குறுகுறுப்பைத் தரும் இடத்தைவிட்டே வெளியேற எல்லா முயற்சிகளும் செய்யும்.

அப்பொழுதுதான் அதன் எதிரில் பானை ஒன்றை வைத்து மடக்கிப் பிடிப்பது போன்றவை நடைபெறுகிறது.

இது ஒரு அபூர்வமான வித்தை. குருமார்கள் மூலமாக காதில் உபதேசிக்கப்படும் மந்திரம் இது. இதை வரிவடிவில் எழுத்தாக எழுதி வைக்கக்கூடாது என்பார்கள்.

அதனால் இது எப்பொழுதும் இதை அறிந்தவர் மனதிலேயே வாசம் செய்யும். இதை அறிந்தவர் வழிவழியாக தனக்குப்பின் அடுத்தவர்... அவருக்குப் பின் அவருக்கு அடுத்தவர் என்று கூறிக்கொண்டே செல்வர் இப்படி எவ்வளவோ மந்திரங்கள் எழுதி வைக்கப்படாமல் மனதுக்குள்ளேயே பேழைக்குள் வைக்கப்பட்ட ரத்தினங்களாகவே இருந்து கொண்டிருக்கின்றன.

அப்படி ஒரு மந்திரம்தான் நாகபந்தனமும்!

அதற்காக உபாசகர் தயாரானபோது சற்றும் எதிர்பாராத விதமாக வாயில்புறத்தில் ஒரு குதிரைவண்டியின் தேங்கல். ஹை... ஹை... என்கிற சப்தம். திரும்பிப் பார்த்தார் உபாசகர் வீட்டைவிட்டு பம்பாய்க்குக் கிளம்பிவிட்ட கர்ணமும் அவர்

மனைவி அன்னபூரணியும் ஊருக்குப் போகாமல் திரும்பி வந்து விட்டிருந்தனர். கணேசன் முகத்தில் பயங்கர அதிர்ச்சி.

கொண்டுவந்த பானையை வேகமாக உள்ளே கொண்டு சென்று வைத்தான். உபாசகரும் வேகமாக சமாளிக்க ஆரம்பித்தார். சர்ப்பம்கூட தான் வெற்றி பெற்றுவிட்டது போன்ற ஒரு மமதையில் மறைந்து விட்டிருந்தது.

உள்ளே நுழைந்து கொண்டிருந்த கர்ணம் முகத்தில் ஒரே ஆச்சரியம்.

"அடடே உபாசகர் ஸ்வாமியா... எங்க இவ்வளவு தூரம்?"

"அது... அது... உங்களைப் பார்க்கத்தான் வந்தேன். நீங்க ஊருக்கு கிளம்பிப் போயிருக்கறதா கணேசனும் சொன்னான். ஆனா, நீங்க போகல போல இருக்கே...?"

"அதை ஏன் கேக்கறேள்... ஊர்ல இருந்து தந்தி வந்துதான் கிளம்பினோம்... ஆனா, பஸ் ஸ்டாண்ட் வரை போனபிறகுதான் தெரிஞ்சது, ரயில்வேல இன்னியில இருந்து ஸ்டிரைக்காமே...? அப்புறம் எப்படிப் போகறது?"

கர்ணத்தின் ஆதங்கம் உபாசகருக்கு காரணத்தை புரியவைத்துவிட்டது. பாம்பும் தப்பிவிட்டது. கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை. உபாசகர் முகத்தில் ஏமாற்றம் வழிய ஆரம்பித்தது. அன்னபூரணி ஒரு சிரிப்பு சிரித்துவிட்டு உள்ளே போய் விட்டாள்.

கர்ணமோ உபாசகரை கெட்டியாக பிடித்துக் கொள்ளத் தொடங்கினார்.

"உபாசகர் ஸ்வாமி! உங்களை ஒண்ணு கேட்கணும். நல்லவேளை நீங்க இங்கே இருக்கேள். பம்பாய்ல இருக்கற என் மாமாவுக்கு திடீர்னு ஹார்ட் அட்டாக்காம். போய்ச் சேர்ந்துடுவார்ங்கற மாதிரி தந்தி வந்துருக்கு. என் மாமா ஒரு உத்தமமான பிராமணர். என்னை வளர்த்து ஆளாக்கினவர். என் அப்பாவைவிட நான் அவரை ஒருபடி கூட மதிக்கறேன். அவருக்கு ஏதாவது ஆயிடுமோன்னு மனசு பயப்படறது..." கர்ணம் புலம்ப ஆரம்பித்தார்.

"கவலைப்படாதேள்... எதுவும் ஆகாது. அந்த அம்பாள் கிருபைல அவர் குணமாகிடுவார் அவருக்கு இன்னும் பல வருஷம் இந்த பூமிவாசம் இருக்கறதா எனக்குள்ற ஒரு குரல்

சொல்றது..." என்றார் உபாசகரும். கர்ணத்திடம் சற்றே நிம்மதிப் பெருமூச்சு. கணேசனோ மன்றாடியபடி இருந்தான்.

"ஆமா நீங்க எங்க வந்தேள்? என்னால உங்களுக்கு ஏதானா ஆகணுமா?" - கர்ணம் விஷயத்திற்கு வந்தார்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லை. சும்மா பார்த்துட்டுப் போக வந்தேன். அவ்வளவுதான்."

"அவ்வளவுதானாக்கும்... அப்ப இன்னிக்கு எங்காத்துல சாப்பிட்லாமோல்லியோ?"

"ஆஹா... தாராளமா!" உபாசகர் ஏமாற்றத்தை உற்சாகம்ாக மாற்றிக் கொள்ளப் பார்த்தார். கணேசன் நகத்தைக் கடிக்க ஆரம்பித்து விட்டான்.

**கோ**விலுக்கு புறப்பட்டுக் கொண்டிருந்தார் பட்டர். அடுப்பில் சாம்பார் ஒருபுறம் கொதித்தபடி இருக்க, இன்னொரு புறம் வாணலியில் துவையலுக்கான பருப்பு வாசமுடன் வறுபட்டுக் கொண்டிருந்தது. மைதிலிதான் வறுத்துக் கொண்டிருந்தாள். வாசம் வீடுமுழுக்க வளைய வந்தபடி இருந்தது. ஷேவிங் செய்து கொண்டிருந்த சங்கரன்கூட அந்த வாசனையை மூக்கிற்குள் இழுத்து ஒரு ஆழ்ந்த பெருமூச்சை வெளியே விட்டான். காயத்ரி ஏதோ நோட்ஸ் எழுதியபடி இருந்தாள். பட்டர் அவளை ஒரு பார்வை பார்த்துவிட்டு சங்கரனிடம் வந்தார். அவனும் அவரைப் பார்த்தான்.

"இந்த மாதிரி ஆத்துக்குள்ற சவரம் பண்றது மகாதப்புன்னு எத்தனை தடவை சொல்லியிருக்கேன்...?"

சங்கரன் சிரித்தான்.

"எதுக்கு இப்ப சிரிக்கறே?"

"பின்ன என்னப்பா... என் முகத்துல இருக்கற முடியை நான் வழிச்சு எறியறத ஒரு தப்புன்னு சொல்றேளே..."

"தப்புதாண்டா இதுக்குன்னுதான் ஒருத்தன் இருக்கானோல்லியோ...?"

"யாரு... நாவிதனைச் சொல்றேளா நீங்க?"

"பின்ன?"

"ஒரு ஷேவிங்குக்காக நான் பார்பர் ஷாப் போனா அவ்வளவுதான். ஒரு ஷேவிங்குக்கு எவ்வளவு தெரியுமா?"

"எவ்வளவா இருந்தா என்ன? அது அவன் வேலை. அதுக்கு உண்டான கூலியை நாம கொடுத்தாதானே அவன் பிழைப்பு நடக்கும்?"

"அது அந்தக் காலம்ப்பா... நீங்க சொல்றது வர்ணாஸ்ரம முறை. இன்னிக்கு காலம் மாறிப் போச்சு. மக்கள் தொகையும் கூடிடுத்து. உங்க எண்ணப்படி இந்த ஊர்ல இருக்கிற எல்லாரும் ஷேவ் பண்ணிக்க பார்பர் ஷாப்புக்கே போறான்னு வெச்சுப்போமே... இன்னிக்கு போனா நாளைக்குத் தான் ஷேவ் பண்ணிக்க முடியும். அடுத்த ஷேவிங் பண்ணவும் அப்படியே லைன்ல நின்னுடவேண்டியதுதான்."

"அதுக்காக நம்ம தர்மத்தை மறந்து நடந்துக்கறது சரியா?"

"தப்பா பேசறேள், நீங்க. எப்பவும் தர்மமும், நியாயமும் அந்தந்த காலம் சார்ந்ததாதான் இருக்கும்."

"எனக்கே உபதேசம் பண்றியா நீ?"

"வேண்டாம்ப்பா... நீங்க 'எனக்கே'ன்னு சொல்ற தொனியைப் பார்த்தா உங்களுக்குத் தெரியாத விஷயமே இந்த உலகத்துல இல்லைங்கற மாதிரி இருக்கு..."

"போறுண்டா. பதிலுக்கு பதில், பதிலுக்கு பதில்னு பேசிண்டே போறியே. இன்னிக்கு சவரம் பண்ணிக்கற மாதிரி தான் நாளைக்கு இன்னொரு காரியம் பண்ணுவே. மொத்தத்துல நீ நம்ம ஆசாரத்தை விட்டே விலகிப் போய்டுவியோன்னு எனக்கு ஒரே பயமா இருக்கு தெரியுமோ?"

பட்டர் அதீதமாக வருந்திய சமயம், மைதிலி மெல்ல அவர்கள் எதிரில் வெளிப்பட்டாள். அவளைப் பார்க்கவும் பேச்சு திசை திரும்பியது.

"ஹும். உனக்கொரு நல்ல வழிய என்னால காட்ட முடியலியே..." பட்டரிடம் பெருமூச்சு பீறிட்டது.

"ஏம்ப்பா நீங்க வேற... மைதிலி பிரமாதமா வாழப்போறா. அவளைக் கல்யாணம் பண்ணிக்கறவன் ரொம்ப குடுத்து வெச்சிருக்கணும்ப்பா நீங்க வேணா பாருங்கோ அவ கல்யாணம் ஜாம்ஜாம்னு நடக்கப்போறதை..."

- சங்கரன் சமாளித்தான். நம்பிக்கையும் அளித்தான்.

"எதை வெச்சுடா சொல்றே... நன்னா வாய் பேசிண்டு இருந்தாலே அதைக் கொடு... இதைக் கொடுங்கறா... இதுல இவ

ஊமை வேற. உனக்கும் ஒரு வேலை அமையலை. என்ன பண்ணப் போறே?"

"கவலைப்படாதீங்கோப்பா நானும் சாமிநாதனும் மும்முரமா வேலை தேடிண்டு இருக்கோம். குறிப்பா அந்த சிங்கப்பூர் வேலை மட்டும் கிடைச்சுட்டா சம்பளத்துக்கு ஒரு குறைச்சலும் இருக்காது."

- சங்கரன் சிங்கப்பூர் என்று சொன்ன நொடி பட்டருக்கு தலையில் பொளேர் என்று இடி விழுந்த மாதிரி ஒரு உணர்ச்சி.

"என்னப்பா...?"

"என்ன சொன்னே... சிங்கப்பூர்ல வேலையா?"

"ஆமாம்ப்பா... அங்க போனாதானே ஆயிரமாயிரமா சம்பாதிக்க முடியும்?"

"அப்ப நீ நம்ம கோவிலைப் பாத்துக்கப் போறது இல்லையா?"

"என்னப்பா நீங்க... இங்க கோவிலைப் பாத்துண்டா என்னப்பா கிடைக்கும்? அந்த பதிமூணு மூட்டை நெல்லும் மாசம் ஆயிரம் ரூபா சம்பளமும்தானே?"

- சங்கரன் கேள்விக்கும் அவரால் பதில் கூற முடியவில்லை. அதே சமயம் அவன் சிங்கப்பூர் போகப்போவதாகக் கூறியதிலும் ஒப்புதல் இல்லாதவர் போல் மனம் குமைந்தவராக மெல்ல ஆலயத்திற்கு கிளம்பினார்.

பார்த்துக் கொண்டேயிருந்த மைதிலி முகத்தில் மட்டும் ஒரு மர்மப்புன்னகை. காயத்ரியோ மகிழ்ச்சியின் உச்சிக்கே போக ஆரம்பித்திருந்தாள்.

"அண்ணா நிஜமாவா சொல்றே... நீ சிங்கப்பூர் போகப் போறியா?"

"சரிதான்... உனக்கும் என்மேல சந்தேகம் வந்துடுத்தா காயத்ரி...?"

"ஐயோ! இல்லண்ணா. நீ மட்டும் சிங்கப்பூர் போனா என்னைவிட சந்தோஷப் படறவா யாரும் இருக்க முடியாது. என் அண்ணன் சிங்கப்பூர்ல இருக்கான்னாதாண்ணா எனக்குப் பெருமை. இந்த கோவில் மணி ஆட்டி வேலையெல்லாம் அப்பாவோட போகட்டும்..."

காயத்ரி தனது ஆசையை கோடிட்டுக் காட்டியத்தில் நிறைய சுயநலமும் ஒளிந்து கொண்டிருந்தது. கணேசனைக்

காதலிக்கும் அவளுக்கு கணேசனின் குடும்ப அந்தஸ்து எத்தனை பெரியது என்று நன்றாகத் தெரியும். அதற்கு ஈடு கொடுக்க இப்படி சிங்கப்பூர், மலேசியா என்றால்தானே முடியும்.

ஆனால், கையில் ஒரு கரண்டியுடன் கொஞ்சம் ரசப்பொடி கேட்க நுழைந்திருந்த பக்கத்து வீட்டு கோமதிப் பாட்டியின் கருத்து வேறு மாதிரி இருந்தது.

"அடியே காயத்ரி... என்னடி இது? நீயும் உன் அண்ணனை சிங்கப்பூருக்கும் அங்கயும் இங்கயும் போகச் சொல்லிண்டு...

கூரை ஏறி கோழி பிடிக்க முடியாதவன் வானம்ஏறி வைகுண்டம் போக ஆசைப்படற மாதிரிதாண்டி சங்கரன் சிங்கப்பூர் போக ஆசைப்படறதும்."

கோமதிப் பாட்டி ஒரு வாரு வாரினாள் சங்கரனுக்கே என்னவோ போல் ஆகிவிட்டது. ஷேவ் செய்து முடித்த கையோடு மொழு மொழு கன்னத்தைத் தடவியவனாக, "பாட்டி! என்ன சொன்னேள்... நான் கூரை ஏறி கோழி பிடிக்க முடியாதவனா?" என்றான் கோபமாக.

"அட, நீ ஒண்ணு... நான் சும்மா ஒரு சொலவடையை உவமானமா சொன்னேன். அதே சமயம் நீ சிங்கப்பூர் போய் வேலை பார்க்கப் போறேன்னு சொல்றது என் வரைல சரியும் கிடையாது.

நம்ம தோடிபுரம் கோவில்ல அந்த ஈஸ்வரனுக்கு கைங்கர்யம் பண்ற வாய்ப்பு எத்தனை பேருக்கு கிடைக்கும்னு யோசிச்சுப் பார்..."

"சரிதான்... நான் காலத்துக்கும் இங்க மணியாட்டிண்டு இருக்கணும்கறதுதான் உங்க ஆசையுமா?"

"ஆமாண்டா சங்கரா... இந்த மண்ணைவிட்டு மட்டும் நீ போயிடாதே. பணத்தை எப்பவேணா சம்பாதிச்சுக்கலாம். ஆனா, தோடீஸ்வரனுக்கு கைங்கர்யம் பண்ற பாக்கியம் மட்டும் விட்டா கிடைக்காது."

"என்ன பாட்டி நீங்க... கைங்கர்யம் கால்கர்யம்னு இவாளுக்கெல்லாம் நான் கல்யாணம் பண்ணி வைக்க வேண்டாமா? காசு இல்லாம யார் கல்யாணம் பண்ணிக்கறா?"

"நீ அவனை நம்புடா... நிச்சயம் மைதிலிக்கு ஒருத்தன் தானா தேடிவருவான். அப்படி வர்றவன்தான் வாழவும் வைப்பான். திரும்பவும் சொல்றேன். சிங்கப்பூரும் வேண்டாம்.

புலியப்பூரும் வேண்டாம். காசு பணத்தை பெருசா நினைக்காதே. சுவாமிய பெருசா நினை. அவர் எல்லாத்தையும் பார்த்துப்பார்."

"என்ன பாட்டி... கொஞ்சம்கூட நம்பற மாதிரியே பேசமாட்டேங்கறேளே... சுவாமி எந்த காலத்துல மாப்ளை பாத்து கல்யாணமெல்லாம் பண்ணி வெச்சிருக்கார்?"

"என்னடா அப்படிச் சொல்லிட்டே. அறுபத்து நாலு திருவிளையாடல் பண்ணினவன் அவன். சிவனைப் போல பக்தர்களுக்கு ஒண்ணுன்னா ஓடி வர்ற சுவாமி வேற யாருடா இருக்கா?

நமக்காக பிரம்படி படுவான்... நரியை பரியா மாத்துவான். பரியை நரியா மாத்துவான். வீதி சுத்தி விறகு சுமப்பான். அவன் நினைச்சா எதுதான் நடக்காது?"

"அப்ப இப்பவே சொல்லி மைதிலிக்கு ஒரு மாப்ளையை அனுப்பி வைக்கச் சொல்லுங்களேன் பார்ப்போம்."

"நம்புடா... நிச்சயம் நல்லது நடக்கும். இந்த வேலையை மட்டும் கேவலமாவோ தாழ்வாவோ நினைச்சுடாதே."

பாட்டி பிலுபிலுவென்று பிடித்துக் கொண்டபோது வாசலில் 'சாமி' என்று ஒரு குரல். எட்டிப்பார்த்த சங்கரனுக்கு கொஞ்சம் சுருக்கென்றது.

வெளியில் மயானப்புலையன் கருப்பன்! பாட்டியும் எட்டிப் பார்த்தாள். அதிர்ந்தாள். மயானத்தை விட்டு வெளியேயே வராத புலையன் வீடு தேடி வந்திருக்கிறான் என்றால் எதற்காக இருக்கும்? கேள்வி புருவத்தை வளைக்க சங்கரன் வாசல்பக்கம் சென்றான்.

"என்னப்பா... என்ன விஷயம்?"

"நம்ம அம்மா இந்த பக்கம் வந்தாங்களா சாமி...?"

"யாரைச் சொல்றே நீ... சுந்தராம்பாம்மாவையா...?"

"அவங்களதான் சாமி. நான் கொஞ்சம் அவசியம் அவங்கள பாக்கணும்."

"அதுக்கு அவங்க வீட்டுக்குல்ல போகணும். அங்க போகாம இங்க வந்துருக்கே?"

"சாமிஈஈ..."

"என்ன சாமி... சட்டுன்னு சொல்..."

"அவங்க குடி இருக்கற தெருவுல நிறையபேர் சபரி மலைக்குப் போக மாலை போட்ருக்காங்கன்னு கேள்விப்

பட்டேன். அதனால அந்தப் பக்கமா என்னைப் பார்த்தா அவங்கல்லாம் தர்மசங்கடப்படுவாங்க."

"சரி, சட்டுன்னு விஷயத்துக்கு வா..."

"ஒண்ணுமில்ல... அவங்க நேத்து ராத்திரி தாசி பங்களாவுக்கு போகலை. அவங்க கழுத்து சங்கிலி அறுந்து மயானப் பாதைல விழுந்துடிச்சு, நல்லவேளை நான் பார்த்தேன். அதைக் கொடுக்கணும்னுதான்..."

"இன்னிக்கு பங்களாவுக்கு வரும்போது வழில பார்த்து கொடுக்க வேண்டியதுதானே?"

"இல்ல சாமி... அதுவரை எங்க போச்சோ என்ன ஆச்சோன்னு மனசு கிடந்து தவிக்கும் இல்லீங்களா?"

- கருப்பன் பாய்ண்ட்டைப் பிடித்தான்.

"சரி, என்கிட்ட கொடு. நான் அதைக் கொண்டு போய் கொடுத்துடறேன்."

சங்கரன் கை, கருப்பன் எதிரில் நீண்டது.

கருப்பனும் அந்த சங்கிலியை அவன் கைகளில் தன் கை பட்டு விடாதபடி போட்டான். அந்த நொடி கருப்பனின் மார்புப் போர்வை விலகி அவன் மார்பில் பூணூல் இருப்பதை சங்கரன் பார்த்துவிட்டு ஆச்சரியமானான்.

"ஏம்ப்பா கருப்பா... அது என்ன மார்புல?"

"பூணூல் சாமி..."

"பூணூலா... நீ எதுக்கு போட்ருக்கே...?"

"என்ன சாமி கேள்வி இது. எங்கப்பா போட்டுவிட்டாரு. போட்டுக்கிட்டிருக்கேன்."

"உங்கப்பா போட்டுவிட்டாரா? உங்களுக்கெல்லாம் இது கிடையாதே கருப்பா..."

"அதெல்லாம் எனக்குத் தெரியாது சாமி. என் அப்பா போட்ருந்தாரு. என் தாத்தாவும் போட்ருந்தாரு. அவ்வளவுதான். ஏன்... நான் சந்தியாவந்தனமும் செய்வேன். ருத்ரமும் ஜெபிப்பேன். தெரியுங்களா?"

- கருப்பன் சொல்லச் சொல்ல சங்கரன் முகம் அதிர்ச்சியின் உச்சத்துக்கும் ஆச்சரியத்தின் எல்லைக்குமே போயிற்று.

பாட்டியும் சேர்ந்து கொண்டாள்.

*"ஏண்டா... என்னத்தடா உளர்றே? பூணூலை பிராமணன் தானேடா போட்டுக்கணும். நீ போட்டுண்டா பிராமணன் ஆயிடுவியா?"*

*"அம்மா... அதெல்லாம் எனக்கு என்னங்க தெரியும். எங்க பெரியவங்க சொல்லிக் கொடுத்ததை நான் செய்யறேன். என் வரைல பூணூல் போட்டவங்கல்லாம் பிராமணங்க இல்லை. யார், போட்டுக்கிட்டிருக்கிற பூணூலுக்கு கௌரவமா சந்தியா வந்தனம் பண்ணி, குளிச்ச பிறகு சாப்ட்டு சுத்தபத்தமா இருக்காங்களோ, அவங்கதான் பிராமணங்க..."*

*- கருப்பன் ஒரு புதுவிளக்கமும் கொடுத்துவிட்டு கிளம்பிச் சென்றான்.*

*கவனித்துக் கொண்டேயிருந்த மைதிலி முகத்தில் ஒரு அர்த்தபுஷ்டியுள்ள புன்னகை.*

*'**பூ**கட்டிக் கொண்டிருந்தாள் சுந்தராம்பாள். அருகில் ஒத்தாசையாக திலகம். பாட்டி அந்த நாளைய ஒரு பாட்டு புத்தகத்தை எடுத்துவைத்து தொடை தட்டிக் கொண்டே மெல்லிய குரலில் பாடிக் கொண்டிருந்தாள்.*

*பானுவை அங்கே பார்க்க முடியவில்லை. தங்களுடன் தங்களைப் போன்ற செயல்பாடுகளில் அவள் சிக்கிக் கொண்டு விடக்கூடாது என்றுதானே அவளை, டாக்டருக்கே சுந்தராம்பாள் படிக்க வைத்திருந்தாள்.*

*அதனால் பானு பக்கத்திலேயே டிஸ்பென்சரியில் நோயாளிகளை மேற்பார்வையிட்டுக் கொண்டிருந்தாள்.*

*டேபிள்மேல் ஒரு உண்டியல். அதில் நோயாளிகள் விருப்பப்பட்டு போடுவதுதான் ஃபீஸ்! இந்த நிலையில்தான் அங்கே சங்கரன் செருமியபடி நுழைந்தான்.*

*அவனைப் பார்க்கவும் பானுவுக்குள் ஒரு பரபரப்பு படபடப்பு. ஏராளமாய் பட்டாம்பூச்சிகள் எழும்பிப் பறப்பது போல மனதிலும் ஒரு சிலிர்ப்பு. அவனை 'வா' என்று அழைக்கக் கூட தோன்றாமல் வெறித்தபடி பார்த்தாள்.*

*"என்ன பானு... என்னை எதிர்பார்க்கலையா?"*

*"ஆமாம் சங்கரா... இட்ஸ் எ ப்ளசன்ட் சர்ப்ரைஸ்!"*

*"காரணமாத்தான் வந்தேன். இந்தா அவன் கை நீண்டது. சங்கிலி அவன் விரல்களிடையே தொங்கியது.*

பானுவின் கண்களிலும் பூ பூத்தது.

"ஹை... சங்கிலி. கோல்டு தானே?"

"ஆமாம்... கிட்டத்தட்ட அஞ்சுபவுன்."

"யாருக்கு? எனக்கா?"

"இது ஒரு வகைல உன்னோடதுதான்..."

"**தா**ங்க்ஸ் சங்கர். என்மேல் இருக்கற அன்பை நீ இப்படி ரிச்சா வெளிக்காட்டுவேன்னு நான் கொஞ்சம்கூட எதிர் பார்க்கல."

"அப்படின்னா நீ முதல் நன்றியை மயானப்புலையன் கருப்பனுக்குதான் சொல்லணும்."

"என்ன சொல்ற சங்கரா?" - அதிர்ந்தாள் பானு.

"இது உன் அம்மா கழுத்துச் சங்கிலி. அவங்க மயானப் பாதை வழியா போகும்போது அறுந்து விழுந்திருக்கு. அதை அவனும் கொண்டுவந்து என்கிட்ட கொடுத்து உங்கம்மா கிட்ட சேர்க்கச் சொன்னான். நான் இப்ப அதுக்காக உன்கிட்ட கொடுத்துருக்கேன்."

அவன் அப்படிச் சொல்லவும், பானு முகத்தில் பொளேரென்று ஒரு மாற்றம். சுண்டிச் சுருங்கிப் போனாள்.

"என்ன... ரொம்ப ஏமாற்றமா இருக்கா?"

"நிச்சயமா... இதே உன்னோட பிரசன்ட்டா இருந்தா எவ்வளவு சந்தோஷப்பட்ருப்பேன் தெரியுமா?"

"அவ்வளவு பணத்துக்கு நான் எங்க போக. அப்படியே பணம் கிடைச்சாலும் முதல்ல மைதிலி. அப்புறம் காயத்ரி... அப்புறமாதான் மத்தவங்க..."

"அதுவும் சரிதான். ஒரு அண்ணனா உன்னோட கடமை எனக்கும் தெரியும். அது சீக்கிரமே நல்ல விதமா முடிஞ்சா சரிதான்."

"முடியும் பானு... மைதிலி, காயத்ரிக்கு மட்டுமில்ல. உனக்கும் ஒரு நல்ல வாழ்க்கை கட்டாயம் அமையணும். சொல்லப் போனா அவங்களவிட நீதான் என் மனசுல முதல்ல இருக்கே. எங்களுக்காவது ஜாதிபலம் இருக்கு. உனக்கு அப்படி என்ன இருக்கு?"

சங்கரன் தன் பேச்சில் எங்கோ சென்றான். பானுவுக்கு சுரீர் என்றது.

"சங்கரா... நீ என்ன சொல்றே?" - இதயம் படபடக்க அவள் கேட்ட விதத்தில் ஏராளமான அதிர்ச்சி.

"என்ன பயந்துட்டியா?"

"ஆமாம்... நீ பேசறத பார்த்தா என் காதலை...?"

"பைத்தியம்..." - அவன் அவள் கையைப் பற்றி அன்பாக ஒரு அழுத்தம் கொடுத்துவிட்டு திரும்பினான். சற்று தூரம் சென்று திரும்பியவன் "அநேகமா நானும் சாமிநாதனும் கூடிய சீக்கிரம் சிங்கப்பூருக்குப் போய்விடுவோம். அப்படி போய்ட்டா, திரும்பி வர பல வருஷம் ஆகும். அதுவரை நீ காத்திருக்கணும். யோசிச்சுக்கோ " என்று ஒரு குண்டை அதிக சப்தமின்றி அங்கேயும் வெடித்துவிட்டுக் கிளம்பினான்.

பானுவிடம் ஸ்தம்பிப்பு!

**ச**லசலவென காவிரிநீர் வாய்க்கால் வரப்புகளில் பாய்ந்து ஓடிக் கொண்டிருந்தது. ஸ்படிகம் போல் இருந்தது. அதனுள் குட்டிக் குட்டியாக ஜிலேபி கெண்டை மீன்கள்.

அவ்வளவும் ஒரு நன்செய் வயலுக்குள் பிரவேசித்துக் கொண்டிருந்தது. அது மாதய்யன் என்பவனின் வயல்! அவனும் ஒரு கோடியில் மாடுகட்டி உழுது கொண்டிருந்தான். டிராக்டர் வைத்து உழ அவனிடம் வசதியில்லை. டிராக்டர் கட்டி உழுமளவு வயலும் பெரியதில்லை.

மூன்று ஏக்கர் மஞ்சக்காணி நிலம்!

வருஷத்துக்கு மூன்று போகம் விளைகிறது. இரண்டு முறை நெல். நடுவில் மட்டும் ஒரு மாறுதலுக்கு சோளம் போட்டு எடுப்பான்.

அந்த நிலத்தில் வரும் வருமானம்தான்.

ஏதோ வாழ்க்கை ஓடிக் கொண்டிருக்கிறது. மாதய்யன் மனைவி அஞ்சலை களத்துமேட்டில் தூங்குமூஞ்சி மர நிழலில் தன் ஆறு மாதக் குழந்தையை தூளியில் போட்டு ஆட்டி தூங்க வைக்கப் படாத பாடுபட்டுக் கொண்டிருந்தாள்.

அவள் குரலில் விதம்விதமான தாலாட்டு.

"என் தங்க மகனே தாலேலோ...

என் சிங்க மகனே தாலேலோ...

என் முத்து மகனே தாலேலோ...

என் சொத்துக்குரியவனே தாலேலோ...!"

- அஞ்சலை உரத்தகுரலில் தங்கம் சிங்கம் என்று பாடியும் பலனில்லை. குழந்தை அழுது கொண்டுதான் இருந்தது.

அந்த பக்கமாக கிழவி ஒருத்தி வெற்றிலை போட்டு மென்றபடி வந்து கொண்டிருந்தாள். அஞ்சலை படும்பாட்டைப் பார்த்து அருகில் வந்தவள் அழும் குழந்தையையும் ஒரு பார்வை பார்த்துவிட்டு அண்ணாந்து மரத்தைப் பார்த்தாள்.

“என்ன கிழவி... மரத்துல என்ன இருக்குன்னு பாக்கறே?”

“பாக்காம... இந்த மரத்துலயா உன் குழந்தைக்கு தூளி கட்டுவே...”

“ஏன்... கட்டுனா என்ன?”

“அடிப் போடி பொசகெட்டவளே. இந்த மரத்துலதான் நம்ம தோடிபுரத்து சமீன்தார் ஒருத்தர் தூக்குல தொங்கி செத்துப் போனாரு. அந்தக் கதை தெரியாதா உனக்கு?”

“அடக் கெரகமே... இந்த மரத்துக்குப் பின்னால இப்படி ஒரு கதை இருக்குதா...?”

“கேளுடி.... கேட்டாத்தானே தெரியும்...?”

“நீ விவரமா சொல்லு கிழவி...”

“நீ முதல்ல குழந்தையத் தூக்கு. இனி இங்க தூங்க வைக்க முயற்சி பண்ணாதே. நீயும் இந்த மரத்து நிழல்ல உக்காராதே...”

“அதான் சொல்லிட்டியே... இனியும் உக்காருவேனா?”

“விசயத்த கேளு... தோடிபுரம் சமீன்தார் ஒரு கோடீஸ் வரன். சமீனைக் களவாட களவாணிங்க வரப் போறதா ஒரு செய்தியும் அவருக்கு வந்துச்சு. பார்த்தார் சமீன்தார். சமீன் நகை நட்டு அம்புட்டையும் அவர் தன் அரண்மனை மாதிரி வீட்டுல வைக்காம எங்கியோ ஒளிச்சு வைச்சுட்டார். ஆனா, திருட வந்த கள்ளர்களோ அவரை விட்றதா இல்லை. தா இந்த மரத்துலதான் அவரைக் கட்டி வெச்சு சவுக்கால அடிச்சாங்க. அப்பவும் நகை நட்டையெல்லாம் எங்க வெச்சிருக்கேன்னு அவர் சொல்லவேயில்லை. சொல்லாத நிலைல அவரை அடிச்சே தூக்குல தொங்கவிட்டு கொன்னுட்டாங்க. அதான் அவரோட ஆவி இங்க இந்த மரத்தையே சுத்திச் சுத்தி வர்றதா சொல்வாங்க...”

“அதுசரி... இதெல்லாம் எந்தக் காலத்துல...?”

“அது யாருக்கு தெரியும்? ஆனா ஒண்ணு புள்ள... இந்த களத்துமேட்டுலயும் உன் மஞ்சக்காணி நிலத்துலயும்

எப்பவும் சமீன்தார் நடமாட்டம் உண்டு. அது மட்டும் நல்லா தெரியும். பல தடவை நான் இந்த நிலத்துமேல குதிரை ஓட்ற மாதிரியும் சமீன்தாரே நடந்து போற மாதிரியும்லாம் பார்த்துருக் கேனே..."

கிழவி, அஞ்சலை வயிற்றில் புளியைக் கரைத்தாள். மாதய்யனும் உழுத களைப்போடு வியர்வை உடம்பாக அவளை நோக்கி வந்தான். அவன் வரவும் கிழவி நழுவிவிட்டாள்.

அவனும் அவளை நெருங்கியவனாக "என்ன புள்ள... கெழவி என்ன சொல்லிட்டுப் போகுது...?" என்றான்.

"அது என்னென்னவோ சொல்லுதுய்யா..."

"அப்படின்னா...?"

"இந்த மஞ்சக்காணி நிலமே சரியில்லைங்குது. இது மேல சமீன்தார் ஒருத்தரோட ஆவி சுத்திசுத்தி வருதாமுல்ல...?"

"எங்க... இப்ப அந்த ஆவி புகையை எல்லாம் வரச் சொல்லேன் பார்ப்போம்."

- கிண்டலடித்தான் மாதய்யன்.

"இல்லைய்யா... கிழவி அனாவசியமா பொய் பேசமாட்டா. குழந்தைகூட துளில கிடந்தப்ப தூங்காம கிடந்திச்சு. ஆனா, இப்பப் பாரு..."

"அட போ புள்ள... இந்த கதையை நான் நம்பத் தயாரா இல்லை. யாராவது ஏதாவது சொன்னா உடனே அதை கெட்டியா புடிச்சுக்கறதே உனக்கு பொழப்பா போச்சு" என்ற மாதய்யன், அருகில் ஓடிக்கொண்டிருந்த வாய்க்காலில் போய் நின்று தண்ணீரை அள்ளி முகம் கழுத்து என்று கழுவிக் கொண்டு வாயும் கொப்பளித்தான்.

வயலில் மாடுகள் இரண்டும் உழுவதற்குத் தயாராக இருந்தன. அதைப் பார்த்தபடியே ஒரு பீடியை எடுத்துப் பற்ற வைத்தவன் அப்படியே மெய்மறந்து புகையை விட்டான். அஞ்சலைக்கோ அந்த வாடையே பிடிக்காது.

"ஆரம்பிச்சுட்டியா... இந்த நாத்தத்தை பிடிக்கலேன்னா உனக்கு தூக்கம் வராதே..." - என்றாள். அவனும் சிரித்தான்.

"அது வந்து புள்ள... இது மட்டும் இல்லேன்னு வை. ஏகப்பட்ட ஆம்பளைங்க ஒரு வேலையும் பாக்க முடியாம படுத்து தூங்கிகிட்டே இருப்பாங்க. இதாலதான் நாங்கள்லாம் ஏதோ வேலை வெட்டி பாக்கறோம்." - என்றான்.

*மீண்டும் இறங்கி வயலில் கால் வைத்தான். காவிரி நீர் கணுக்கால் வரை மூழ்கியிருந்தது.*

*'ப்ளக்... ப்ளக்' என்று சப்தம் எழுப்ப, தன் உழவு மாடுகள் நோக்கி நடந்தவன் மாடுகளை எட்டியதும் அவைகளைத் திரும்ப ஓட்டத் தொடங்கினான். அவைகளும் கூரிய கலப்பை முனை மண்ணைப் பிளந்து கோலம் போட வலிந்து நடக்க ஆரம்பித்தன.*

*'ப்ளக்... ப்ளக்... ப்ளக்... சேற்று மண்ணில் மாட்டின் கால்களும், அவனது கால்களும் சப்தமெழுப்ப, இந்திய தேசம் முழுக்க இந்த சப்தத்துக்குதான் ஏங்கிக்கிடப்பது போல் தோன்றியது. நடுவில் ஒரு தடங்கல். ஒரு இடத்தில் கலப்பையின் கூர் முனை சிக்கிக் கொண்டது போல அப்படியே நின்றது. மாடுகளும் இழுப்பதற்காக சிரமப்பட்டன. அதன் முதுகில் அவனது சாட்டைகள் 'சுளீர் சுளீர்' என்று சப்தம் எழுப்பியும் அவைகளால் ஒன்றும் முடியவில்லை. இறுதியாக வாலை முறுக்கவும் வலி தாங்காமல் அந்த இரு மாடுகளும் வெகுவேக மாக இழுத்ததில் கலப்பை முனை முன்னால் ஒரு புதையல் பானை அப்படியே பூமிக்குள் இருந்து புரண்டு மேல் எழுந்து வந்து நின்றது.*

*மாதய்யன் அதைப் பார்த்து அப்படியே ஸ்தம்பித்து விட்டான்!*

*அரக்குக்கலரில் தாவணி, சிகப்புக்கலரில் பாவாடை, காலில் கொலுசு சகிதம் சிக்கென்று இருந்தாள் காயத்ரி. அந்த வயல்வெளிப்பக்கமாக இடுப்பில் குடத்துடன் அவள் நடந்து வரும் அழகே தனியாக இருந்தது.*

*'ஜல்... ஜல்... ஜல்'*

*யாரும் இல்லாத வயல்வெளிப் பக்கம் அந்த மாலை வேளையில் காயத்ரி நடந்து செல்வது ஒரு மோகினி நடந்து செல்கிற மாதிரிகூட இருந்தது.*

*ஒரு தென்னை மரம் பின்னால் கையைக் கட்டிக் கொண்டு காத்துக் கொண்டிருந்தான் கணேசன். காயத்ரி 'அவன் எங்கே?' என்று தேடத் தொடங்கவும், கொஞ்சம் அவளை தவிக்கவிட விரும்பியவன்போல ஒளிந்து ஒளிந்து நடந்தான். பின் அவ ளுக்குப் பின்னால் வந்து ஓசைப்படாமல் அவளை அப்படியே கட்டிப்பிடித்தான்.*

அந்த நொடி அவன் கைகள் அவள் மார்புமேல் பட்டதில் அவளிடம் ரத்தப்பாய்ச்சல். அவனுக்குள்ளும் மன்மதன் பாணம் போடத் தொடங்கிவிட்டான்.

நெடுநேரம் வரை காயத்ரியை பிடித்த பிடியை கணேசன் விடவேயில்லை. அவளும் விலக்கவேயில்லை. அவளுக்கும் அந்த சுகம் தேவையாக இருந்தது. ஆடு ஒன்று ‘மே...’ என்று கத்தும் சப்தம் கேட்டுதான் இருவரும் பிரிந்தனர்.

கத்திய ஆடும் சற்று தொலைவில் மாதய்யனால் தரதரவென்று இழுத்துச் செல்லப்பட்டுக் கொண்டிருந்தது.

அதன் கழுத்தில் ஒரு அலரிப் பூ மாலை!

மாதய்யன் கைகளிலும் அரிவாள்.

காயத்ரிக்கும், கணேசனுக்கும் கண்களில் தீப்பிடித்துக் கொண்டது. மாதய்யன் இந்த இளம் ஜோடியைக் கவனிக்க வில்லை. முரண்டு பிடித்த ஆட்டை இழுத்துக் கொண்டு தனது மஞ்சக்காணி நோக்கித்தான் நடந்தான். அங்கே அஞ்சலை அந்த புதையல் பானையை ஒரு துணியைப் போட்டு மூடி வைத்தவ ளாக அதன் அருகில் பயத்துடன் காவலில் இருந்தாள். ஆட் டுடன் மாதய்யன் வரவும்தான் அவளுக்கு உயிரே வந்தது. சந்தோஷம், பயம் இரண்டாலும் அவள் வியர்த்து வடிந் திருந்தாள்.

“வாய்யா சீக்கிரம்...” என்று கைக்குழந்தையோடு எழுந்தும் நின்றாள். ஆட்டை அதன் அருகில் கொண்டு வந்து கட்டிய மாதய்யன் சுற்றிலும் ஒரு பார்வை பார்த்தான்.

அவன் பார்ப்பது தெரியவும் காயத்ரியும், கணேசனும் மின்னல் வேகத்தில் ஒரு மரத்தின் பின்னால் ஒளிந்தனர்.

“யாரும் பாக்கலல்ல...?”

“இல்லய்யா.”

“அப்ப பலி கொடுத்துட வேண்டியதுதான்...”

- மாதய்யன் பேச்சோடு அரிவாளைப் பார்த்தான்.

“பாவம்யா இந்த ஆடு. இதை நான் மாரியாத்தா பூசைக்குன்னு வளத்கிட்டு வரேன்...”

“மாரியாத்தாளுக்கு வேற ஆடு பிடிச்சுக்கலாம். இப்ப புதையல் பலியா உடனே இதை போட்டுத் தள்ளினாத்தான் நாம பொழைக்க முடியும். இல்லாட்டி இந்த பானையைக் காவல் காக்கற சமீன்தார் ஆவி நம்மை அடிச்சுப்பிடும்.”

- மாதய்யன் பேச்சில் அவனும் ஜமீன்தார் கதையை நம்பத் தொடங்கிவிட்டான் என்பது துல்லியமாக விளங்கியது. அஞ்சலை குழந்தையோடு ஒதுங்கி நின்றுகொண்டாள். கணேசனும், காயத்ரியும் நடப்பதை ஒளிந்த நிலையில் பார்த்துக் கொண்டேயிருந்தனர்.

அவர்களுக்கும் ஓரளவு விளங்கிவிட்டது.

அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஆடு துண்டாகி கீழே விழுந்தது. ரத்தம் வாய்க்காலாக ஓடியது. மாதய்யனும் அஞ்சலையும் அப்படியே அந்த புதையல் எடுத்த வயலில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து எழுந்தனர்.

"காயத்ரி... புதையல் எடுத்திருக்கான் மாதய்யன்... அதான் பலி கொடுக்கறான் போல இருக்கு..." - என்ற கணேசனை காயத்ரி அதிர்ச்சியோடு பார்த்து "புதையல் எடுத்தா பலி கொடுக்க ணுமா என்ன...?" என்றுதான் கேட்டாள்.

"ஆமா... இல்லேன்னா... அந்த புதையலை காவல் காக்கற பூதம் அடிச்சுப்பிடும்னு நீ கேள்விப்பட்டதில்லையா?"

"அப்படி ஒரு கதை இருக்கா என்ன?"

"சரிதான்... எத்தனை கதைல போட்டுருக்கு. நீ படிச்சது இல்லையா?"

"அப்ப அதெல்லாம் உண்மையா?"

"நமக்கு இப்ப எதுக்கு அந்த ஆராய்ச்சி. மாதய்யன் என்ன செய்யறான்னு பார்ப்போம்!"

"அவன் என்னத்த பண்ணுவான்... புதையலை ஒளிச்சு வெச்சு, தானே அனுபவிக்கத்தான் நினைப்பான்."

"ஆனா, அது சட்டப்படி தப்பு. புதையல் கிடைச்சா அது கவர்மெண்ட்டுக்கு தான் சொந்தம்."

"அதுசரி... எடுத்தவன் என்ன பண்ண? விரல் சூப்பவா?"

"பைத்தியம்... புதையலோட அளவைப் பொறுத்து ஒரு பர்சன்டேஜை கவர்மெண்ட்ல சட்டபூர்வமாவே கொடுப்பா..."

"அது எவ்வளவு இருக்கும்?"

"யாருக்குத் தெரியும்...?" கணேசன் கேட்கும்போதே அந்த புதையல் பானையை ஒரு துணியில் சுற்றி தூக்க மாட்டாமல் தூக்கி சோற்றுக் கூடையில் வைத்தான் மாதய்யன். அதன்மேல் வேகவேகமாக வைக்கோலைப் பரப்பி மூடியவர்

*களாக இருவரும் வயல்காட்டைவிட்டு தங்கள் வீடு நோக்கி கிளம்பினர்.*

*காயத்ரியும் கணேசனும் சிறிது தூரம் பின்தொடர்ந்தனர். பாதி வழியில் கணேசனுக்கு ஒரு எண்ணம் தோன்றியது.*

*"காயத்ரி... இந்த விஷயத்தை நாம பஞ்சாயத்துலயோ இல்ல போலீஸ்லயோ சொல்றதுதான் சரி. இதை நான் சொன்னா எனக்கும் பங்கு கிடைக்கும்! ஆனா என்னை விட உனக்குத்தான் இப்ப தங்கம் நிறைய தேவை. உங்கக்கா மைதிலியைக் கரை சேர்க்க.. அப்புறம் உன் கல்யாணத்துக்குன்னு தங்கம் உங்களுக்குதான் நிறைய தேவைப்படறதால நீ போய் நம்ம பஞ்சாயத்து தலைவர் கல்யாணசுந்தரத்துகிட்ட சொல், என்ன?" கணேசன் தன் பொருட்டு சிந்திப்பதை எண்ணி உச்சிக்குளிரலுடன் அவனைப் பார்த்தாள் காயத்ரி.*

*அவன் கைகளைப் பற்றி அழுத்தமாய் முத்தமிட்டு விட்டு வேகவேகமாக புறப்பட்டாள்!*



# 10

## அன்று

**வா**ஸ்து சாஸ்திர ஞானியான விநாயகராமனின் பதிலால் கலங்கிப் போன சதாசிவ சாஸ்திரிகளுக்கு நெடுநேரம் வரை பேச்சே வரவில்லை.

"என்ன... நான் கூறுவதை உங்களால் நம்ப முடிய வில்லையா?"

"ஆமாம்... அதே சமயம் நீங்கள் மனதிற்கு தோன்றுவதைப் பேசுபவராகவும் எனக்குத் தோன்றவில்லை."

"உங்களுக்குள் எந்த சந்தேகம் எழும்பினாலும் தாராள மாக அதைக் கேள்வியாகக் கேளுங்கள்."

"கேட்கத்தான் போகிறேன். இந்த வீடு இன்று நேற்றல்ல - கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டாக இப்படித்தான் இருக்கிறது. இதுநாள்வரை நடக்காத துர்மரணம் இனித்தானா நடக்கும்?"

"நல்ல கேள்விதான். ஒன்று மட்டும் நன்றாகத் தெரிந்து கொள்ளுங்கள். இந்த வீடு ஐம்பது ஆண்டுகளாகவே இதில் வசிப்பவர்களுக்கு ஜீவ சக்தியைத் தருவதாக இல்லை. இது மாறாமல் இப்படியே இருக்கும் பட்சத்தல் இனியும் அதுதான் நிலை. இப்படியிருக்க, துர்மரணம் நிகழாததற்கு காரணம் உங்கள் பூஜையின் பலன்கள்தான்.

உறுதியாகக் கூறுவேன். நீங்கள் நிதமும் ஆலயம் சென்று வழிபடுபவராக இருக்க வேண்டும். அத்துடன் ஜாதகத்தில் உங்கள் ஆயுள்பலம் சிறப்பாகவும் இருந்திருக்க வேண்டும். இதன் காரணமாக இந்த வீட்டால் உங்களைக் கொல்ல முடியவில்லை. இதை இப்படிக்கூட கூறலாம். புலியை வளர்க்கும் ஒருவர் எப்பொழுதும் கையில் சவுக்குடன் புலியை அடக்கி வைத்தபடி இருக்கும்வரை அந்த புலியும் அடங்கிக்கிடக்கும்.

அதே புலி அவர் சற்று கண்ணயர்ந்தாலும் போதும் அந்த நபரை அடித்து விழுங்கிவிடும்.

இந்த வீடும் அந்த புலி போலத்தான். உங்கள் ஜாதக பலம், பூர்வ புண்ணிய பலம், நிகழ்கால பூஜை சக்தி இவை எல்லாம் உங்களைக் காப்பாற்றிக் கொண்டிருந்தாலும் நீங்கள் மரணத்திற்கு மிகமிக சமீபத்தில்தான் இருக்கிறீர்கள் என்பதை மறந்துவிட வேண்டாம். ஒரு வாரம் தொடர்ந்து பூஜை புனஸ்காரம் என்று இல்லாமல் உல்லாசமாக இருந்து பாருங்கள். அப்பொழுது இந்த மனை சக்தி உங்களை என்ன செய்யும் என்பது உங்களுக்கு விளங்கிவிடும்."

விநாயகராமன் சொன்னதை கேட்டு சாஸ்திரிகளுக்குள் புதிதாகவும் ஒரு குழப்பம்.

"என்ன... என் கருத்து அவ்வளவு திருப்திகரமாய் இல்லையா?"

"இல்லை... உங்கள் பதில்களில் நிறைய உண்மை உள்ளது. நான் சாப்பிடக்கூட மறப்பேன். சிவதரிசனத்தை மறக்க மாட்டேன். அந்த பக்தியும் அதன் சக்தியும் எனக்கு பக்க பலம் என்பது விளங்குகிறது.

அதே சமயம் ஒரு வீடு உயிருள்ள ஜீவன்களை ஆட்டி வைக்கிறது என்பது விசித்திரமாக உள்ளது. ஒரு தெளிவிற்காக கேட்கிறேன். என்னை கொல்வதால் இந்த வீட்டுக்கு என்ன கிடைக்கும்? இல்லை என்னை வளமாய் வாழ வைப்பதால்தான் இதற்கு என்ன நன்மை... வீடு என்பது ஜடப்பொருள் அல்லவா? இது எப்படி உயிருள்ள மனிதர்களின் மனங்களை ஆட்டி வைத்து இயக்க முடியும்?"

"அப்படிக் கேளுங்கள். வீடு என்பது பார்வைக்குத்தான் ஜடப் பொருள். ஆனால், அதில் உண்மையில் பஞ்ச பூதங்களும் உள்ளது என்பதை ஒப்புக் கொள்கிறீர்களா?"

"என்ன அப்படிக் கேட்டுவிட்டீர்கள். வீடு முதலில் நிலமாகிய முதல் பூத தளத்தில்தானே உள்ளது...?"

"ஆமாம்..."

"அடுத்து நீராகிய கிணறு... அதற்கும் அடுத்து எங்கும் நிரம்பியுள்ள காற்று... அதற்கும் அடுத்து வீட்டில் சமைக்கும் போது உருவாக்கப்படும் அக்னி... உட்கூரைதான் ஆகாயம். இப்படி ஐந்து பூதங்கள் வந்து விட்டதல்லவா?"

"ஆமாம்... ஆமாம்..."

"இந்த ஐந்தும்தானே நமது உடம்பிலும் உள்ளது..."

"உண்மைதான். இந்த ஐந்தின் கூட்டுச் சேர்க்கைதானே நாம்..."

"இப்பொழுது சொல்லுங்கள்... வீடு ஜடப் பொருளா?"

"இல்லைதான்... அதே சமயம் உயிர்ப்பொருளாக இருந்தால் அது ஒன்று வளர வேண்டும் அல்லது மாற்றங்களையாவது சந்திக்க வேண்டுமே."

"அது மாறவில்லை என்று யார் சொன்னது. காலப்போக்கில் உத்திரங்கள் உளுத்துவிடுகின்றன. சுவர்களில் சாந்துப் பூச்சு சிதைகிறது. மனித உடம்பைப் போலத்தான் அதுவும்... ஆனால், மனித உடம்பைவிட உறுதி இதற்கு சற்று கூடுதல் என்பதை மறந்துவிடக்கூடாது..."

விநாயக ராமனுக்கும், சதாசிவ சாஸ்திரிகளுக்கும் தர்க்கம் வளர்ந்துகொண்டே போனது. அவ்வளவையும் கேட்டபடி சாஸ்திரிகள் மனைவி பாலா வந்தாள். அவள் கைகளில் விநாயக ராமன் குடிப்பதற்காக கேட்ட தண்ணீர்.

அவள் முகம் வாடியிருந்தது. வயிற்றிலோ ஆறு மாத கர்ப்பம்.

"என்ன... உங்களைத்தான்... இவர் பேசியதை எல்லாம் கேட்டுக் கொண்டுதானிருந்தேன். நமக்கு இனி இந்த வீடு வேண்டாம். வேறு புது வீட்டினைக் கட்ட ஏற்பாடு செய்யுங்களேன்..."

பாலா அப்படிச் சொன்ன மறுநொடி விநாயகராமன் அலறவே தொடங்கிவிட்டான்.

"தவறு அம்மணி... மிகப் பெரிய தவறு. நீங்கள் இப்போது கர்ப்பிணி. இந்த நிலையில் உங்கள் கணவரோ, இல்லை நீங்களோ வீட்டைக் கட்ட முயல்வது பேராபத்தைத் தருவித்துவிடும்.

ஏன் என்றால் ஒரு மனிதன் ஒரே சமயத்தில் இரண்டு பஞ்ச பூதங்களைக் கட்ட அனுமதிக்கப்படவில்லை."

"அப்படியானால் என்ன பொருள்? மீறி வீட்டைக் கட்டினால் என்னதான் நடக்கும்?"

"வயிற்றுக் குழந்தை உயிர் பிழைக்காது. மீறிப் பிழைத்தாலும் ஊனமுடன் பிறக்கும். காலத்துக்கும் ஒரு ஊனத்தை நீங்கள் சுமக்கத் தயாரா?"

"ஓ... இப்படிக் கூட ஒரு தடை உள்ளதா?"

"இது தடை அல்ல... நிலை. நாம்தான் நிலையை தடையாக - தவறாக புரிந்து கொள்கிறோம்."

"விநாயகராமன் பதிலுடன் தண்ணீரைக் குடித்தான் அந்த சமயம் பார்வை மீண்டும் சர்ப்பம் காவல் காக்கும் அந்த ராகமந்திர ஏட்டுக்கட்டின் மேல் சென்றது."

"கொஞ்சம் வயிற்றில் புளியைக் கரைத்தது."

"சாஸ்திரிகளே... இப்படி சர்ப்பத்துடன் நீங்கள் வாழ்வது உங்களுக்கு அச்சமாக இல்லையா?" கேட்டான்.

"ஏந்த சர்ப்பம் புத்தியுடன் புத்தகத்தை காவல் காத்திருக்கிறது? அதை நீங்கள் எண்ணிப் பாருங்கள்..."

"இதோ இங்கே கண்ணுக்கு எதிரேயே காட்சி தந்தபடி உள்ளதே?"

"இது காட்சிக்குதான் சர்ப்பம். உள்ளபடியே இது ஒரு தேவதை..."

"அப்படியானால் இந்த நாக வடிவம்?"

"புரிந்துகொள்ள முடியாத ஒரு புதிர்..."

"ஆச்சரியமாக உள்ளது..."

"நீங்கள் கூறிய வாஸ்து சாஸ்திர தகவல்களும்கூட என்வரையில் ஆச்சரியம்தான்."

"நல்லது. இனியும் நாம் விவாதிப்பது வெட்டிப் பேச்சிலே தான் முடியும். நான் சற்று ஓய்வெடுக்க விரும்புகிறேன்..."

விநாயகராமன் சொன்ன மறுநொடி பாலா உள்ளே சென்று பாய் ஒன்றும் துவாலை ஒன்றையும் கொண்டு வந்து தந்தாள் அப்படியே "நீங்கள் சற்று ஓய்வெடுங்கள் நான் அதற்குள் தங்களுக்கு அமுது சமைத்து விடுகிறேன்" என்றும் கூறினாள்.

ஆனால், விநாயகராமனோ, "இல்லை அம்மணி, தேவநாகம் காவலில் உள்ள இல்லத்தில் உணவு உட்கொள்வது பெரிதில்லை. அப்படி உட்கொண்ட பிறகு என் தலைமுறையே உங்களுக்கு நன்றியுடனும் விஸ்வாசமாகவும் நடந்து கொண் டால்தான் நான் தோஷமற்றவனாக திகழ முடியும். ஆனால், அது அவ்வளவு சுலபமில்லை. ஆகவே நான் கிளம்புகிறேன். இந்த ஊரில் சத்திரம் சாவடி எங்கிருக்கிறது என்று மட்டும் கூறுங்கள். நான் அங்கே தங்கிக் கொள்கிறேன்."

விநாயகராமனின் பதில் பாலாவையும் சதாசிவ சாஸ்திரிகளையும் ஒரு உலுக்கு உலுக்கிவிட்டது.

இப்படிக் கூடவா ஒரு மனிதன் வரும் நாட்களை எல்லாம் மனதில் வைத்துக் கொண்டு சிந்திப்பான்.

ஆச்சரியம் அப்பி எடுத்தது அவர்களிடன்.

விநாயகராமனோ கைகளைக் கூப்பி நமஸ்கரித்தான். அப்படியே விடைபெறத் தொடங்கினான்.

இரவு நேரம்!

வைஜெயந்தி நவக்கிரக மாளிகையின் மாடிச் சாளரம் ஒன்றின் அருகே நின்றுகொண்டு வெளியே பார்த்தபடி இருந்தாள். சற்று தொலைவில் மயானத்தில் சடலம் ஒன்று எரிவது தெரிந்தது. கர்ப்பவதிப் பெண்கள் பார்க்கக்கூடாத காட்சி அது. மெல்ல அந்தப் பக்கமாக வந்த அவள் தாய் மாலியும் பாட்டி மாணிக்கவல்லியும்கூட அந்த காட்சியைப் பார்த்தனர். பாட்டி ஜன்னலின் திரைச் சீலையை இழுத்து மூடினாள்.

"ஏன் பாட்டி...?"

"நீ அந்தக் காட்சியை காணக்கூடாது வைஜெயந்தி."

"எனக்கு ஒன்றும் பயமில்லை பாட்டி..."

"நான் கூறுவது உன்னை உத்தேசித்து அல்ல. உன் வயிற்றில் வளரத் தொடங்கியிருக்கும் நம் பரம்பரை வாரிசை உத்தேசித்து..."

"வேடிக்கையாக இருக்கிறது. வயிற்றில் திரண்டிருப்பது ஆணா பெண்ணா என்றே தெரியாது. இந்நிலையில் நான் காணும் காட்சி அதை எப்படிப் பாதிக்கும்?"

"பைத்தியமே... ஒரு பெண்ணின் உடல் என்பது கோவிலுக்குச் சமம். கர்ப்பப்பைதான் கருவறை. அதில் உருவாகும் குழந்தை என்பது கடவுளுக்குச் சமம். அந்தப் பிஞ்சுவின் உடல் - ஒரு தாய் உண்ணும் உணவின் உபரிசக்தியாலும் - அந்த பிஞ்சின் மனம் தாயின் மனதில் நிலவும் அமைதியை ஒட்டியுமே அமைகிறது."

கர்ப்ப காலத்தில் ஒரு பெண்ணானவள் அச்சம், பீதி, மனவருத்தம் போன்ற உணர்வுகளால் சூழப்பட்டிருந்தால் பிறக்கும் குழந்தையுமே அதே போல் உணர்வு சூழ்ந்த ஒன்றாக இருக்கும்.

அதனால்தான் கர்ப்பவதிகள் மனம் குளிரும்படி எல்லோரும் நடக்க வேண்டும் என்கிறோம். அதேபோல அவளுக்கு சீமந்தம், வளைகாப்பு எல்லாமும்கூட 'உன்னைச் சுற்றி நாங்கள் எவ்வளவு பேர் இருக்கிறோம் பார். நீ துளி கூட அஞ்சக் கூடாது' என்பதற்காகத்தான். அந்தத் தாயும் கூட தான் கர்ப்பம் தரித்ததற்காக மகிழ வேண்டும். வயிற்றுக் குழந்தையை உத்தேசித்துத்தானே அவ்வளவு சடங்குகளும்? எனவே அவள் தன் வயிற்றுச் சிசுவை எண்ணி பூரிக்க வேண்டும். அப்படி பூரித்தால்தான் அந்த சிசுவும் ஊனங்கள் இன்றி லட்சண மாகவும் ஆரோக்கியமாகவும் உருத்திரளும்.

கர்ப்பம் தரிப்பது என்பதை நீ என்னவென்று நினைத்து விட்டாய்? அது ஒரு தவம்..."

பாட்டி ஒரு பெரிய உரையே நிகழ்த்தி முடித்தாள் ஆமோதித்தாள் மாலி.

"வைஜெயந்தி...! வீரேந்திரன் என் வயிற்றில் இருக்கும் போது நான் பெரும்பாலும் நல்லதையே எண்ணவில்லை. கர்ப்பம் தரித்ததையே பெரும்பிழையாக கருதினேன். ஒரு வேளை ஆணாகப் போய்விட்டால் அவன் வளர்ந்தபின் 'என்னை ஏன் பெற்றாய்' என்று கேட்கக்கூடும். இப்படிப், பல குழப்பங்கள்.

அதுதான் வீரேந்திரனும் தறுதலையாக மாறிப்போனான். இன்று அவன் ஒரு சந்நியாசிபோல இருப்பது என்பது கூட யார் செய்த புண்ணியமோ?

இவ்வேளையில் எனக்கு ஒரு சம்பவமும் ஞாபகத்திற்கு வருகிறது...

மாலி எங்கோ தொட்டு எங்கோ சென்றாள்.

"என்னை அனுபவிக்க ஒரு சிவனடியார் ஒரு நாள் வந்தார். 'எதனாலோ என் மனது சமீப காலமாக தவத்தில் செல்ல மறுக் கிறது. மனதில் ஒரே காமக் குழப்பங்கள். அதை அடக்க அடக்க பெருகி வழிகிறது. பந்து போல எம்புகிறது. எனவே அதன் வழியே போகத் தீர்மானித்துவிட்டேன். பெண் இன்பம் ஒன்றும் பாவமில்லை. ஒருமுறை அதையும் அனுபவித்துத்தான் பார்த்து விடுவோமே' என்று கூறியபடியே என்னை ஆட்கொண்டார். அதன் பிறகே வீரேந்திரன் கருக்கொண்டான்."

மாலி எங்கோ தொட்டு திரும்பவும் எங்கோ சென்றாள். அப்படியானால் வீரேந்திரன் இன்று இப்படி ஒரு யோகி போல இருக்க அந்த மூல விந்துவா காரணம்?

வைஜெயந்திக்கு குழப்பமாக இருந்தது.

ராஜ்யாதிபதியான திவானின் வாரிசு ஆசைப்பிள்ளை. அபூர்வமான கரு!

ஆனால், பாட்டியும் அம்மாவும் ஒரு பிணம் எரியும் காட்சியை பார்த்ததற்கே ஏதேதோ கூறுகிறார்கள்.

அதுவும் நல்லதற்குத்தான்...

வைஜெயந்தி பஞ்சணையைத் தேடிப் போய் விழுந்தாள்.

**அ**ந்த இரவு வேளையில் சத்திரத்தில் வெகு சிலரே படுத்துக் கிடந்தனர். அடக்கமாக ஒரு வேப்பெண்ணெய் விளக்கு மட்டும் எரிந்து கொண்டிருந்தது. விநாயக ராமனும் ஒரு மாதிரி அந்த இடத்தைக் கண்டறிந்து சத்திரத்து திண்ணையில் உடம்பைக் கிடத்தினான். அதே சமயம் வயிற்றிலும் லேசான உபாதை. இயற்கைக் கடன் அவனை சத்திரத்தை ஒட்டி ஒரு மறைவிடத்தை நோக்கிப் போகச் சொன்னது. ஆனால், அருகே நீர் நிலை இல்லை. நீர்நிலை எங்கே உள்ளது என்று தேடிக் கொண்டே நடந்ததில் மயானம் வந்துவிட்டது. மயானக் கரையில் காவிரியின் கிளை வாய்க்கால். அந்த நேரத்தில் அந்த கிளைவாய்க்காலில் சுடுகாட்டுப் புலையன் குளித்துக் கொண் டிருந்ததுதான் ஆச்சரியம். விநாயகராமன் கவனம் அவன் மேல் சென்றது. புலையனோ குளித்து முடித்தவனாக கரை ஏறி கிழக்குத் திசை நோக்கி ஈரம் சொட்ட சொட்ட நடக்கத் தொடங்கினான்.

'யார் இவன்? எங்கே செல்கிறான் இந்த வேளையில்?'

விநாயக ராமனை ஆர்வம் தொற்றிக் கொண்டது. அவசர அவசரமாக இயற்கைக் கடனை முடித்துவிட்டு அந்த புலையன் சென்ற திசை நோக்கித்தான் ஓடினான்.

அப்படி ஓடியவன் ஒரு வில்வமரத்தடியில் ஒரு அதிசயக் காட்சியைக் கண்டான். அந்த மரத்தடியில் ஒரு சிறிய சிவலிங்கம். அதன் முன் விளக்கு ஒன்றை ஏற்றி வைத்துவிட்டு சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தான் புலையன்.

ஒரு கட்டத்தில் அப்படியே தேங்கி நின்றவன் லிங்கத்தைப் பார்த்து வாய்விட்டு வருத்தப்படத் தொடங்கினான்.

“சாமி... கேடுகெட்ட புலையனாப் பொறந்திட்டேன் உன்னை ஊருக்குள்ள இருக்கற கோயிலுக்குள்ள போய் கும்பிட எனக்கு அனுமதி இல்லை. அதான் இந்த மரத்தடில உன்னை வெச்சு கும்புடறேன்.

நாள் தவறினாலும் நான் உன்னைக் கும்புடறது தவறு தில்ல. இருந்தும் நீ எனக்கு ஒரு வாரிசைக் கண்ணுல காட்டமாட்டேங்கறே. பத்து வருஷமா சுட்டுனவ வயித்துல ஒரு புழுபூச்சி இல்லை.

சுடுகாட்ல எல்லாருக்கும் அவங்கவங்க பிள்ளை குட்டிங்கதான் கொள்ளி வைக்கறாங்க. ஆனா, ஊர் பொணத்தை பூரா எரிக்கற எனக்கு நான் பொணமானா எரிக்க ஆள் இல்லை கவனிச்சீங்களா?”

சிவலிங்கம் முன்னால் ஏதோ சிவபெருமானே அமர்ந் திருப்பது போல பாவித்துக் கொண்டு அவன் பேசுவது சற்றுத் தள்ளி கவனித்தபடி இருந்த விநாயகராமன் காதிலும் விழுந்தது.

அந்த நொடி வில்வ மரத்தில் இருந்து ஒரு வில்வ இலை சிவலிங்கம் மேல் விழுந்தது. புலையன் கோரிக்கையை நிறைவேற்றுகிறேன் என்று சொல்வது போல் இருந்தது. விநாயகராமனுக்கு நிமித்திக சாஸ்திரம் நன்கு தெரியும். மனிதன் என்பவன் மொழியைக் கண்டுபிடித்து அதன் மூலம் பேசினால் இயற்கையும் தனக்கென்று ஒரு மொழியை வைத்துக்கொண்டு அதன் மூலம்தான் பேசிக்கொள்கிறது.

அதை எல்லோராலும் புரிந்துகொள்ள முடியாது. அதைப் புரிந்துகொள்ளவோ இறைவனின் கருணையும் அருளும் நிறைய வேண்டும். அது விநாயகராமனிடம் இருந்தது. புலையன் கோரிக்கை ஈடேறப் போகிறது என்பது விளங்கி விட்டது. அது அப்பொழுதே ஒரு சம்பவம் போல நடைபெறத் தொடங்கியதுதான் ஆச்சரியம்.

அந்த மயானத்துக்குள் ஒரு மனிதன் ஒரு ஐந்து வயது பாலகனுடன் நுழைந்து கொண்டிருந்தான். உடம்பெல்லாம் ஒரு துப்பட்டியால் மூடியிருந்தான். நடையிலும் ஏராளமான தள்ளாடல். அவன் அருகே வந்த பிறகுதான் தெரிந்தது அவன் மரணத்தை நெருங்கிவிட்ட ஒரு பெரு நோயாளி என்று.

புலையனுக்கு அவனைப் பார்க்கவும் பகீர் என்றது.

துளியும் அரவமின்றி கீழே விழத் தெரிந்த அவனைப் போய் தாங்கி அவன் தலைக்கு தன் மடியையும் கொடுத்தான். அருகில் கண்ணீருடன் பாலகன். நெற்றி நிறைய நீறு. கழுத்தில் ஒரு உருத்திராட்சம் உள்ள மாலை. இடுப்பில் ஒரே ஒரு துண்டு. பார்க்க லட்சணமான பாலமுருகன் தோற்றம். ஆனால், கண்களிலோ நீர் முத்துக்கள்.

"ஐயா... ஐயா... யார் நீங்கள்?"

"நான்... நான்... நான் ஒரு கேடு கெட்ட பிராமணன்."

"பிராமணரா?" - கேட்டபடியே தன் உடலை அவனிடம் இருந்து விலக்கினான்.

"ஐயோ... நீ கூடவா என் பெரு நோய்க்கு அஞ்சுகிறாய்?" பிராமணன் வெடித்தான்.

"இல்லை ஐயா... நீங்களோ பிராமணர் நானோ புலையன். நான் தங்களை தீண்டக் கூடாதல்லவா?"

"அப்படிச் சொல்லியே உன்னை ஒதுக்கிவிட்டார்கள். என்னிடம் அந்த கர்வம் மிகுதியாக இருந்தது. பிராமணன் ஆக பிறந்தும் பிராமணன் ஆக நான் வளரவில்லை. சதைப் பசி பிடித்து அலைந்தேன். திருமணமாகியும் என் காமம் அடங்க வில்லை. விலை மகளிர் இல்லங்களில் பழியாக கிடந்தேன். உடம்பாசை பிடித்த எனக்கு உடம்பாலேயே பதில் வந்து விட்டது. இந்த உடம்பை ஒரு ஆலயம் என்றார் திருமூலர். நானோ காமத்தால் இந்த பெருநோய்க்கான வீடாக்கிவிட்டேன். என் மனைவியும் இதைக் காண சகிக்காமல் கிணற்றில் குதித்து தற்கொலை செய்து கொண்டாள். இவன் என் மகன். எப்படியோ தப்பிவிட்டான். ஆனால், இவனை ஊரில் ஒருவர்கூட தீண்ட மறுக்கின்றனர். என்னுடன் இவன் இருப்பதால் இவனுக்கும் நோய்த் தொற்று இருக்கும் என்பது அவர்கள் எண்ணம்."

அந்த பிராமண மனிதன் ஒரு சோக கீதம் பாடினான்.

"நான் ஊருக்குள் வைத்து இறந்தால் என்னை அள்ளிப் போடக் கூட யாரும் அருகே வரமாட்டார்கள் என்பதால்தான் தட்டுத் தடுமாறி மயானத்துக்கே நான் வந்துவிட்டேன்.

என் உயிர் இனியும் தங்கியிருக்கப் போவதில்லை. ஏதோ என் மகனுக்காக இந்த உயிரை இழுத்து வைத்துக் கொண்டு உன்னிடம் பேசியபடி இருக்கிறேன் உன்னை கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். என் மகனுக்கு எந்த வியாதியும் இல்லை.

தயவுசெய்து இவனை நீ ஏற்றுக்கொள் உனக்கு உதவியாக இந்த மயானத்தில் இவனும் இருக்கட்டும். உனக்கு ஒப்புதல் இல்லையானால் என்னை எரிக்கும்போது அதில் இவனையும் சேர்த்து தள்ளிவிட்டுவிடு...''

பிராமணனின் உதடுகள் துடித்தன. அப்படியே சில நொடிகளில் உயிரும் போய்விட்டது. பார்த்துக் கொண்டே யிருந்த புலையன் கண்களில் நீர் திரளத் தொடங்கியது. அப்படியே அந்த பாலகனை கைகளில் சுமந்து கொண்டு திரும்பவும் வில்வமரத்து சிவலிங்கம் முன் வந்து நின்றான். பாலகனை கீழே இறக்கிவிட்டு கைகளைக் கூப்பினான். கண்களில் தாரைதாரையாக நீர் வழிந்தது.

''சாமி... நான் சாதாரண தகரத்தைத்தான் உன்கிட்ட கேட்டேன். நீயோ ஒரு தங்கத்தையே எனக்கு கொடுத்துட்டே... இந்த புள்ள இனி என் புள்ள, என் புள்ள சாமி என் புள்ள...'' என்று உணர்ச்சி வசப்பட்டான்.

பார்த்தபடி இருந்த விநாயகராமனுக்கும் கண்களில் நீர் திரண்டுவிட்டது. 'என்ன ஒரு அரிய காட்சி. என்ன ஒரு அரிய சம்பவம். தோடிபுரம் ஊருக்குள் நுழைந்து முழுதாய் அரை நாள் கழியவில்லை. அதற்குள்தான் எத்தனை எத்தனை அதிசயங்கள். அங்கே சாஸ்திரிகளின் வீட்டில் ஒரு விதமான அனுபவம் என்றால் இங்கே ஆற்றங்கரை ஓரமாய் அதைவிட வித்தியாசமான அனுபவம்.'

எந்த ஒரு பிராமணனுக்கு சுடுகாட்டுப் புலையனாகத் திகழ மனம் ஒப்பும். ஆனால், காலம் சிலநேரம் இப்படியும் விளையாடி விடுகிறது. அதன் விளையாட்டில் ராமாயணத்தில் ராமனும், மகாபாரதத்தில் கிருஷ்ணனுமே பாதிக்கப்பட்டு அதற்கேற்ப செயல்பட்டபோது இந்த பிராமணன் எம்மாத்திரம்!

மாயை அந்த பிராமணனை காமுகனாக்கி, மகனைப் பிரித்து இப்படி ஒரு புலையனுக்கு மகனாக்கிவிட்டதே... இதை என்னென்பது?

**வி**டிந்துவிட்டது. சத்திரத்தில் கண்விழித்த விநாயக ராமனுக்கு காலை வெயிலில் தோடிபுரத்தைப் பார்ப்பது மிகப் பிடித்திருந்தது. முதல் காரியமாக கோவிலுக்கு செல்ல வேண்டும் என்றுதான் மனதும் விரும்பியது. அதற்கு முன் காவேரிக்கு

சென்று ஸ்நானம் செய்ய வேண்டும். அப்படியே ஓடும் நீரில் நின்றுகொண்டு சந்தியாவந்தனம் என்னும் சந்தி செய்வது என்பது ஒவ்வொரு பிராமணனைப் பொறுத்தவரையும் ஒரு தலையாய கடமையாகும்.

அந்த கடமைகளுக்காக தயாரானான் விநாயகராமன். அந்த சத்திரத்தை விட்டு அதன் பொருட்டு அவன் நீங்கியபோது எதிரில் ஆஜானுபாகுவாய் குதிரைமேல் அமர்ந்த நிலையில் ஒருவன். பார்க்க பாண்டிய நாட்டானாகவும் இல்லாமல் தோடி நாட்டானாகவும் இல்லாமல் ஒரு தினுசாக இருந்தான். சத்திரத்து முன்னால் உள்ள கொழு கொம்பில் குதிரையைக் கட்டிவிட்டு சத்திரத்துக்குள் நுழையத் தொடங்கினான். அவனை உரசிக் கொண்டு கடந்தாக வேண்டிய ஒரு நிலை விநாயகராமனுக்கு.

அந்த சமயத்தில் அவனிடம் இருந்து தூக்கலாக மதுவாடை. 'காலை வேளையில் கூடவா ஒரு மனிதன் இப்படி குடியோடு திகழ முடியும்?' ஆச்சரியமாகிவிட்டது விநாயக ராமனுக்கு... அவனோ உள்ளே நுழைந்த நொடி காலை நீட்டி படுத்துக் கொண்டான். தலைப்பாகையைக் கழட்டிய பிறகே தெரிந்தது அவன் ஒரு மராத்தியன்.

அதே சமயம் அந்த மராத்தியன் முகத்தில் ஒருவித கொடூரம். கவனித்தபடி இருந்த விநாயகராமனுக்கு அவன் சாதாரண ஒரு மனிதனாகவே தெரியவில்லை.

யார் இவன்? எதற்கு வந்திருக்கிறான்?'

கேள்வியுடன் உற்றுப்பார்க்கத் தொடங்கினான். அவனோ விநாயகராமன் கவனிப்பதை எல்லாம் ஒரு பொருட்டாகவே கருதவில்லை. சுற்றிச் சுற்றித்தான் பார்த்தான்.

விநாயகராமனுக்கும் பொறுமை போய்விட்டது.

"அய்யா... தாங்கள் யார்? யாரைத் தேடுகிறீர்கள்?" என்று கேட்டேவிட்டான்.

அவனோ அதற்கு பதில் கூறுவதாக இல்லை. ஒரு பார்வை மட்டும் பார்த்துவிட்டு திரும்பவும் சூழலை அளக்கத் தொடங்கினான்.

விநாயகராமனுக்கு கொஞ்சம் சாமுத்ரிகா லட்சணமும் தெரியும். அதன்படி அவனது உடல் அமைப்பும் குறிப்பாக

நெற்றியை மறைந்தபடி வளர்ந்திருக்கும் தலை முடியும், சற்றே தட்டையான மடங்கலில்லாத காதுகளும் அவன் அவ்வளவு நல்ல மனிதனாக இருக்க வாய்ப்பில்லை என்பதை உணர்த்தின. சட்டென்று காலைப் பார்த்தான். பெருவிரலை விடவும் அதற்கு அடுத்தும் அதற்கு அடுத்தும் உள்ள விரல்கள் நன்கு நீண்டு வளர்ந்திருந்தன. இப்படி காலில் இரு விரல்கள் ஒரே அளவு நீட்டத்தில் இருப்பதும் நல்லதில்லை. பூர்வ ஜென்மம் என்பது இவர்கள் வரையில் மாமிச பட்சிணியான புலி, சிங்கப் பிறப்பாகத்தான் இருக்க வைத்திருக்கும். இருந்தும் அப்பிறப்பில் அறிந்தும் அறியாமல் சிவலிங்க வழிபாட்டினை பிரதோஷ காலத்தில் செய்ததில் அந்த மாமிச பட்சிணிக்குரிய தோஷங்கள் அனைத்தும் நீங்கி மனிதப் பிறப்புக்கு சித்தி ஏற்பட்டிருக்கும்.

மனிதனாய்ப் பிறந்தாலும் முற்பிறப்பின் அந்த ரத்த வாசம் மிகுந்த ரசனைகள் போயிருக்க வாய்ப்பில்லை. அவை மனதை நல்ல நிலையிலேயே செலுத்தாது. விநாயகராமன் இப்படி எல்லாம் எண்ணுவதில் துளியும் பிழையே இல்லை என்கிற மாதிரிதான் இருந்தது அவனுடைய அடுத்தடுத்த செயல் பாடுகளும்.

அந்த சத்திரத்தில் மறுநாள் சமைப்பதற்காக பச்சைக் காய்கறிகள் வாங்கி குவிக்கப்பட்டிருந்தன. பூசணி, கத்தரி, புடலை, வெண்டை என்று எல்லாவிதமான காய்கறிகளும் அங்கே இருந்தன. சத்திரக்காவலாளியோ படுத்துறங்கச் சென்று விட்டான். இந்த மராத்தியன் அந்த காய்கறிகள் அருகே சென்றான். அப்படியே பச்சையாகவே எடுத்து அவைகளை சாப்பிட ஆரம்பித்துவிட்டான். விநாயகராமன் முகத்தில் ஈயாடவில்லை. 'இவன் நிச்சயம் மனித உருவில் வந்திருக்கும் ஒரு மிருக மனிதனே' என்று தீர்மானமாக தனக்குள் கூறிக் கொண்டான். தொடர்ந்து அவனையே கவனிக்க ஆரம்பித்தான்.

## இன்று

**த**னது குடிசை முகத்தில் துணியால் ஊஞ்சல் கட்டி அதில் குழந்தையைவிட்டு ஆட்டிக் கொண்டிருந்தாள் புதையலை எடுத்த அந்த விவசாயியின் மனைவி. அவனைக் காணவில்லை. எங்கே போனான் என்று தெரியவில்லை.

ஆனாலும் அவள் முகத்தில் ஒரு புதுப் பொலிவு, தங்கள் வாழ்க்கையே அப்படியே அடியோடு மாறிவிட்டது போல ஒரு கற்பனை.

அது அவள் குழந்தையைத் தாலாட்டி பாடுவதில் நன்கு வெளிப்பட்டது.

"தவமாத் தவமிருந்து நான் பெத்த தங்கமே... நீ வந்த நேரம்தான் தொட்டதெல்லாம் தங்கமே! ஒரு காணி நிலம் மேல சாணிப் புழுபோல இருந்த காலம் போயாச்சு! துரைசாணி மகன் நீயும் என்றேதான் காலமும் சொல்லியாச்சே...!"

ராகம் போட்டு வெகு அழகாகப் பாடினாள் அவள். ஆனால், அவள் மகிழ்ச்சி அதிக நேரம் நீடிக்கவில்லை. குடிசை வாசலில் சல்சல்லென்று காரும் ஜீப்பும் வந்து தேங்கி நின்றன. அதில் இருந்து பிரசிடெண்ட் கல்யாணசுந்தரமும் காயத்ரியும், கூடவே போலீஸ் இன்ஸ்பெக்டரும் இறங்கினார்கள்.

அவர்களைப் பார்க்கவும் அவள் உடம்பெல்லாம் நடுங்க ஆரம்பித்துவிட்டது.

"ஏபுள்ள எங்க உன் புருஷன்?" கல்யாணசுந்தரம் அதட்டலாகக் கேட்டார்

"அவரு... அவரு வெளிய போயிருக்காரு... என்னங்க எஜமான்... எதுக்காக இப்படி எல்லாரும் ஒண்ணு மண்ணா வந்துருக்கீங்க?" என்று அவளும் படபடக்கத் தொடங்கினாள்.

"ஏன்... எல்லாத்தையும் விலாவரியா சொல்லணுமா? உனக்குத் தெரியாதா?"

"எனக்கு... எனக்கு..."

"என்ன எனக்கு... வயக்காட்டுல எதையோ கண்டெடுத்தே போலருக்குதே?"

கல்யாணசுந்தரம் அப்படிக் கேட்டதுதான் தாமதம் அவள் கப்பென்று வாயை மூடிக் கொள்ள, வெளியே போயிருந்த அவளது புருஷனும் கச்சிதமாக அப்போது வர, போலீஸ் இன்ஸ்பெக்டர் எகிறிப் பிடித்தார்.

"சாமி... நாங்க எதையும் எடுக்கலை, யாரோ பொய் சொல்லியிருக்காங்க..." அவன் சமாளிக்கப் பார்த்தான் ஆனால், கல்யாணசுந்தரம் வீட்டுக்குள் சோதனை போட உள்ளே நுழைந்துவிட்டார்.

உறிபானைகள் வரிசையாகத் தொங்கியபடி இருந்தன. தரையில் ஒரு பெரிய தாழிப்பானை ஒன்றுள் அந்த புதையல் பானை இருந்தது.

கஷ்டப்பட்டு வெளியே எடுத்து வந்து மூடியைத் திறந்து பார்த்த கல்யாணசுந்தரத்துக்கு ஜிலீர் என்றது. உள்ளே வழிய வழிய தங்க நாணயங்கள் மஞ்சளாய் மின்னிக் கொண்டிருந்தன!

அந்த விவசாயி அதன்பின் எதுவும் பேசவில்லை. தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டான். இன்ஸ்பெக்டர் கல்யாணசுந்தரத்தை ஒரு வெற்றிப் பார்வை பார்த்தார். பின் இருவரும் தகவல் கொடுத்த காயத்ரியை பார்த்தனர்.

"பிரசிடெண்ட் சார்... இது தற்சமயம் உங்க கஸ்டடியில் இருக்கட்டும். நாளைக்கு ஞாயித்துக்கிழமை. கவர்மெண்ட் லீவு நாள். நாளானிக்கு திங்கள்கிழமை, தாசில்தார் ட்யூட்டிக்கு வந்துடுவார். அப்ப தகவல் கொடுத்து அவர் வந்து பார்த்து முறைப்படி எடுத்துக்கிட்டுப் போகட்டும்" என்ற இன்ஸ்பெக்டர், "இப்போதைக்கு இதை எடை போட்டு எவ்வளவு இருக்குன்னு மட்டும் நோட் பண்ணிக்கறேன்" என்றார்.

அப்படியே எடை போட்டதில் நாலே கால் கிலோ தங்கம் இருப்பது தெரியவந்ததில் எல்லோரும் வாயைப் பிளந்து விட்டனர். பின் அப்படியே அந்த புதையல் பானையை ஒரு மஞ்சள் துணியில் கட்டி திருப்பதி உண்டியல் போல் ஆக்கினார். அப்படியே தூக்கி கல்யாணசுந்தரம் கையில் வைத்தவர் ஒரு முறைக்கு இருமுறை "கவனம் தலைவரே... கவர்மெண்ட் சொத்து இது" என்றார். அப்படியே திரும்பி காயத்ரியைப் பார்த்து அவளைப் பாராட்டவும் தவறவில்லை.

கல்யாணசுந்தரமும் அந்த புதையல் பானையை கைகளில் தூக்கமாட்டாமல் தூக்கிக் கொண்டு பஞ்சாயத்து அலுவலகத் தில் வைத்து பூட்ட உத்தேசித்தவர் சட்டென்று மனதை மாற்றிக் கொண்டார்.

அவர் சகாக்களும், 'அங்கே சரியான பாதுகாப்பு இல்லை. தற்சமயம் உங்க வீட்டு நிலவறைதான் மிக மிக தோது' என்றனர்.

கல்யாணசுந்தரத்துக்கும் வேறுவழி இருப்பதாகத் தெரியவில்லை. இன்ஸ்பெக்டரோ கிளம்பிப் போய்விட்டார்.

அதுவோ திருப்பதி உண்டியல் போல அவர் கைகளில் கனத்தபோது எதிரில் உபாசகர் வேறு வந்துவிட்டார். "வாங்க

சாமி... எங்க உங்கள காணமேன்னுதான் பாத்துக்கிட்டிருந்தேன். நல்லவேளை வந்துட்டீங்க."

"என்ன கல்யாணசுந்தரம் இது கைல... திருப்பதிக்கு போறதா ஏதாவது நேர்த்திக்கடனா?"

"சேச்சே... அதெல்லாம் எதுவுமில்ல சாமி. இது புதையல் பானை..." - கல்யாணசுந்தரம் நடந்த அவ்வளவையும் சொல்லி முடிக்க, உபாசகர் முகத்தில் லேசாய் சலனம்.

"என்னசாமி... என்ன சிந்தனை?"

"இல்ல... இப்படிக் கிடைக்கற புதையல் கொஞ்சம் ஆபத்தானது கல்யாணசுந்தரம்."

"என்ன சாமி சொல்றீங்க?"

"எனக்கென்னவோ இது உங்களை ரொம்ப கஷ்டப்படுத்தும்னு தோணுது."

"உண்மைதான். என்ன கனம் கனக்குது தெரியுமா?"

"அட நீங்க ஒண்ணு... நான் இதோட கனத்தை சொல்லலை. குணத்தை சொன்னேன்."

"புரியலையே சாமி நீங்க பேசறது..."

"பொதுவா புதையல்லாம் எடுக்கக் கூடாது கல்யாண சுந்தரம். மீறி எடுத்தா அதை அப்படியே கோவிலுக்கு தானமா கொடுத்துடணும்."

"அது சரி... ஆனா அதுக்கு சட்டத்துல இடமில்லையே..."

"சட்டத்துல இடமில்லேங்கறதுக்காக என்னால உங்களுக்கு தப்பான யோசனையை சொல்ல முடியாது கல்யாணசுந்தரம்."

"என்ன சாமி பண்ணச் சொல்றீங்க. ஊர் பிரசிடெண்டா வேற இருக்கேன். அரசாங்கத்தோட கஜானாவுக்கு போற வரை இதை நான்தானே பாதுகாத்தாகணும்..."

"பார்த்து... திரும்பவும் சொல்றேன் இதோட நீங்க வீட்டுக்குள்ள நுழையறது நல்லதில்ல."

உபாசகரின் உள்ளுணர்வுகள் கல்யாணசுந்தரத்தை பலமாகவே எச்சரித்தன. ஆனால், அதற்கெல்லாம் பெரிய பலன் கிடைக்கவில்லை. கல்யாணசுந்தரம் தன் வீட்டுக்கு அந்த புதையல் பானையுடன் புறப்பட்டுவிட்டார்.

**வீ**டு முழுக்க தேடி ஓய்ந்துவிட்டிருந்தாள் காயத்ரி. மதியம் சாப்பிடுவதற்காக வந்திருந்த பட்டர்கூட அவள் தேடுவதைப் பார்த்து "யாரைத் தேடுறே?" என்று கேட்டார்.

"இந்த கிறுக்கு அசோகனைத்தான்..."

"அப்படிச் சொல்லாதம்மா. பாவம்... சின்ன வயசு. ஏதோ இப்படி ஆயிடுத்து..."

"என்ன சின்ன வயசோ... ஏன்தான் இவனுக்கு சித்த பிரமை பிடிச்சிதுன்னு இருக்கு. இவனோட லூட்டியை தாங்க முடியலை..." பெரிய அளவில் அலுத்துக்கொண்டே அவன் சதா அடங்கிக் கிடக்கும் ஸ்டோர் ரூமை எட்டிப் பார்த்தாள்.

உள்ளே ஒரு அதிசயக் காட்சி கண்ணில்பட்டது. சுவரில் பெரிதாக பாபாவின் படம் வரையப்பட்டிருந்தது. கரியால்தான் அசோகன் வரைந்திருந்தான். ஆனால், அச்சு அசல் அப்படியே இருந்தது. முன்னால் ஒரு அகல் விளக்கும் எரிந்தபடி... அகல் விளக்கில் எண்ணெய்க்கு பதிலாக தண்ணீர்!

தண்ணீரில் விளக்கெரியுமா?

அதிர்ந்து போனாள் காயத்ரி. பட்டரும் வந்து பார்த்துவிட்டு மூக்கில் விரலை வைத்தார். "அப்பா... இப்படித் தாம்ப்பா இவன் வந்ததுல இருந்தே ஏதேதோ நடக்கறது. எனக்கு ஒண்ணுமே புரியிலப்பா. இது பாபா படம்தானேப்பா?"

"பாபாதாம்மா... நேர்ல பார்த்தா மாதிரி அச்சு அசலா வரைஞ்சிருக்கான் அசோகன். இப்படி வரைய மனசுல ஒரு ஸ்திரத்தன்மை வேணும். ஆனா, புத்தில ஸ்திரத்தன்மை இல்லாதவனைத்தான் பைத்தியம்கறோம்... அசோகன் எப்படி பைத்தியமா இருக்க முடியும்?" பட்டரே பெரிய அளவில் குழம்பினார். அதை ரகசியமாய் பார்த்து மனதுக்குள் சிரித்துக் கொண்டிருந்தாள் மைதிலி.

அது சரி... எங்கே அசோகன்?

**பு**தையல் பானையுடன் வீட்டுக்கு நுழைந்தவரைப் பார்த்து வெலவெலத்து விட்டாள் ரங்காயி.

"என்னங்க இது கைல உண்டியல் பானை?"

"உண்டியல் பானை இல்ல ரங்கம். இது புதையல் பானை. நம்ம ஊர் வயக்காட்டுல உழுவும்போது கிடைச்ச பொக்கிஷம். நாலே கால் கிலோ எடை இருக்குதுன்னா பார்த்துக்கயேன்..."

கல்யாணசுந்தரம் குரலில் உற்சாகம் கொடிகட்டிப் பறந்தது.

"அப்ப இது நமக்கா?" ரங்காயி அப்படிக் கேட்கவும் சிரிப்பு வந்துவிட்டது.

“சரிதான்... இதை நாம எடுத்துக்கிட்டா அவ்வளவுதான். அப்புறம் நான் பிரசிடெண்ட் கல்யாணசுந்தரமில்லை. கைதி கல்யாணசுந்தரம். ஞாபகம் வெச்சுக்கோ...”

“என்னங்க சொல்றீங்க?”

“கூறுகெட்டவளே இது அரசாங்க சொத்து, போய் உள்ள நிலவறைல வை. நாள மறுநாள் தாசில்தார் அய்யாவை தஞ்சாவூர்ல பார்த்து கூட்டிக்கிட்டு வந்து அவர்கிட்ட இது மொத்தத்தையும் ஒப்படைக்கணும்.”

“அப்படியா?”

“அப்படியேதான்...”

“அது சரி... இந்த விஷயம் நம்ம தாசி சுந்தரத்துக்கு தெரியுமா?”

ரங்காயி அப்படி ஒரு கேள்வி கேட்பாள் என்று கல்யாணசுந்தரம் துளியும் எதிர்பார்க்கவில்லை. பதிலுக்கு ரங்காயியை ஒரு முறை முறைத்தார்.

“ஏன் இப்படிப் பாக்கறீங்க?”

“இப்ப எதுக்கு அவ பேச்சை எடுத்தே?”

“என்னங்க கேள்வி இது.. நல்லதோ கெட்டதோ அவங்களுக்கு தெரிவிக்கிறதுதானே எப்பவும் வழக்கம்.”

“அந்த பழைய வழக்கத்தை எல்லாம் நான் மாத்த விரும்பறேன் ரங்காயி. நீ போய் வேலையைப் பாரு. ஒரு ஆம்பளை. ஒரு பொட்டச்சி பின்னால போய் ஒளிய முடியாது.”

“இல்லீங்க... அது வந்து...

“நீ இதுக்கு மேல ஒரு வார்த்தை பேசக் கூடாது...”

கல்யாணசுந்தரம், ரங்காயியை அதட்டி அடக்கிவிட்டு தன் வீட்டு நிலவறை நோக்கித்தான் சென்றார். அந்த நாட்களில் நிலவறை வைத்து கட்டப்படாத பணக்கார வீடுகளே இல்லை எனலாம். பூமியில் தரைக்குக் கீழே இருக்கும் படிகள் கீழ் இறங்கிச் செல்லும். மேலே மூடிவிட்டால் வீட்டுக்குள் அப்படி ஒரு அறை இருப்பதே யாருக்கும் தெரியாது.

திருடர்கள் எப்பொழுதும் பீரோவில் உள்ளதையும் பெட்டியில் உள்ளதையும்தான் தேட்டையிடுவார்கள் அவர்களால் நிலவறைக்குள் எல்லாம் நுழைய முடியாது. மீறி

நுழைந்தால் வெளியே வரமுடியாது. வசமாக பொறியில் அகப்பட்ட எலி போல் மாட்டிக் கொள்வார்கள்.

அப்படிப்பட்ட நிலவறைக்குள்தான் பரம்பரை நகை களையும் வைத்துப் பாதுகாப்பார்கள். நிலவறை உள்ள வீடுகள் நல்ல செல்வச் செழிப்போடும் கூட இருக்கும்.

கல்யாணசுந்தரத்துக்கும் தன் வீட்டுக்குள்ளும் நிலவறை இருப்பதில் பெருமையோ பெருமை. வாஸ்தவத்தில் தாசி சுந்தராம்பாள் வீட்டில்தான் அப்படி ஒரு நிலவறை முன்பு இருந்தது. அதில் அவள் பெட்டி பெட்டியாக தங்க நகைகள் வைத்திருப்பதாக கூறுவார்கள்.

கோவில் தாசியாக அவள் வம்சாவளியினர் இருந்த போது கோவில் நகைகளில் சரிபாதி அவளுக்கும் சொந்தமாக இருந்தது. அவ்வளவும் பெரிய அளவில் கல் வைத்த வயணமாக நகைகள். பார்க்க பார்க்க பிரமிப்பு தட்டும். இப்பொழுதும்கூட சுந்தராம்பாளின் தாயான வடிவாம்பாள் நூறு பவுன் காசு மாலை இல்லாமல் வெளியே வரவேமாட்டாள். அதெல்லாமும் கூட கல்யாணசுந்தரம் ஒரு போட்டி மனப்பான்மையில் தன் வீட்டில் நிலவறை கட்ட காரணம் ஆகிவிட்டது.

நிலவறைக்குள் தங்கம், வெள்ளி, காசு பணம் என்கிற மகாலட்சுமி சார்ந்த விஷயங்களைத்தான் வைக்கலாம். போனால் போகிறது என்று சில வீடுகளில் தேங்காய்களைக் குவித்து வைத்திருப்பார்கள். ரங்காயி அப்படி எல்லாம் தன் வீட்டு நிலவறையில் செய்திருக்கவில்லை. ஏன் என்றால் அதன் சாவி எப்போதும் கல்யாணசுந்தரத்திடம் தான் இருந்தது.

கல்யாணசுந்தரமும் நிலவறைக் கதவைத் திறந்துகொண்டு உள் இறங்கினார் கொஞ்சம் வெப்பமாகக்கூட இருந்தது. உள்ளே ஒரு யானையின் எடையைவிடக் கூடுதலான அந்த நாளைய ஐம்பொன்னால் ஆன நகைப்பெட்டி. அதைத் திறக்காமல் அதன் மேல் அந்த பானையை வைத்தார். சற்று எட்ட நின்று ஒரு பார்வை பார்த்தார். ஆனால், எதனாலோ அந்த அறைக்குள் புன்னகை முகத்துடன் அவரையே பார்த்தபடியே ஒரு மூலையில் நின்றுகொண்டிருந்த அசோகனை அவர் பார்க்கவில்லை.

அவன் முகத்திலோ ஒரு நாடகத்தை தான் நடத்திக் கொண்டிருக்கும் திருப்தி... கூடவே 'இனி என்னவெல்லாம்

நடக்கப் போகிறது தெரியுமா' என்று அவன் கேட்பது போலவும் ஒரு பாவனை.

அப்படியே அந்த நிலவறைக்குள் அவன் எப்படி வந்தான், எதற்கு வந்தான் என்றெல்லாமும் கேள்விகள்!

**கோ**வில் நந்தவனத்தில் ஏராளமாய் பூ பூத்திருந்தது. எப்பொழுதுமே பதினைந்து நிமிஷத்திற்கு ஒருமுறை என்று ஒரு குறுமழை பொழிந்தால் அது ஊருக்கு அல்ல... அன்றாடத் தாவரங்களுக்கு நல்லது. மரம் மட்டைகள் எல்லாம் நித்ய தாவரங்கள் செடி கொடிகள் அதில் இருந்து மாறுபட்ட அன்றாட தாவர வகைகளைச் சேர்ந்தவை. அவைகளுக்கு குறுமழை என்பது விருந்து போன்றது.

அதிலும் பூச்செடிகள் குறுமழையில் நனைந்தால் பூரித்துப்போய்விடும். வேறுக்குள் திரண்டிருக்கும் மொட்டுகள் கூட மளமளவென்ற தண்டு வழியாக மேலேறி மொட்டாகி நின்று மளமளவென்று அவிழ்ந்து மலராகிவிடப் பார்க்கும்.

இதெல்லாம் குறுமழைக்கே உரிய சக்தி. அதனாலோ என்னவோ தோடீஸ்வரர் கோவில் நந்தவனம் முழுக்க ஒரே பூக்காடாய் காட்சியளித்துவிட்டது. நந்தியாவட்டை, கொடி முல்லை, செம்பருத்தி, செவ்வரளி என்று செடிக்கு செடி பூத்துத் தள்ளிவிட்டது. இப்படிப் பூக்கும் பூக்களைப் பறித்து, கட்டி அதைக் கொண்டு மாலை தயாரிக்கும் உரிமையும் அதை ஸ்வாமிக்கு தன் கையாலேயே அணிவிக்கும் உரிமையும் தாசி குலத்தவர்களுக்கு மட்டுமே உண்டு.

எனவே சுந்தராம்பாள் வீட்டுக்கு அப்படிப் பூத்த மொத்த பூக்களும் எடுத்துச் செல்லப்பட்டு அவள் வீட்டுத் தாழ் வாரத்தில் வைக்கப்பட்டிருந்தன. கோவிலில் காவல் ஊழியம் பார்க்கும் வையாபுரிதான் அவைகளைக் கொண்டுசென்று வைத்திருந்தான் அவனுக்கு புதையல் கிடைத்த விஷயம் தெரியும். ஆனால், அதை தாசியிடம் கூறக்கூடாது என்று கல்யாணசுந்தரம் கூறியது ஒரு உறுத்தலாக உறுத்திக் கொண் டிருந்தது.

பூ வாசத்தை நெகிழ்ந்தபடி தாசி சுந்தராம்பாள் வரவும் அவளை நெளிந்தபடியே பார்த்தான்.

"வா வையாபுரி... என்ன இன்னிக்கு இன்னும் நின்னுகிட்டிக்கே?"

"அம்மா..."

"சொல்லு..."

"உங்ககிட்ட ஒரு விஷயம் பேசணும்."

"ஒண்ணு என்ன... நிறைய பேசு. என்ன தயக்கம்?"

"இல்ல... இது நம்ம நாயனக்காரர் சம்பந்தப்பட்டது."

"என்ன... அவரைப் பற்றி ஏதாவது கோள் சொல்லப் போறியா? அப்படின்னா நீ எதுவும் பேச வேண்டாம் கிளம்பு..."

"இது கோள் இல்லம்மா உங்களுக்குத்தான் கோள் சொன்னால்லாம் புடிக்காதுன்னு எனக்கு தெரியுங்களே."

"சரி... விஷயத்துக்கு வா. என்ன விஷயம்?"

"நம்ம ஊர் விஷயம் இது. வயக்காட்டுல உழுது கிட்டிருந்துருக்கான் நம்ம சங்கிலியப்பன் மகன். அவனுக்கு அது மஞ்சக்காணி. அதுல ஒரு பானைல புதையல் கிடைச் சிருக்குங்க..."

வையாபுரி இடைவெளி விடவும் சுந்தராம்பாள் நெற்றியில் ஆச்சரியம் பரவவும் சரியாக இருந்தது.

"அந்த புதையலை நம்ம நாயனக்காரர் இப்ப தன் வீட்டு நிலவறைலதாங்க வெச்சிருக்கார். இன்னிக்கு ஞாயித்துக் கிழமை லீவுங்கறதால நாளைக்கு தாசில்தார் வரவும் ஒப்படைச் சுடறதா இருக்கார்" என்றும் சொல்லி முடித்தான்.

"சரிதானே... சட்டப்படி எப்படி நடந்துக்கணுமோ அப்படித்தானே நடந்துக்கறாரு. அவர் ஒண்ணும் அதைத் தான் எடுத்துக்க நினைக்கலியே..."

"நான் அப்படிச் சொல்லலைம்மா. இது ஒரு பெரிய விஷயம். எதுவா இருந்தாலும் உங்களுக்குத் தகவல் தரணும் கறதுதானுங்களே நம்ம ஊர் தர்மம்."

"வாஸ்தவம்தான்... இப்ப என்ன, அவருக்கு பதிலா நீ வந்து சொல்லிட்டே. எனக்கும் தெரிஞ்சு போச்சு. இது போதாதா...?"

"என்னம்மா நீங்க அவரா வந்து மரியாதையா சொல்றதுங்கறது எப்படி? நான் வந்து சொல்றது எப்படி....? நீங்களே யோசிச்சுப் பாருங்க..."

"இதோ பார்... யார் சொன்னா என்ன? எனக்கு விஷயம் தான் கணக்கு. என்வரைல தகவல் கொடுத்தா அவர்தான் தலைவர். இப்போ நீ என் வரைல தலைவர். உன் செயலால நீ

தலைவராயிட்டே. ஆனா, அவரோ தான் தகவல் கொடுத்தா வேலைக்காரன் ஆயிடுவோம்னு நினைச்சுட்டார் தகவல் கொடுக்கலேன்னாதான் அப்படி ஆவோம்கறத அவர் மறந்துட்டார். யார் எதை செய்யறாங்களோ அதாலதான் அவங்களுக்குப் பெருமை. நீ போய் உன் வேலையை ஒழுங்கா கவனி. அது போதும்..."

சுந்தராம்பாள் சொன்ன விளக்கம் பொட்டில் அடித்தாற்போல் இருந்தது. கை எடுத்துக் கும்பிட்டபடியே விலகத் தொடங்கினான் வையாபுரி. இப்பொழுது அவன் இடத்தில் கோவில் பட்டர்.

அவரைப் பார்க்கவும் சுந்தராம்பாளுக்கு ஒரேயடியாக தித்தித்தது. தன் நம்பிக்கைக்குரிய தோழியின் கணவர். இன்றும் தன் மனதில் ஒரு தனி இடத்தில் இருப்பவர்.

"வாங்க பட்டரே... உட்காருங்க."

"இருக்கட்டும் சுந்தராம்பா... உன்கிட்ட சில விஷயங்கள் சொல்லிட்டுப் போறது நல்லதுன்னு தோணித்து... அதான் வந்தேன்..." என்று பீடிகை போடத் தொடங்கினார் பட்டரும்.

"என்ன... பிரசிடெண்ட் கல்யாணசுந்தரம் புதையலை தன் வீட்ல வெச்சுருக்கறத சொல்லப் போறீங்களா?"

சுந்தராம்பாள் அப்படிக் கேட்கவும் ஒரு அதிர்ச்சிப் பார்வை பார்த்தார்.

"என்ன... அதுதானே?"

"இல்ல சுந்தராம்பா. எனக்கு இந்த விஷயம் பத்தி எதுவும் தெரியாது."

"அப்ப நீங்க வந்த விஷயம்?"

"நான் அசோகனைப் பத்தி கொஞ்சம் பேசிட்டு போகலாம்னு வந்தேன்..."

"அசோகனைப் பத்தியா?" அவள் அப்படிக் கேட்கும் போதே சுந்தராம்பாளின் தாயும், திலகமும்கூட அங்கே வந்துவிட்டனர் டிஸ்பென்சரிக்கு கிளம்பிக் கொண்டிருந்த பானுவும் வந்து நின்றாள். எல்லோருடைய முகத்திலும் பட்டர் அடுத்து என்ன சொல்லப் போகிறார் என்பதுதான் பார்வையாக இருந்தது."

"அசோகன் வரைல அவனுக்கு சித்த பிரமைன்னு நீங்கள்லாம் நினைச்சிண்டிருக்கீங்க. ஆனா எனக்கென்னவோ அப்படி எல்லாம் இல்லைன்னு தோன்றது..."

பட்டர் அவர்களுக்கெல்லாம் மெல்லிய அதிர்ச்சியளித்தார். அப்படியே தொடர்ந்தார்.

"எதை வெச்சுச் சொல்றேன்னா பைத்தியக்காரங்கறவா ஒருவித குழப்பத்துல இருப்பா அற்புதங்கள் எதுவும் செய்யமாட்டா. அப்படின்னா என்னன்னே அவாளுக்கெல்லாம் தெரியாது."

பட்டர் சற்று இடைவெளிவிட்டார் அனைவரும் அவர் சொல்வதையே அழுத்தமாக கவனித்தபடி இருந்தனர். "அசோகன் சர்வசாதாரணமா அதிசயங்கள் செய்றா மாதிரி தான் எனக்குத் தோன்றது. இன்னும் சொல்லப்போனா அவன் அச்சு அசல் அந்த பாபாவே. அவர்தான் திரும்ப இவன் உருவுல வந்துட்டாரோன்னுகூட தோன்றது. இன்னிக்குகூட பாபா படத்தை அச்சு அசலா அப்படியே சுவத்துல வரைஞ்சவன், முன்னால பச்சத் தண்ணில தீபம் போட்டுருக்கான் அது இப்பவும் எரிஞ்சிண்டிருக்கு. தண்ணில விளக்கெரிக்க சித்த புருஷர்களால மட்டும்தான் முடியும். இதை இப்பக்கூட நீங்கள்லாம் என் வீட்டுக்குள்ள வந்து பார்க்க முடியும்."

- பட்டர் சொல்லச் சொல்ல சுந்தராம்பாள் முகம் ஜோதிப் பிழம்பானது. முதல் காரியமாக தன் தாயைத் தான் பார்த்தாள். அவளும் அர்த்த புஷ்டியுடன் அவளைப் பார்த்தாள்

"அம்மா... இவர் சொல்றதக் கேட்டியா, நமக்கு விடிவு காலம் வந்தாச்சும்மா..."

"ஆமாம் சுந்தரம். நானும் அப்படித்தான் நினைக்கறேன். வைத்தீஸ்வரன் கோவில்ல உனக்கு பார்த்த ஏடு அப்படியே பலிச்சிடுச்சு..."

அவர்கள் இருவரும் பேசிக்கொண்டது பட்டருக்கே விளங்கவில்லை.

"என்ன சுந்தராம்பா சொல்றே... வைத்தீஸ்வரன் கோவில்ல நீ ஏடு பாத்தியா? அதுல என்ன செய்தி வந்தது...?"

"அது எதுக்குங்க... ஒண்ணு உறுதி. பாபா திரும்ப வருவார். அவர் திரும்ப வர்ற வருஷம் சிவராத்திரி அன்னிக்கு ஒரு அற்புதம் நடக்கும். அதன் பிறகு எனக்கு விடுதலைன்னு ஒரு செய்தி இருக்கு. அதுல உள்ளதெல்லாம் நடக்க இருக்கு."

"நீ விடுதலைன்னு எதைச் சொல்றே சுந்தராம்பா?" பட்டரின் கேள்விக்கு சுந்தராம்பாள் பதில் கூறாமல் தன் மகளைத்தான் பார்த்தாள். பானுவும் புரிந்துகொண்டது போல வாய் திறந்தாள்.

"நாள் தவறாம நீங்க கோவிலுக்கு போற மாதிரியே - அங்க ஆறு கால பூஜை செய்யற மாதிரியே எங்களுக்கும் தாசி பங்களாவுல ஒரு வழிபாடு இருக்கே.. காக்கா குருவிகூட போகப் பயப்படற ஒரு மர்ம இடத்துக்கு தினம் ஒரு கூடையோட போய்ட்டு வர்றதுன்னா அது என்ன சாதாரண விஷயமா?

தலைமுறை தலைமுறையா இதுதானே இந்த வீட்டோட வேலை. விதிவிலக்கா நான் டாக்டருக்கு படிச்சுட்டு டிஸ்பென்சரி வெச்சிருக்கேன். ஆனா, நான்கூட அந்த வீட்டுக்குப் போக கூடையைத் தூக்க வேண்டி வந்துடுமோன்னு அம்மாவுக்குள்ள ஒரு பயம் இருக்காதா என்ன?"

பானு சொன்னதில் பட்டருக்கும் ஓரளவு விளங்கியது.

"தாசி பங்களா பூஜைல என்ன நடக்கறதுன்னு யாருக்குமே தெரியாது. ஆனா, ஒண்ணு தெரியும். அப்படி ஒரு பூஜை அங்க நடக்கலைன்னா இந்த ஊர் ஊரா இருக்காது. தோடீஸ்வரன் கோவில் பூஜையைவிட இது முக்கியம்கறதுதான் எல்லார் நினைப்பும். ஆனா, சுந்தராம்பா... நீ, அதை ஒரு பாரமாவா இவ்வளவு நாளா நினைச்சிண்டிருக்கே?"

பட்டர் அப்படித் திருப்பிக் கேட்பார் என்று சுந்தராம்பாளே எதிர்பார்க்கவில்லை.

திகைத்துத்தான் போனாள். பார்வையை பானு மேலும் திருப்பினாள். பானு முகத்திலோ பட்டர் அப்படிச் சொன்னதன் எதிரொலி.

"அப்ப... இந்த ஊர் உலகம் நல்லா இருக்க எங்க குடும்பம் காலகாலத்துக்கும் அந்த மர்மமான பூஜையை செய்துகிட்டுத் தான் இருக்கணுமா? நாங்களும் வெளிய வந்து ஒரு கல்யாணம் செய்துகிட்டு குழந்தை குட்டி பெத்துக்கற அந்த வாழ்க்கை எங்களுக்கு கூடாதா?"

- பானு கேட்ட விதத்திலேயே அவள் எங்கே வருகிறாள் என்பது பட்டருக்கு விளங்கிவிட்டது.

“அம்மாடி... என்னையே எடுத்துக்கோ. கோவில்ல சுவாமி முன்ன மந்திரம் சொல்லி பூஜிக்கறதுதான் என் தொழில். இதை நான் மறந்துட்டு வேற தொழில் செய்யப் போனா அது தர்மமில்லை. அப்படித்தான் இதுவும்...”

“உங்க மணியாட்ற உத்தியோகமும், எங்க கூடை தூக்கற உத்தியோகமும் ஒண்ணா?”

பானு பட்டரை வலுவாக பிடித்துக் கொண்டாள். ஆனால் சுந்தராம்பாள் அதை அனுமதிக்கவில்லை.

“பானு...! நீ இனி ஒரு வார்த்தை அவரை எதிர்த்து பேசக் கூடாது. எது எது எப்பப்ப எப்படியெப்படி நடக்கணுமோ அது அது அப்பப்ப அப்படியப்படி நடந்தே தீரும். இதை நீயும் சரி, யாரும் சரி மறந்துட வேண்டாம்” என்றவள், பட்டருடனேயே புறப்பட்டாள்.

“எங்க சுந்தராம்பா?”

“அசோகனைப் பார்த்துட்டு வந்துடறேன்...”

- சுந்தராம்பாள் அகலவும் அவளது தாய் வடிவாம்பாள் பானுவைத்தான் பார்த்து பெமூச்சு விட்டாள்.

“ என்ன பாட்டி... என் அம்மா மாதிரி நீயும் என் வாயை எதைச் சொல்லி மூடப்போறே?”

“பைத்தியக்காரி... எதுக்குடி மூடணும். இப்பதாண்டி என் மனசு லேசா இருக்கு.”

“அப்படின்னா?”

“எங்க நீயும் அந்த பங்களா பூஜைக்கு தயாராக வேண்டி வந்துடுமோன்னு நான் பயந்துகிட்டே இருந்தேன். நல்லவேளை. அந்த ஏடு மெய்யாயிடிச்சு.”

“அது என்ன பாட்டி ஏடு?”

“வேண்டாண்டி அம்மா... அப்புறம் நான் ஒண்ணு சொல்ல, நீ ஒண்ணு சொல்ல, ரசாபாசம்தான் மிஞ்சும். என் வாயைக் கிளறாதே...”

“இதோ பார்... இப்படி எல்லாம் பேசி என்கிட்ட இருந்து தப்பிக்க முடியாது. அது என்ன ஏடு? நீ சொல்லித்தான் தீரணும்.”

“எதுக்கு பானு... எல்லாம் எங்களோட முடிஞ்சு போகட்டும். உனக்கு எதுவுமே தெரிய வேண்டாம்.”

"அப்படின்னு நீ சொல்றே? ஆனா, எனக்கு உண்மைல அந்த பங்களாவுல என்ன நடக்குதுன்னு தெரியாதுன்னா யாரும் நம்ப மாட்டேங்கறாங்க தெரியுமா?"

"உன்னை யார், என்ன கேட்டாங்க?"

"சொல்லுடி. இந்த ஊர்ல யாரும் உன்கிட்ட வந்து பங்களா பத்தி வாயே திறக்கமாட்டாங்க. மீறித் திறந்தா என்னாகும்னு அவங்களுக்கே தெரியும். அப்படி இருக்க யார், எதை உன்கிட்ட கேட்ருக்க முடியும்?"

"இதோ பார்... இப்படி எல்லாம் நினைச்சுகிட்டு நீ காலம் தள்ள முடியாது. சென்னைல இருந்து இரண்டு பத்திரிகைக் காரங்களே நேரா வந்துட்டாங்க. தெரியும்தானே?"

"அவங்க வந்ததுதான் உனக்குத் தெரியும். ஆனா, அவங்க தாசி பங்களாவுக்குள்ள போய் உள்ள ஒரு மூலை விடாம சுத்திப் பார்த்துட்டு, 'அது ஒரு கோவில். அங்க ஒரு மர்மமும் இல்லை'ன்னு நினைச்சுகிட்டு கிளம்பிப் போனது உனக்குத் தெரியாதுடி..."

"எல்லாம் தெரியும் பாட்டி... அம்மா அவங்கள கூட்டிக்கிட்டுப் போனது, அவங்க கேட்ட கேள்வின்னு எல்லாமே தெரியும். ஆமா... அவங்களுக்கெல்லாம் பங்களாவை சுத்திக் காட்ற இந்த அம்மா என் விஷயத்துல மட்டும் ஏன் வாயே திறக்கமாட்டேங்கறாங்க..?"

"இதுக்கு பதில் அவதான் சொல்ல முடியும். அவகிட்டயே கேளேன்..."

"அம்மாகிட்டயா... அய்யோ."

"பயம் இருக்குல்ல. அது போதும், போய் வேலையப் பாரு."

"பார்க்கத்தான் போறேன் அதே சமயம்... பாட்டி.... இப்படியே ரொம்ப நாளைக்கு ஓட்ட முடியாது. அதை நீங்க ஞாபகம் வெச்சுக்குங்க. நான் இப்படியே தினம் ஊசி போட்டு மருந்து கொடுத்துகிட்டு இருக்க மாட்டேன். ஒரு நாள் இல்ல ஒரு நாள் அந்த மாளிகைல அப்படி என்னதான் இருக்குன்னு பார்க்காம இருக்கப் போறதில்லை..."

*மிக மிக ஆவேசமாகப் பேசிவிட்டு கிட் பேக்கை எடுத்துக்கொண்டு புறப்பட்டுவிட்டாள் பானு. பாட்டி முகத்தில் அதிர்ச்சி.*

*வீட்டுக்குள் சுந்தாராம்பாள் நுழையவும் ஓடிப்போய் நாற்காலியை எடுத்துக்கொண்டு வந்து போட்டாள் காயத்ரி. அதில் உட்காராமல் சுந்தராம்பாள் பார்வை அந்த வீட்டையே துழாவியது.*

*"யாரைத் தேடறேள்மா?"*

*"அ... அசோகனை..."*

*"அய்யோ! அதை ஏன் கேக்கறேள். அவன் ஒரு இடத்துல இருக்கமாட்டேங்கறான். சரியான மேஜிக் மேன் அவன். என் புத்தகத்தை எல்லாம் சுக்குநூறா கிழிச்சு போட்டுட்டான் 'இருடா அப்பா வரட்டும். காட்றேன்'னு சொன்னேன். அதே மாதிரி அப்பா வரவும் காட்டவும் செய்தேன். ஆனா, அப்பா பார்க்கும்போது புத்தகம்லாம் பழையபடி நல்ல கண்டிஷன்ல இருந்தது. எப்படின்னே தெரியல..."*

*காயத்ரி தன் அனுபவத்தைக் கூற, சுந்தராம்பாள் அதைக் கேட்டபடியே அந்த வீடு முழுக்க, அசோகன் எங்கிருக்கிறான் என்றுதான் தேடினாள். ஆனால், அவனைக் கண்ணாலேயே பார்க்க முடியவில்லை.*

*எங்காவது வெளியே போய்விட்டானா என்று பின்பக்கம் எட்டிப் பார்த்தவள், அப்படியே விக்கித்துப் போனாள் வீட்டுக்குப் பின்னால் கொல்லையில் ஒரு வன்னிமரம் வளர்ந்திருக்க - அதன் கீழே காலை நீட்டியபடி விச்ராந்தியாக அமர்ந்திருந்தான் அசோகன் அவன் எதிரில் போய் நின்ற சுந்தராம்பாளை அசோகனும் நிமிர்ந்து ஒரு பார்வை பார்த்தான்.*

*அசாதாரண பார்வை அது. சில நொடிகள் வரை இருவரிடமும் ஒருவித கருத்துப் பரிமாற்றமும் இல்லை.*

*மௌனத்திலேயே இருவரும் ஒருவரோடொருவர் பேசிக் கொண்டனர்.*

***"பாபாஜி..."***

***"சொல் மகளே..."***

***"நீங்களா திரும்ப வந்துருக்கீங்க?"***

***"சந்தேகமா மகளே...?"***

"நானும் மனுஷிதானே?"

"நீ மேலான ஜென்மம் அம்மா..."

"போதும் பாபாஜி. சற்று கீழான ஜென்மமாவே இருந்துட்டு போறேன். எங்களுக்கு விடுதலை வேணும்."

"அதைக் கொடுக்கத்தானே தெய்வ சித்தப்படி நான் வந்திருக்கேன்."

"அப்ப அந்த ஓலைச்சுவடிப்படி இனி எல்லாமே நடக்கும்னு எதிர்பார்க்கலாமா?"

"சுவடிப்படி எதுவும் நடக்கல மகளே... நடக்க இருப்பதைத்தான் சுவடிகளில் எழுதி வைத்துள்ளார்கள்."

"உண்மைதான். நான்தான் தப்பா கேட்டுட்டேன். அதே சமயம் என் மனசு இப்ப எவ்வளவு சந்தோஷத்துல இருக்கு தெரியுமா?"

"தெரியும் மகளே... உன் வரையில் இனி நல்ல காலம் ஆரம்பித்துவிட்டது. அதே சமயம் ஊரில் நிறைய சம்பவங்களும் நடக்கவேண்டியுள்ளது."

"பாபாஜி..."

"சொல் மகளே!"

"இவ்வளவு வருஷமா இல்லாம இப்ப நீங்க திரும்ப வந்திருக்கறது குறிப்பா என் மகனான அசோகன் உருவத்துக்குள்ள வந்திருக்க என்ன காரணம்னு நான் தெரிஞ்சுக்கலாமா?"

"அன்று என் கடமை சரியாக முடியவில்லை. உன் குடும்பம் முந்நூறு வருஷத்துக்கு ஊருக்காக தியாகம் செய்யும் ஒரு கட்டாயம் ஏற்பட்டது. அதிலிருந்து உங்களுக்கு ஒரு விலக்கு கிடைக்கும் வரையில் நானும் என் ஆத்ம கதியை நிறுத்திக்கொண்டு காத்திருந்தேன். இப்பொழுதுதான் வேளை வந்திருக்கிறது."

"இந்த முறை என் கடமையை நான் சிறப்பாக செய்து முடிப்பேன்."

"ரொம்ப சந்தோஷம் பாபாஜி... எங்க குடும்ப விடிவுக்காக நீங்க திரும்ப வந்ததைவிட பெரிசு உங்க ஆத்ம கதியை இறைவன் முன்னால நீங்க அர்ப்பணிக்காதது..."

***"அது கூட அந்த இறைவன் சித்தம்தான் மகளே... அவனே உலகில் மிகப் பெரியவன். அவன் விருப்பப்படி தானே எல்லாமே நடக்கின்றது?"***

*- அசோகனுக்குள் இருக்கும் பாபாஜியின் பேச்சும் அதற்கு கட்டுப்பட்டு கைகூப்பியபடி நிற்கும் சுந்தராம்பாளும் காயத்ரி வரையில் ஆச்சரியமளித்துக் கொண்டிருந்தார்கள். ஒளிந்திருந்து பார்த்துக் கொண்டிருந்த அவள், சங்கரன் வரவும் அவனையும் கூட்டிச் சென்று காட்டினாள்.*

*"அண்ணா பார்... அம்மாவும் பிள்ளையும் பேசிக்கற மாதிரியா .இருக்கு? சுவாமிகிட்ட கையைக் கட்டிண்டு நிக்கற மாதிரி இல்ல?"*

*- சங்கரனும் ஆச்சரியப்பட்டான். நெடு நேரம் தாடையைப் போட்டு தேய்த்துக் கொண்டான். அவனுக்கு ஒன்றும் பிடிபடவில்லை!*



# 11

## அன்று

பஞ்சணையில் படுத்திருந்தாள் வைஜெயந்தி. வயிறு நன்றாக ஊதியிருந்தது. உள்ளே குழந்தையின் வளர்ச்சி சிறப்பாக இருக்கிறது என்பது - பார்த்த மாத்திரத்தில் தெரியும் தோற்றம். கூடவே மசக்கை வேறு. பக்கத்திலேயே அணில் கடித்தது போல அவள் கடித்த மாங்காய்கள். போதாததற்கு உலகில் உள்ள அவ்வளவு விதமான பழங்களும் அங்கே இருந்தன. அபூர்வமான கேரளத்து செவ்வாழை, குற்றாலத்து மங்குஸ்தான், ஆப்கானிஸ் தானத்து மாதுளை, பாக்தாத் நகரத்து பேரீச்சை, காஷ்மீரத்து ஆப்பிள்கள் என்று அந்த அறையில் இல்லாத பழ வகை களில்லை.

மகாதேவர் அவளை ஒரு மகாராணியாகவே ஆக்கிவிட் டிருந்தார். இவ்வளவு இருந்தும் ஒரு மனக்குறை வைஜெயந்தி யிடம்.

எதனாலோ அடிக்கடி கெட்ட கெட்ட சொப்பனங்களாய் வந்தபடி இருந்தன. நள்ளிரவில் தூக்கத்தில் அலறிக்கொண்டு எழுந்து கொள்வது என்பது அவள் வரையில் வாடிக்கையாகி விட்டது.

மகாதேவருக்கும் தகவல் போனதில் அவருக்கு என்ன செய்வதென்று முதலில் தெரியவில்லை. பிறகு இருப்பிடத்தை மாற்றுவதுதான் சரி என்று தீர்மானித்தவர் கோவிலுக்கு பக்கத்திலேயே ரத வீதியில் ஒரு பெரிய வீட்டை வைஜெயந்தி வசிப்பதற்கென்றே கட்ட ஆரம்பித்துவிட்டார். அந்த வீடு கூட வெகுவிரைவில் முடிந்துவிட இருக்கிறது.

'அது முடியாவிட்டால்கூட பரவாயில்லை. விரைவாக அங்கே சென்றுவிடமாட்டோமா' என்று இருந்தது

வைஜெயந்தியின் தாய் மாலிக்கு. குறிப்பாக பிராண அறையில் வீரேந்திரன் ருத்ர வீணை வாசிக்கும் சமயம் வைஜெயந்தி வயிற்றில் குழந்தை புரண்டு படுத்தது. அந்த அளவுக்கு வீணை நாதம் அவள் உள்ளுக்குள்ளும் தாக்கம் ஏற்படுத்தியிருந்தது

உப்பரிகைக்கும், மொட்டை மாடிக்கும் காற்று வாங்கப் போகலாம் என்றால் தொலைவில் மயானம் தெரிந்தும், அதன் புகை தவழ்ந்து வந்தும் மூக்கில் ஏறியது. எல்லாம் இருந்தும் நந்தவனத் தோட்டத்தில் பாபாவின் சமாதிக்கு மலரஞ்சலி செலுத்திக்கொண்டு அங்கேயே இருப்பதுதான் உசிதம் என்று நினைத்தாள் வைஜெயந்தி. ஆனால், மாலி கூடாது என்று தடுத்துவிட்டாள்.

மகாதேவருக்கும் அந்த மாளிகையைவிட்டு விலகுவதே நல்லது என்று தோன்றியது. அதற்கு தோதாக ஒரு சம்பவமும் நடக்க ஆரம்பித்தது. அது அந்த வாஸ்து பண்டிதனாகிய விநாயகராமன் மூலமாகவே நடந்ததுதான் ஆச்சரியம்.

எதற்காக தோடிபுரம் வந்தானோ அந்த பண்டிதன் - அதன் நிமித்தம் ஊரையே சுற்றி வந்து அளக்கத் தொடங்கிவிட்டான். அப்படி அவன் சுற்றி வந்தபோதுதான் ராசிக் கிணறுகளின் சமீபத்தில் வீணை இசையையும் கேட்டான் மெய் மறந்து விட்டான்.

ஊரைச் சுற்றி பன்னிரண்டு கிணறுகள். அதில் ஈசான்ய பாகத்தில் மட்டுமே ஆறு கிணறுகள். அதன் நேர்பாகமாகிய அக்னியில் கூட இரு கிணறுகள். ஆனால், அதே அக்னி மூலை யில் மயானமும் அங்கே மாளிகையும் இருந்தது அவனை யோசிக்க வைத்தது.

ஊருக்கான அக்னி மூலையில் தினம் நெருப்பெரியும் விதமாய் மயானம் என்பதை ஒப்புக்கொள்ள முடிந்த அவனால் அந்த மூலையில் ஒரு பிரமாண்ட மாளிகையை கற்பனை செய்தே பார்க்க முடியவில்லை. அதிலும் இந்திர சபையின் மயனால் கட்டப்பட்டதாக கூறப்படும் அந்த மாளிகை அங்கே இருக்க ஏதாவது காரணம் இருக்க வேண்டும் என்று எண்ணி யவன், அதனை அறிய சுற்றிச் சுற்றி வந்தான். அப்பொழுதுதான் அதிசயமான ஒரு உண்மை அவனுக்குத் தெரிய வந்தது. ஊருக்கான நைருதி மூலையில், அதாவது கன்னி மூலையில் அமைந்திருந்தது தோடிபுர ஆலயம். இடையில் ஆலயத்துக்கும்

மயானத்துக்குமான ஒரு நேர்க்கோட்டில் நவக்கிரக மாளிகை அமைந்து மயானத்தையே மறைத்துக்கொண்டிருந்தது. அந்த வரிசையில் வேறு கட்டடங்களே இல்லை. அமைய வழியும் இல்லாதபடி ஒரு நீண்ட தெரு அமைப்பு காணப்பட்டது. அதாவது கோவிலின் வலப்பக்க கோபுரம் வழியாக ஒருவன் வெளியேறி நடந்தால் அது 'ட'னா வடிவில் வளைந்து திரும்பி நேராக மயானத்திற்குத்தான் சென்றது. மயான வழியில் நவக்கிரக மாளிகை.

விநாயகராமனுக்கு காரணம் விளங்கிவிட்டது. ஊரின் அக்னிமூலை அக்னி, அந்த மூலையிலேயே சுற்றி வரவேண்டும். அது ஊருக்குள் தப்பித்தவறிக் கூட ஊடுருவி விடக்கூடாது. அப்படி அது ஊடுருவினால் அலைபாயும் ஒருவித கோபமான நிலைதான் மக்களில் பலருக்கும் இருக்கும். அப்படி இருந்தால் இசை நாட்டம் ஏற்படாது. எனவேதான் நவக்கிரக மாளிகை அக்னி பாகத்தில் இருந்து அவ்வளவு நெருப்பையும் அது வாங்கிக் கொண்டிருப்பதாக தோன்றியது.

அங்கே மனிதர்களும் நிம்மதியாகவும் அமைதியாகவும் வாழ்வதுகூட அதிசயம் என்றே கருதியவன், ஒரு நாள் மகாதேவரைப் பார்த்து இந்த உண்மைகளையும் கூறிவிட்டான்.

"மந்திரியாரே... அந்த மனை, மனிதர்கள் வாழ ஏற்றதல்ல... அங்கே ஒருவர் இருந்தாலே மனது அலை பாயும். அங்கே உள்ள அக்னியை விழுங்கி வாழ யோகியர்களால் மட்டும்தான் முடியும். இது ஒரு வாஸ்து நிபுணர் என்கிற முறையில் என் கருத்தாகும். அதே சமயம் இந்த ஊரின் ஈசான்யம் அற்புதமாக இருக்கிறது. வட கிழக்கில் ராசிக் கிணறுகள் வடதிசையாகப் பார்த்து காவிரியும் ஓடியபடி உள்ளது. நைருதியில் அதாவது கன்னி மூலையில் ஓங்கிய கோபுரமுடன் ஆலயம். இப்படி ஒரு அமைப்பு ஏற்படுவது அபூர்வம். எதிர்காலத்தில் இந்த தோடிபுரம் மேலும் மேலும் புகழை அடையும். வாயுமூலை யிலும் அழகிய மலர்வனங்கள் அமைந்துள்ளன. குளிர்ச்சியான சூழல் அங்கே நிலவுகிறது. அழகிய மலர்த் தோட்டங்கள் வாயு பாகத்தில் அமைந்திருப்பது ஒரு தனிச் சிறப்பு. மொத்தத்தில் தோடிபுரத்தின் அமைப்பை எண்ணி நான் வியக்கிறேன். இந்த ஊருக்குள் வசிப்பதற்காக நுழையும் ஒருவர் எப்பொழுதும் மிகவும் மகிழ்வுடன் காணப்படுவார்

தப்பான விதியை உடையவர்கள் இங்கே வரவே முடியாது. இங்கே வந்தவர்களையோ விதி மகிழ்ச்சியாக வைத்திருக்கும்...

இப்படி விநாயகராமன் கூறியதும் மகாதேவர் மனம் மாற ஒரு காரணம். இதனால் வெகு வேகமாக நவக்கிரக மாளிகையை விட்டு நீங்கி விட முடிவு செய்துவிட்டார் மகாதேவர். ஆனால், வைஜெயந்தியோ "இங்கே எனக்குத் துணையாக பாபா இருக்கிறார். நான் அவரை விட்டு எங்கும் வரமாட்டேன்" என்று அடம்பிடித்தாள். மகாதேவருக்கும் வைஜெயந்தியை எப்படிச் சமாதானப்படுத்துவது என்று தெரியவில்லை. அவருக்கு வேறு வழியும் .புலனாகாதபோதுதான் 'நானிருக்கிறேன்' என்கிற மாதிரி அந்த கோரமான முகத்தைக் கொண்ட மராத்தியன் முன் வந்தான்.

மகாதேவரை ஒரு முறை கோவிலில் பார்த்தவன் கைகூப்பி வணங்கிவிட்டு மராத்திய மொழியிலேயே அவருடன் பேசினான்.

"மகாதேவ்ஜி... நான் ஒரு சிற்பி. உங்களைப் போல ஒரு உருவத்தை செதுக்க விரும்புகிறேன்."

மகாதேவரும் திருப்பிக் கேட்டார்.

"என்னைச் செதுக்கி என்ன பயன்? ஏதாவது இறைவடிவங்களைச் செதுக்கு. அதுதான் உனக்கும் நல்லது, ஊருக்கும் நல்லது" என்றார்.

"அதுவும் சரிதான்... நீங்களே கூறுங்களேன். நான் எந்த இறை உருவத்தை செதுக்கட்டும்?"

"இப்படிக் கேட்டால் எப்படியப்பா? நான் யோசித்துச் சொல்கிறேன்" என்றவருக்கு சட்டென்று பாபாவின் உருவம் தான் ஞாபகத்தில் வந்தது. கையில் வீணையுடன் அவர் அமர்ந்து வீணை வாசிக்கும் கோலத்தை சதாசிவ சாஸ்திரிகள் வரைந்து வைத்திருந்து ஒரு நாள் அதைக் காட்டியதும் ஞாபகத்திற்கு வந்தது.

உடனேயே அந்த மராத்தியனை அழைத்து சாஸ்திரிகளைப் போய் பார்த்து பாபாஜியின் உருவத்தைப் பார்த்து அதே போல ஒரு சிலையை செதுக்கும்படி கூறிவிட்டார்.

அவனும் அகமகிழ்ந்து போனான்.

எதற்காக அவன் அந்த மண்ணிற்கு வந்தானோ அது நடக்கப் போகிறது. மிக மிக மகிழ்ச்சியோடு அந்த மராத்தியனும் சதாசிவ சாஸ்திரிகளைக் காண புறப்பட்டுப் போனான்.

**சா**ஸ்திரிகள் வீட்டில்தான் இருந்தார் தாடியும் மீசையுமாக அவரைப் பார்க்கவே பரிதாபமாக இருந்தது. பாபாவை பிரிந்ததை எதனாலோ அவரால் ஜீரணிக்கவே முடியவில்லை. அப்படிப்பட்டவர் எதிரே சென்று வந்தனங்களை சொல்லிய அந்த மராத்தியன், "நமஸ்தே சாஸ்திரிஜி! என் பெயர் ராம்லால். நான் ஒரு மராத்தியன் மும்பை நகருக்கு வடக்கில் உள்ள எல்லோரா எனது ஊராகும்..." என்றான்.

சாஸ்திரிகளும் 'அதற்கென்ன இப்போது' என்கிற மாதிரி அவனைப் பார்த்தார்.

"சாஸ்திரிஜி... உங்களைப் பார்க்கச் சொல்லி மந்திரி மகாதேவர் என்னை அனுப்பி வைத்தார். இங்கே சில காலம் வாழ்ந்த பாபாஜியின் உருவப் படத்தை தாங்கள் வரைந்து வைத்திருக்கிறீர்களாமே" என்று அவன் ஆரம்பிக்கவும், அவனை ஆச்சரியத்துடன் பார்க்கத் தொடங்கினார் சாஸ்திரி.

"என்ன பார்க்கிறீர்கள்... எனக்கு அந்த உருவம் தெரிய வேண்டும். நான் பாபாவின் உருவத்தைக் கல்லால் செதுக்க விரும்புகிறேன். நானொரு சிற்பி" என்றான் ராம்லால் என்கிற அந்த மராத்தியன். அவன் அப்படிச் சொன்ன மறுவிநாடியே, தான் எழுதி வரும் 'ருத்ர வீணை விலாசம்' என்கிற ஏட்டுக்கட்டையும், அத்துடன் பாபாஜி தனக்கென கொடுத்த ராகமந்திர புத்தகத்தையும் ஓடிச் சென்று எடுத்து வந்தவர், அதை அவனிடமும் காட்டினார். அவனும் உற்றுப் பார்த்துவிட்டு பின் திருப்பியடைந்தவன், "போதும்... பாபாஜி உருவம் என் மனக்கண்ணில் நன்கு பதிந்துவிட்டது..." என்றான். ராம்லாலின் பதில் சாஸ்திரிகளுக்கு ஆச்சரியமளித்தது. 'அது எப்படி ஒரு படத்தை பார்த்த மாத்திரத்தில் மனதில் வைத்துக் கொண்டு ஒருவனால் சிற்பம் செதுக்க முடியும்?' என்கிற கேள்வியும் மனதுக்குள் முட்டிற்று.

ஆனால், அந்த மராத்தியன் சாஸ்திரியின் மனப்போக்கு பற்றியெல்லாம் துளியும் கவலைப்படத் தயார் இல்லை.

அப்பொழுதே ஒரு கல்லை எடுத்து வந்து சிற்பம் செதுக்க வேண்டும் என்கிற அளவிற்கு வேகமாகிவிட்டான். "சிற்பி அவர்களே! உங்கள் ஆர்வம் எனக்கு வியப்பைத் தருகிறது. எதற்கும் நீங்கள் இந்த புத்தகத்தைக் கையில் வைத்துக் கொண்டு சிற்பம் செதுக்க முயலுங்கள். ஏன் என்றால் பாபாவின் உருவம் பின்னப்பட்டுவிடக் கூடாது என்று என் மனம் எண்ணுகிறது."

என்று சாஸ்திரியும் அவனை விடாமல் இறுக்கிப் பிடித்தார். அவன் முகத்தில் மர்மப் புன்னகை. உள்ளுக்குள் சொல்லிக்கொண்டான்

'இப்படி நீங்கள் கூற வேண்டும் என்பதுதானே என் விருப்பம்!'

"ஆமாம்... நீங்கள் எங்கே கல் எடுத்து, எப்படி அமர்ந்து செதுக்கப் போகிறீர்கள்?"

"அருகில் ஏதாவது மலைக்குன்று உள்ளதா?"

"தாராளமாக... இங்கிருந்து சில காத தூரத்திலேயே கன்னியர் கரடு என்று ஒன்று இருக்கிறது. அங்கே சமணர்கள் வசித்த குகைகள் எல்லாம்கூட இருக்கின்றன.

"அப்படியானால் அதுதான் நான் கல் எடுக்கப்போகிற இடம்."

"அவ்வளவு தூரம் ஏன் செல்ல வேண்டும்....! என் வீட்டுக் கொல்லையிலேயே இரண்டு மூன்று கற்கள் இருக்கின்றன. அவைகளை பயன்படுத்தலாமே...!

சாஸ்திரிகள் பேசியதைக் கேட்டு இளக்காரமாக சிரித்தவன், "கற்கள் எல்லாமே சிலைகள் ஆகிவிடாது சாஸ்திரிகளே!" என்றான்.

"என்றால்...?"

"மனிதர்களில் கறுப்பானவர்கள், சிவப்பானவர்கள், ஒல்லியானவர்கள், குண்டானவர்கள் என்றெல்லாம் இருப்பது போல் கற்களிலும் பல ஜாதி கற்கள் உள்ளன. அவைகளை தரம் பிரிக்கத் தெரிய வேண்டும்."

"குறிப்பாகச் சிற்பம் செதுக்கவென்றே ஒரு வித கல் உண்டு. உளி பட்டால் உளிபடும் இடம் மட்டும்தான் சிதையும். அதே சமயம் வழவழப்பையும் அதில் கொண்டுவர முடியும்.

எப்பொழுது சமண சந்நியாசிகள் குகைகள் அமைத்து வாழ்ந்திருப்பதாகக் கூறினீர்களோ, அப்பொழுதே அந்த மலை சிற்பத்துக்கு ஏற்றதாகத்தான் இருக்க வேண்டும்.

அங்கேதான் கல் எடுக்க வேண்டும்.

அடுத்து, அந்தக் கல்லுக்கு ஈரம் முதல் வெப்பம் வரை அனைத்தையும் உறிஞ்சும் திறன் இருக்கவேண்டும். அப்பொழுது தான் அபிஷேக ஆராதனைகளும், விளக்கேற்றி வழிபடும்போது அருள் அம்சமும் வெளிப்படமுடியும்."

"பாபா தன்னை வணங்குவதையே விரும்பாதவர் அத்துடன் உருவவழிபாட்டில் நாட்டமில்லாத இஸ்லாமிய வகுப்பைச் சேர்ந்தவர் அவர்..."

"அதனால் என்ன...? அவர், அவர் நம்பிக்கைக்கு ஏற்பவே இருந்துவிட்டு போய்விட்டார். நம்வரை அவர் ஒரு உன்னத மான மனிதர் அல்லவா? அவர் செய்த அற்புதங்கள் காலகாலத் திற்கும் பேசப்பட்டால்தானே வருங்கால சமுதாயத்தில் ஒரு சிலராவது அவரைப்போல் நடக்க ஏதுவாக இருக்கும்?"

ராம்லால் என்கிற அந்த மராத்தியன் சாஸ்திரிகளை நன்றாகவே சமாளித்தான்.

சாஸ்திரிகளும் அவனது விஷய ஞானத்தை எண்ணி சந்தோஷமே கொண்டார். அந்த வேளை பார்த்து வயலில் இருந்து நெல்மூட்டைகள் வரவும், அவைகளை எங்கே இறக்கி வைக்க வேண்டும் என்று சொல்வதற்காக விலகிச் சென்றார்.

பார்க்கும் தூரத்தில், பார்க்க முடிந்த விதத்தில் இருந்தது அந்த பூஜையறை, அதில் அந்த சர்ப்பக் காவலில் இருக்கும் ராகமந்த்ர ஏட்டுக்குறிப்பு.

மெல்ல அதன் அருகே சென்றவன் அந்த ஏட்டுக்கட்டை எடுப்பதற்காகத் தீண்டியபோது எங்கிருந்துதான் வந்ததோ தெரியாது... ஏட்டுக்கட்டை தொட்ட கைமேல் ஒரு வளையம் போல விழுந்தது அந்த சர்ப்பம்.

ராம்லாலுக்கு சப்தநாடியும் அடங்கி அப்படியே நொறுங்கிவிட்டது. கையை உதறிக்கொண்டு விட்டால் போதும் என்று வெளியில் சென்றான் உடம்பெல்லாம் வியர்த்து விட்டிருந்தது.

இருந்தும் மனதுக்குள் சொல்லிக்கொண்டான், 'நான் எதற்காக வந்தேனோ அதில் உயிரே போனாலும் சரி... பின்வாங்கமாட்டேன்!' என்று! எதற்காக வந்திருக்கிறான் ராம்லால்?

# இன்று

**கா**விரிக்கரை ஓரமாக மாந்தோப்பு. தரைமேல் ஏராள மான மாவிலைகள் விழுந்துகிடந்தன. காவிரிநீரை தழுவிவரும் ஜில்லென்ற காற்று பட்டு அந்த இலைகள் சப்திப்பதே ஒரு தினுசாக இருந்தது.

மாந்தோப்பில் ஒரு கல்மண்டபம், கல்மண்டபத்தில் சாமிநாதன், சங்கரன் என்று இரண்டு பேரும் ஒன்றுகூடியிருந்தனர்.

சங்கரன், அசோகன் பற்றி சொன்னதில் கலைந்து போயிருந்தது சாமிநாதன் மனது. அதிலும் சுந்தராம்பாள் அசோகனை வணங்கியதையும், அவனை பாபாஜி என்று கூப்பிட்டதையும் சங்கரன் சொன்னதில் சுவாமிநாதன் மனதுக்குள் ஒரு பிரளயமே ஏற்பட்டிருந்தது.

"சாமி... சுந்தராம்பாம்பா விஷயம் மட்டும் ஏண்டா எப்பவும் புரியாத புதிராகவே இருக்கு?"

"தெரியலியே... இந்த ஊர் புதிரை துப்புத்துலக்க ஸ்காட்லாண்ட் யார்டுல இருந்து போலீஸ் வருதுன்னு வை. அவங்ககூட மண்டையப் பிச்சிப்பாங்க..."

"சரி... நாம புலம்பறதுலயோ குழம்பறதுலயோ அர்த்தமில்லைடா. நாம என்ன பண்ணப்போறோம்? அதைச் சொல்லு முதல்ல..."

"பேசாம ஊரைவிட்டு போய்டுவோம். நமக்கு இந்த ஊரே வேண்டாம்டா."

"இப்படிச் சொல்றது ஒரு வகைல கோழைத்தனமா இல்ல?"

"கேவலமாக்கூடத்தான் இருக்கு. என்ன பண்ணலாம்கறே? அந்த உபாசகராவது ஏதாவது ஸ்டெப் எடுத்து தாசி பங்களா வுக்குள்ள நுழையறாரான்னா அவரும் ஊரைத்தான் சுத்தி சுத்தி வர்றாரு."

சாமிநாதனும், சங்கரனும் அலுத்துக் கொண்டனர் மாந்தோப்பில் ஒரு கிளையில் மஞ்சளாக ஒரு மாங்காய் மட்டும் நன்றாக பழுத்துத் தொங்கிக் கொண்டிருந்தது.

சாமிநாதன் அதையே பார்த்தபடி இருந்தான். "சாமி... என்னடா நான் இங்க புலம்பிண்டு இருக்கேன் நீ அந்த மாம்பழத்தையே பார்த்துண்டிருக்கே...?"

"மரத்துல பழுத்த பழம் அனேகமாக இதுவாத்தான் இருக்க முடியும். பறிச்சு சாப்பிடுவோமா?"

"எதுக்கு ஊரைப்பத்தின கவலை? உருப்படியா இதையாவது செய்வோம்கறியா?"

"சங்கரன் கருத்துக்கு சாமிநாதனிடம் பதிலில்லை. செயலில் இறங்கிவிட்டான். சட்டென்று மரத்தின் மேல் தாவி ஏறினான். அந்த கிளை நோக்கி பக்குவமாக செல்ல ஆரம்பித்தான்."

"டேய் பார்த்துடா... கிளை ஒடிஞ்சுடப் போறது..."

"சங்கரன் கீழிருந்து அலறினான். சாமிநாதன் இந்த மாதிரி சாதாரண விஷயங்களுக்கெல்லாம் அஞ்சுகிற ரகமே இல்லை. பையப்பைய மேலேறியவன் அந்த மாம்பழம் அருகே கையைக் கொண்டு சென்றபோது உயரமான அந்த மரக் கிளையில் மாம்பழத்துக்கு அப்பால் அபூர்வ காட்சி ஒன்று அவன் கண்ணில் பட்டது."

சற்று தொலைவில் மாந்தோப்புக்குள் உள்ள ஒரு பாம்புப்புற்று அருகே உபாசகர் அமர்ந்திருக்கிறார். அவருக்கு எதிரில் திறந்த மார்புடன் இடுப்பில் வேட்டி மட்டும் அணிந்தவனாக கணேசன். கணேசன் கழுத்தில் ஒரு நாகம் சிவாபரணம் போல சுருண்டிருந்தது. உபாசகர் அவன் எதிரில் ஏதோ மந்திரம் சொன்னபடி இருக்க, கணேசனும் ஒரு யோகிபோல கண்களை மூடியிருந்தான். சாமிநாதனை அந்தக் காட்சி வெலவெலக்க வைத்துவிட்டது.

"சாமி... என்னடா பழத்தைப் பறிக்காமலே அப்படியே ஸ்தம்பிச்சுப் போய் நின்னுட்டே...?"

"காரணமாத்தான். நீயும் மேல ஏறி வா தெரியும்...

"என்னடா சொல்றே...?"

"மேல ஏறி வான்னு சொல்றேன்... சாமியின் குரலில் கடுமை கூடியது. சங்கரனும் அதற்குமேல் தாமதிக்காமல் மேலே ஏறி அவனும் அந்த அபூர்வமான காட்சியைப் பார்த்தான். அப்படியே காதோரமாக கிசுகிசுக்கவும் செய்தான்.

"சாமி... என்னடா இது? இந்த கணேசன் எப்ப இருந்து உபாசகரோட சிஷ்யன் ஆனான்னு தெரியலியே."

"அதை விடுடா... அந்த பாம்பு அவனுக்கு கட்டுப்பட்டு கிடக்கறதை கவனிச்சியா...?"

"ஆமாண்டா. இங்க இந்த இரண்டு பேரும் என்னடா பண்றாங்க...?"

"இன்னுமா உனக்குத் தெரியலை...?"

"நெஜமா தெரியலடா...!"

"நாம ஒரு தடவை தாசி பங்களாவுக்கு போய் அங்க நிறைய பாம்புகளைப் பார்த்தோமே ஞாபகம் இருக்கா?"

"அதை எப்படிடா மறக்க முடியும். ஆமா... அதுக்கும் இங்க உபாசகர் இப்படி கண்ணை மூடி உட்கார்ந்திருக்கறதுக்கும் என்னடா சம்பந்தம்?"

"முட்டாளே... அங்கே இருக்கற பாம்புகளைப் பிடிக்கவோ இல்ல அழிக்கவோதான் இங்க ஏதோ பண்ணிட்டிருக்கார் உபாசகர்னு நான் நினைக்கிறேன்.

"ஓ... நீ அப்படி வர்றியா அதுக்கு கணேசனையும் பயன்படுத்திக்கிறார்னு சொல்லு."

"ஆமாம். அவன் வீட்லயே ஒரு பாம்பு இருக்குதே. அதை விரட்றதுக்காகக்கூட உபாசகர் இப்படி ஏதாவது செய்யலாம்."

சாமிநாதன் பேச்சோடு மரக்கிளையில் இருந்து கீழே குதித்தான். சங்கரனும்தான்.

"சாமி... பக்கத்துலதானே அந்த புத்து இருக்கு. நாம ரெண்டு பேரும் அழையாத விருந்தாளியா அங்க போய் அவர் எதிர்க்க நின்னா?"

"என்னடா சொல்றே... உபாசகர் என்ன பண்றார்னு அவர்கிட்டயே கேட்போம்கிறியா?"

"பொறுடா... இது விட்டுப் பிடிக்க வேண்டிய விஷயம். உபாசகர் என்னதான் பண்றார்னு பார்ப்போமே..."

"அப்ப அவர் மேலயே நாம ஒரு கண்ணை வெச்சிருக்கணும்னு சொல்லு."

"அதுல என்ன சந்தேகம்...? இனி அவர் நிழலை விட்டுக்கூட உடம்பு பிரியும். ஆனா, என்னை விட்டு அவர் பிரிய முடியாது. இது ஒரு சேலஞ்!"

சாமிநாதன் கைகளை சொடுக்கி சபதம் போடுவதுபோல பேசினான்.

"இப்பதான் இந்த ஊரே வேண்டாம்னு எனக்கு சொன்னே... அதுக்குள்ள பாத்தியா மனசு மாறிட்டியே..."

சங்கரன், சாமிநாதனுக்கு போட்ட பிடியில் சாமியாலும் பதிலைக் கூற முடியவில்லை. அப்பொழுது மாமரத்தில் ஏராளமாக காக்கைகள் ஒன்றுதிரண்டு சப்தமிடத் தொடங்கியிருந்தன.

கீழே நின்று பேசுவது என்பதெல்லாம் துளியும் சரியில்லை என்கிற மாதிரி அப்படி ஒரு இரைச்சல். சங்கரன் புரிந்துகொண்டு வாயைத் திறந்தான்.

"சாமி.. இப்படி கோரஸா காக்கா கூட்டம் கத்தினா புதுசா யாரோ ஒருத்தர் ஊருக்கு வரப்போறாங்கன்னு அர்த்தம்."

"என்ன பட்சி சாஸ்திரமா...? என்கிட்டயேவா?"

"இல்லடா... நான் எனக்குத் தெரிஞ்சதை சொல்றேன். நிச்சயமா சொல்றேன். நீ வேணா பாரு... ஒரு புதுமுகம் நம்ம ஊருக்குள்ற வந்தாச்சு!"

ஒரு பாட்டிபோல சங்கரன் சொன்னதும் உண்மைதான் என்கிற மாதிரி ஊரின் எல்லையில் ஒரு புதுமுகம்.

அழகான ஒரு ஃபோர்டு ஐகான் காரில் பட்டு வேட்டியில் கச்சம் உடுத்திக்கொண்டு சில்க் ஜிப்பாவும் தரித்த நிலையில் ஒருவன் அமர்ந்திருந்தான். நெற்றியில் திவ்யமாக விபூதிப் பட்டை நடுவில் அளவாய் இடப்பட்ட குங்குமப் பொட்டு. நன்கு செழித்த தலை. ஆனால், பெண்களைப் போல அதை அள்ளிக் கட்டியிருந்தான்.

பார்ப்பதற்கு ஒரு ராஜ பண்டிதனைப்போல இருந்தான். ஆறடிக்கு குறையாத உயரம். கைவிரல்கள் எல்லாமும் நன்கு நீளம். உடம்பிலும் அத்தரும் செண்ட்டும் கலந்த வாசம் கும்மென்று வீசிக்கொண்டிருந்தது. அவனுடன் ஒரு இளம் பெண்ணும் இருந்தாள் இவள் முற்றிலும் வேறானவளாக இருந்தாள். சுடிதாரில் போனிடைல் முடி அலங்காரத்தில், சற்றே திறந்த மார்புடன் இன்றைய மாடர்ன் பெண்களின் பிரதிநிதிபோல இருந்தாள். காலிலும் ஹைஹீல் ஷூ!

வலது கையில் வளையலையும், ரிஸ்ட் வாட்ச்சையும் கலந்து செய்திருக்க ஒரு புது ஆபரணத்தை அணிந்திருந்தாள்.

இளமை அவளிடம் குவிந்து கிடந்தது. நன்கு கொழிப்பாகவும் இருந்தது. ரோஸ் நிறம். எங்குமே அவள் தேகத்தில் ஊட்டப் பற்றாக்குறை இல்லை.

*அவள் தாயும் தந்தையும், அதற்கும் முன் பாட்டியும் தாத்தாவும் என்று பல தலைமுறையினர் வறுமை என்றால் என்னவென்றே தெரியாதவர்களாக இருந்திருக்க வேண்டும் என்பது அவளைப் பார்த்த மாத்திரத்தில் விளங்கியது.*

*தந்தத்தில் கடைந்தது போலவும், திடகாத்திரமாகவும் ஒரு உடம்பு அமைய தலைமுறையினர்தான் காரணம் என்பது அவளுக்கு தெரியாது. ஆனால், அவளை முதல் முதலாக அவளோடு இருக்கும் அந்த பண்டிதன் போன்ற மனிதன் பார்த்தபோது அவளிடம் சொன்னான்.*

*"நீ நல்ல செல்வாக்கான குடும்பத்தைச் சேர்ந்தவளாகத் தான் இருக்கணும்" என்று.*

*அது உண்மைதான். அவள் பெயர் மந்த்ரிணி! அன்னை மீனாட்சிக்கு ராஜ மாதங்கி என்றும், மந்த்ரிணி என்றும் பல பெயர்கள் உண்டு. அதில் ஒன்றைத்தான் அவளும் வைத் திருந்தாள்.*

*"உன் குடும்பத்தில் உள்ளவர்களுக்கு நல்ல சம்ஸ்கிருத ஞானமும் குறிப்பாக உன் குடும்பத்தில் யாரோ சத்தி உபாசனை செய்பவர்களாகவும் இருக்க வேண்டும்" என்றும் அவன் நேரில் பார்த்தது போல் கூறி அவளை வியக்க வைத்திருந்தான்.*

*அவன் பெயர் ருத்ரேஸ்வர்! ஆனால், அவனை எல்லோரும் ஈஸ்வர் என்றுதான் கூப்பிட வேண்டும் என்பான். வயது இப்பொழுதுதான் முப்பதாகிறது. ஆனால், அறுபது வயதுக் குரிய புத்தி.*

*கண்களிரண்டும் சூரியப்பிரகாசம். முகமெங்கும் அப்படி ஒரு வசீகரம். புத்தியும் அவன் வரையில் கத்திமுனைக் கூர்மை. அவனுக்குத் தெரியாத சப்ஜெக்டே இல்லை. ஒரு குறுகிய வயதில் இவ்வளவு தூரம் ஒரு மனிதனால் படிக்க முடியுமா என்றால் முடியும் என்பதற்கு ஈஸ்வரை உதாரணமாகக் காட்டலாம்.*

*பதினெட்டு புராணங்கள், ஐந்து வித வேதங்கள்; பிரமாண்ட இதிகாசங்கள், இதுபோக இடைக்காலத்தில் உருவான பிற மதங்களின் அத்தனை நூல்களையும் நடுநிலை யோடு வாசித்தவன். வியாகரணம் செய்வது என்பது பண்டிதர் களுக்கேயுரிய உயரிய ஒரு நிலைப்பாடு, அதில் தலைசிறந்த வர்களுக்கு 'வியாகரண சிரோன்மணி' என்று பட்டமும்*

அளிப்பார்கள். அந்த பட்டத்தை மட்டுமே பாரத மண்ணில் நான்கு மடாதிபதிகளிடமும் பெற்றவன்.

மந்திரசாஸ்திரத்திலும் புலி, ஆங்கிலம், ஃபிரெஞ்ச் என்று அதிலும் வல்லவன். இவ்வளவு படித்த இவனை ஒரு சாதாரண சித்த புருஷர் ஒரு நாள் போகிற போக்கில் ஓவர்டேக் செய்து விட்டார். அதில்தான் அவனது கர்வம் தவிடுபொடியாகிப் போனது.

ராஜஸ்தான் பக்கம் அபுமலை என்று ஒன்று உள்ளது. அங்கே ஒரு ஆஸ்ரமம் இருக்கிறது. அந்த ஆஸ்ரமத்தில் ஒரு முறை சத்சங்கம் ஒன்று நடைபெற்றது. கிட்டத்தட்ட ஒரு மண்டல காலம்... அதாவது நாற்பத்து எட்டு வருஷங்கள் குகை ஒன்றுக்குள் அமர்ந்து இந்த உலகையே எண்ணிப் பார்க்காமல் தவமாய் தவமிருந்த குருமஹராஜ் ஒருவர் அன்று குகையைவிட்டு வெளியே வந்து பக்தர்களுக்கு தரிசனம் தரப்போகிறார் அவரது தரிசனம் அந்த சிவனையே தரிசிப்பதற்கு சமமானது என்பதால் உலக சாதுக்கள் எல்லாம் அன்று அபுமலை நோக்கித்தான் பயணித்துக் கொண்டிருந்தனர். அவர்களில் ருத்ரேஸ்வரும் ஒருவன். ருத்ரேஸ்வர் பனாரஸ் பல்கலைக்கழகத்தில் உயரிய பொறுப்பிலும் இருந்தான். நிறைய ட்ரஸ்ட்டுகளுக்கும் தலைவன் என்பதால் பல கோடி ரூபாய்கள் சாதாரணமாக அவனிடம் புரண்டன. மெர்சிடிஸ் பென்ஸ் கார்தான் இன்று உலக பணக்காரர்களின் நடமாடும் நான்கு சக்கர வாகனம். கிட்டத்தட்ட நாற்பது லட்ச ரூபாயாகிறது அதன் மதிப்பு. அப்படி ஒரு காரில் அபுமலை நோக்கிப் பயணம் செய்தபடி இருந்தான். வழியில் ஒரு இடத்தில் கூட்டம் ஒன்று வழிமறித்தது. காரை நிறுத்திவிட்டு எட்டிப் பார்த்தான். யாரோ ஒரு மனிதன் அடிபட்டு ரத்தம் சொட்டச் சொட்டக் கிடந்தான். முன்னாலே போன கார்க்காரர் ஒருவர் 'ஹிட்' செய்துவிட்டு பறந்துவிட்டார். அதன் எதிரொலி.

"ஜீ... பாவம் ஜீ இவர். இவரை உடனே ஆஸ்பத்திரில சேர்க்கணும். கொஞ்சம் உதவி செய்யுங்க..." என்றார். கூட்டத்தில் ஒருவர். அந்த அடிபட்ட நபரைப் பார்க்கும்போது அவரும் ஒரு சாது என்பது அவரது காவி உடையிலேயே தெரிந்து விட்டது. இருந்தும் ஒரே ரத்த சகதி. குறிப்பாக கையிரண்டும் அப்படியே உருக்குலைந்து போய்விட்டிருந்தன. உடம்பின் பெரும்பகுதி ரத்தம் சாலையில் விரவிப் பரவியிருந்தது.

பார்க்கவே மனதை என்னவோ செய்தது. ஆனால், அவரைத் தூக்கிக் காரில் போட்டால் காரே ரத்தமயமாகும். எனவே ருத்ரேஸ்வருக்கு ஒரு மாதிரி நெருடியது. உடனடியாக எதுவும் சொல்லாமல் காரில் ஏறிக் கொண்டு அவர்கள் கதறக் கதற பறந்துவிட்டான்.

ஆஸ்ரமத்தில் அந்த குருமஹராஜும் குகையை விட்டு வெளியில் வந்து பிரசங்கம் செய்யும்போது, அந்த பிரசங்கத்தில் அவன் கவனமாக இருந்தபோது பக்கத்தில் ஒருவர் வந்து அமர்வது கண்டு திரும்பிப் பார்த்தான். அது அவன் சாலையில் பார்த்த அதே விபத்துக்குள்ளான சாது சந்நியாசி தான். உடம்பில் துளியும் காயங்களின்றி கங்கையில் குளித்து விட்டு சுத்தமான உடம்புடன் வரும் ஒரு சாது சந்நியாசிபோல அவர் இருந்ததுதான் ஆச்சரியம். அதன்பின் ருத்ரேஸ்வருக்கு சாது குருமஹராஜ் பேச்சில் கவனமே செல்லவில்லை. 48 வருடம் குகைத் தவம் இருந்தவர் என்ன மாதிரி கருத்துகளையெல்லாம் கூறப்போகிறார் என்பது பெரிதாகவே இல்லை. அடிபட்டு உடம் பெல்லாம் நைந்துபோன இவர் எப்படி பூரண பொலிவோடு வந்திருக்கிறார் என்பதுதான் விஷயமாகவே இருந்தது.

அவரோ அவனை லட்சியமே செய்யவில்லை. குரு மஹராஜ் பேச்சிலேயே கவனமாக இருந்தார். அவரது சில கருத்துகளை ஒரு குட்டி நோட்டில் குறித்தும் வைத்துக் கொண்டார். அப்பொழுதுதான் ருத்ரேஸ்வரும் கவனித்தான். அவர், ஹிந்தியில் பேசும் குருமஹராஜ் பேச்சை தமிழில் குறித்துக்கொண்டிருப்பது...

'ஒரு இவர் தமிழரோ?'

அவனுக்குள் சிதறல்கள்... ஒரு வழியாக சத்சங்கம் முடிந்தது. எல்லோரும் கலைய ஆரம்பித்தார்கள். அவரும் புறப்படத் தயாரானார். ருத்ரேஸ்வர் அவரை மட்டும் விடவில்லை.

"ஸ்வாமிஜி... ஒரு நிமிடம்" என்று அவரை மடக்கினான்.

"சொல்லுங்கள்... உங்களுக்கு என்ன வேண்டும்?"

"நீங்கள்... நீங்கள்..."

"எனக்கென்ன?"

"நீங்கள்தானே வரும் வழியில் விபத்துக்குள்ளானீர்கள்?"

"நானில்லை அப்பனே... இந்த உடம்புக்குத்தான் அப்படி ஒரு விபத்து ஏற்பட்டது." பதிலே அவர் தேர்ந்த ஞானி

என்பதை ருத்ரேஸ்வருக்குப் புரிய வைத்துவிட்டது. தான் வேறு - உடம்பு வேறு என்று பிரித்துவிட்டாரே...

"மன்னிக்க வேண்டும். என்னைத் தெரிகிறதா?"

"தெரிந்து என்ன ஆக வேண்டும்? எனக்கு என்னையே சரியாகத் தெரியவில்லை. எப்பொழுது என்னை நான் தெரிந்து கொள்வேன் என்றும் தெரியவில்லை. அலைந்துகொண்டேயிருக்கிறேன்."

- மீண்டும் அவர் பதிலில் ஒரு உயர்ந்த சிந்தனை.

"ஸ்வாமிஜி... விபத்துக்குள்ளான உங்கள் உடம்பு எப்படி இவ்வளவு சீக்கிரத்தில் குணமாகியது?"

"ஓ... இப்பொழுது உனக்கு இதுதான் தேவையா... இந்த சத்சங்கம்- அதில் குருமஹராஜ் கூறிய கருத்துகள்- இதை எல்லாம் விட என் உடம்பு குணமானதுதானா உனக்குப் பெரிது?"

"அப்படியில்லை. உங்கள் கைகள் ரத்தக் கூழாகிவிட்டிருந்தன. குணமாக வாய்ப்பேயில்லை. ஆனால், எப்படி?"

"என்னப்பா நீ... எரிந்து சாம்பலாகிவிட்டவர்களை உயிர்ப்பித்த ரிஷிகள் எல்லாம் வாழ்ந்த நாடு இது. அசுர குருவான சுக்ராச்சாரியார் தன் வயிற்றில் உணவோடு உணவாகக் கலந்துவிட்ட 'கசன்' என்பவனையே மிருத்ய சஞ்சீவினியால் உயிர்ப்பித்திருக்கிறார். புராணங்களில் படித்ததில்லையா நீ...?"

"படித்திருக்கிறேன். ஆனால், இன்று அதெல்லாம்..."

"சாத்தியமில்லை என்கிறாயா?"

"ஆமாம்... இல்லை..."

"ஒரு கேள்விக்கு இரண்டு பதில்களா?"

"மன்னிக்கவும். இது கலியுகம். இங்கே பஞ்சபூத விதிமுறைகளை மீறி எதையும் செய்ய முடியாதல்லவா?"

"நீ விஞ்ஞானியா, மெய்ஞானியா?"

"இது என்ன கேள்வி...?"

"சரியான கேள்விதான் நீ மெய்ஞானியா, இல்லை விஞ்ஞானியா... ஏன் என்றால் உன் கேள்வி விஞ்ஞானியின் கேள்வி..."

"அப்படியானால்...?"

"அவர்கள்தான் மனித சக்தியை - பிரபஞ்ச கத்தியை ஒரு வரையறைக்கு உட்படுத்தி அதற்குள் இருந்தே உலகைப் பார்ப்பவர்கள்..."

"அதில் தப்பில்லையே...?"

"நானும் தவறென்று சொல்லவில்லையே..."

"என்னாலும் அப்படித்தான் நினைக்க முடிகிறது."

"உனக்கு மந்திர சாஸ்திரம் தெரிந்தும் இப்படி கேட்கிறாய்."

"மந்திர சாஸ்திரத்தில் யட்சிணிகள் மூலம் சில கண் கட்டுகள் செய்யலாம். அதிலும் உடல் உறுப்புகளை வரவழைக்கவோ புதிதாக மாற்றவோ இயலாது."

"உனக்கு தெரிந்த ம ந்திர சாஸ்திரத்தில் என்று திருத்திக் கொள் உண்மையில் மந்திர சாஸ்திரம் ஒரு சமுத்திரம் அப்பனே. உனக்குத் தெரியாத எவ்வளவோ விஷயங்கள் இந்த உலகத்தில் உள்ளன. நான் விபத்துக்குள்ளாகிக் கிடந்த போது பலரது உதவிகளை எதிர்பார்த்தேன். யாரும் செய்யவில்லை. வேறுவழியின்றி இறைவனிடம் கேட்டேன். அதன்பிறகு தன்வந்திரி பகவானே நேரில் வந்து என் சிதைந்த திசுக்களை நேர்ப்படுத்தி என்னை சீராக்கிவிட்டுச் சென்று விட்டார். இதுதான் நடந்தது."

அந்த சந்நியாசி சாதாரணமாகச் சொன்னார் ருத்ரேஸ்வருக்குள் இப்பொழுது குழப்பம். இவர் ஒருவேளை பொய் சொல்கிறாரோ.

"என்னப்பா... நான் பொய் சொல்வதாக நினைக்கிறாயா?"

"ஸ்வாமி..."

"நானாக வந்து உன்னிடம் எதையும் கூறவில்லை. நீ கேட்டதற்கு நான் பதில் கூறிக்கொண்டிருக்கிறேன். எனக்குப் பொய்கூறத் தெரியாது. அது பாவம். உள்ளதைச் சொன்னேன்."

"இல்லை... நீங்கள் கூப்பிட்ட உடன் கடவுள் வருகிறார். மருந்து தந்து குணமாக்குகிறார் என்றால் அப்படிப்பட்டவரிடம் கை கால்களையா கேட்பது? முக்தியைக் கேட்கலாமே...?"

ருத்ரேஸ்வரின் கேள்வியில் உள்ள புத்திசாலித்தனம் அந்த சாதுவை சிரிக்கச் செய்தது.

"நான் தவறாக எதையும் கேட்கவில்லை என்று நினைக்கிறேன்."

"இல்லை... நீ இந்த மாயா உலகில் வாழும் மனிதர்களில் ஒருவன் அல்லவா? அதுதான் இப்படிக் கேட்டிருக்கிறாய்."

"உங்கள் பதில் எனக்கு விளங்கவில்லை. நான் மாயா உலகில் வாழ்வதற்கும் இப்படிக் கேட்பதற்கும் என்ன சம்பந்தம்...?"

"இது முன்பு நீ கேட்டதைவிடவும் மோசமான கேள்வி. நீ படித்த படிப்பு அவ்வளவும் விரயம்தான். நீ உள்வாங்கிப் படிக்கவில்லை. பிள்ளைகள் பாடங்களை மனப்பாடம் செய்வதுபோல செய்திருக்கிறாய்..."

அவர் ருத்ரேஸ்வரை இடி இடி என்று இடித்து எடுத்துவிட்டார். ருத்ரேஸ்வருக்குள் கோபம் திரண்டாலும் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டான்.

"ஸ்வாமி... தயவுசெய்து எனக்குப் புரிய வையுங்கள். எனக்கு எனது பலவீனம் தெரியவேண்டும்."

"சொல்கிறேன்... முன்பு ரத்த கதியாக நான் இருந்தபோது என்னைக் கண்டு வியக்காத நீ இப்போது வியக்கிறாய். முன்பு எனக்கு உதவ வேண்டும் என்கிற எண்ணம் இல்லை. இப்போதோ என்னிடம் இருந்து நிறைய எதிர்பார்ப்பு. கொடுப்பவர்களே எடுப்பவர்களாக முடியும். நீ கொடுக்கவும் இல்லை. அதே சமயம் என்னில் இருந்து நீ எவ்வளவு எதிர்பார்க்கிறாய்! உனது இந்த அணுகுமுறையே தவறு. இது ஒரு வகையில் பலவீனம்தானே?"

அவர் அப்படிக் கேட்கவும், ருத்ரேஸ்வரால் மௌனிக்கத்தான் முடிந்தது.

"அடுத்து, நான் இறைவனிடம் கை கால்களைக் கேட்டுப் பெற்றதற்கு பதிலாக முக்தியையே கேட்டிருக்கலாம் என்றாய்... நீ கடவுளை உனக்கும் மேலாக ஒரு தனித்த சக்தியாக பார்ப்பது இதில் இருந்து தெரிகிறது. அதாவது நீ வேறு... கடவுள் வேறு என்று நீ நினைக்கிறாய் என்பது தெரிகிறது. இது உனது அடுத்த பலவீனம். உன்னுள் கடவுள் சிந்தனை தெளிவானதாக இல்லை. வாழ்க்கை என்பதும் அதில் நமது பிறப்பு என்பதும் நமது கர்மவினையால் வந்தது. பிறந்துவிட்ட ஒருவர் இயற்கையாக உயிர் பிரியும் வரை அவருக்கு விதிக்கப்பட்டதை அனுபவித்தே ஆகவேண்டும். இடையில் சற்று ஓய்வு எடுக்கலாம். ஆனால், அனுபவிப்பதில் தயக்கம் கூடாது."

"ஒரு விளையாட்டின்போது நடுவரிடம் நல்ல பந்துகளைக் கொடுக்கச் சொல்லலாம். சற்று ஓய்வு கொடுக்கச்

சொல்லலாம். ஆனால், 'நான் விளையாடவேயில்லை; இருந்தாலும் விளையாடிவிட்டதாக நினைத்துக்கொண்டு எனக்கு வெற்றியைக் கொடுத்துவிடு' என்று கேட்டால் அது எப்படி இருக்கும்?

அப்படித்தான் இருக்கும், கடவுளிடம் 'எனக்கு உடனடியாக முக்தி கொடு' என்பதும்... என் வரையில் நிறைய கடமைகள் எனக்கு இருக்கின்றன. அவைகளை செய்ய எனக்கு கையும் காலும் வேண்டும். என் தப்பான வினை காரணமாகத்தான் விபத்து ஏற்பட்டது. அதே சமயம் நல்ல வினைகள் திரும்ப எனக்கு அதை கொடுத்துவிட்டன.

முக்தி எனக்கு தானாகவே நிச்சயமாக கிடைக்கும். மெல்ல கிடைக்கட்டும். இப்போது என்ன அவசரம்?"

அந்த மனிதரின் பேச்சைக் கேட்டு ருத்ரேஸ்வர் வெலவெலத்துவிட்டான். அவனை உரித்து தைத்துவிட்டது அவர் பேச்சு. 'நீ ஒரு கத்துக்குட்டி; வெறும் காகிதப் புலி' என்று சொல்லாமல் சொல்லிவிட்டார் அவர்.

வெட்கமாக இருந்தது. அவர் 'அதிகம் பேசிவிட்டேன்; வேலையைப் பார்க்கிறேன்' என்பதுபோல அவனைவிட்டு விலகி நடந்தார். கால்நடையாக அவர் நடந்து செல்வதை ருத்ரேஸ்வரும் காரில் பயணிக்கும்போது பார்த்தான். காரை நிறுத்தி அவரை காருக்குள் ஏறிக்கொள்ளச் சொன்னான்.

"இல்லை... எனக்கு இந்த வாகனங்கள் அவசியமேயில்லை" என்றபடியே நடந்தார் அவர்.

அதன்பின் கிட்டத்தட்ட ஆறு மணி நேரம் கார் பயணம். அகமதாபாத் வந்தது. அங்கேயும் ஒரு ஆஸ்ரமம். அங்கே ஒரு ஸ்வாமிஜி இருக்கிறார் அவரை சந்திப்பதற்காக காரில் உள்நுழைந்தபோது பகீரென்றது. எதிரில் அபுமலை ஆஸ்ரமத்தில் பார்த்த அதே ஸ்வாமிஜி சிரித்தபடியே அவனைக் கடந்துபோனார். 'இவர் எப்படி இங்கே வந்தார்...? நான் சென்றபிறகு வேறு ஏதாவது காரில் வந்திருப்பாரோ?' கேள்விகளோடு உள்ளே நுழைந்தவன் அங்கிருப்பவர்களிடமும் கேட்டான். அவர்களோ, "அவர் இங்கே வந்து கிட்டத்தட்ட ஐந்து மணி நேரமாகிறது. ஸ்வாமிஜியிடம் அடிக்கடி வந்து மனம்விட்டுப் பேசிவிட்டு செல்வார் இப்போதுகூட இமயமலைக்குத்தான் போய்க்கொண்டிருக்கிறார். இந்த

நொடி அவர் இமயமலையில் இருக்கக்கூடும்" என்றனர் ருத்ரேஸ்வருக்குள் அடுத்த கட்ட பிரமிப்பு.

"அது எப்படிச் சாத்தியம்?"

"இப்படி ஒரு கேள்வியை ஒரு பாமரனும், வெகுஜனத்தில் ஒருவரும் கேட்கலாம். ஒரு சாதுஜி... அதுவும் ஆன்மீகத்தில் ஊறிய ஒருவரா கேட்பது?"

"இல்லை... எப்படி ஒரு மனிதர் எந்த வாகன உதவியும் இல்லாமல் ஒரு இடத்தில் இருந்து இன்னொரு இடத்திற்கு செல்ல முடியும்?"

"அஷ்டமா சித்தி பற்றி எல்லாம் உங்களுக்கு எதுவும் தெரியாது போலிருக்கிறது. அதான் இப்படிக் கேட்டு விட்டீர்கள். அவர் அவைகளை அடைந்தவர். அவருக்கு இடம், பொருள், காலம் என்று மூன்றுமில்லை."

" 'இடம், பொருள், காலம்' - இது எப்படி இந்த மண்ணில் பிறந்த ஒருவனுக்கு இல்லாமல் போகும்?"

"இதற்கு பதிலை உள்ளே போய் ஸ்வாமிஜியிடம் கேளுங்கள் எங்களுக்கு சொல்லத் தெரியாது" என்று ருத்ரேஸ்வரை உள்ளே அனுப்பினர். உள்ளே உள்ள ஸ்வாமி ஜியும் முன்பு அந்த ஸ்வாமிஜி கேட்ட அதே கேள்விகளைத் தான் கேட்டார்.

"நீ மெய்ஞானியா... விஞ்ஞானியா?"

"இரண்டும்தான்..."

"ஒன்று இரண்டாக இருக்கும் வரை அது ஒன்றாக முடியாது. ஒரு நிலைப்பாட்டுக்கு வா..."

"ஏன்... இரண்டிலும் சஞ்சரிப்பது எப்படித் தவறாகும்?"

"பறக்க நினைப்பவர்கள் நடக்க முடியாது... நடக்க நினைத்தால் பறக்க முடியாது. இது அப்படி ஒரு விஷயம்..." என்றார் அந்த ஸ்வாமிஜி.

ஓரளவு புரிந்தது.

"சரி... என்னை மெய்ஞானியாகக் கருதிக்கொண்டு பதில் கூறுங்கள்."

"நல்லது... இடம், பொருள், காலம் என்பது என்ன?"

"பூமியில் இப்பொழுது நான் உங்கள் முன் நின்று பேசிக்கொண்டிருக்கிறேன் என்பதில் மூன்றுமே உள்ளதே. இது எப்படி ஒருவருக்கு இல்லாமல் போகும்?"

"நல்லது. என் கேள்விகளுக்கு பதிலைக் கூறு..."

"சொல்லுங்கள்."

"இப்பொழுது மணி என்ன?"

"மாலை மணி ஐந்து."

"அப்படியானால் இன்னும் ஒரு மணி நேரத்தில் இருட்டிவிடுமல்லவா?"

"நிச்சயமாக..."

"எதனால்?"

"இது என்ன கேள்வி? அதுதான் இயற்கை."

"அது சரி... ஏன் ஆறு மணிக்கு இருட்டுகிறது? இப்பொழுது இருட்டலாமே...?"

"அது எப்படி... பூமியின் சுழற்சிக்கு ஏற்பத்தானே எல்லாம்...?"

"சுழற்சி என்றாயே... அதற்கொரு கணக்கு இருக்கறதல்லவா?"

"நிச்சயமாக... இல்லாவிட்டால் எப்படிக் கச்சிதமாய் ஆறு மணிக்கு இருள் வரும்?"

"இப்பொழுது அந்த கணக்கிற்கு வா. சரியாக ஒரு மணி நேரம் கழித்து இருட்டப்போகிறது. அதாவது இன்றைய பகல்பொழுது முடிந்துவிடும். இதற்கென்று ஒரு வேகம் இருக்கிறது அல்லவா?"

"நிச்சயமாக..."

"அந்த வேகத்தை ஒரு உதாரணத்திற்கு 100 கி.மீ. வேகம் என்று வைத்துக்கொள்."

"சரி..."

"நீ முந்நூறு கி.மீ. வேகத்தில் கால கதியில் செயல்பட்டால் அந்த ஆறு மணியை எப்பொழுது அடைவாய்?"

"நிச்சயம் அந்த அறுபது நிமிடம் என்றில்லாமல் இருபது நிமிடத்தில் அடைந்துவிடுவேன்."

"சரி... 600 கி.மீ. வேகத்தில் செயல்பட்டால்...?"

"செயல்பட்டால்...?"

"யோசித்து நீயே பதில் கூறு..."

"நீங்கள் என்ன கூற வருகிறீர்கள்?"

"கால கதிக்கு என்று ஒரு வேகம் இருக்கிறது. அதில் பூமியில் நாம் வேகத்துக்கு ஏற்ப ஒரு இடத்தில் இருந்து இன்னொரு இடத்திற்கு செல்கிறோம். இந்த வேகத்திடம்தான் இருக்கிறது சூட்சுமம்..."

"புரிகிறது.. காலகதியின் வேகத்தைவிட பல மடங்கு வேகம் நம்மிடம் இருந்தால் நாம் இடங்களை சாதாரணமாகக் கடந்துவிடலாம். அப்போது காலம் நம்வரையில் இல்லாத ஒன்றாகவே ஆகிவிடுகிறது."

"அஷ்டமா சித்திக்குள் இப்படி எல்லாம் நிறைய ரகசியங்கள் உள்ளன."

"அது எப்படி நாம் வேகம் பெற முடியும்? நமக்கு ஏது அவ்வளவு சக்தி?"

"எல்லாவற்றுக்கும் விடை உள்ளது. ஒரு மனிதன் தன் மூளையின் சக்தியில் ஐந்நூறு சதவிகிதத்தைதான் வாழ்நாளில் பயன்படுத்துகிறான். உடல் சக்தியிலும்கூட அதுதான் அவன் நிலைப்பாடு. யோக சக்தியும் அப்படித்தான்... அவைகளை அடைந்தாலன்றி உன் கேள்விக்கு பதிலை என்னால் கூற முடியாது..."

"அதற்கு வழி?"

"அம்பிகையின் கருணைதான். என்னிடம் என்ன ருத்ர வீணையா இருக்கின்றது... அதை வாசித்து உனக்குள் நான் அந்த ஞானத்தை உருவாக்க...?"

ருத்ரேஸ்வர், ருத்ர வீணை பற்றி அந்த அகமதாபாத் ஸ்வாமிஜி குறிப்பிடவும் கூர்மையானான் எற்கெனவே பனாரஸ் பல்கலைக்கழகத்தில் 'ருத்ர வீணை' ஓவியத்தைப் பார்த்திருக்கிறான். அபார சக்தி கொண்டது என்றும் கேள்விப் பட்டிருக்கிறான். இப்போது இங்கே இவரும் அதைக் குறிப் பிடுகிறார்.

"ஸ்வாமிஜி... ருத்ர வீணைக்கும் அஷ்டமா சித்திகளுக்கும் என்ன சம்பந்தம்?"

"ருத்ர வீணைக்கும் அஷ்டமா சித்திக்கும் மட்டுமா சம்பந்தம்? அதற்கும் இந்த பிரபஞ்சத்திற்கும், அதற்கும் நாம் பேசும் மொழிக்கும், அதற்கும் இந்த இயற்கைக்கும் உள்ள சம்பந்தம் என்பது நமக்கும் இறைவனுக்கும் உள்ள சம்பந்தம் போன்றது."

"இப்பொழுது அது எங்கிருக்கிறது?"

"யாருக்குத் தெரியும்? ஆனால் ஒன்று... அது இருக்கிறது. அது ஒலிக்கிறது. இப்பொழுதும் அதன் நாதத்தைத் தோடிபுரம் என்னும் ஊரில் அனுபவிக்கிறார்கள். அது தன்னை வெளியே காட்டிக்கொள்ளாமல் இசையால் அந்த ஊரையே வாழ வைத்துக் கொண்டிருக்கிறது. அது தெரியும்..."

இப்படி அந்த ஸ்வாமிஜியும் சொல்லவும், ருத்ரேஸ்வர் மனதில் ருத்ர வீணை ஒரு பெரிய ஆசனமே போட்டுவிட்டது.

'அது எனக்கு கிடைக்குமா? கிடைத்தால் அஷ்டமாசித்தி மட்டுமல்ல.. இந்த ஸ்வாமிஜிகள் என்னை வெறும் ஏட்டுச் சுரைக்காய் என்று கூறியதற்கும் சேர்த்து பதில் கூற முடியுமே?'

அவனுக்குள் ஒரு எழுச்சி. அது சபதமாக மாறிவிட்டது. புறப்பட்டுவிட்டான். உடன் துணைக்கு மந்த்ரிணியும். 'அக்கல்ட் சயின்ஸ்' என்னும் மறை விஞ்ஞானம் பற்றிய ஆராய்ச்சியில் இருப்பவள். அதுதான் அவளது பிஹெச்.டி சப்ஜெக்டே.... அவளை சிஷ்டையாக ஆக்கிக் கொண்டு தோடிபுரத்துக்கும் கிளம்பிவிட்டான். இதோ ஊர் எல்லையில் காலும் வைத்தாயிற்று. வைத்த வேளைதான் சரியில்லை. அங்கங்கே சிலர் ரத்த விளாறாகக் கிடந்தார்கள். சிலர் தலைதெறிக்க ஓடிக் கொண்டிருந்தார்கள். ஒரு இடத்தில் மோட்டார் பைக் ஒன்று நசுங்கிக் கிடந்தது. என்னதான் நடந்தது...?

**ரு**த்ரேஸ்வரின் ஃபோர்டு ஐகான் கார் தேங்கி நின்றது. காரை விட்டு வெளியே இறங்கி நின்ற ருத்ரேஸ்வருக்கு எதிரே தெரிந்த காட்சிகள் அதிர்ச்சியாக இருந்தன. ஒரு மோட்டார் பைக் நசுங்கிக் கிடந்தது. புளிய மரக்கிளை மேல் தூக்கி எறியப்பட்டது போல் ஒருவன் கிடந்தான்.

சாலை ஓரமாக ஒருவன் வாயில் ரத்தக்கசிவுடன் மயங்கியும் கிடந்தான். அதே சமயம் யானை ஒன்று பலமாக பிளிறும் சப்தமும் கேட்டது.

அடுத்த நொடியே ருத்ரேஸ்வருக்கு அங்கு நடந்துள்ள விபரீதத்துக்கு காரணம் விளங்கிவிட்டது. அதற்கேற்ப பிளிறிய யானை ஒன்று பக்கமாய் ஒரு தென்னந்தோப்பில் இருந்து எதிர்ப்புறம் இருந்த வயல்காட்டுக்குள் படுவேகமாக இறங்கி

நன்கு தழைத்து வளர்ந்திருந்த நெற்பயிர் கதிர்களைப் பிடுங்கி வீசத் தொடங்கியது.

ஒருவன் கத்திக்கொண்டே அதன் பின்னால் ஓடினான். அதைத் தொடர்ந்து மறைவாக இருந்த பலர் மெல்ல வெளியே வரத் தொடங்கினார்கள். சிலர் கை கால்களில் காயம். ருத்ரேஸ்வரைப் பார்த்தவர்கள், "நல்லவேளை நீங்க கொஞ்சம் முந்தி வரலை. வந்திருந்தா இந்த யானை உங்க காரையே தூக்கி வீசியிருக்கும்..." என்றனர்.

"அந்த யானை யாரோடது?"

"தோடிபுரம் கோவிலுக்கு தானமாக கொடுக்கறதுக்காக ஒருத்தர் தஞ்சாவூர்ல இருந்து அழைச்சிகிட்டு வந்துருக்காரு. வழியில மதம் பிடிச்சிகிச்சு. தெருவுல போற வர்றவங்களை எல்லாம் தூக்கிப் போட்டு மிதிக்க ஆரம்பிச்சிடிச்சு..."

ருத்ரேஸ்வர் அந்த பதிலைக் கேட்டபடியே வயலில் அட்டகாசம் செய்யத் தொடங்கியிருந்த யானையைப் பார்த்தான். அது பிளிறிக் கொண்டிருந்தது. அடாத கோபமும் அதனிடம் தெரிந்தது.

விலங்குகளில் மிகப் பெரியது இன்றைய உலகில் யானைதான். ஒரு மிகப் பெரிய உயிர் இயக்கத்துக்கு யானை ஒரு சான்று. ஆனாலும் அடிப்படையில் மிக பயந்த ஒரு இனம் யானை இனம். அனாலேயே மனிதன் அதை அடிமை கொண்டான்.

ஒரு யானையின் காதுக்கு இருக்கும் பலம்கூட ஒரு மனிதனிடம் கிடையாது. ஆனாலும் மூளை பலம் காரணமாக அவன் உயர்ந்து நிற்கிறான். யானை இதன் மூலம் 'உருவம் பெரிதில்லை; புத்திதான் பெரியது' என்பதை உலகத்துக்கு சொல்லும் ஒரு மிருகமாகிவிட்டது. அதே சமயம் யானைக்கு மதம் பிடித்து அது தன் சத்வ குணத்தை இழந்துவிட்டால் அதன்பின் அதை அடக்க யாராலும் முடியாது... எனவே எப்பொழுதும் அதை கவனமாக பார்த்துக்கொள்ளவேண்டும் என்பதும் தான் செய்திகள்.

ருத்ரேஸ்வர் அதைப் பற்றியெல்லாம் சற்று யோசித்து விட்டு அந்த யானையை நோக்கி நடக்கத் தொடங்கினான். அதைப் பார்த்த - அவனுடன் வந்திருந்த பெண்ணான மந்த்ரிணி சற்று பயந்தாள்

"ஈஸ்வர்..."

- அவன் திரும்பிப் பார்த்தான்.

"எங்கே போறீங்க?"

"வேடிக்கை பார் மந்த்ரிணி."

"எனக்கு பயமா இருக்கு ஈஸ்வர். அந்த யானைகிட்டயா போறீங்க?"

"ஆமாம்... ஒரு பசும் வயலை அது அழிக்கறதை வேடிக்கை பார்க்கச் சொல்றியா நீ?"

"அதுக்கு மதம் பிடிச்சிருக்கு..."

"அந்த மதத்தை இப்ப மந்திரம் பிடிக்கப் போகுது பார்..."

- ருத்ரேஸ்வர் சொன்னது அவளுக்கு விளங்கியது. அவன் தான் அறிந்திருக்கும் வசிய மந்திரம் ஏதோ ஒன்றை பயன்படுத்தப் போகிறான் என்று யூகித்தவள் தொடர்ந்து கவனிக்க ஆரம்பித்தாள்.

ஆனால் ... அங்குள்ளவர்களோ மிக பயந்தார்கள்.

"அய்யா... யாருங்க அது? அங்க எங்க போறீங்க? வேண் டாங்க" அலறினார்கள். ஆனால், ருத்ரேஸ்வர் அவைகளை துளிகூட காதில் வாங்கிக் கொள்ளவில்லை. கம்பீரமாக முன்னால் நடந்தான். வயல்வரப்பில் காலை வைத்தான். யானையோ அவனுக்கு தன் பின்பக்கத்தை காட்டியபடி நின்றுகொண்டு பயிர்களை பிடுங்கிப் பிடுங்கி வீசிக்கொண் டிருந்தது.

"யாரு சாமி அது...? உங்களுக்கென்ன பைத்தியமா? திரும்பி வந்துடுங்க..." என்று வரப்பின் மேல் நின்றுகொண்டு அந்த வயலுக்கு சொந்தக்காரனும் குரல் கொடுத்துப் பார்த்தான்.

ருத்ரேஸ்வர் அசரவில்லை.

உதடிரண்டும் ஏதோ மந்திரத்தை முணுமுணுக்கத் தொடங்கியிருந்தன. மந்த்ரிணி கண்கள் விரியப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் எதிர்பார்த்தது போலவே அந்த அதிசயமும் நடக்கத் தொடங்கியது. யானை மெல்லத் திரும்பியது. சில நொடிகள் வரை மௌனமாக ருத்ரேஸ்வரைப் பார்த்தது. பின் தும்பிக்கையை உயர்த்தியபடி பிளிறியது. பின் அப்படியே அங்கேயே மண்டியிட்டது. ருத்ரேஸ்வர் மெல்ல அருகில் சென்று அதன் தும்பிக்கையைப் பற்றினான்.

பின் அதன் முன் கால் மீது தன் காலை வைத்து அதன் மீது ஏறினான். தலை மேல் சற்று தள்ளி கழுத்தருகே அமர்ந்தான். அந்த யானையும் எழுந்து அமைதியாக வரப்பை தேடிப்பிடித்து பின் அங்கிருந்து நிதான நடையில் வரத் தொடங்கியது. எல்லோரும் வாயைப் பிளந்துவிட்டனர்.

மந்த்ரிணி உற்சாகமாக கையைத் தட்டினாள்

சிலர் 'என்ன அதிசயம் இது' என்று வாய் விட்டனர்

யானையோடு வந்த யானைக்காரனும் ஓடி வந்தான்.

"சாமி...! நீங்க நல்லா இருக்கணும். ஆனா என்ன பண்ணீங்க சாமி? எப்படி யானை மடங்கினுச்சு?" என்று மூச்சிளைக்க கேட்டான்.

ருத்ரேஸ்வர் முகத்தில் ஒரு கர்வச்சிரிப்பு.

விஷயம் ஊருக்குள் வெகுவேகமாக பரவத் தொடங்கியது.

**ப**ட்டர் வீட்டில் பூகட்டிக் கொண்டிருந்தாள் மைதிலி. பக்கத்து வீட்டு சின்னப் பெண்ணான அலமேலு, "அக்கா! பாட்டி கொஞ்சம் காபிப் பொடி கேட்டா.." என்றபடி எதிரில் வந்து நின்றாள். மைதிலியும் சிரித்தபடி காபிப் பொடி எடுத்து வந்து தரவும், "அக்கா! உனக்கு ஒரு விஷயம் தெரியுமா?" என்றுதான் ஆரம்பித்தாள். பார்வையாலேயே என்னவென்று மைதிலி கேட்க, "யார்னு தெரியலக்கா யாரோ ஒருத்தர் ஊருக்குள்ள வரும்போது யானை ஒண்ணு மதம் பிடிச்சு அட்டகாசம் பண்ணியிருக்கு... ஆனா, அவர் போய் அந்த மதம் பிடிச்ச யானைய சாதாரணமாஅடக்கி அதன்மேலயே ஏறி உக்காந்துண்டு ஊருக்குள்ற வந்தாராம்..."

"அப்படியா?"

"ஆமாம்கா... ஊர் பூரா அவர் பத்திதான் பேச்சு. அவர் காசில படிச்சவராம். அவருக்கு தெரியாத வித்தையே கிடையாதாம்"- அலமேலு வியந்துகொண்டே காபிப்பொடியுடன் விலகிச் சென்றாள் அதே சமயம் ஒரு மாதிரி மர்மப் புன்னகையுடன் அவள் எதிரில் உள் நுழைந்து கொண்டிருந்தான் அசோகன். அவனைப் பார்க்கவும் "ஐயோ! பைத்தியம்..." என்று பலமாக முணுமுணுக்கவும் அசோகனும் பதிலுக்கு அவள் மேல் பாய்வதுபோல பழித்துக் காட்டினான் அவளும் பயந்துகொண்டே ஓடிச் சென்று மறைந்தாள்.

உள்ளே நுழைந்தவனின் பார்வை நேராக மைதிலி நோக்கித்தான் சென்றது. முகத்திலும் ஒரு சொல்ல முடியாத அளவு கனிவு.

"என்ன பாபா... எதுக்கு இப்படி ஒரு பார்வை பாக்கறே?"

"இந்த பார்வைக்கு உனக்கு பொருள் தெரியுதா தாயே?"

"ஏன் தெரியாம..? 'வர வேண்டியவன் வந்துட்டான். என்ன பண்ணப்போறே?' ன்னு தானே கேட்கப் போறே?"

"ஆமாம். இனி இந்த தோடிபுரம் கொஞ்சம் கொஞ்சமா மாறும். நடக்கக் கூடாததெல்லாம் நடக்கும்."

"தெரியும்."

"கடைசியா ஒரு சோதனை... அதுவும் உனக்கு..."

"அதுவும் தெரியும். வந்திருக்கறவன் பார்க்கத்தான் பிராமணன். ஆனா மனசளவுல அவன் ஒரு ராட்சஸன்."

"அவனை எப்படிச் சமாளிக்கப் போறே தாயே...?"

"பொறுத்திருந்து பார்..."

"நானும் ஒரு விளையாட்டு விளையாடப் போறேன்."

"என்ன... தங்கப் புதையலை கரியாக்கிட்டியா?"

"ஆமாம். ஊர் பிரசிடெண்ட்டை கொஞ்சம் கட்டிப்போட வேண்டியிருக்கு..."

"உன் வேலையை நீ பார் என் வேலையை நான் ஆரம்பிக்கிறேன்."

- இருவர் பேசிக்கொண்டதும் புதிராகத்தான் இருந்தது. மைதிலியும் கட்டி முடித்த அளவிலான பூக்களுடன் கோவிலுக்கு புறப்பட்டாள்.

**கோ**விலில்தான் இருந்தான் ருத்ரேஸ்வர். தோடீஸ்வரர் ஆலயம் அவனை அப்படியே மயக்கிவிட்டிருந்தது. கோவிலுக்கு வந்தவர்களும் அவனைப் பார்த்து வியந்துகொண்டிருந்தார்கள்.

"இவர்தான் யானையை அடக்கினவர். பெரிய பண்டிதர்" என்று ஒருவருக்கொருவர் சுட்டிக்காட்டி பேசியும் கொண்டார்கள்.

பட்டரும் விஷயம் தெரிந்து ருத்ரேஸ்வரை சற்று விசேஷமாக வரவேற்றார்.

"வரணும்... வரணும்... உங்களைப் பத்தி இப்பதான்கேள்விப் பட்டேன்."

"சந்தோஷம்... நீதான் இந்த ஊர் கோவில் பட்டரா?"

"ஆமாம். உங்களுக்கு சொந்த ஊர்?"

"பிறந்து வளர்ந்ததுல இருந்து படிச்சது வரை சகலமும் காசில."

"ஆஹா... எப்பேர்ப்பட்ட புண்ணிய க்ஷேத்ரம் அது. அங்க பொறந்து வளர்ந்தவராக்கும். ஆமா. நன்னா ஸ்பஷ்டமா தமிழ் பேசறேளே..."

"தமிழ்தானே தாய் பாஷை. அது எப்படி மாறும்."

"ரொம்ப சந்தோஷம். யானைய எப்படிஅடக்கினேள் அடியேன் தெரிஞ்சுக்கலாமா?"

- ருத்ரேஸ்வர் அதைக் கேட்டு பதில் கூறாமல் சிரித்தான்.

"சொல்லப் பிரியப்படலையோ?"

"அப்படி எல்லாம் இல்லை. சொன்னா உங்களுக்கு புரியுமான்னுதான் எனக்குத் தெரியல."

"இதுல புரிஞ்சுக்க என்ன இருக்கு?"

"உங்களுக்கு தட்சமந்த்ர சாஸ்திரம் தெரியுமா?"

"தட்சமந்த்ர சாஸ்திரமா... கேள்விப்படாத பேரா இருக்கே..."

"ஆனா இருக்கு... அது படிக்கறவாளுக்கும், படிச்சவாளுக்கும் யானையெல்லாம் சும்மா பூனைக்குச் சமம்..."

"ரொம்ப ஆச்சரியமா இருக்கே?"

"நம்ம வாழ்க்கையைவிடவா ஒரு பெரிய ஆச்சரியம்? உங்களுக்குகெல்லாம் தெரியாதா என்ன?"

"எப்படிச் சொல்றேள்..."

"விரிவா நான் உங்களுக்கு பின்னால சொல்றேன். நான் இந்த ஊர்ல கொஞ்ச நாள் தங்கத்தான் வந்திருக்கேன்..."

"சந்தோஷம். ஆமா உங்களுக்கு உறவுக்காரா இங்க யாராவது இருக்காளா?"

"இல்லை... ஆனா இனி நிச்சயமா உருவாவா!"

"யூ.. மீன்...?"

"ஐ மீன்... நான் இங்கயே கல்யாணம் பண்ணிக்க விரும்பறேன். அப்ப எனக்கு இந்த ஊர்ல சொந்தம் உருவாகிடும்தானே?"

"ஓ... நீங்க அப்படி வரேளா?"

பட்டர் சிரித்தார். பின் கற்பூர ஆரத்தி காட்டிவிட்டு வந்தார் மைதிலியும் கச்சிதமாக பூவுடன் வந்தாள் வரும் போதே ருத்ரேஸ்வரையும், மந்த்ரிணியையும் பார்த்துக் கொண்டேதான் வந்தாள். உதட்டில் ஒரு சன்னமான சிரிப்பு, ருத்ரேஸ்வருக்கு அவளைப் பார்க்கவும் கொஞ்சம் பதைப்பாக் கூட இருந்தது. விறுவிறுவென்று அங்கிருந்து விலகியவன் ஒரு தூண் பின்னால் போய் நின்றான். பின் மளமளவென்று ஏதோ மந்திர உச்சாடனம் செய்தவன், அப்படியே ஒளிந்த நிலையில் மைதிலியைப் பார்த்தான் மந்த்ரிணிக்கும் ருத்ரேஸ்வரின் செயல்பாடு அதிர்ச்சியாகத்தான் இருந்தது.

"ஈஸ்வர்... என்ன பிராப்ளம்?"

"அங்க பார் மந்த்ரிணி."

"பட்டர் பொண்ணு மைதிலியதானே சொல்றீங்க."

"அவ மைதிலி இல்ல மந்த்ரிணி."

"மைதிலி இல்லையா?"

"ஆமாம்... கிட்ட வா... யார்னு உனக்கு காட்றேன்."

மந்த்ரிணியை அருகில் அழைத்து அவளது நெற்றிப் பொட்டில் தன் ஆட்காட்டி விரலை வைத்ததுதான் தாமதம். மந்த்ரிணியின் பார்வை அப்படியே மாறி மைதிலி ஒரு அம்பிகையாக அவளுக்கு காட்சியளிக்கத் தொடங்கியிருந் தாள். கையை எடுத்துக் கொள்ளவும், அவளது உருவம் ஒரு சராசரி குடும்பப் பெண்ணின் உருவமாகத்தான் தெரிந்தது. பதிலுக்கு வியப்போடு ருத்ரேஸ்வரைப் பார்த்தாள்."

"என்ன மந்த்ரிணி பார்க்கறே...? அவ யார் தெரியுமா?"

"யார் ஈஸ்வர்?"

"உனக்கு ஸ்ரீ புராணம் தெரியுமா?"

"நான் அவ்வளவா புராணமெல்லாம் படிக்காதவ."

"ஆனா, அக்கல்ட் சயின்ஸை பத்தி மட்டும் தெரிஞ்சுக்கணு மாக்கும்?"

"அது..."

"எது...? இந்த பிலாஸபி பத்தியும், ரிலிஜியஸ் பேஸ் பத்தியுமாவது ஏதாவது தெரியுமா?"

"எதுக்கு கேக்கறீங்க?"

"அதெல்லாம் தெரியாம நான் சொல்லப் போறத உன்னால புரிஞ்சுக்க முடியாது."

"அப்ப முதல்ல அது என்னன்னு சொல்லுங்க..."

"பைத்தியம்... பதினெட்டு புராணங்களையும், நாலு வேதங்களையும், நீதி சாஸ்திரங்களையும் தேவாரம், திரு வாசகம், பெரியபுராணம், திவ்யப்பிரபந்தம்னும் படிக்க வேண்டிய விஷயங்கள் ஒரு சமுத்திரமளவு இருக்கு எல்லாத்தை யும் படிக்க உனக்கு இந்த ஆயுளே போதாது."

"இதுக்கும் இந்த பொண்ணு அம்பாள் மாதிரி தெரிஞ்சதுக்கும் என்ன சம்பந்தம்?"

"நிறைய இருக்கு. இன்னொரு விஷயம். அந்தப் பொண்ணு அம்பாள் மாதிரி தெரியல. அம்பாள்தான் அந்த பொண்ணு மாதிரி தெரிஞ்சிருக்கா... அதுவும் அவளோட காவல் தேவதை யான பிராம்மி வடிவுல..."

"பிராம்மியா... கேள்விப்படாத பேரா இருக்கே?"

"புராணங்களைப் பற்றிய அறிவில்லாதவாளுக்கு அவ பேர் கேள்விப்படாத ஒண்ணுதான் சப்த கன்னிகள்ல ஒருத்தி அவ. பிரம்மாவோட அம்சம். அதான் பிராம்மின்னே பேர். இன்னொரு பேரும் உண்டு..."

- ருத்ரேஸ்வர் கொஞ்சம் கேப் விட்டான்.

அப்படியே கோவில் வாசல் நோக்கி நடந்தபடியும் இருந்தான். அவளும் தொடர்ந்துகொண்டிருந்தாள்.

"இன்னொரு பேர் என்ன அது?"

"சஸ்வதி."

"சரஸ்வதியா... யூ மீன் கலைமகள்?"

"சாட்சாத் கலைமகளேதான்...

"என்னால நம்ப முடியலை..."

"சரஸ்வதிக்குதானே வீணை தேவை..."

"அப்படின்னா?"

"தோடிபுரத்துல இருக்கற ருத்ர வீணையை என்னைப் போலவே தேடிண்டு அவளும் வந்திருக்கான்னு நினைக்கறேன்"

"தேடிண்டா?"

“தப்பா சொல்லிட்டேன் இல்ல... தேடிண்டு இல்லை, அதைக் காப்பாத்த...”

“அப்படின்னா?”

“அது களவு போயிடும்கற பயம் பிராம்மிக்கே வந்திருக்கணும்.”

“அதனால...?”

“காப்பாத்த வந்திருக்கலாம்...”

“ஈஸ்வர்?”

“என்ன மந்த்ரிணி... ஒரே குழப்பமா இருக்கா? பிராம்மி, சரஸ்வதின்னு நம்ப முடியாத விஷயங்கள பேசறேனா...? நீ காலண்டர்ல மட்டுமே பார்த்த சாமியை நேர்ல பார்க்கவும் அது ஒருவேளை பிரமையா இருக்குமோன்னுல்லாம் நினைக்கறியா?”

“ஈஸ்வர்...”

“சும்மா சொல்லு... எந்தக் காலத்துல தெய்வம் கண்ணுக்கு தெரிஞ்சிருக்கு. சினிமாவுல வேணா அது மனுஷக் கற்பனையால வடிவமைக்கப்பட்டு கிரீடம், குண்டலங்களோட காட்டப்பட்டிருக்கு. ஆனா நிஜத்துல ‘கடவுளுக்கு இதுதான் வடிவம்; அவர் இப்படித்தான் இருக்க முடியும்னு சொல்றது தப்பு’ங்கற கட்சிதானே?”

வெளியே கார் நின்றுகொண்டிருக்க, அதில் ஏறி அமர்ந்தான் ருத்ரேஸ்வர். மந்த்ரிணியும் அருகில் அமர்ந்துகொண்டாள். காரைக் கிளப்பினான்.

“நாம இப்ப எங்க போறோம்?”

“தஞ்சாவூருக்கு...”

“அப்ப இங்க தங்கப் போறதில்லையா?”

“இங்க தங்க இப்ப வழியில்லை...”

“முயற்சி செய்து பார்க்காம சொன்னா என்ன அர்த்தம் ஈஸ்வர்?”

“முயற்சி செய்து பாக்கறது இரண்டு விதம். ஒண்ணு, ஃபிஸிகல். இன்னொண்ணு, மென்டல்... என்னைப்போல வித்தை தெரிஞ்ச ஒருத்தன் இன்னும் ஃபிஸிகலா முயற்சி பண்ணிண்டிருந்தா நான் ஒரு கடைஞ்செடுத்த முட்டாள்.”

“அப்ப மென்டலா முயற்சி பண்ணணும்கறீங்களா?”

“பண்ணினேன்னும் சொல்றேன்.”

கார் ஓடத் தொடங்கியிருந்தது. சிறிய ஊர்தான். தெருக்களையும், மக்களையும் அளந்தபடியே ருத்ரேஸ்வரே காரை இயக்கிக் கொண்டிருந்தான்.

"நீங்க முயற்சி செய்த மாதிரியே தெரியலியே...?"

"அவ்வளவு வேகமா நான் செயல்பட்டேன்னும் சொல்லலாம். எந்த ஒரு ஊருக்கு போகும் போதும் அந்த ஊர் ஜியாக்ரபியை முதல்ல பார்த்தே தெரிஞ்சுக்கலாம். தோடிபுரம் ஜியாக்ரபி பத்தி உனக்கு தெரியல. அதான் இப்படிக் கேக்கறே..."

"அது என்ன ஈஸ்வர்...?"

"காவிரி பாயற பூமி. இந்த ஊரே அந்த தோடிபுரம் சிவனோட சொத்துன்னு ஒரு நம்பிக்கை இருக்கறதால இங்க யாரும் வெளியாருக்கு நில புலன்களை விக்கறதில்லை. இங்க இடம் வாங்க வெளியாரும் முயற்சி செய்யறதில்லை. இங்க வந்து தங்கி இருந்தாலே பாவ விமோசனம்கறது ஒரு நல்ல நம்பிக்கை. அப்படிப் பார்த்தா இங்க லாட்ஜ்கள் நிறைய உருவாகியிருக்கணும். ஆனா, ஒரு லாட்ஜ்கூட இல்லை. லாட்ஜ்னு இருந்தா வியாபாரம் உருவாகிடும். வியாபாரம்னா லாப நட்டங்கள் வரும். இந்த ஊர் லாப நட்டங்களை அனுமதிக்கத் தயாரா இல்லாத ஊர்..."

"அப்ப இந்த ஊருக்கு வர்றவங்க எங்கதான் தங்குவாங்க...?"

"தங்கக்கூடாது. 'வந்தியா...? ஸ்வாமியை சேவிச்சியா...? போயிண்டே இருக்கணும்' கறதுதான் நியதி." ருத்ரேஸ்வர் அப்படிச் சொல்லும்போது சாலையில் உபாசகர் நடந்து போய்க் கொண்டிருந்தார். அவரைப் பார்க்கவும் ருத்ரேஸ்வரின் கரிய விழிகள் விரிந்தன. காரிடமும் வேகம் குறையத் தொடங்கியது.

பிளாக் ஃபிலிம் ஒட்டிய கண்ணாடிக்குள் இருந்து பார்த்த ருத்ரேஸ்வருக்கு உபாசகர் தெரிந்தார். ஆனால், உபாசகருக்கு ருத்ரேஸ்வர் தெரியவில்லை. இந்த மாதிரி கண்களால் பார்க்க முடியாத நேரங்களில் சட்டென்று தங்களுக்குள் மந்திர ரூபத்தில் அடங்கிக் கிடக்கும் யட்சிணியிடம் உதவி கேட்பது உபாசகர்கள் வழக்கம்.

உபாசகர் நரசிம்ம பாரதியும், இந்த ஊரில் இப்படி ஒரு காரில் யார்?' என்கிற மாதிரி ஆச்சரியமும் அதிர்ச்சியுமாக

பார்த்தார். ருத்ரேஸ்வர் முகமோ காருக்குள் அஷ்டகோணலாக மாறிவிட்டுருந்தது.

"ஈஸ்வர்! உங்களுக்கு இவரை முன்பே தெரியுமா?"

"தெரியும் மந்த்ரிணி. இவர் பெயர் நரசிம்மபாரதி. ஒரு அம்பாள் உபாசகர் கிட்ட சிஷ்யரா இருந்தவர். பிறகு அவரை விட்டு விலகி காசிக்கு வந்து என் குருநாதர் கிட்ட கொஞ்ச காலம் இருந்தவர். அல்பமா சில வித்தைகளை அவர்கிட்ட கத்துண்டார். பிறகு அங்க இருந்தும் விலகிட்டார். இப்ப என்னடான்னா இந்த ஊர்ல சுத்திண்டிருக்கார்."

"ஒரு வேளை அவர் ஊரே இந்த ஊர்தானோ?"

"நிச்சயமா இல்லை. ஒரு நிமிஷம் இரு. இவர் எதுக்கு இங்க வந்துருக்கார்னு பளிச்சின்னே சொல்லிடறேன்."

- ருத்ரேஸ்வர் மெல்ல காரை டிரைவ் செய்தபடியே சற்று கண்களை மூடித்திறந்தான். அடுத்த நொடியே அவன் முகத்தில் அதிர்ச்சி அலைகள்.

"ஈஸ்வர்..."

"மந்த்ரிணி... இவரும் நம்மைப் போலவே ருத்ர வீணைக்காகத்தான் இந்த ஊருக்கு வந்திருக்கார்..."

"அப்படியா?"

ருத்ரேஸ்வர் முகம் அந்த போட்டியை உத்தேசித்து மாறிவிட்டிருந்தது. உபாசகரும் தனது யட்சிணி மந்திரம் மூலம் காருக்குள் இருப்பது ருத்ரேஸ்வர் என்பது தெரிந்து அப்படியே முகம் மாறியிருந்தார்.

'அம்பிகே... என்ன இது? இவன் கைலெல்லாம் அந்த ருத்ர வீணை கிடைச்சா என்ன ஆகறது?' அவரது உள்ளமும் பதறிடத் தொடங்கியது.



# 12
## அன்று

ராம்லாலின் கை வண்ணத்தில் பாபா உருவாகிக் கொண்டிருந்தார். தோடிபுரத்துக்கு வடகிழக்கில் நெடுந் தூரத்தில் உள்ள அந்த சமண மலைக்குப் போய் வருவதுதான் சாஸ்திரிகள் வரையில் சிரமமாக இருந்தது.

பாவம் சாஸ்திரிகள்.

ராம்லால் உண்மையில் எதற்கு வந்திருக்கிறான் என்று தெரிந்தால் தினசரி அவனைச் சந்திக்கவும், அவனுக்காக உணவெல்லாம் சமைத்து எடுத்துக்கொண்டும் போக மாட்டார்.

சாஸ்திரிகள் மனைவி பாலா தினமும் ராம்லாலுக்கு பிடித்த மாதிரி எண்ணெய்ப் பண்ணயம், மிளகுச் சட்டினி, தக்காளித் தொக்கு, கத்தரி வதக்கல், பின் நன்கு வளர்ந்த வெற்றிலை சுருள், பாக்கு, கிராம்பு என்று பார்த்துப் பார்த்து கொடுத்துவிட்டாள்.

வடவர்கள் தங்கள் உணவில் பாலுக்கு பிரதான இடம் ஒதுக்கியவர்கள். பாலை பிரதான உணவாக உட்கொண்டு விட்டு தினமும் கடுமையாக பாடுபடுபவர்களுக்கு யோகிகளைப் போல உடம்பு சித்தித்துவிடும்.

பாலை பிரதான உணவாக உட்கொண்டால் மட்டும் போதாது. அது செரித்து அதன் கொழுப்பு அம்சங்களும் உடம்பில் கரைந்து ரத்தம் சீராக ஓட நன்கு உழைக்க வேண்டும். உழைக்காதவர்கள் வரையில் பால் ஒரு ஆபத்தான உணவாகத்தான் ஆகிவிடுகிறது. உழைத்துவிட்டாலோ அது அமிர்தமாய் மாறி அவர்களை ரட்சித்துவிடுகிறது.

உட்கொள்ளும் உணவுப் பொருட்களிலேயே கிடைக்கும் போதே பிரசாதம் போல பவித்ரமாய் கிடைப்பது பால் ஒன்றுதான். அதிலும் பசுவின் பால் அதிவிசேஷமானது.

பசுவின் உள் உடல் அமைப்பு என்பது - நமது பூலோகம் மற்றுமுள்ள ஈரேழு பதினான்கு லோகங்கள் மற்றும் ஏழு கோள். கிரகங்கள் வானத்தில் உள்ள அமைப்பு இவற்றை ஒரு தாளில் அதற்குரிய இடத்தில் அது அதை வைத்து வரைந்தால் அது ஒரு பசுவின் உடல் அமைப்பு போல இருக்கும். இதில் வயிற்றுப் பாகத்தில் நாம் வாழும் பூலோகமானது இருக்கும். பசுவின் இரு கொம்புகளின் நுனியில்கூட இரண்டு வித உலகங்கள் இருப்பதைப் பார்க்கலாம்.

முப்பத்து முக்கோடி தேவர்களும் இந்த வடிவமைப்புக் குட்பட்ட உலகங்களில் சஞ்சரித்து வாழுகின்றவர்கள்தான். இவர்கள் அத்துணை பேரும் அமிர்தத்தை உண்டுவிட்ட படியால் இவர்கள் வரையில் காலம் என்ற ஒன்றே கிடையாது.

இவர்கள் காலம் கடந்தவர்கள் என்பதால் இவர்களுக்கு இறப்பு கிடையாது. இறப்பில்லாததால் மறுபிறப்பும் கிடையாது. இவர்களின் அம்சங்கள் அவ்வளவையும் ஒன்று திரட்டி உருவாக்கப்பட்ட ஒரு உயர் இனம்தான் பசுவாகும். அதனாலேயே நாற்றமடிக்கும் மலம்கூட பசுவைப் பொறுத்த வரையில் கிருமி நாசினியாகவும் அதன் மூத்திரம்கூட கோமியம் என்று மருந்துப் பொருள் ஆகவும் இன்று இந்த உலகத்தால் பார்க்கப்படுகிறது.

உலகில் உள்ள ஒவ்வொரு மனிதனுக்கும் பசு தன் பாலைத் தந்து உயிர்ப்பித்திருக்கிறது. தாய்ப்பாலுக்குப் பின் அவன் அதிகம் குடித்தது பசுவின் பாலைத்தான்...இதனால் ஒவ்வொரு மனிதனுக்கும் இரண்டு தாய். ஒன்று அவனைப் பெற்றவள். அடுத்து அவனுக்கு உற்றவளான பசு.

ஒரு முனிவர் தினமும் தன் தாயை வணங்கிவிட்டுதான் பிறபணிகளில் ஈடுபடுவாராம். அவரது தாய் காசி யாத்திரைக்கு செல்ல ஆசைப்பட்டாள் அப்போது அந்த முனிவர் 'நீ சென்றுவிட்டால் நான் எப்படித் தினம் உன்னை வணங்க முடியும்?' என்று கேட்டார். 'எனக்குச் சமமாக பால் கொடுத்த பசுமாடு இருக்கிறதே. அதை வணங்கினாலும் என்னை வணங்கிய பலனும் திருப்தியும் உனக்கு ஏற்படும்' என்றாள் அன்று முதல் அவர் பசுவையும் தன்னைப் பெற்ற தாயாகவே கருதி வணங்கத் தொடங்கினார்.

இவை எல்லாம் ஏதோ பாவனைகள் அல்ல. சத்தியமான நிஜம். 'என்றால் எருமைகூடத்தான் பால் தருகிறது. அதையும் வணங்க வேண்டியதுதானே? ஒட்டகமும் பால் தருகிறதே?' என்று குதர்க்கமாக சிலர் கேட்கலாம்.

எது எதன் பாலை நாம் உட்கொண்டாலும் அது நமக்கு தாயாகிவிடுகிறது. ஆனாலும் எருமை அசுர அம்சமாகும். தேவர்களுக்கு எதிரானவர்கள் ஒன்றுகூடிப் படைத்ததுதான் எருமை.

அதன் பாலிலும் மந்தத் தன்மை அதிகம். பசுவின் பால் உடல் உஷ்ணம் தணித்து கடுமையாக உழைக்கும்போது உருகி நெய்யாகி பின் அதுவே வெப்பமாகி வியர்வையாகிவிடுகிறது.

எருமைப்பால் இதனூடே மனிதனுக்கு தாமச குணத்தைக் கொடுப்பதால் அதை பசுவுக்கு நிகராகக் கருதிட வழியில்லாது போயிற்று.

ஆயினும் அதையும் தாயாகக் கருதி வழிபடுவது கருணை அதிகம் உள்ளவர்களின் செயலாகும். அதில் பெரிய பிழையொன்றுமில்லை. இதை எல்லாம் நன்கு உணர்ந்த தாலேயே வடவர்கள் பசுவுக்கும் பாலுக்கும் ஒரு பிரான இடத்தை தங்கள் வாழ்வில் கொடுத்துவிட்டார்கள்.

இது சாஸ்திரிகளின் மனைவி பாலாவுக்கும் தெரியும். அவளும் தொழுவத்தில் பசுவைத் தினமும் மகாலட்சுமி யாகக் கருதி வழிபாடு செய்கின்றவள்தானே?

அன்றும் சாஸ்திரிகள் பால் பண்ணயம், பால் பாயசம் என்று நிறைய பால் உணவாக செய்து எடுத்துக்கொண்டு சமண மலைக்குப் புறப்பட்டார். வழியில் அந்த உணவுக் கூடையுடன் அவர் தோடீஸ்வரர் ஆலயத்திலும் நுழைந்தார்.

ஆலயத்தில் ஊரே திரண்டிருந்தது.

உச்சிக் கால பூஜை ஆன உடன் அனைவருக்கும் பிரசாதம் வழங்க வேண்டும். பிரசாத மேடையில் ஆவிபறக்க மிளகுப் பொங்கலும், வெல்லப் பொடியும் தயாராக இருந்தது.

சாஸ்திரிகள் எதை விட்டாலும் சிவாலயப் பிரசாதத்தை விடமாட்டார். ஏன் என்றால் பிரசாதம்தான் உணவுப் பொருட் களால் வரும் உத்பாதங்களை நம்முள் தவிர்க்கிறது.

வீட்டில் சமைத்து உண்ணும் உணவுகளில் தோஷம் நிறைய இருக்க வாய்ப்புகள் அதிகம். புடலங்காய், பீர்க்கங்

காய்களில் பாம்புகள் ஏறி இறங்கியிருக்கும். அதன் சிறுநீர் பட்டிருக்கும். அதே போல அரிசி பருப்புகளை புடைத்துச் சலித்து அதை குதிருக்குள் போடும் பெண்களில் பலர் மாத விலக்கில் இருந்து அதன் காரணமான சூதகத்தீட்டு அந்த உணவுப் பொருட்களில் பட்டிருக்கும்.

இவைகளைக் கழுவி சுத்திகரிக்கும்போது தண்ணீரானது அவைகளின் தோஷத்தை நீக்கினாலும் சில சமயம் சமைக்கும் பெண்களே மாதவிலக்கில் இருக்கலாம். இல்லாவிட்டால் அவர்கள் உறவுகளில் ஒருவர் இறந்து சாவுத்தீட்டு நிலவலாம். எனவே நாம் ஒருவர் இல்லத்திலோ அல்லது நமது வீட்டிலேயோ சமைத்து உண்ணும் சாதமானது நூறு சதம் சுத்தமானது, புனிதமானது, தீய கதிர்கள் அற்றது என்று கூறுவதிற்கில்லை. அதை உண்டால் அதன் செயல்பாடும் அதற்கேற்பவே உடலில் இருக்கும். மெல்லச் செரித்தல், கொட்டாவி பிரிதல், தூக்கம் வருதல், உடம்பெல்லாம் வலிப்பது போல ஒரு உள்ளுணர்வு என்று நாம் உட்கொள்ளும் உணவு சில மறைமுக விளைவுகளையும் உருவாக்கக்கூடியது. இதைத் தவிர்க்க ஒவ்வொரு பெண்ணும் மிக தூய்மையாக ஒரு நாளைக்கு நான்கு முறை குளித்து மடி ஆசாரத்துடன் திகழ்வதும் சாத்தியமில்லை.

அதே சமயம் நாம் வீட்டில் சாப்பிடும் சாப்பாடு வெறும் சாதமாக இல்லாமல் அது பிரசாதமாக இருந்துவிட்டாலோ இந்தச் சிக்கல்கள் எதுவும் இல்லை. இதை உச்தேசித்தே அந்த நாளில் ஆலயங்களில் பிரசாத விநியோகத்தை தொடங்கி னார்கள். கோவிலுக்கு சென்று பிரசாதம் சாப்பிட்டுவிட்டு வரும்போது அதன் வீர்யம் அது ஜீரணமாகி வெளியேறும் வரை அப்படியே இருக்கும். இடையில் நாம் வீட்டில் சாப்பிடும் எந்த விதமான உணவும்கூட இதனால் பிரசாதமாகிவிடும்.

'ப்ர' என்றால் பெரிய என்பது பொருள். ப்ரசாதம் என்றால் பெரிய சாதம் - அதாவது இதைவிட பெரிய, சுத்தமான, அரிய உணவு உலகில் இல்லை என்பது உட்பொருள். இதை சாஸ்திரிகளும் நன்கு அறிந்திருந்ததால் தினமும் ஆலயம் வந்து பிரசாதம் வாங்கி உண்டுவிட்டு பிறகே தன் இல்லத்தில் போஜனம் செய்வார்.

ஆலயப் பிரசாதங்களை பவித்ரமாகக் கருதி உண்பவர் களுக்கு ஆரோக்கியக் குறைவே ஒரு நாளும் வராது.

கோள்களால் அவர்கள் உடலில் துன்பங்களை உருவாக்கவே முடியாது. அந்த ப்ரசாத அருள் உடம்பில் நிரம்பி இருந்தபடியே இருக்கும்.

ப்ரசாதம் என்பதன் பின்னால் இவ்வளவு நுட்பங்கள் இருக்கின்றன. கையில் ஏராளமான பால் உணவுடன் பிரசாதத் திற்கு என சாஸ்திரிகள் வந்திருப்பதைப் பார்த்த பட்டரும் புரிந்துகொண்டார். அந்தக் கூட்டத்தில் அவரைத் தனியே அழைத்து கை நிறைய மிளகுப் பொங்கலை எடுத்துத் தந்தார்.

"இன்னொரு கையும் தாருங்கள்..." என்றார் சாஸ்திரிகள்.

"இன்னொரு கையா... இதையே அதிகம் என்பீர்களே?"

"உண்மைதான். ஆனால், ஒரு விருந்தாளி வந்திருக்கும் போது அவருக்கும் சேர்த்து பிரசாதம் வாங்கிச் செல்வதுதானே அழகு..."

"விருந்தாளியா... யார் அது எனக்குத் தெரியாமல்?"

"உங்களுக்குத் தெரிந்தவர்தான் அந்த மராத்தியன் ராம்லாலைத்தான் சொன்னேன்..."

"ஓ அந்த மனிதரா?" பட்டர் ஒரு மாதிரி இழுத்தார். முகமும் மாறிப்போனது.

"பட்டரே... தங்கள் முகமாற்றத்திற்கு காரணத்தை நான் அறியலாமா?"

"வேண்டாம் சாஸ்திரிகளே. நீங்கள் அவனைப் பற்றி உயர்வாக எண்ணுவது போல் தெரிகிறது. அதனால் தாழ்வான என் கருத்து பற்றி அறிய வேண்டாம்."

"அவரைப் பற்றி தாழ்வாகக் கருத என்ன இருக்கிறது?"

"அந்த மனிதனின் பார்வையே சரியில்லை. சொன்னால் அதிர்ச்சியடையக் கூடாது..."

"முதலில் என்னவென்று சொல்லுங்கள்..."

"இந்த ஆலயத்திற்கு ஸ்வாமி தரிசனம் செய்வதற்காக அவன் சிலமுறை வந்திருந்தான்."

"அதற்கென்ன?"

"பார்வையே சரியில்லை..."

"புரியவில்லையே..."

"என்ன சாஸ்திரிகளே... பார்வையே சரியில்லை என்றால் திருட்டு முழி என்று பொருள்."

"அப்படியானால் அவனைக் கள்வனாகவா கருது கிறீர்கள்?"

"நான் நினைக்கவில்லை... அவன்தான் நினைக்க வைக்கிறான். அது மட்டுமல்ல... அவன் இந்த ஆலயத்தில் எங்கெல்லாம் அமர்ந்திருந்தானோ அங்கெல்லாம் சர்ப்பங்கள் என் கண்களில் பட்டன."

"என்னால் இதை நம்ப முடியவில்லை."

"போகப் போக நம்புவீர்கள்..."

"அவர் நமது பெருமதிப்பிற்குரிய பாபாவின் திரு உருவையே செதுக்கிக் கொண்டிருப்பவர். பாபாவின் உருவத்தை எண்ணினாலே தவறு செய்யத் தோன்றாது. இதில் சதா அந்த உருவத்தை செதுக்கும் ஒரு மனிதன் தவறானவனாக இருக்க முடியுமா?"

"உங்கள் நம்பிக்கையை நான் என்னென்பேன்! எதற்கும் எச்சரிக்கையாக இருங்கள்." பட்டர் ஒரு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு நகர்ந்து கொண்டார்.

சாஸ்திரிகள் முகத்தில் பட்டரின் பேச்சு சலனத்தை உருவாக்கி விட்டுவிட்டது. அப்படியே பிரசாத கைகளுடன் நடந்து ராம்லாலுக்கு தான் கொண்டு செல்ல எடுத்து வந்திருந்த பால் பண்ணயங்களோடு அந்த மிளகுப் பொங்கலை வைத்து விட்டு அப்படியே நடக்க ஆரம்பித்தார். அப்பொழுதுதான் எதிரில் வைஜெயந்தி வந்தபடி இருந்தாள். உடன் அவள் தாய் மாலி. வைஜெயந்தி முகத்தில் தாய்மை தாண்டவமாடியது. மந்திரியின் மனைவி என்கிற அந்தஸ்தும் கோவில் தாசி என்கிற அந்தஸ்தும் அவளை ராஜ மரியாதைகளுடன் வரவேற்கும்படி செய்திருந்தன. கட்டியக்காரன் வைஜெயந்தியின் வருகையை உரத்த குரலில் சொல்லிக்கொண்டே வந்தான்.

"ராஜ ராஜஸ்ரீ மகா மந்திரி பத்னியார் தோடீஸ்வர ஆலய நாட்ய மகாதாசியார் ஸ்ரீ ஸ்ரீ அபராஜித வைஜெயந்தி நாச்சியார் பராக்... பராக்... பராக்..."

சாஸ்திரிகளுக்கு வைஜெயந்தியைப் பார்க்க மிகவும் பரவசமாக இருந்தது. கையில் உணவுக் கூடையுடன் சாஸ்திரி களைப் பார்த்த வைஜெயந்தியும் வணங்கினாள்.

"நமஸ்காரம் சாஸ்திரிகளே..."

"நல்லதம்மா... நீ எப்படி இருக்கிறாய்?"

"எனக்கென்ன குறை... நன்றாக இருக்கிறேன்..."

என்றவள் தன் கர்ப்ப வயிற்றில் குழந்தை புரள்வதை உத்தேசித்து சற்று முகம் சிணுங்கினாள்.

"அம்மாடி.... என்ன இது? இப்படி வயிற்றைத் தூக்கிக் கொண்டு கோவிலுக்கு வரத்தான் வேண்டுமா நீ..."

"நிச்சயமாக சாஸ்திரிகளே கருவில் உருவாகும் ஒரு குழந்தை வெளியில் நடப்பதை எல்லாம் கூர்மையாக காது கொடுத்து கேட்குமாம். எனவே, நல்ல விஷயங்களை பேசுகின்றவர்களிடமே பழக வேண்டும். அதே போல அருள் மிகுந்த இடங்களுக்கெல்லாம் தேடித் தேடிச் சென்றால்தானே ஆரோக்கியமுடன், அருளும் நிரம்பிய சத்புத்திரன் பிறப்பான்?"

"புத்திரன் என்று முடிவே செய்துவிட்டாயா?"

"நான் செய்யவில்லை. இது அவர் விருப்பம்..."

வைஜெயந்தி மந்திரி மகாதேவரின் விருப்பத்தைக் கூறியவளாக சற்று வெட்கப்பட்டாள். சாஸ்திரிகள் அதை ரசித்தார்.

"இது என்ன கையில் கூடை....

"பிரசாதத்துடன் அன்னமம்மா..."

"யாருக்கு?"

"விருந்தினர் ஒருவருக்கு..."

"யார்... அந்த ராம்லாலுக்கா?"

"அடடே..... உனக்கு அவரைத் தெரியுமா வைஜெயந்தி...?"

"எதற்கு இருக்கிறார்கள் ஒற்றர்கள்" வைஜெயந்தி அப்படித் திருப்பிக் கேட்கவும்தான் வைஜெயந்தி தற்சமயம் அரச பதவியில் இருப்பவள் என்பதில் இருந்து தோடிபுரத்திலும் மந்திரி மகாதேவர் ஒற்றர்களை போட்டுவிட்டார் என்பது வரை அவருக்கு தெரியவந்தது. அதன் நிமித்தம் அவர் முகத்தில் சற்றே ஆச்சரியத் தடுமாற்றம்.

"என்ன சாஸ்திரிகளே... ஒற்றர்கள் என்றவுடன் என்னவோ ஏதோ என்று எண்ணிவிட்டீர்களா?"

"இல்லை... ஆமாம்...

"உங்கள் தடுமாற்றமே அதை ஆமோதிக்கிறது. போகட்டும். பாபாவின் திருஉருவச் சிலை எவ்வளவு தூரத்திற்கு வளர்ந்திருக் கிறது...?"

"தெரியவில்லை வைஜெயந்தி. அதைக் காணத்தான் நான் சமண மலையான கன்னியர் கரடு மலைக்குச் சென்று கொண்டிருக்கிறேன். அங்கே சென்று பார்த்தால்தான் தெரியும்."

"அப்படியா... அது ஏக தூரத்தில் இருக்கிறதே...! நடந்தா செல்லப் போகிறீர்கள்...?"

"நான் ஒரு வேத பிராமணன். குதிரை ஏறக்கூடாதவன். பெரிய வசதிகள் இல்லாததால் பல்லக்கெல்லாம் கிடையாது" சாஸ்திரிகள் தனது நிலைப்பாட்டை பரிதாபமாக விளக்கியது தான் தாமதம் - வைஜெயந்தி கைகளைப் பலமாக தட்டினாள். இரண்டு சேவகர்கள் வாசலில் நின்றுகொண்டிருந்த சாரட் அருகில் இருந்து ஒடி வந்தார்கள்.

"சாஸ்திரிகளே... நீங்கள் இவர்களுடன் சென்று சாரட்டில் அமருங்கள். உங்களுடன் நானும் கன்னியர் கரடு மலைக்கு வருகிறேன். பாபா சிலை எப்படி உருவாகிறது என்பதை நானும் காண விரும்புகிறேன். அதற்கு முன் நான் தோடீஸ்வரரை வணங்கிவிட்டு வருகிறேன்" என்றாள் வைஜெயந்தி. அதுவரை அமைதியாக அவர்கள் இருவரும் பேசுவதை எல்லாம் கேட்டுக்கொண்டிருந்த மாலி உடனே பதறத் தொடங்கினாள். "வைஜெயந்தி... என்ன இது? கர்ப்ப வயிற்றோடு மலை எல்லாம் ஏறக்கூடாதம்மா... சொன்னால் கேள். நீ அங்கெல்லாம் போகக் கூடாது..."

"இல்லையம்மா... என்னைத் தடுக்காதே... நான் கன்னியர் கரடுக்கு நிச்சயம் செல்வேன். அங்கே என் பாபா இருக்கிறார். எனக்கு எதுவும் ஆகாது..."

வைஜெயந்தியின் நம்பிக்கையான பேச்சு சாஸ்திரிகள் கண்களில் நீரை வரவழைத்துவிட்டது. அதே சமயம் மாலி சொல்வதிலும் இருக்கும் உண்மை அவரை சற்று தடுத்து நிறுத்தியது.

"மகளே உன் தாய் சொல்வதுதான் சரி. நீ அங்கு வரவேண்டாம். பாபா சிலை முழுமையாக தயாரான உடன் அது என் இல்லத்திற்குத்தான் எடுத்துவரப்படும். உனக்கு நான் தகவல் சொல்லிவிடுகிறேன். அப்பொழுது நீ வந்து பார்த்துக் கொள்ளலாம்..." என்றார் சாஸ்திரிகள்.

"இல்லை சாஸ்திரிகளே... யார் என்ன சொன்னாலும் நான் இன்று உங்களுடன் வரத்தான் போகிறேன். எனக்கு எதுவும்

ஆகாது. பாபா சூட்சும வடிவில் எப்பொழுதும் என்னுடன் இருக்கிறார். எனக்கென்ன கவலை..."

என்று திரும்பவும் எதிர்வாதம் செய்துவிட்டு வைஜெயந்தி கோவில் சந்நிதி நோக்கி நடக்கத் தொடங்கினாள். கூட்டமும் பிரசாதம் வாங்கிக்கொண்டு அவளையும் வணங்கிய படியே சென்றது சந்நிதியில் பட்டரும் காத்திருந்து வர வேற்றார். கோயில் தாசிகளுக்கே உரிய முறையில் குடதீபம் ஏற்றி அதை வெளியில் கொண்டு வந்து வைஜெயந்தியிடம் வழங்கி னார். அவளும் அதை இரு கைகளால் ஏந்தியபடி வெளிப் பிராகாரத்தை வலம் வந்தாள். கர்ப்பம் தரித்திராத நிலையில் நாட்டிய முத்திரைகளுடன் ஆடிக் கொண்டு வருவாள் இப்பொழுதோ கர்ப்பம் தரித்திருப்பதால் நிதான நடை நடந்து மூன்று முறை வலம் வந்து குட தீபத்தை பட்டரிடம் தந்தாள். அவரும் அதை தோடீஸ்வர லிங்கத்துக்கு காட்டி முடித்தார். பின்னர் விபூதி பிரசாதம் வழங்கி சந்தனமும் சாத்துபடி செய்து லிங்கத்தின் மேல் அணிந்திருந்த மாலை ஒன்றை எடுத்து வந்து மரியாதை நிமித்தம் வைஜெயந்தி கழுத்தில் போட்டார் அன்றைய சம்பிரதாய சடங்குகள் முடிந்தன. வைஜெயந்தி மாலியையும் அழைத்துக் கொண்டு கன்னியர் கரடு செல்வதற்கு தயாரானாள்.

## இன்று

**அ**ன்று திங்கட்கிழமை!

பிரசிடெண்ட் கல்யாணசுந்தரம் வீட்டு வாசல்புறம் உள்ள தூங்குமூஞ்சி மரத்தில் அந்த அதிகாலைப் பொழுதில் ஆந்தை ஒன்று அரற்றிக் கொண்டே இருந்தது.

வாசல் பக்கம் வந்து தண்ணீர் தெளித்து கோலம் போட வந்திருந்த ரங்காயியும் அதை உணர்ந்து மரத்தை நிமிர்ந்து பார்த்தாள். அவள் பார்வைக்கு ஆந்தை அகப்படவில்லை. ஆனால், சப்தம் மட்டும் ஓயாமல் ஒலித்தபடி இருந்தது.

ரங்காயி முகம் உடனே மாற ஆரம்பித்துவிட்டது. ஆந்தை மரத்தில் அரற்றுவது என்பது நல்ல சகுனத்தோடு சேர்த்தி இல்லை. விருட்சங்களுக்கு என்று ஒரு சாஸ்திரம் உள்ளது. அதே போல பட்சிகளுக்கும் சாஸ்திரம் உள்ளது.

எந்த பட்சி எந்த நேரத்தில் கத்தினால் என்ன பலன் என்பதை சொல்வதும், பட்சிகள் பற்றிய பல புதிய தகவல்களைக் கொண்டதும்தான் பட்சி சாஸ்திரம். அது பற்றி முழுமையாக ரங்காயிக்கு தெரியாது. ஆனால், சில வகை பட்சிகள் இடைவிடாமல் கத்துவதற்கும் பருவகால சூழ்நிலைக்கும் ஏதோ தொடர்பிருக்கிறது என்பதை அவள் அனுபவபூர்வமாக பார்த்திருப்பவள்.

மாலை வேளையில் கொக்குகள் கூட்டம் கூட்டமாமக தெற்கில் இருந்து வடக்கு நோக்கி சென்ற நாட்களில் எல்லாம் நள்ளிரவுக்கு மேல் மழை பெய்திருந்தது. எப்பொழுது கிளிகள் கத்தும் சப்தம் கேட்டாலும் சற்று நேரத்தில் எல்லாம் யாராவது ஒரு பெண் வயதுக்கு வந்துவிட்ட சேதியோ, இல்லை யாருக் காவது திருமணம் என்கிற தகவலோ வந்தும் பார்த்திருக்கிறாள்.

குறிப்பாக கொல்லையில் காக்கை ஓயாமல் கரைந்தால் நிச்சயம் அன்று வெளியூரில் இருந்து உறவினர்கள் வந்திருக்கின்றனர். எனவே ரங்காயிக்கு எங்காவது பட்சிகள் கத்தினால் உடனேயே மனது கணக்கு போடத் தொடங்கிவிடும்.

செம்போத்து பறவை மரத்தில் அமர்ந்து கத்தினால் செல்வம் சேரும். அதே மரத்தில் ஆந்தை அலறினால் ஏதோ கெட்டது நடக்கப் போகிறது என்பதுதான் உட்பொருள். ரங்காயிக்கு மனது நடுங்கியது.

கோலம் போடும்போது கையெல்லாம் கூட நடுங்கியது.

அந்த வேளை பார்த்து மார்பில் ஒரு துண்டுடன் வாயில் ஒரு வேலங்குச்சியுடன் கல்யாணசுந்தரமும் காவிரியாற்றுப் பக்கம் கிளம்பிக் கொண்டிருந்தார் ஆறு ஓடும் ஊரில் வாழ்கின்றவர்களிடம் எல்லாம் எப்பொழுதும் ஒரு பழக்கம் இருக்கும்.

காலை வேளையில் காலாற ஆற்றுப் பக்கம் சென்று காலைக் கடனை முடித்துவிட்டு அப்படியே ஆற்றில் போய் விழுவது என்பதுதான் அது. கண்கள் சிவக்க சிவக்கவும் மீன்கள் காலைக் கடித்து அழுக்கைப் போக்கும் அளவிற்கும் திளைக்க திளைக்க குளிப்பதென்பதெல்லாம் வரம் வாங்கியது போன்ற விஷயங்கள்.

சென்னை மாதிரி நகரங்களில் ஃபிளாட் வீடுகளில் ஒரு பக்கெட் தண்ணீருக்குள் குளித்து முடித்துவிட்டு வியர்க்க

விறுவிறுக்க வெளியே செல்லும் மனிதர்களுக்கு மட்டும்தான் இந்த ஆற்றங்கரை நாகரீகம் என்பது எத்தனை வரப்பிரசாதம் ஆன விஷயம் என்பது தெரியும்.

கல்யாணசுந்தரத்திடமும் காலை வேளைக்கே உரிய உற்சாகம். ஆனால், அவரைத் தடுத்து நிறுத்தினாள் ரங்காயி.

"என்னங்க..."

"என்ன ரங்காயி?"

"எங்க கிளம்பிட்டீங்க...?"

"ஆத்துப் பக்கம்தான். ஆமா என்ன புதுசா கேக்கறே?"

"இல்ல... மரத்துல ரொம்ப நேரமா ஆந்தை ஒண்ணு கத்திக்கிட்டே இருக்குது..."

"அதுக்கென்ன இப்போ...?"

"என்னங்க நீங்க. ஆந்தை கத்துனா அது நல்லதில்லைன்னு சொல்வாங்க..."

"அட நீ வேற... மரம்னு இருந்தா நாலு விதமான பட்சிங்க வரத்தான் செய்யும். அதுக்கு வாய்னு ஒண்ணு இருந்தா கத்தத்தான் செய்யும். இதை எல்லாம் போய் பெரிசா எடுத்துக்கிட்டு..."

கல்யாணசுந்தரம் அலட்சியமாக பதில் சொல்லிக் கொண்டே நடந்தார் ரங்காயியால் அதற்குமேல் அவரிடம் பெரிதாக பேச முடியவில்லை.

வாட்டமான முகத்துடன் திரும்பி உள் சென்றாள்.

சாமிநாதனும் தோளில் துண்டுடன் ஆற்றுக்கு கிளம்பிக் கொண்டிருந்தான். ரங்காயியின் வாடிய முகத்தைப் பார்த்து ஒரு சிரிப்பு சிரித்தான்.

"என்னைப் பார்த்தா உனக்கு சிரிப்பா இருக்குதாடா?"

"உன்னைப் பார்த்தா இல்லம்மா நீ பேசினதைக் கேட்டுதான் சிரிச்சேன்."

"அப்ப நீயும் ஆந்தை கத்தறதை சாதாரணமாதான் எடுத்துக்கறியா?"

"என்னிக்கும்மா நான் இந்த காக்கா குருவி ஆந்தை கோட்டான்னு பறவைங்க கத்தறதையெல்லாம் கணக்குல எடுத்துக்கிட்டிருக்கேன்."

"இல்லடா தம்பி... உங்களுக்கெல்லாம் அறிவுத் திமிர். எனக்கென்னவோ பயமா இருக்குதுடா..."

“எதுக்கும்மா இப்ப பயப்படறே... இப்ப என்ன நடந்துடிச்சி..?”

“இல்ல... உனக்கு சொன்னா புரியாது. நம்மளை எல்லாம் அந்த தோடீஸ்வரன்தான் காப்பாத்தணும். ஆமா, இன்னிக்கு கோவில் மண்டபத்துக்கு சுந்தராம்பா வருவாங்கதானே?”

“இன்னிக்கு என்ன கிழமை?”

“வெள்ளிக்கிழமை...”

“அப்ப வந்துதானே தீரணும். ஏன் நீயும் போய் வரிசைல நின்னு குறை சொல்லப் போறியா?”

“ஆமாம். என் குடும்பத்துக்கு பெருசா ஏதோ கெடுதல் வர்ற மாதிரி தோணுது. நீதான் காப்பாத்தணும்னு சொல்லப்போறேன்.”

“சரிதான்... அவங்க குடும்பத்துலயே தலைக்கு மேல பிரச்சினை. அவங்க பையனே ஒரு பைத்தியமா இந்த ஊருக்கு வந்திருக்கான். இதுல அவங்க உன் குறையைத் தீர்க்கப் போறாங்களா? வேடிக்கைதான்.”

சாமிநாதன் ஒரு மாதிரி கிண்டலாக பேசிவிட்டு வேகமாகக் கிளம்பினான். ரங்காயி முகத்தில் ஈயாடவில்லை. அவள் அப்படியே விக்கித்து நின்றுவிட்டாள்.

# 13

## அன்று



'கன்னியர் கரடு' என்கிற பெயரில் உள்ள அந்த சமணர் மலை ஒன்றும் அவ்வளவு பெரிதில்லை. வாலிப இளைஞர்கள் மூச்சு கட்டி விறுவிறுவென்று ஏறினால் ஐந்து நிமிடம் அதிகம்.

உயரத்தில் முந்நூறு மீட்டர் இருக்கலாம். உச்சியில் ஒரு கல்மண்டபம். இடிந்த கோபுரம் ஒன்று அங்கே முன்பொரு சமயம் கோவில் இருந்திருக்கும் வாய்பைச் சொல்லியபடி இருந்தது.

மலைச் சரிவு முழுக்க முட் தழை புதர்கள், பிரண்டைச் செடிகள். எருமையின் வயிறு போல பருமனான பாறைகள். அந்த பாறைகள் மேல் எல்லாம் தலையில் முள் கொண்டை யோடு மஞ்சள்தலை ஓணான்கள். கீழே அடிவாரச் சருக்கத்தில் சாரட் வந்து நிற்பதையும் குதிரைக் குளம்படிச் சப்தத்தையும் கேட்டு அந்த ஓணான்கள் தன் முன்இரண்டு கால்களால் நிமிர்ந்து பார்த்தன.

சாஸ்திரிகளும், வைஜெயந்தியும் சாரட்டில் இருந்து இறங்க, சாரட் ஓட்டி அவர்களுக்கு முன் மலைக் கரட்டின் மேல் ஏறும் ஒற்றையடிப்பாதை போன்ற மண் பாதைமேல் கிடந்த சருகுகள் முட்களை அகற்றிக் கொண்டே சென்றான்.

சப்தம், மேலே கல்மண்டபத்தில் ஒரு பாறையை புரட்டிப் போட்டு பாபாவின் சிலையை உருவாக்கியபடி இருந்த ராம்லாலையும் எட்டிப் பார்க்கச் செய்தது.

சாஸ்திரிகள் தனக்கான உணவுடன் வருவார் என்பது ராம்லாலுக்கு நன்கு தெரியும். கூடவே வைஜெயந்தி வருவது அவன்வரையில் அவன் சற்றும் எதிர்பார்த்திராத ஒரு ஆச்சரியம்.

ஒரு அழகிய பதுமையாக அவள் மெல்ல மலைப் பாதைமேல் ஏறியபடி வந்து கொண்டிருந்தாள் அவளது பாதத்தில் கட்டப்பட்டிருந்த வெள்ளிக் கொலுசுகள் அழ காக கொஞ்சின. சிலுசிலுவென்று காற்றும் வீசிக் கொண் டிருந்தது.

சாரட்டில் வெறுப்போடு அமர்ந்திருந்தாள் மாலி. அவளுக்கு வைஜெயந்தி இப்படிச் சிரமப்பட்டு மலை ஏறுவது துளிகூட பிடிக்கவில்லை. ஏதாவது ஆகிவிட்டால் என்னாவது என்கிற பயம். அவளது முதுமை அவளை மலை ஏறவிடாமல் செய்துவிட்டது.

வைஜெயந்தியும் சாஸ்திரிகளும் ஏறுவதைக் கண்கொட்டா மல் பார்த்துக் கொண்டிருந்தாள். மலைமேலோ ராம்லால் கை கூப்பியபடி இருவரையும் வரவேற்றுக் கொண்டு நின்றான்.

“வரவேண்டும் சாஸ்திரிகளே... வரவேண்டும்.”

“நல்லது ராம்லால்... நான் தங்களுக்கான உணவோடு வர சற்று தாமதமாகிவிட்டது. மன்னிக்க வேண்டும்.”

“தங்களுக்கு இப்படி வீண் சிரமம் தருவதற்காக நீங்கள் தான் என்னை மன்னிக்க வேண்டும்.”

ஒரு கையில் உளி, ஒரு கையில் சிறிய சுத்தியல் சகிதம் ராம்லால் பேச, சாஸ்திரிகள் அதற்கு பதில் கூற, வைஜெயந் தியோ கிட்டத்தட்ட முடிவடையும் நிலைக்கு சென்றுவிட்ட பாபாவின் சிலை அருகே ஓடிச் சென்று நின்று கவனித்தாள்.

மூன்றடி உயரம்! ஒண்ணரை அடி அகலம்! அடிப் பாகத்தில் பாபா அமர்ந்து கொண்டிருப்பது போன்ற பீட பாகமோ கிட்டத்தட்ட நான்குக்கு நான்கடி சதுரத்தில். ருத்ர வீணையும் கையுமாக பாபா அமர்ந்து கொண்டு தந்தி மீட்டி நாத மழை பொழிந்து கொண்டு அதில் மயங்கிய முக பாவங்க ளோடு அவர் அமர்ந்திருப்பது போல படு தத்ரூபமாக இருந்தது சிலை.

“அற்புதம்... அற்புதம்...” என்றான் சிலிர்ப்புடன்.

“ராம்லால்... இவள் யார் என்று தெரியுமல்லவா? பெயர் வைஜெயந்தி. என் மகளைப் போன்றவள்...”

- சாஸ்திரிகள் ராம்லாலிடம் வைஜெயந்தியை அறிமுகம் செய்ய - வைஜெயந்தியும் ராம்லாலைப் பார்த்து ஒரு சம்பிரதாய நமஸ்காரம் செய்தாள். அப்படியே “பாபா சிலை மிக தத்ரூபமாக

உள்ளது. அவரது அருகில் இருந்து பார்த்தது போலவே செய்திருக்கிறீர்கள்." - என்றாள்.

"நன்றி அம்மணி..."

"நன்றியெல்லாம் எதற்கு... ஆமாம்... சிலை வடிப்பதுதான் உங்கள் தொழிலா?"

"அப்படியும் சொல்லலாம்... மராத்திய தேசத்தில் எல்லோரா குகைகள் பற்றி கேள்விப்பட்டிருக்கிறீர்களா?"

"உம்... சொல்லுங்கள்."

"அந்த குகைப் பகுதி உருவாக என் முன்னோர்கள்தான் காரணம் என்பார்கள். பரம்பரை பரம்பரையாகவே சிற்பங்கள் வடிப்பதுதான் எங்கள் தொழில். ஆனால், நான் அதை தொழிலாக செய்யாமல் ஒரு கலையாக செய்து வருகிறேன்... இந்த பாபா சிலைகூட என் வரையில் ஒரு சவாலான வேலை தான்..."

"உண்மைதான்... அதுசரி... இந்த சிலை முடிய இன்னும் எவ்வளவு நாளாகும்...?"

"இன்று முடிந்துவிடும் அம்மணி...!"

"ராம்லால்! முதலில் நீங்கள் உணவருந்துங்கள். நீங்கள் பசியோடு இருக்கலாம்."

"அதற்கென்ன சாஸ்திரிகளே... கலைஞனுக்கு முதல் உணவு கலாரசனைதான். எனக்கு இந்த சிலை முடியும்வரை ஊண் உறக்கமில்லை... ஆமாம்... இது முடிந்த பின் இதை எங்கு கொண்டு செல்ல உத்தேசம்...?"

"இது என்ன கேள்வி... பாபாவை நான் நாயன்மார்களைப் போலத்தான் எண்ணுகிறேன். அவர்களுக்கெல்லாம் நமது தோடீஸ்வரர் ஆலயத்தில் இடம் இருக்கும்போது பாபாவுக்கு மட்டும் இடம் ஒதுக்கக் கூடாதா என்ன?"

"என்ன கூறுகிறீர்கள் நீங்கள்.. பாபா ஒரு இஸ்லாமியர். இவருக்கு இந்து ஆலயத்தில் இடமா?"

"ராம்லால்... தயவுசெய்து மதம் குறித்து இனி பேசாதீர்கள். பாபவை இஸ்லாமியர் என்று கூறி ஒரு வட்டத்திற்குள் அடைத்த தெல்லாம் போதும். அவர் அனைவருக்கும் பொதுவானவர். அற்புதங்களுக்கு சொந்தக்காரர். வணங்கப்பட வேண்டியவர். எதிர்கால சந்ததி பாபாவை அறிந்து போற்றி வணங்க வேண்டும் என்பது என் விருப்பம். அதற்கு ஆலயம்தான் சரியான இடம்..."

வைஜெயந்தி தீர்க்கமாக பேசினாள். சாஸ்திரிகளும் அதை ஆமோதித்தார். ஆனால், ராம்லால் மட்டும் அதை ஒப்புக் கொள்ள இயலாதவன் போல அவர்களைப் பார்த்தான். பின்னர்,

"சரி, உங்கள் விருப்பம்..." என்றான்.

"இந்த சிலையை உருவாக்கிய உங்களுக்கு நான் ஏதாவது பரிசு தர விரும்புகிறேன் என்ன பரிசு தரட்டும்?" வைஜெயந்தி திரும்பவும் ஆவல் ததும்ப அவனிடம் கேட்க, அவன் மனதுக்குள் 'இப்பொழுதுதான் நீ என் வழிக்கே வந்திருக்கிறாய்' என்பது போல ஒரு எண்ணம். இருந்தும் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் "ஒரு பரிசும் வேண்டாம் உங்கள் அன்பே போதுமானது" என்று போலியாக தன்னடக்கம் காட்டினான் ராம்லால்.

"அப்படியெல்லாபம் கூறக் கூடாது... நீங்கள் நிச்சயமாக என் இல்லத்திற்கு வந்து நானும் என் கணவரும் தரும் பரிசை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்" என்று திரும்பத் திரும்ப வலியுறுத்தினாள் வைஜெயந்தி.

அவள் 'என் இல்லத்திற்கு வந்து' என்று கூறியதில் அவன் மனது நங்கூரம் போட்டது போல போய் நின்று கொண்டது.

"நீங்கள் இப்பொழுது அந்த நவரத்ன மாளிகையில்தானே வசிக்கிறீர்கள்..?"

"ஆமாம்..."

"அப்படியானால் எனக்கான உபசாரங்கள் அங்கு தானா?"

"நாளை என்றால் அங்குதான்... அதுவே இன்னும் சில தினங்கள் என்றால் தோடிபுரம் ஆடி வீதியில் ஒரு மாளிகை போன்ற வீடு தயாராகி வருகிறது. அந்த இல்லத்தில் உங்களுக் கான உபசாரங்கள் நடக்கலாம்..."

"ஏன்... நீங்கள் நவரத்ன மாளிகையில் தொடர்ந்து இருக்கப் போவதில்லையா?"

"இல்லை... என் மணாளர் என்னை வேறு இல்லத்தில் வாழ்விக்கவே விரும்புகிறார்."

"அப்படியானால் நான் நாளைக்கே உங்கள் நவரத்ன மாளிகைக்கு வருகிறேன். ஒரு வேண்டுகோளும் கூட."

"எது வேண்டுமானாலும் கேளுங்கள்."

"ஒன்றுமில்லை... அந்த மாளிகை பற்றி நான் நிறைய கேள்விப்பட்டிருக்கிறேன். அங்கே ஒரு தினமாவது முழுமையாகத் தங்க வேண்டும் என்பது என் விருப்பம்."

ராம்ரலாலின் விருப்பத்தில் உள்ள சூது தெரியாமல் "அதற்கென்ன... தாங்கள் தாராளமாக அங்கே தங்கலாம். அதற்கான ஏற்பாடுகளை நான் திவ்யமாக செய்துவிடுகிறேன்" என்றாள் வைஜெயந்தியும்.

ராம்லால் ஒருவித மகிழ்வுடன் பாபாவின் சிலையை பார்த்தான். அதில் கண்களில் 'பாப்பா'வை மட்டும் செதுக்க வேண்டும். அதற்கு 'கண் திறத்தல்' என்று பெயர். பாப்பாவை மட்டும் சிறிய தங்க உளியால செதுக்குவார்கள். கண் திறந்து விட்டாலோ சிலைக்கு தானாக ஒரு சக்தி வந்து விடும். ஆலயங்களில் வடிவமைக்கும் சிலைகளிடமும் இதுதான் நிலைப்பாடு. இந்த 'கண் திறப்பை' மட்டுமே ஒரு முக்கியச் சடங்காக செய்வார்கள் அதற்காக தங்க உளிகளை வாங்கித் தரவேண்டியது ஆலயத்தை நிர்மாணிப்பவர்களின் பொறுப்பு. அதன்பின் அந்த தங்க உளியானது சிற்பிக்கு சொந்தமாகிவிடும். ராம்லாலுக்கு அந்த நேரத்தில் அந்த 'கண் திறக்கும் பணி'யும் தங்க உளியும் நினைவில் வந்தது

"இந்த பாபாவின் சிலை இன்னும் சில நாழிகைகளில் முடிந்துவிடும். அதன்பின் 'கண் திறத்தல்' என்னும் சடங்கு மட்டும்தான் மிச்சம், கண் திறப்பது என்பதில்தான் ஒரு சிலையின் ஒட்டுமொத்த சக்தியே அடங்கியுள்ளது. எனவே அதன் பொருட்டு..."

- ராம்லால் தங்க உளிக்காக பீடிகை போட்டான்.

சாஸ்திரிகள் ஆகம சாஸ்திரம் பற்றி ஓரளவு அறிந்தவர். எனவே அவர் உடனடியாக ராம்லால் எங்கு வருகிறான் என்பதைப் புரிந்து கொண்டார்.

"அன்பரே... உங்களுக்கு கண் திறப்புக்காக தங்க உளி வேண்டும். அதைத்தானே குறிப்பிடுகிறீர்..?" என்று மிகச் சரியாகக் கேட்டார்.

"சரியாகச் சொன்னீர்கள். தங்க உளியால் கண் திறக்கச் செய்தால்தான் சான்னித்யம் அதிகம் இருக்கும்..."

"சான்னித்யமா?" - வைஜெயந்திக்கு புரியவில்லை.

"மகளே... நமது சிற்ப சாஸ்திரம் சிலைகளை உயிருள்ள அம்சமாகவே பார்க்கிறது. ஆகமப்படி சிலை வடித்து உரிய முறையில் அதை ஸ்தாபித்து கும்பாபிஷேகமும் செய்து சிலைகளுக்கு அபிஷேகம் முதலான விசேஷ பூஜைகள் செய்யப்படும் போது அந்தச் சிலையானது உயிருள்ள மனிதச் சிலை போல் சிலிர்த்துப் போகும். அதே போல துடைக்கத் துடைக்க மனித உடம்பு போலவே வியர்க்கும்."

சாஸ்திரிகள் சொன்னது வைஜெயந்திக்கு ஒரு புதிய தகவலாகவே இருந்தது.

"கற்சிலைகள் சிலிர்க்குமா?" ஆச்சரியம் விலகாமல் கேட்டாள்.

"ஆம் மகளே... நமது ஆகம சாஸ்திரம் வெகு ஆழமானது. மந்திரங்களால் சிலைக்கு உயிர் ஊட்டும் சடங்கைத்தான் ஆலயங்களில் கலச பூஜை என்றும் யாக பூஜை என்றும் பல பெயர்களில் அழைக்கிறோம்."

"அடேயப்பா..! இவ்வளவு பொருள் இதன் பின்னால் இருக்கிறதா?"

"நான் கூறியிருப்பது துளிதான்... நிறையவே சங்கதிகள் உள்ளன..."

"அப்படியானால் பாபாவின் சிலைக்கும் கண்கள் திறக்கப்படும்போது சக்தி வருமா?"

"அதில் என்ன சந்தேகம்?"

"அப்படியானால் பாபா இந்த சிலை மூலம் திரும்ப வந்து நமக்கெல்லாம் காட்சி தருவாரா?"

வைஜெயந்தி மிகமிக ஆவலாகக் கேட்ட அந்த விஷயங்கள் சாஸ்திரிகளை சற்று தர்மசங்கடப்படுத்தின.

அப்போது கீழே இருந்து மாலியின் குரலும் கேட்டது.

"மகளே... நேரமாகிறது சீக்கிரம் வா..." என்கிற அவளது குரல் தேய்ந்த நிலையில் வைஜெயந்தி காதுகளில் வந்து விழுந்தது.

"மகளே நாம் புறப்படுவோம். அப்போதுதான் ராம்லாலும் உணவு உண்ணுவார். என் தாயும் அழைக்கிறார் பார்..." - சாஸ்திரிகளும் தூண்டினார்.

"நல்லது... உங்களை நான் நாளை என் இல்லத்தில் சந்திக்கிறேன்." - என்றபடி வைஜெயந்தியும் பாபாவின் சிலையை இறுதியாக ஒரு பார்வை பார்த்தாள்.

அவள் அந்த சிலையைப் பார்த்தபோது நிஜமாலுமே பாபாவின் கண்கள் திறந்திருந்த நிலையில் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தன. வைஜெயந்தி விக்கித்துப் போய் உடனேயே சிலையின் அருகே நெருங்கினாள். அவள் நெருங்கிய சாதாரண கல்விழிகள்தான் தெரிந்தன.

"என்ன மகளே...?"

"சாஸ்திரிகளே... பாபாஜி பார்ப்பது போலவே இருந்தது."

"பிரமையாக இருக்கும்... நீ கிளம்பு நேரமாகிக் கொண்டிருக்கிறது பார்..."

"இல்லை சாஸ்திரிகளே... பாபாஜியின் கருணை விழிகளை எனக்குத் தெரியாதா என்ன..."

"சரியம்மா... நீ நினைப்பது போல அவர் பார்த்ததாகவே இருக்கட்டும். நீ புறப்படு..."

- சாஸ்திரிகள் ஒரு வழியாக அவளைப் பிடித்து இழுத்துக் கொண்டுதான் போனார் ராம்லால் அவள் சொன்னதை எல்லாம் கேட்டு சிரித்தான்.

"நான் இதுவரை ஆயிரத்துக்கும் மேல் சிலைகளை செதுக்கியிருக்கிறேன். எந்தச் சிலையும் கண் திறந்து பார்த்தது இல்லை. ஆனால், இந்த பெண்ணுக்கு கண் திறந்து பார்த்ததாம்..." - வாய்விட்டே முணுமுணுத்துக் கொண்டான்.

அந்த மண்டபத்தின் மையத்தில் பாபாஜியின் சிலை நடுநாயகமாக இருந்தது. சாஸ்திரிகள் கொண்டு வந்திருந்த உணவுக் கூடை மண்டபத்தூணை ஒட்டியிருந்தது. பசியும் வயிற்றைக் கிள்ளியது. அந்த உணவுக் கூடையை எடுத்துக் கொண்டு பக்கத்தில் ஒரு மலைப்பாறை சுனை அருகே சென்று அமர்ந்தவனாக உண்ணத் தொடங்கினான்.

சமணர்கள் ஒரு மலையில் தங்கி இருந்திருக்கிறார்கள் என்றால் அங்கே நிச்சயம் எல்லா சௌகர்யங்களும் இருக்கும். குறிப்பாக நீர்ச்சுனை நிச்சயம் இருக்கும். மலைநீர்ச் சுனைகள் எப்பொழுதும் தித்திப்பான நன்னீரைக் கொண்டிருக்கும். அதைக் குடித்தாலே போதும்... பசியே எடுக்காது! அதில் ஒரு கை அள்ளிக் குடித்துவிட்டு வந்து பால் பண்ணயத்தை எடுத்து சாப்பிட ஆரம்பித்தான்.

"பால் உண்ட வீட்டிற்கு பகை நினைக்காதே..."

- அசரீரி போல ஒரு குரல் அவன் காதில் - யாரோ அருகில் நின்றுகொண்டு கூறியது போல ஒலித்து அடங்கியது. அதிர்ந்து போய் சுற்று முற்றும் பார்த்தான். பின் பிரமையாக இருக்கும் என்று எண்ணியவன் சுவையான பால் பண்ணயத்தை தொட்டுத் தொட்டு விழுங்கத் தொடங்கினான். அந்த நொடி ருத்ர வீணையின் நாதமும் கேட்டதுதான் ஆச்சரியம். 'எங்கிருந்து வருகிறது இந்த வீணை இசை?' என்று சற்று முற்றும் பார்த்தான். காம்போதி ராகம் காதைப் பிழிந்தது. அவனது தேடல் எண்ணத்தையே மாற்றி ரசிகனாக மட்டுமே இரு என்பது போல அவன் கண்களை மூட வைத்தது. சாப்பிடுவதுகூட நின்று போனது. அப்படியே தன்னை மறந்துவிட்டான். எவ்வளவு நேரம் அப்படிச் சென்றது என்று அவனுக்கே தெரியாது. வீணை இசையும் நின்று சில நொடிகள் கழித்தே கண்களைத் திறந்தான். திரும்பி கல்மண்டபத்தைப் பார்த்தான். நடுநாயகமாக அங்கே அவன் செதுக்கி வைத்திருந்த பாபாவின் சிலையைக் காண வில்லை!

பகீர் என்றது.

பார்வை நாலா பக்கமும் சுழல, அதே கரட்டின் ஒரு உயரமான பாறைமேல் அந்த சிலை யாரோ சுமந்து சென்று வைத்தது போல் இருந்ததுதான் ஆச்சரியம்.

யாருமில்லாத அந்த மலைப் பகுதியில் எவர் வந்து அந்த சிலையைக் கொண்டு போய் அங்கே வைத்தது? அவனுக்கு ஆச்சரியமாக மட்டுமல்ல- அதிர்ச்சியாகக்கூட இருந்தது. பயமும் தலை எடுத்தது. சுற்றிச் சுற்றிப் பாத்துக் கொண்டே அந்த பாறைப் பகுதிக்கு சென்று நின்றான். பாபாவின் சிலை அவனை வெறித்துப் பார்த்தது. அந்த சிலையை தொட்டுத் தூக்குவதும் சாதாரணமாக முடியாது. இரண்டு அல்லது மூன்று பேர் வேண்டும். அப்படியிருக்க, யார் கொண்டு வந்து இங்கே வைத்திருக்க முடியும்?

ராம்லாலுக்கு குழப்பமாக மட்டுமல்ல- பயமாகவும் இருந்தது. ஏதாவது மாயா சக்தி அந்தப் பகுதியில் நட மாடுகிறதா? வீணை இசை கூட கேட்டதே... எப்படி?

ராம்லால் அப்படியே ஒரு பாறை மேல் அமர்ந்தவனாக குழம்பத் தொடங்கிவிட்டான்.

# இன்று

ஆற்றில் திடீரென்று தண்ணீர் மட்டம் அநியாயத்துக்கு குறைந்து போயிருந்தது. விசாரித்தபோது 'மேட்டூரில் தண்ணீர் விடவில்லை; ஷட்டர்களை அடைத்து விட்டார்கள்' என்கிற தகவல்தான் கிடைத்தது. அதிலும் பிரசிடெண்ட் என்பதால் கல்யாணசுந்தரத்திடம் மிகவுமே ஆதங்கப்பட்டுக் கொண் டார்கள்.

"பிரசிடெண்ட்டய்யா... இப்படியே போனா நம்ம தோடிபுரம் பச்சையும் இச்சையுமா இருக்காது. இன்னொரு துபாய் மாதிரி ஆயிடும். ஆ ஊன்னா தண்ணியை நிறுத்திப் பிடறாங்க" என்றனர். கல்யாணசுந்தரத்துக்கும் வருத்தமாகத் தான் இருந்தது. அதை அவ்வளவாக வெளிக்காட்டாமல் ஆற்றுக்குள் இறங்கச் சென்றபோது ஒரு மாதிரி அவரைப் பார்த்து சிரித்துக் கொண்டே போனான் அசோகன். அவனைப் பார்க்கவும் சுருக்கென்றது அவருக்கு.

அவன் சிரிப்பை பைத்தியக்கார சிரிப்பாக உணருவதா, இல்லை அதை ஒரு விஷமச்சிரிப்பாக கருதுவதா என்றே தெரியவில்லை. அவனை ஒரு மாதிரியாக பார்த்துக் கொண்டே தண்ணீரில் காலை வைத்தார். முழங்காலுக்குதான் தண்ணீர் இருந்தது. முங்கிக் குளிக்கக் கூட முடியவில்லை.

குதிரை போல பாய்ச்சலெடுத்து ஓடிய காவேரி, ஏதோ ஒரு சோனிக் குழந்தை சுருண்டு படுத்திருக்கிற மாதிரி இருந்தது. வருத்தத்துடன் தண்ணீரில் அப்படியே புரண்டு படுத்து காக்கைக் குளியல் போட்டபோது ஒருவன் ஓடி வந்து கரைமேல நின்றவனாக "தலைவரே... தலைவரே..." என்றான். கல்யாண சுந்தரமும் அவனைப் பார்த்தார். பஞ்சாயத்து அலுவலகக் காவலாளி அவன்.

"என்னடா?"

"தலைவரே... கலெக்டரும், தாசில்தாரும் தஞ்சாவூர்ல இருந்து பத்து மணி வாக்குல நம்ம பஞ்சாயத்து ஆபீஸுக்கு வரப்போறாங்களாம். நம்ம ஆபீஸுக்கு போன் வந்திச்சு..."

"அப்படியா... சரி, போ. நான் பாத்துக்கறேன்."

"ஐயா... 'அந்த புதையல் இப்ப எங்க இருக்கு'ன்னு ஒரு கேள்வி கேட்டாங்க. உங்க ஊட்லதான் இப்ப இருக்குதுன்னு சொல்லிட்டேன்." அவன் முடிவாகச் சொன்னது அவர் முகத்தில் அவர்கள் எதற்கு வருகிறார்கள் என்பதைப் புரிய வைத்துவிட்டது. அதன்பின் ஆற அமர குளிக்கவும் தோன்ற வில்லை. வாரி சுருட்டிக் கொண்டு கிளம்பினார்.

வழியில் விபூதி பிள்ளையார் சந்நிதி ஒன்று உண்டு.

வாசலில் தொட்டியில் விபூதியைக் கொட்டி வைத்திருப் பார்கள். அதில் ஒரு கை அள்ளி அப்படியே நெற்றியில் பூசிக் கொண்டு விறுவிறுவென்று நடந்தால் வீடுதான். பார்ப்பதற்கும் தெய்வ உருவமாக இருக்கும்.

ஆனால், கல்யாணசுந்தரம் அந்த விபூதி தொட்டியை பார்த்தபோது அதில் ஒரு பூனை படுத்திருந்தது. பூனைக்கு கீழே கொஞ்சம் போல விபூதி. அதை எடுத்து பூசிக் கொள்ளவும் தோன்றவில்லை.

அப்படியே போன ஜோருக்கு திரும்பினவரை ரங்காயி யும் பார்த்துக் கேட்டாள். "ஏங்க ஆத்துல குளிக்கலையா?"

"ஏன் அப்படிக் கேக்கறே... பார்த்தா குளிச்ச மாதிரி தெரியலியா?"

"ஆமாங்க..."

"அது சரி... விபூதி பூசினாதான் உனக்கு நான் குளிச்ச மாதிரியே இருக்கும்... என் நேரத்துக்கு விபூதி தொட்டியில பூனை படுத்திருந்துச்சு. அந்த விபூதியை பூச மனசு இல்லாம வந்துட் டேன்...

"தப்பு பண்ணிட்டீங்க..."

"அட! நீ ஒண்ணு புள்ள. தப்பு பண்ணிட்டேன் அது இதுன்னுகிட்டு. இன்னிக்கு கலெக்டரும் தாசில்தாரும் வர்றாங்க. எனக்கும் பஞ்சாயத்து வேலை நிறைய இருக்குது. கோவிலுக்கு வாசிக்க போக முடியாது போல... சாமிநாதனை இன்னிக்கு கொஞ்சம் போய் வாசிக்கச் சொல்..."

"ஆமா கலெக்டரும், தாசில்தாரும் எதுக்கு வர்றாங்க."

"நல்லா கேட்டே போ ஒரு புதையலை எடுத்து ஊட்டுக்குள்ள வெச்சிருக்கம்ல? அதை அவங்ககிட்ட ஒப்படைக்க வேண்டாமாக்கும்?"

"அப்பாடா... சீக்கிரம் வரட்டும்...

"நீ ஏன் புள்ள அலுத்துக்கறே?"

"அலுத்துக்காம... புதையலை பூதம் காக்கும்னு சொல் வாங்க. அது வந்ததுல இருந்தே ஒரு பக்கம் ஆந்தை கத்துது. இன்னொரு பக்கம் கோட்டான் கத்துது."

"இப்ப இங்க நீ கத்துறே பாரு... அதையும் சேர்த்துக்க..."

"ஆமா... நான் கத்தறதுதான் இப்ப உங்களுக்கு பெருசா போயிடிச்சாக்கும்..."

"வளவளன்னு பேசாம போய் சோலியைப் பாரு. ஆமா எங்க நிலவறை சாவி."

- அவர் கேட்க, அவளும் எடுத்து வந்து தர, பெரிய பூட்டு கொண்ட நிலவறைப் பூட்டை கல்யாணசுந்தரமும் திறந்து கொண்டு மரப்படிகளின் வழியாக உள்ளே இறங்கினார். எப்பொழுதும் பூட்டியே வைத்திருப்பதால் உள்ளே வெப்பம் காந்தியது. தலைக்கு மேலான திறப்பின் வழியாக உள் விழுந்த வெளிச்சம் நிலவறைக்குள் இருக்கும் மரபீரோ, இரும்பு பீரோ என்று உள்ளிருக்கும் எல்லாவற்றையும் ஓரளவு காட்டியது. அறைக்குள் மின் இணைப்பும் இருந்தது. சுவரைத் தடவி ஸ்விட்சை போடவும் ஒரு கோலி பல்ப் மளுக்கென்று எரிந்து - அறை முழுக்க சுமாராக வெளிச்சம் விழுந்தது. இரு பீரோக்களுக்கு அப்பக்கத்தில் ஒரு மூலையில் அந்த புதையல் பானை!

ஆசையாக அதைப் பார்த்த கல்யாணசுந்தரம் அதை தொட்டுத் தூக்கவும் செய்தார் நல்ல கனம். திரும்பவும் அங்கேயே மூலையாக பார்த்து வைத்துவிட்டு பீரோவைத் திறந்தார். உள்ளே அவர் மிக ரகசியமாக பாதுகாத்து வரும் பல விஷயங்கள். அதில் ஒரு ஆல்பமும் அடக்கம். சில வினாடிகள் அதை உற்றுப் பார்த்தவர் அந்த ஆல்பத்தை வெளியில் எடுத்தார். அந்த நாளைய பழைய ஆல்பம். பிரித்தபோது தூசு பறந்தது. சலைன் தாளின் சடசட சப்தம் அந்த அறைக்குள் மிக துல்லியமாகவும் ஒலித்தது. கல்யாணசுந்தரம் தனது இள வயதில் எடுத்துக் கொண்ட புகைப்படங்கள். பத்து வயதில், பன்னிரண்டு வயதில் இருவது வயதில் என்று வரிசையாக ஒரு புகைப்படத்தில் கல்யாணசுந்தரம் நாதஸ்வரத்துடன் நிற்க, அருகில் நாட்டிய மாடிய கோலத்தில் சுந்தராம்பாள். மிக மிக இளமையான கோலம்! கிட்டத்தட்ட நாற்பது வருடங்களுக்கு முந்தைய

காட்சிகள். கல்யாணசுந்தரத்துக்கு மனது காந்தியது. நெடுநேரம் அந்த புகைப்படத்தையே பார்த்துக் கொண்டிருந்தார். பின் மூடி வைத்துவிட்டு பெருமூச்சுடன் மரப்படிகள் வழியாக மேலே ஏறினார். கதவையும் சாத்தி திரும்ப பூட்டினார்.

முகத்தில் சலன ரேகைகள். நடந்து வாசல்புறம் வந்தார். திண்ணைமேல் பாய் விரிக்கப்பட்டு வெற்றிலை பெட்டி வைக்கப்பட்டிருந்தது. நாதஸ்வரமும் வைக்கப்பட்டிருந்தது.

கல்யாணசுந்தரமும் சாதகம் செய்யும் நேரம் அது என்பதன் பொருட்டு ரங்காயி தினம் செய்து வைக்கும் ஒரு சாதாரண ஏற்பாடுதான் அது. இந்த நாதஸ்வர கலைஞர் களிடமும் ஒரு பழக்கம். மனது மிக கனத்துப் போகும்போது தான் இவர்களுக்கு நாதஸ்வரத்தை எடுத்து வாசிக்கவே தோன்றும். அது என்னவோ தெரியாது அப்பொழுது அவர் களிடம் இருந்து ஆலாபனை பிய்த்து உதறும். உச்சஸ்தாயி, கீழ் ஸ்தாயிகள் எல்லாம் மிக சாதாரணமாக வசப்படும். எங்கும் அவர்கள் திணறுவதையே பார்க்க முடியாது.

நாதஸ்வரம், புல்லாங்குழல் இவையிரண்டும் ஒரு விதத் தில் மூச்சிசை. பெரிய நெஞ்சகம், நல்ல தீர்க்கமான - கோணல் இல்லாத நாசிகள், ஜலதோஷத்திற்கு இடம் அளிக்காத தேக அமைப்பு- இதெல்லாம் இந்த கலைஞர்களுக்கு மிக முக்கியம். கல்யாணசுந்தரத்திடம் பிறவியிலேயே அது இருந்தது! நாதஸ்வர கலைஞர்களுக்கு பெரிய அளவில் சோம்பேறித் தனமே இருக்காது. ஏன் என்றால் அவர்களது மூச்சுப் பயிற்சி உடம்பில் ரத்த ஓட்டத்தை சீராக வைத்திருக்கும். மூன்று மணி நேரம் நாதஸ்வரம் வாசித்தால் மூன்று மணி நேரம் நெஞ்சிலும் வயிற்றிலும் காற்றைக் கட்டி அவர்கள் பெரிய பயிற்சி செய் திருக்கிறார்கள் என்பதுதான் உண்மை.

கல்யாணசுந்தரமும் வாசிக்கத் தொடங்கிவிட்டார்... ராக ஆலாபனை எடுத்த எடுப்பிலேயே உச்சத்துக்கு போனது.

'மனக் கோவிலில் வாழும் இறைவா...' என்கிற பாடல். மோகன ராகம்! உள்ளே அடுப்படியில் போராடிக் கொண் டிருந்த ரங்காயியைக் கூட வாசலுக்கு இழுத்து வந்தது. நிலைகால் படிமேல் நின்றுகொண்டு கண் கொட்டாமல் கவனித்தாள். கல்யாணசுந்தரம் கண்களில் நீர் வழிய வாசித்தார். அவர் அப்படி அழுது கொண்டு வாசிப்பது என்பதெல்லாம் எப்பொழுதாவதுதான்.

ரங்காயிக்கும் விளங்கிவிட்டது.

கல்யாணசுந்தரம் மனது சுந்தராம்பாளை நினைக்கத் தொடங்கிவிட்டது. பழைய நினைப்புகள் புழுதிக்காற்று போல வீசிக் கொண்டிருக்க வேண்டும்.

நல்ல வேளை...

பஞ்சாயத்து காவலாளி ஒரு ஓட்டை சைக்கிளில் முன் வந்து தடதடவென்று ஸ்டாண்டு போட்டு சைக்கிளை நிறுத்தினான். அவனைப் பார்க்கவும் தோளுக்கு மேல் உயர்த்திய நாதஸ்வரத்தை அப்படியே வாயில் இருந்து விடுவித்தவராக அவனைப் பார்த்தார் கல்யாணசுந்தரம்.

"தலைவரே... என்னன்னு தெரியல - கலெக்டரும் தாசில் தாரும் சீக்கிரமாவே வந்துட்டாங்க. நம்ம ஊட்டுக்கு நேரா வந்துகிட்டிருக்காங்க..." என்றான்.

அவன் சொல்லி முடிக்கவும் கல்யாணசுந்தரம் வீட்டுமுன் சில ஜீப்புகளும், தேசியக் கொடி பறக்கும் கார் ஒன்றும் சக் சக் என்று சீறிக் கொண்டு வந்து உலுங்கிக் குலுங்கியபடி நின்றன. கல்யாணசுந்தரமும் வாரி சுருட்டிக் கொண்டு எழுந்திருந்தார். துண்டை எடுத்து தோளை மூடிக் கொண்டு காரில் இருந்து இறங்கத் தொடங்கிய கலெக்டரையும், தாசில்தாரையும் பார்த்து கும்பிட்டார்.

"வணக்கம் சார்... வணக்கம்...

"வணக்கம் மிஸ்டர் கல்யாணசுந்தரம். என்ன ராக ஆலாபனையா?"

"ஆமாங்க. காலைல ஒரு மணி நேரமாவது வாசிச்சா தான் மனசுக்கு திருப்தியா இருக்குதுங்க."

"அப்படித்தான் இருக்கணும்..."

"உட்காருங்க சார்... உட்காருங்க... உட்காருங்க."

திண்ணையில் கிடந்த பாயைக் காட்டி அவர்களை உட்காரச் சொன்னார் ரங்காயியும் அவர்களைச் சற்றும் எதிர்ப்பார்க்காதவள் போல ஓடிவந்து அனைவருக்கும் வணக்கம் சொன்னாள்.

"இவ என் மனைவி. ரங்காயி... ஓடிப் போய் எல்லோருக்கும் காபி தயார் பண்ணு" என்றார் கல்யாணசுந்தரம்.

"இல்ல கல்யாணசுந்தரம், அதுக்கெல்லாம் இப்ப நேர மில்ல. புதையல் பாத்திரத்தை பார்த்து அதை ட்ரெஷரிக்கு

அனுப்பத்தான் இரண்டு பேரும் வந்திருக்கோம், பை த பை.. உங்க ஊர்ல கிடைச்ச புதையலை நீங்க உங்களுக்குள்ள பங்கு போட்டுக்காம அதை அரசாங்கத்துக்கிட்ட ஒப்படைக்க நினைச்சது ரொம்ப பெரிய விஷயம். அதுக்காக நான் உங்களை மனசார பாராட்டறேன்...'' என்ற கலெக்டரை கொஞ்சம் தன்னடக்கமுடன் பார்த்து சிரித்தார் கல்யாணசுந்தரம். அப்படியே ''ஒரு நிமிஷம்'' என்று நிலவறை பூட்டை திறந்து கொண்டு உள்ளே இறங்கியவர் புதையல் பானையோடுதான் மேலே வந்தார் நல்ல கனம் கனத்தது அந்த பானை. கலெக்டரும், தாசில்தாரும் அந்த பானையை வைத்த விழி வாங்காமல் பார்த்தார்கள். அவர்கள் எதிரேயே போலீஸ் இன்ஸ்பெக்டர் வைத்த சீலை உடைத்து புதையல் பானையின் மூடியை திறக்கும் வேலையும் தொடங்கியது.

''நல்ல கனமான பாத்திரம்தான்... எந்த காலம்னு அனுமானிக்க முடியுதா?''

''அதிக பட்சம் ஐந்நூறு வருஷத்துக்குள்ள இருக்கலாங்க. மஞ்சக் காணி வயல்ல கிடைச்சதுங்க. திருடங்களுக்கு பயந்து கிட்டு பூமியில புதைச்சு வெச்சிருந்துக்கணும். அப்புறமா அப்படியே இறந்து போயிருக்கலாம்.''

''புதையல்ல பெரும்பாலான புதையல்களோட பின்புலம் இப்படித்தான் இருக்கு... ஆமா இதுல என்ன அவ்வளவும் தங்கக் காசுங்களா, இல்லை நகைங்களா?'

''தங்கக் காசுங்க சார். ஒரு காசு எப்படியும் பத்து கிராம் இருக்கும்...''

கலெக்டரும் தாசில்தாரும் கருத்து பரிமாறிக் கொள்ள - உண்டியல் வாயும் ஒரு வழியாக திறக்கப்பட்டது. அடுத்த நொடியே அவ்வளவு பேர்களையும் அதிர்ச்சி ஆட் கொண்டது. புதையல் பானையில் வழிய வழிய தங்கத்துக்கு பதிலாக கரித்தூள்.

கலெக்டர் தாசில்தாரையும், தாசில்தார் கல்யாண சுந்தரத்தையும் பார்க்க, கல்யாணசுந்தரமும் முகம் பேயறைந்த மாதிரி மாறிவிட்டிருந்தது.

''என்ன கல்யாணசுந்தரம் இது?''

''எனக்கே ஒண்ணும் விளங்கல சார்...''

''என்ன அப்படிச் சொல்றீங்க? இதுல இருந்த தங்கக் காசுங்கல்லாம் எங்க?''

"தெரியல சார்... ஆனா அன்னிக்கு நிலவறைல வெச்சு பூட்டினதுதான் சார்..."

"அப்ப இதுல தங்கக்காசுங்க இருந்ததுதானே?"

"இருந்திச்சாவா இரண்டு கண்ணால போலீஸ் இன்ஸ்பெக்டர் அய்யாவும் இருந்து பார்த்தாருங்களே. அவர் தானே சீல் வெச்சதே?"

"அப்ப எப்படி தங்கமானது கரியா மாறும்? சம்திங் ராங்." - கலெக்டர் முகம் ஒரு மாதிரி கறுத்துப் போய் அவரது பரஸ்பர உணர்வுகள் மாறிவிட்டன. தாசில்தாரும் தர்மசங்கடத்துடன் கல்யாணசுந்தரத்தை தனியாக அழைத்துக் கொண்டு ஒதுங்கி னார்.

"என்னங்க இது?"

"எனக்கும் ஒண்ணும் புரியல சார். ஒரு வேளை புதையல் தங்கத்தை பூட்டி வெச்சா கரியாயிடுமோ?"

"அட என்னங்க நீங்க ஒண்ணு. இப்படியெல்லாம் எதையாவது சொல்லி சமாளிச்சுக்கலாம்னு தங்கக் காசுங்களை நீங்களே எடுத்து வெச்சுட்டீங்களா?"

"அய்யோ சார்... நீங்களா இப்படிப் பேசறது? நான் இதை அமுக்க நினைச்சிருந்தா உங்க வரைல தகவல் சொல்லிவிட்டுருப் பேனா... யோசிச்சுப் பாருங்க."

"இதை எல்லாம் கலெக்டர் கேட்டுக்க மாட்டாரு. இன்னிக்கு கிராமம் கிராமமா ஜமா பந்தி வேற நடக்கப் போகுது. அதுக்குத்தான் அவரும் வந்துருக்காரு. நீங்க எதைச் சொன்னாலும் அவர் நம்பற மனுஷன் இல்ல."

"தயவுசெய்து என்னை நம்புங்க. எனக்கும், இது கரியானதுக்கும் எந்த சம்பந்தமும் இல்லீக..."

"உங்க வீட்ல- உங்க நிலவறைல வெச்சிருந்துட்டு ஒண்ணும் தெரியாதுன்னா எப்படிய்யா? யோசியுங்க."

"எனக்கு இப்படியெல்லாம் ஆகும்னு தெரியாதுங்க."

"திரும்ப திரும்ப பேசுனதையே பேசுறீங்களே... தாசில்தார் முணுமுணுக்க, கலெக்டர், "மிஸ்டர் ராமபத்ரன்... என்ன அது, அங்க குசுகுசுன்னுகிட்டு. கரிப் பானையை பார்க்கவா நாம இப்ப இங்க வந்துருக்கோம்?"

"அது வந்து சார்... மிஸ்டர் கல்யாணசுந்தரம் தனக்கு ஒண்ணுமே தெரியாதுங்கறாரு..."

"தெரியாதுன்னா... தங்கத்தை எடுத்துக்கிட்டு கரியை வெச்சது யார்னு தெரியாதாமா?"

"அப்படி இல்லை சார்... இது ஏதோ மிராகிள்னு நினைக்கறாரு."

"மிராகிளா..? என்ன.. இந்த புதையலை காத்துக்கிட்டிருந்த பூதம், அது எடுத்துக்கிட்டுப் போயிடிச்சாமா?"

- கலெக்டரிடம் கிண்டல் தூள் பறந்தது. அப்பொழுது அதிசயமாக அந்தப் பக்கமாக சுந்தராம்பாளின் வில் வண்டி வந்தபடி இருந்த்து. ஜல் ஜல் என்று வண்டி மாடுகளின் சப்தம். கவனம் தானாக அந்த பக்கம் திரும்பியது. அங்கே இருப்பவர் களில் சிலர் "சுந்தராம்பாம்மா... சுந்தராம்பாம்மா..." என்று முணுமுணுத்தனர். கலெக்டர் காதிலும் அது விழவே அவர் முகத்தில் ஒரு திடீர் மலர்ச்சி.

"சங்கீத மேதை சுந்தராம்பாளா வர்றாங்க?" என்று கேட்டார் கவனம் திரும்பியவராக...

"ஆமாம் சார்... அம்மாதான் வர்றாங்க..."

"ஓ... அவங்க சொந்த ஊர் இந்த ஊர்தான் இல்ல?"

"ஆமாம் சார்..."

அதற்குள் சுந்தராம்பாள் வந்த வண்டி அவர்களை நெருங்கிவிட்டது. கூட்டமாக ஜீப்பும் காரும் நிற்பதைப் பார்த்து சுந்தராம்பாள் வண்டியை நிறுத்தி வெளியே எட்டிப்பார்த் தாள். மஞ்சள் பூசிய மங்கலமான முகம். காதோரமாய் சில இள நரைகள். காதில் ஜொலிப்பு. நெற்றியில் அழகான குங்குமப் பொட்டு. அதன் கீழே விபூதிக்கீற்று.

"நமஸ்காரம்மா... என் பேர் கலாதர். நான் தஞ்சாவூர் டிஸ்ட்ரிக்ட் கலெக்டர். கேள்விப்பட்ருப்பீங்க..." -கலெக்டர் கூப்பிய கைகளோடு சுந்தராம்பாள் முன் செல்ல, சுந்தராம் பாளும் பதிலுக்கு கும்பிட்டுவிட்டு கீழே இறங்கினாள்.

எல்லோரையும் ஒரு பார்வை பார்த்தாள்.

எல்லோரும் அவளை பதிலுக்கு கும்பிட்டனர். ஒரு சிலர் காலிலேயே விழுந்தனர்.

"இவங்க எங்க ஊருக்கே தெய்வம்..."

"கேள்விப்பட்ருக்கேன்... கேள்விப்பட்ருக்கேன். இவங்க பாட்டுன்னா எனக்கு ரொம்ப இஷ்டம். இவங்க பாடினதுல

ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்ரம் எனக்கு ரொம்ப பிடிக்கும். தினமும் காலைல என் வீட்டு காஸெட்ல அது ஓடாத நாள் இல்ல...''

''ரொம்ப சந்தோஷம் கலெக்டர் சார்... நீங்க எங்க ஊருக்கு வந்ததுல இன்னும் சந்தோஷம்...'' என்றபடியே சுந்தராம்பாளும் அந்த புதையல் பானையைப் பார்த்தாள். திறந்திருந்த அதில் வழிய வழிய கரி.

''என்ன இது... நம்ம ஊர்ல வெள்ளிக்கிழமை அன்னிக்கு புதையல் கிடைச்சதுன்னு சொன்னாங்களே அதுவா?''

''ஆமாம்மா... எடுக்கும்போது தங்கமா இருந்த புதையல் - இப்ப கரியா இருக்கறதுதான் பெரிய கொடுமை.''

- தாசில்தார், சுந்தராம்பாளிடம் மிகவும் வருத்தப்பட்டுக் கொண்டு சொல்லவும் சுந்தராம்பாள் அருகே சென்று புதையல் பானையை உற்றுப் பார்த்தாள். அவ வந்ததையோ அவளுக்கு அங்கே பலத்த மரியாதை கிடைப்பதையோ கல்யாணசுந்தரத் தால் துளியும் ஜீரணிக்க முடியவில்லை என்பது அவர் முகம் போகும் போக்கில் துல்லியமாகத் தெரிந்தது.

சுந்தராம்பாளும் கல்யாணசுந்தரம் கசந்து வழிவதைக் கவனித்தாள். அதைத் தொடர்ந்து அங்கே இருக்க அவளுக்கு மிகவும் சங்கடமாகிவிட்டது. மௌனமாக எதையும் கூறாமல் நின்றவள், அடுத்த நொடி கலெக்டரைப் பாத்து ''அப்ப நான் புறப்படறேன்...'' என்றாள். கலெக்டரும் பெரியதாகக் கையெடுத்து கும்பிட்டார். அப்படியே ''இந்த பிரச்சினைக்கு நீங்க ஒரு தீர்வு சொன்னா தேவலை...'' என்றார். அவளிடம் அடப்பமாய் மௌனம் வந்து ஆக்கிரமித்துக் கொண்டது. அவள் பதில் சொல்ல யோசிப்பது நன்றாகத் தெரிந்தது. அதை கவனித்த ரங்காயி அவள் முன் கலங்கிய விழிகளோடு வந்து நின்றவளாய் மௌனமாய் கையெடுத்து கும்பிட்டாள். கண்களின் கலக்கம் பேசாமல் பேசியது.

''என்ன ரங்காயி..?''

''அக்கா... இவரை இவங்க சந்தேகப்படறாங்க. நிஜமா சொல்றேன். இந்த புதையல் பானை எப்படி கரியாச்சுன்னு சத்தியமா தெரியாது. இவர் பேர்ல எந்த தப்பும் கிடையாது...''

''அது எனக்கும் தெரியும் ரங்காயி...''

"அப்ப கலெக்டர் அய்யா கிட்ட நீங்கதான் சொல்லணும்."

"நான் சொல்லலாம். அவரும் அதை நம்பலாம். ஆனா சட்டத்துக்கு முன்னால நின்னு அவர் பதில் சொல்லணுமே."

- இருவரும் பேசிக் கொள்வது கலெக்டரையும் யோசிக்க வைத்தது.

"அம்மா... நீங்க இந்த ஊருக்கே தெய்வம் மாதிரின்னு கேள்விப்பட்டிருக்கேன். இந்த புதையல் பானை எப்படி கரியாச்சு, இதுல இருந்த தங்கமெல்லாம் எங்க போச்சுன்னு கண்டுபிடிச்சு அரசாங்கத்துகிட்ட ஒப்படைக்கறேன்னு இவர் சொல்லட்டும். ஐ வில் கிவ் டைம்... ஒரு மாசமோ இல்லை இரண்டு மாசமோ டைம் தரேன். ஆனா, அதுக்குமேல என்னால பொறுத்துக்க முடியாது..."

கலெக்டர் சுந்தராம்பாளுக்காக இறங்கி வருவது கல்யாணசுந்தரத்துக்கு நன்றாக புரிந்தது. இருந்தாலும் அவர் அவகாசம் தருகிறேன் என்று சொன்னதே அவருக்கு அந்த நேரம் பெரிய விஷயமாக இருந்தது.

"சரின்னு சொல்லுங்க... அதான் கலெக்டரய்யா டைம் தரேன்னு சொல்றாருல்ல. ஐயா... இவர் சார்பா நான் ஒத்துக்க றேன்யா. அப்படி எங்களால கண்டுபிடிக்க முடியாட்டி இந்த பானை கொள்ற அளவு தங்கத்தை எங்க சொத்தையெல்லாம் வித்தாவது நான் உங்களுக்கு தந்துடறேன்..." என்றாள் ரங்காயி.

கலெக்டரோ சுந்தராம்பாளைப் பார்த்தாள்.

சுந்தராம்பாளும் ஒரு முடிவுக்கு வந்து வாயைத் திறந்தாள். "சார்... இவங்களுக்காக நானும் உங்களுக்கு உத்தரவாதம் தரேன். என் உத்தரவாதத்தை எடுத்துக்கறதும், எடுத்துக்காததும் உங்க விருப்பம்..." என்றாள் மிக தன்னடக்கமாக. கலெக்டரோ பதறினார்.

"அய்யய்யோ... என்னம்மா நீங்க. எவ்வளவு பெரியவங்க நீங்க. உங்க வார்த்தையை நம்பலேன்னா எப்படி. ஒரு விஷயம்மா. புதையல் தங்கம் தானா கரியாயிடுச்சுங்கறத கோர்ட்ல எல்லாம் சொல்லி நிரூபிக்க முடியாது. எடுக்கும்போதே இருந்திருந்தா அது வேற தினுசு. நாம இப்ப ஹைடெக் யுகத்துல இருக்கோம். ஆகையால அதை மனசுல வெச்சுகிட்டு இந்த விஷயத்துல அணுகுங்க. லோக்கல் போலீஸ் உங்களுக்கு உதவி செய்யும்.

பயன்படுத்திக்குங்க...” என்றவர், தாசில்தாரை பார்த்தார். அவரோ தன் உதவியாளரைப் பார்க்க, அவர் மளமளவென்று அங்கே எடுக்கப்பட்ட முடிவை உத்தேசித்து ஒரு கடிதம் போல எழுதினார் அது கல்யாணசுந்தரம் கலெக்டரிடம் புதையல் பானை தொடர்பாக கால அவகாசம் கேட்கும் விதத்திலும், களவு போய்விட்டதைக் கண்டறிய ஆவன செய்ய வேண்டும் என்கிற விதத்திலும் இருந்தது.

கல்யாணசுந்தரமும் கைகள் நடுங்க கையெழுத்து போட்டார். அவருக்கு மிக கூச்சமாகிவிட்டது. அதன்பின் சுந்தராம்பாளின் வண்டி ஒரு புறமும், கலெக்டரின் காரும் தாசில்தாரின் ஜீப்பும் மறுபுறமும் சென்றுவிட, கல்யாண சுந்தரமும், ரங்காயியும் மட்டும் தனித்து விடப்பட்டது போல நின்றுகொண்டிருந்தனர். சற்று தள்ளி பஞ்சாயத்து அலுவலக காவலாளி நல்லகண்ணு.

“காலைல ஆந்தை கத்தும்போதே நினைச்சேன்-இப்படி ஏதாவது நடக்கும்னு...” என்று ரங்காயி முணுமுணுக்கும்போதே சாமிநாதனும் செய்தியறிந்து ஓடிவந்திருந்தான்.

“அம்மா... என்னம்மா? கலெக்டர், தாசில்தார்னு யார் யாரோ வந்தாங்களாமே..? என்னென்னமோ காதுல விழுந் துச்சே..?” - பதறினான். ரங்காயி கண்கள் நீரால் பேசின.

கல்யாணசுந்தரத்திடமோ சிலை போன்ற ஒரு இறுக்க மான நிலை. மனது ஊதுலை போல கொதித்துக் கொண் டிருந்தது.

“என்னம்மா நடந்துச்சு..? ஏன் எதுவும் பேசமாட்டேங் கறீங்க?” என்று சாமிநாதன் தன் குரலில் சுருதியைக் கூட்டிய போது உபாசகரும் வந்துவிட்டார். அவரைப் பார்க்கவும் ரங்காயி வெடித்தேவிட்டாள். ஆனால் உபாசகர் முகத்தில் ஒரு மர்மச் சிரிப்பு.

“என்ன சாமி சிரிக்கறீங்க?” சட்டென்று கோபமாக அவரைப் பார்த்து சீறினான் சாமிநாதன்.

“சிரிக்காம என்னப்பா பண்ண... புதையலை எடுக்கும் போதே இவரண்ட சொன்னேன், ‘கல்யாணசுந்தரம், எனக்கு இது நல்லதா படலை’ன்னு...”

“எதை வெச்சு சாமி அப்படிச் சொன்னீங்க..?”

“நான் ஒரு உபாசகன். மந்த்ர ஸ்வரூபி. நான் சொன்னா

கேட்டுக்கணும். எதை வெச்சு, எப்படின்னுல்லாம் கேட்கக் கூடாது. மீறி நான் சொன்னாலும் உன்னால புரிஞ்சுக்க முடியாது.”

“இப்படியே எத்தனை கேள்விக்கு பதில் சொல்வீங்க? ஏன், எதுக்கு, எப்படின்னு கேட்கறவங்கதான் வளருவாங்கன்னு விஞ்ஞானம் சொல்லுது. ஒரு விஷயத்தை புரிஞ்சுக்கணும்னா, கேட்டாதானே பதில் கிடைக்கும்?”

“உன் அப்பா யார்னு உன் அம்மா சொல்லித்தானே உனக்குத் தெரியும்...?”

“இப்ப.எதுக்கு இந்தக் கேள்வி?”

“கேள்விக்கு கேள்வி பதிலாகாது. என் கேள்விக்கு நீ பதில் சொல். அந்த பதில்லதான் உனக்கான பதிலும் இருக்கு...”

“குழப்பறீங்களே சாமி...”

-இருவரும் வாதப்பிரதிவாதம் செய்ய, ரங்காயி வெறுத்துப் போய் உள்ளே போய்விட, கல்யாணசுந்தரம் மட்டும் சிலை போல அமர்ந்த நிலையில் இருந்து மாறவேயில்லை.

“சரி, சாமி! உங்க கேள்விக்கு நான் வரேன். என் அம்மா சொல்லித்தான் எனக்கு என் அப்பா யார்னு தெரியும். இது எனக்கு மட்டுமல்ல உங்களுக்கும் பொருந்தும். உலகத்துல இருக்கற எல்லாருக்கும் பொருந்தும்...”

“நல்லது... உன் அம்மா சுட்டிக்காட்ற அப்பாவை நீ ஒத்துக்கறியா இல்லை சந்தேகப்படறியா?”

“என்ன கேள்வி இது... அப்படிச் சந்தேகப்பட்டா அது என் அம்மாவையே நான் சந்தேகப்படற மாதிரி ஆகாதா?”

“சந்தேகத்துக்கு அம்மா அப்பா அடுத்தவான்னு பேதங்கள் கூட உண்டா சாமிநாதா..?”

“சாமி ஈ...”

“பதில் சொல் சாமிநாதா...”

“இல்ல சாமி. பெத்த தாயை யாராலும் சந்தேகப்பட முடியாது. சந்தேகப்படவும் கூடாது.”

“இந்த நம்பிக்கை குருவிடமும் இருக்கணும் சாமிநாதா. நான் ஒண்ணு சொன்னா முதல்ல நம்பு. அது எப்படிங்கறத உடனே கேட்காதே. ஒரு அமைதியான சமயத்துல நிதானமா கேள்.”

- அந்த பதில் சாமிநாதனை திருப்திப்படுத்திய மாதிரி

தெரியவில்லை. இனி அவரிடம் பேசுவதில் பயனில்லை என்பது போல அவனும் ரங்காயியிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள உள்ளே சென்றான்.

திண்ணையில் கல்யாணசுந்தரம் மட்டும். நல்லகண்ணு கூட நாசூக்காக நழுவிவிட்டான். உபாசகர் மெல்ல கல்யாண சுந்தரம் அருகில் அமர்ந்தார். கல்யாணசுந்தரமும் கண்கலங்க பார்த்தார்.

"கவலைப்படாதேள் கல்யாணசுந்தரம். எல்லாம் சரியாப் போயிடும்..."

"அடபோங்க சாமி... இனி சரியா போனா என்ன, போகாட்டி என்ன... மானமே போயிடிச்சு..."

"எதுவும் இப்ப ஆயிடலை. உங்களை என்ன ஜெயில்லயா புடிச்சு போட்டுட்டா? அதான் தெய்வம் மாதிரி சுந்தராம்பா வந்து காப்பாத்திட்டாளே...!"

"அதைத்தான் சாமி என்னால ஜீரணிக்கவே முடியலை."

"என்ன சொல்றேள்...? சுந்தராம்பாள் உங்களை காப்பாத்தினது உங்களுக்குப் புடிக்கலையா?"

"ஆமாம் சாமி. அந்த கலெக்டரும் ஒரு புத்தி கெட்ட மனுஷன். புதையல் பானை கரியா மாறுனதை அந்த ஆளால நம்ப முடியலையாம். ஆனா, இவளோட ராணிபங்களா பக்கம் யாராவது போனா அவங்களுக்கு ஏதாவது ஆயிடும்கறத மட்டும் இவர் நம்புவாரோ?"

"ஓ... நீங்க அப்படி யோசிக்கறீங்களோ?"

"வேற எப்படி யோசிக்கறது? எனக்கென்னவோ நடந்ததை எல்லாம் கூட்டிக் கழிச்சா பெருசா சந்தேகம் வருது."

"எப்படி?"

"முதல்ல கலெக்டரும், தாசில்தாரும் வர்றாங்க. பின்னா லயே இவ வண்டி வருது. கச்சிதமா இங்க புதையல் பானையும் கரியாகுது."

"அப்ப சுந்தராம்பாதான் கரியாக்கிட்டாள்னு சொல் றேளா?"

"ஏன் இருக்கக் கூடாது?"

"அப்ப அவகிட்ட நிறைய மாயா சக்தி இருக்குன்னும் நீங்க நினைக்கறேள்?"

"ஏன் இருக்கக் கூடாது. புதையல் எடுத்துக் கொடுத்து

கவர்மெண்ட் கிட்ட நான் நல்ல பெயர் எடுக்கறது அவளுக்குப் பிடிக்கலை. அதான் தன் சித்து வேலையை என்கிட்ட காட்டிட்டா..."

"தப்பு கல்யாணசுந்தரம்... சுந்தராம்பா ஒண்ணும் அப்படிப்பட்ட ஒரு பொம்மனாட்டியா எனக்கு படலை."

"என்ன சாமி... உங்களையும் அவ ஏதாவது பண்ணிட்டாளா..? சைடு மாறி பேசறீங்க..."

"கல்யாணசுந்தரம், என்ன பேச்சு இது?"

"பின்ன என்ன சாமி... ஒரு மாசத்துல... நான், தங்கம் எப்படி கரியாச்சுன்னு சொல்லியாகணும். எனக்குதானே கஷ்டம் தெரியும்."

"எனக்கும் தெரியும்..."

"அப்ப சொல்லுங்க. யார் இதுக்கெல்லாம் காரணம்?"

"இப்ப என்னால சொல்ல முடியாது. ஆனா ஒண்ணு இந்த ஊருக்கு ஒரு அசுரன் வந்துட்டு போனதை பார்த்தேன். இது அவன் வேலையாகூட இருக்கலாம்..."

உபாசகர் முதல் முறையாக ருத்ரேஸ்வரை மனதில் நினைத்துக் கொண்டு பேசினார் ஆனால், அது கல்யாண சுந்தரத்திற்கு புரியவில்லை.

"சாமி சமாளிக்காதீங்க. நீங்க பேசறதுல இருந்து ஒரு விஷயம் எனக்கு நல்லா புரியுது..."

- கல்யாணசுந்தரம் மறை கழண்டவர் போலவே பேசினார். உபாசகரும் எதுவும் கூறாமல் வெறித்தார்.

"இனி உங்களை நம்பறதுல பிரயோஜனம் இல்ல சாமி. உங்களாலயும் அந்த தாசிபங்களாவுக்குள்ள புகுந்து அங்க யார் ருத்ர வீணை வாசிக்கறாங்கன்னு கண்டுபிடிக்க முடியாதுன்னு எனக்குத் தெரிஞ்சு போச்சு. உங்க சக்தியை நான் ரொம்பவும் நம்பினேன். ஆனா, நீங்களும் என்னை ஏமாத்திட்டீங்க சாமி..."

"கல்யாணசுந்தரம்... இப்ப என்ன ஆயிடுத்துன்னு இப்படி எல்லாம் பேசறேள்? நீங்க, நடந்த சம்பவத்தால ரொம்ப பேதலிச்சு போய்ட்டேள். செத்த அமைதியா இருங்கோ தாசி பங்களாவுக்கு எப்ப போகணும், எப்படிப் போகணும்னு இருக்கு. அப்ப நான் கட்டாயமா போவேன்..."

"போதும் சாமி... நீங்க போறதுக்குள்ள இங்க நான்

ஒண்ணுமில்லாம போய்டுவேன் போல இருக்கு..."

"இது அவசரப்படற விஷயமில்ல..."

"அது சரி... எல்லாம் நடக்கும்போது நடக்கட்டும்னு உட்கார்ந்துகிட்டிருந்தா இப்ப தங்கப் புதையல் கரியாச்சு. நாளைக்கு நானே கரியாயிடுவேன்..."

கல்யாணசுந்தரம் அந்த பதிலோடு துண்டை உதறிக் கொண்டு எழுந்திருந்தார்.

"சரி, கல்யாணசுந்தரம்! உங்களை நான் அப்புறமா பாக்கறேன்." என்று உபாசகரும் புறப்படத் தயாராக -

"சாமி! இனி நான் யாரையும் நம்பத் தயாரா இல்லை. அந்த சுந்தராம்பாளோட சித்துக்கெல்லாம் ஒரு முடிவு நானே கட்டறேன். மானங்கெட்டுப் போய் அவளோட சிபாரிசால வெளிய இருந்து உசுர் வாழறதுக்கு ஏதாச்சும் நடந்து செத்துப் போயிடறது மேல் சாமி... செத்துப் போயிடறது மேல்..."

கல்யாணசுந்தரம் எடுக்கக்கூடாத ஒரு முடிவை எடுத்துவிட்டது அவரது பதிலில் தெரிந்தது. ஆனால், பதிலுக்கு பதில் என்று பேசுவதில் பலன் இல்லை என்று உணர்ந்த உபாசகர் மெளனமாக புறப்பட்டார் புறப்படும் சமயம் அருகாமை மரத்து ஆந்தை காத்திருந்த மாதிரி கத்தியது.

'அபாயம் நீங்கவில்லை... இனிதான் அது ஆரம்பம்' என்று அது சொல்வது போலதான் உபாசகருக்கு தோன்றியது.

பட்டர் வீட்டில் பாடப்புத்தகங்களுக்கு நடுவே படிப்பே பிடிபடாமல் பெரும் குழப்பத்தில் இருந்தாள் காயத்ரி. ஒரு பக்கம் மைதிலி, இன்னொரு பக்கம் அசோகன் என்று ஒருவருக்கு இருவர் அந்த வீட்டில் அவளை அசர வைத்துக் கொண்டிருந்தனர்.

மகன் எப்படி இருக்கிறான் என்று பார்ப்பதற்காக வந்த சுந்தராம்பாளும் கொல்லையில் அசோகனிடம் பேசிக் கொண்டிருந்த விதம், பிறகு புறப்பட்டு செல்லும்போது அவன் காலில் விழுந்து வணங்கியது என்று சகலத்திலும் அவள் அதிர்ச்சிக் குள்ளாகியிருந்தாள்.

சுந்தராம்பாளை ஊரே கையெடுத்துக் கும்பிட்டபடி உள்ளது. அப்படிப்பட்டவள் இங்கே ஒரு பைத்தியக்காரனை

விழுந்து வணங்குகிறாள் என்றால் அதை எந்த தினுசில் எடுத்துக் கொள்வது என்பது மிக குழப்பமாகவே இருந்தது அவளுக்கு.

மைதிலியோ 'ஒரு படி' மேலேயே போய்விட்டாள்.

முன்பெல்லாம் அவள் கண்களில் ஒருவித சோகம் தெரியும். தன் எதிர்காலம் குறித்த கவலை அவளுக்கு இருப்பதைப் பார்த்த மாத்திரத்தில் உணர முடியும். ஆனால், அவள் முகத்திலும் இப்பொழுது தேஜஸ். சதா ஒரு சிறிய மர்மப் புன்னகை அவள் முகத்தில் இழையோடியபடியே உள்ளது.

மொத்தத்தில் எல்லாமே அவள் வரையில் புதிராகத்தான் இருந்தது. நடுவில் சிங்கப்பூர் போவதாக சொல்லிக் கொண்டிருந்த சங்கரனிடமும் அதற்கான பெரிய முயற்சிகள் எதுவும் இல்லை.

இப்படி இருந்தால் தனது காதலும் கணேசனைக் கைப்பிடிக்க விரும்பும் தனது விருப்பமும் ஒரு கனவாகப் போய் விடுமோ என்று கூடத் தோன்றியது.

இத்தனை குழப்பங்கள் மனதை தாலாட்டும் போது எந்தப் படிப்பு மூளையில் ஏறும்? இந்த முறை பரீட்சை எழுதுவதற்கு - எழுதாமல் விட்டு விடுவது ஃபெயில் ஆவதில் இருந்தாவது தன்னைக் காப்பாற்றும் என்றெல்லாம் காயத்ரி எண்ண ஆரம்பித்துவிட்டாள்.

ஆனாலும் உபாசகர் ஏதாவது செய்து தங்களுக்கு உதவுவார் என்கிற ஒரு நம்பிக்கை மட்டும் ஒரு மூலையில் இருந்தது.

குழப்பம், கவலை, கொஞ்சம் போல நம்பிக்கை என்று காயத்ரி அமர்ந்து கொண்டிருக்க, சங்கரன் வெளியே போய் விட்டு உள்ளே நுழைந்து கொண்டிருந்தான். அவன் நுழைவதைக் கூட உணராதவள் போல ஒரு சிலையாட்டம் அமர்ந்திருந்தாள் காயத்ரி.

சங்கரன் செல்லமாக அவள் தலையில் தட்டினான்.

"என்ன சின்னது... படிக்கிறியா இல்லை ஜெபம் பண்ணிண்டு இருக்கியா?"

- அவளும் நிமிர்ந்தாள்.

"அது ஒண்ணுதான் இப்ப எனக்கு குறைச்சல்" என்று முனங்கினாள்.

"நான் ஒண்ணு கேட்டா நீ ஒண்ணு சொல். பரீட்சை நெருங்கறதோல்லியோ. கான்சன்ட்ரேட் பண்ணி படிக்காம புத்தகத்தைத் திறந்து வெச்சுண்டு கல்லாட்டம் உக்காந்திண்டிருந்தா என்னடி அர்த்தம்?"

"ஆமா... என் கிட்டயே உன் வீரத்தைக் காட்டு..."

"இப்ப நான் வேற யார்கிட்ட காட்டணும்கறே?"

"எனக்கும் பெரியவ ஒருத்தி இருக்கா. அவ எப்படி இருக்கா... என்ன பண்ணிண்டிருக்கான்னு கொஞ்சமாவது கவனிக்கிறியா?"

"யாரு... மைதிலிய சொல்றியா நீ?"

"பின்ன என்ன... உன் காதலி பானுவைப் பத்தி பேசறேன்னு நினைச்சுட்டியா?" காயத்ரி, பானுவைப் பற்றி எதிர்பாராத விதமாக இழுக்கவும் சங்கரன் மிரண்டு போனாள்.

"ஏய் சின்னது... என்ன உளறுறே நீ... பானு என் காதலியா?" - அவசரமாக மறுப்பது போலக் கேட்டான்.

"என்ன... இல்லேங்கறியா? அநாவசியமா பொய் சொல்லாதே. நான் ஒண்ணும் அப்பா இல்லை. ஜாதி, மதம், குலம், கோத்திரம்னுல்லாம் பேசி உன்னை எதிர்க்க மாட்டேன் என் வரையில காதல்ங்கறதே ஒரு மதம்தான். அந்த மதத்துக்குள்ற யார் நுழைஞ்சுட்டாலும் அவா எல்லாரும் ஒரே ஜாதிதான். ஒரே ஜாதியைக் கொண்ட பவர்ஃபுல் மதம் காதல் மட்டும் தான்..." - காயத்ரி கொஞ்சம் தத்துவமும் பேசினாள்.

சங்கரனுக்கு ஒரே திகைப்பாகிவிட்டது. காயத்ரி பேச்சை ஒப்புக் கொள்வதா இல்லை அவளைக் கண்டிப்பதா என்பதிலும் ஒரு மெல்லிய குழப்பம்.

"சின்னது... எப்ப இருந்து நீ இப்படி பாட்டி மாதிரியெல்லாம் பேசக் கத்துண்டே?"

"எந்த பாட்டிண்ணா என்னை மாதிரி 'காதல்ங்கறது ஒரு மதம், அதுக்குள்ற ஜாதிகளே கிடையாது'ன்னு பேசியிருக்கா..."

"அப்ப உனக்குள்ற நீ ஒரு பெரிய சிந்தனையாளர்னு நினைப்போ?"

"ஏன்... பதினெட்டு வயசுல ஒரு சிந்தனையாளர் இருக்கக் கூடாதோ?"

"பதிலுக்கு பதில் நன்னா கேள்வி கேள். உன்னைப் பத்தியும்

நான் நிறைய கேள்விப்படறேன். வசமா ஒரு நாள் என்கிட்ட மாட்டுவே. அப்ப வெச்சுக்கறேன்."

"என்ன கேள்விப்பட்டே என்னைப் பத்தி நீ?

கர்ணம் பிள்ளை கணேசனோட ஊரைச் சுத்திண்டு இருக்கேன்னு யாராவது உன்கிட்ட சொன்னாளாக்கும்?"

காயத்ரி படுஷார்ப்பாக மடக்கினாள். அப்படியே குத்தீட்டி போல பதிலுக்கு காயத்ரியை பார்த்தான் சங்கரன். அவளே தொடர்ந்தாள்.

"இதோ பார் அண்ணா... நீ அப்படி ஏதாவது கேள்விப் பட்டிருந்தா அதுல ஒண்ணும் பொய் இல்லை. நான் கணேசனைக் காதலிக்கிறேன். அவரும் என்னைய விரும்பறார்..."

"அடிப்பாவி... அவனுக்கு மாமா பொண்ணோ அத்தை பொண்ணோ ஒருத்தி இருக்கான்னு கேள்விப்பட்டேனே. அந்தப் பொண்ணு கூட அவன் ஆத்துக்கு வந்திருந்ததே..."

"அவளை எல்லாம் விரட்டி அடிச்சாச்சு. எங்களுக்கு உபாசகரும் சப்போர்ட். ஆனா உன் விஷயத்தை நினைச்சாதான் எனக்கு ஒரே குழப்பமா இருக்கு..."

"காயத்ரி... நீயா இவ்வளவெல்லாம் பேசறே?"

"இன்னும் நான் பேசி முடிக்கலை. பொறுமையா முழுசா கேட்டுட்டு ஒரு தெளிவான பதிலைச் சொல்."

- காயத்ரி கையை ஆட்டியபடி அவனை அடக்கிய விதம் - அவனும் கட்டுப்பட்ட விதம் - எல்லாமே பார்க்க மிக ரசமாக இருந்தது.

சமையல் கட்டு ஜன்னல் கம்பிகளின் வழியாக மைதிலியும் ஒரு குறுநகையுடன் இருவர் பேசுவதையும் கேட்டுக் கொண் டிருந்தாள்.

"இதோ பாருண்ணா... நம்மை சுத்தி நடக்கற விஷயம் எதுவுமே நம்பும்படியா இல்லை. என்னாலயும் எதையும் புரிஞ்சுக்க முடியலை. நம்ம பிரசிடெண்ட் கல்யாணசுந்தரம் ஒரு புதையல் எடுத்தார் இல்லையா?"

"அவர் எங்க எடுத்தார்... ஊர்ல எவனோல்ல எடுத்தான்."

"அதைத்தான் சொல்றேன். அந்த எவனோவை காட்டிக் கொடுத்ததே நானும் கணேசனும்தான் இதுல கணேசன் ஒதுங்கிண்டுட்டார். ஏன்னா காட்டிக் கொடுக்கறவாளுக்கு

கிடைக்கிற தங்கத்துல கொஞ்சம் கொடுப்பாளாம். இல்லேன்னா ஏதாவது பணம் பரிசா தருவாளாமே...?"

"எனக்குத் தெரியாது... அதுக்கு இப்ப என்ன?"

"அவர் நல்ல எண்ணத்துக்கு சொன்னேன். அப்படி நாங்க காட்டிக் கொடுத்த அந்தப் புதையல் கரியாப் போன கதை உனக்கும் தெரியும்தானே?"

"உம்..."

"ஒரே மாயமா இல்லை...?"

"மாயத்துக்குதான் இப்ப நம்ம **ஊர்ல பஞ்சமே** இல்லையே... எப்ப உபாசகர்னு ஒருத்தர் **வந்தாரோ அப்ப** இருந்தே எல்லாமே மாயமாதானே இருக்கு..."

"உபாசகரை குறை சொல்லாதண்ணா... அந்த மாயம் இப்ப நம்ம ஆத்துலயும் இருக்கு..."

காயத்ரி சொன்னது சங்கரனை அப்படியே நெம்பித் தூக்கியது.

"நம்ம ஆத்துல மாயமா?"

"என்ன நம்ப முடியலையா?"

"உளறாம புரியும்படி சொல்..."

"அசோகன் யார்...?"

"அந்த பைத்தியக்காரனைப் பத்தி இப்ப என்ன பேச்சு?"

"அவன் பைத்தியம்னா அவனை ஸ்வாமியா நினைச்சு கால்ல விழுந்து சேவிச்ச சுந்தராம்பாளை என்னன்னு சொல்றது...?"

"என்னது... சுந்தராம்பாம்மா அவனை சேவிச்சாளா?"

"சந்தேகமா இருந்தா ஒரு கேமரா வாங்கிக் கொடு. அடுத்த தடவை அவனை சேவிக்கும்போது ஒரு போட்டோவே எடுத்துக் காட்டறேன்."

"இதோ பார்... வாய் இருக்கேன்னு எதையாவது உளறாதே. சுந்தராம்பாம்மா இந்த ஊருக்கே தெய்வம் மாதிரி..."

'உனக்கு வருங்கால மாமியார்ங்கறதும் தெரிஞ்சுதான் சொல்றேன்."

"காயத்ரி..."

"கோபப்படாம பொறுமையா நான் சொல்றத கேள்.

அசோகன் நிச்சயம் பைத்தியம் இல்ல. அவனை பாபாவா சுந்தராம்பாம்மா நினைக்கறா. இது ஒரு பக்கம். இன்னொரு பக்கம் அக்கா மைதிலி இப்பல்லாம் ரொம்ப இறுக்கமா இருக்கா. அவ முகத்தை கவனிச்சியா?"

"டெய்லி கவனிச்சிண்டுதானே இருக்கேன்?"

"என்னத்த கவனிச்சே நீ... அவளும் அசோகனும் ஒருத்தரை ஒருத்தர் பார்த்துக்கும்போது மௌனமா சிரிச்சிக்கறா. என்னவோ நடக்கறது. எல்லாத்துக்கும் ஏதோ தொடர்பும் இருக்கு..."

"சின்னது... முடிவா நீ என்ன தாண்டி சொல்றே?"

"ஒரு பக்கம் ஒரே குழப்பமா இருக்கு. இன்னொரு பக்கம் நம்ம ஊர்ல புதுசா ஏதோ நடக்கப்போறது போலவும் தோன்றது..."

"புதுசா நடக்க என்ன இருக்கு... ஒரு வேளை ருத்ர வீணையைத் தேடி வந்திருக்கற உபாசகர் அதைக் கண்டு பிடிச்சு எடுக்கலாம். அதுக்கு மேல என்ன நடக்க முடியும்?"

"மேலோட்டமா சிந்திச்சா இவ்வளவுதான் சிந்திக்க முடியும். ஆழமா யோசிச்சு பார்."

"ஆழமாவா... எப்படி?"

"உபாசகர் இந்த ஊருக்கு வந்ததுல இருந்துதான் பொதுவா எல்லா மாற்றங்களுமே... அதை நீ ஒத்துக்கறியா?"

"சொல்லி முடி நீ முதல்ல..."

"அவர் வந்திருக்கறதோ ருத்ர வீணைக்காக..."

"உம்."

"வீணையோட இந்த ஊருக்கு வந்தவர்தானே பாபா..."

"ஆமா..."

"அப்புறமா அந்த வீணையை தன் பாதுகாப்புல வெச்சிண்டிருக்கறவாதானே சுந்தராம்பா குடும்பம்?"

"ஆமா..."

"இப்ப அந்த பாபாவும் திரும்ப வந்துட்டார். சுந்தராம்பாளும் அவரோட பேசிட்டா."

"அப்படின்னா...?"

"இரு... சுந்தராம்பா - பாபா ஒரு சைட். வீணையை எடுக்க

வந்த உபாசகர் அவருக்கு ஆதரவு தந்துண்டுருக்கற பிரசிடெண்ட் கல்யாணசுந்தரம் இன்னொரு சைட்."

காயத்ரி மட்டைக்கு மூணு கீற்றாக விஷயங்களை விளங்கிக் கொண்ட மாதிரியும், கொள்ளாத மாதிரியும் சொல்லிக் கொண்டே போக, சங்கரனும் அகலமாக கண் களைத் திறந்து ஆர்வமாகக் கேட்டுக் கொண்டான்.

சமையல்கட்டில் இருந்து அவ்வளவையும் கேட்டபடி இருக்கும் மைதிலி முகத்திலோ மெல்லிய மாற்றம்.

"காயத்ரி... உபாசகர், கல்யாணசுந்தரம் ஒரு சைடுன்னு நீ சொன்ன உடனேதான் எனக்கு புதுசா ஒண்ணு தோன்றது."

"சொல்லு... சொல்லு..."

"கல்யாணசுந்தரம் எடுத்த புதையல் கரியானதுக்கும் சுந்தராம்பா பாபாவுக்கும் ஏதோ தொடர்பு இருக்குன்னு தோன்றது..."

"அப்படி வா வழிக்கு- நானும் அதையேதான் நினைச்சேன். 'ருத்ர வீணை எங்களுது- அதைத் தேடி வந்திருக்கற ஒருத்தருக்கு உதவி செய்யற வேலையை விட்டுடு'ன்னு எச்சரிக்கவும், கல்யாணசுந்தரத்தைப் பிடிச்சு உள்ள போடவும் தான் இந்த மாய வேலையை சுந்தராம்பாம்மா பண்ணியிருக்கா..."

"அப்படியெல்லாம் ஒருத்தரை கஷ்டப்படுத்தறவளா அந்த அம்மா?"

"அதெல்லாம் அந்தம்மாவை கஷ்டப்படுத்தாதவரை... ஆனா ஒரு உபாசகர் தான் வந்து உக்காந்துண்டு 'எங்க வீணை? எங்க வீணை?'ன்னு தேடிண்டு இருக்காரே. இனியும் சும்மா இருந்தா அந்தம்மாவோட பவர் என்னாகறது?"

காயத்ரி நன்றாகவே சங்கரனை உசுப்பேத்த, அவனும் மௌனமாக யோசித்தான்.

"நன்னா யோசிண்ணா இந்த விஷயத்துல பானு எப்படின்னும் யோசி. ஆனா ஒண்ணு. உபாசகர் அந்த வீணையை அடையாம விடமாட்டார். அதுக்கப்புறமா சுந்தராம்பாம்மா ஒரு சாதாரண மனுஷிதான். பானுவுக்கும் அது ஒரு விடுதலை தானே?"

"நிச்சயமா... பானுவும் தான் ஒரு சாதாரண குடும்பப் பொண்ணா இருக்கத்தான் ஆசைப்படறா. எங்க அவ அம்மா

போல தானும் அந்த தாசி பங்களாவுக்கு தினம் ஒரு விளக்கை தூக்கிண்டு போக வேண்டி வந்துடுமோன்னு அவ மனசு நடுங்கறது. நீ சொல்ற மாதிரி உபாசகர் ருத்ர வீணையை அடைஞ்சாதான் எல்லாம் சரியாகும். ஆனா, அவர் அடையக் கூடாதுன்னு தடுக்க பாபா திரும்ப அசோகன் உருவத்துல வந்துட்டதா நீ சொல்றே... அப்படித்தானே?"

"அப்படியேதான்... அப்படியேதான்..."

"நல்லது. இது விஷயமா நான் சாமிநாதன் கிட்ட பேசறேன். பானுவும் எங்களுக்குதான் சப்போர்ட்டா இருப்பா. நாங்க மூணு பேரும் சேர்ந்து உபாசகருக்கு சப்போர்ட் பண்ணி அந்த ருத்ர வீணையை அவருக்கே கிடைக்கும்படி செய்தாதான் என் காதல், உன் காதல்னு எல்லார் காதலும் நிறைவேறும்.

"அண்ணா கை கொடுண்ணா..." - காயத்ரி எழுந்து நின்று கொண்டு உற்சாகமாக சங்கரன் எதிரில் கை நீட்டினாள். அவளுக்கு, அவன் தன் வழிக்கு வந்துவிட்ட சந்தோஷம். அப்படியே அவனிடம் பேசியதில் நிறைய குழப்பங்களுக்கு பளிச் பளிச் என்று விடை கிடைத்து விட்டது போலவும் தோன்றியது. சங்கரனும் பதிலுக்கு கை குலுக்கினான்.

"சின்னது... நீ பலே கில்லாடி. எனக்கே தெரியாம எவ்வளவோ விஷயங்களை கவனிச்சு வெச்சிருக்கே. ஒரு பக்கம் உன்னைப் பார்க்க சந்தோஷமா இருக்கு. இன்னொரு பக்கம் இவ்வளவு முந்திரிக் கொட்டையா நீ இருக்கியேன்னு பயமாவும் இருக்கு" - சங்கரன் அவளைப் பாராட்டுவது போல குட்டவும் செய்தான். பின் ஒரு துண்டை எடுத்து தோளில் போட்டுக் கொண்டு காவிரி நோக்கி புறப்பட்டான்.

அது வரை மௌனமாக அவ்வளவையும் கவனித்தபடி இருந்த மைதிலி, மெல்ல சமையல்கட்டை விட்டு வெளியில் வந்தாள் ஒரு கையில் அரிசியோடு கூடிய முறம். கல் பொறுக்குவது போல காயத்ரியைக் கடந்து சென்றவள் சற்று காயத்ரியை உற்றுப் பார்த்தாள். காயத்ரியோ அலட்சியமாக படிப்பது போல பாவனை செய்தாள் மைதிலிக்குள் உடனடியாக அவளைக் கட்டிப் போட வேண்டும் என்பது போல ஒரு எண்ணம்.

அவளது தலைக்கு மேலே அண்ணாந்து பார்த்தாள். ஒரு

மாடம் இருந்தது. அதில் கஞ்சிப்பொடி, காபிப்பொடி என்று உணவுப் பொருட்கள் அவைகளில் ஒன்றை எடுத்துத் தரச் சொல்வதற்காக கை தட்டி அவள் கவனத்தை திருப்பினாள். காயத்ரியின் கவனமும் திரும்பியது.

"என்னக்கா?"

- மைதிலி பதிலுக்கு மாடத்தைக் காண்பித்து ஜாடி ஒன்றை எடுக்கச் சொல்லி சைகையும் காட்ட, அலுத்துக் கொண்டே "படிக்க விடமாட்டியே நீ?" என்றபடி அமர்ந்திருந்த நிலையில் இருந்து எழுந்தவள் கைகளை உயர்த்தி ஜாடியை எடுக்க முயன்ற போது ஒரு பாத்திரம் கை பட்டு சரிந்து விழுந்து உருண்டும் ஓடியது. அப்படி அது உருண்டதில் மாவு போல ஏதோ ஒன்று அவள் முகத்தில் கொட்டியது. கண்களில் பட்டு கண்ணும் எரியத் தொடங்கியது. காயத்ரி வாய்விட்டு கதறத் தொடங்கினாள்.

"அய்யோ அக்கா... கண்ணு எரியறது. சீக்கிரமா போய் கொஞ்சம் ஜலம் எடுத்திண்டு வாயேன்..." கையை உதறிக் கொண்டு அவள் கதறுவதை ஒரு அர்த்த புஷ்டியுள்ள சிரிப்புடன் ரசித்துக் கொண்டே மெல்ல நடந்து சென்றாள் மைதிலி.

'பெண்ணே... எவ்வளவோ நல்ல காரியங்கள் நடக்க வேண்டியுள்ளது. ஆர்வக்கோளாறுள்ள உன்னால் அவைகளுக்கு இடையூறு ஏற்படக்கூடாது. சிறிது காலம் நீ குருடியாக இரு. ஒன்றும் தப்பில்லை.' என்று அவளுக்குள் ஒரு சமாதானம்.

பிறகு தண்ணீருடன் திரும்பி வந்து அதனால் காயத்ரி முகத்தைக் கழுவிக் கொண்டும் பலனில்லை.

"அய்யோ, அக்கா! எனக்கு சுத்தமா கண்ணு தெரியலக்கா. என்ன ஆச்சுன்னே தெரியலியே..."

"பார்வையை இழந்துவிட்ட அவளது கண்கள் நீரை மட்டும் இழக்கவில்லை. கண்ணீர் தாரைதாரையாகப் பெருகி வழிய ஆரம்பித்தது.

மைதிலி முகத்தில் மட்டும் ஒரு ஆழ்ந்த புன்சிரிப்பு. அத்துடன் கண் தெரியாத காயத்ரி முன், முதல் முறையாக வாய் திறந்தாள்.

"காயத்ரி..."

"யாரு... யாரு இப்ப காயத்ரின்னு கூப்பிட்டது."

"நான் காலதேவதை.. என்னை உனக்குத் தெரியாது. ஆனா உன்னை எனக்குத் தெரியும்..."

"ஏய்... யார் நீ..? அக்கா... யார் இவ? இவ என்னென்னவோ சொல்றாளே..."

"நீ பார்க்கக்கூடாததை எல்லாம் பார்த்தே பாரு... அதுக்குத்தான் இந்த தண்டனை... இனியாவது மௌனமா அமைதியா இரு. எல்லா நல்லதும் தானா நடக்கும். நான் வரேன்..." மைதிலி பேசியதை காயத்ரியால் உணர முடியவில்லை.

யாரோ பேசுவதாக நினைத்து, "அக்கா... அக்கா... அது யாருக்கா?" என்று அவள் கதறியும் பலனில்லை.

மைதிலி சமையல்கட்டை நோக்கிப் போய்க் கொண்டிருந்தாள்.



# 14

## அன்று

**ச**தாசிவ சாஸ்திரிகள் சந்தி செய்து கொண்டிருந்தார்! விடியற்காலை சூரியன் கிழக்கு வானில் எழும்பியிருந்தான். எங்கு பார் புள்ளினக் கூட்டங்களின் அலகு பிளந்த சப்தம். காலைப் பொழுது என்பதே எப்பொழுதும் மிகமிக ரம்யமானது. காற்றில் காலைப் பொழுதில்தான் சில அபூர்வமான மாற்றங்கள் நடக்கின்றன.

இரவுக்காலம் என்பது மிக குளிர்ச்சியானது. உலகம் முழுக்க குளிர்ந்து கிடக்கிறது. அந்த குளிர்ச்சியில் காற்றும் நீரும் பூமியும் ஆகாயமும்கூட குளிர்ந்து உஷ்ணம் என்பதே இல்லாமல் போயிருக்கும்போது உதயம் நிகழ்கிறது.

உதயம் என்பது உஷ்ணத்தின் ஊடுருவல்.

அதாவது வெளிச்சத்தோடு கூடிய உஷ்ணம் ஊடுருவிப் பரவ ஆரம்பிக்கும் வேளை. அப்படி உஷ்ணம் ஊடுருவும் போது காற்றில் அனேக ரசமாற்றங்கள்.

இந்த மாற்றங்கள் அதிகபட்சம் ஒரு பத்து பதினைந்து நிமிடங்களுக்குத்தான்... அதன் பின் உஷ்ணம் கூடிக் கொண்டே சென்று அது ஒரு உச்சபட்ச நிலையை அடைவது என்பது நண்பகல் பன்னிரண்டு மணியின் பொழுதுதான்... பின் அந்த உஷ்ணமும் குறைய ஆரம்பிக்கும். அப்படியே அது குறைந்து முற்றிலும் நீங்குவது அந்தி சந்தி வேளையில்.

அதாவது காலை வேளை என்பதில் குளிர்ச்சியில் உஷ்ணம் ஊடுருவினால், மாலை வேளையில் உஷ்ணத்தில் குளிர்ச்சி ஊடுருவும் வேளையாகும். இந்த நேரத்திலும் காற்றில் சில ரசமான மாற்றங்கள் நிகழ்கின்றன.

*இந்த மூன்று காலகட்டமும் யோகிகளுக்கும், பிராமணர் களுக்கும் மிக முக்கியமான கட்டங்கள். அவர்கள் இவ் வேளையில்தான் சில யோகப் பயிற்சிகளைச் செய்ய வேண்டும். அதில் பிராணாயாமம் என்னும் காற்றுப் பயிற்சியும் ஒன்று.*

*வெளியில் பரவியிருக்கும் காற்றுக்குள்தான் எல்லாமே இருக்கிறது. இந்த வெளியில் இருந்தே செடி கொடி முதல் மரம் மட்டை வரை தங்களுக்குத் தேவையான கிளை, இலை முதல் பூ, காய், கனி வரை கேட்டுப் பெறுகின்றன... இயற்கையான தாவரங்களுக்குத் தெரிந்த இந்த உண்மை மனித குலத்துக்கு அவ்வளவாகத் தெரியாததுதான் துர்லபம்.*

*ஆனபோதிலும் ஒரு சிலராவது பொழுதுகளில் உள்ள இந்த சக்தியை அறிந்து அதைக் கேட்டுப் பெற்று தங்களுக் குள்ளும் அதிசய சக்திகளைக் கொண்டிருந்தனர்.*

*சதாசிவ சாஸ்திரிகள் வரையில் அவரது அதிசய சக்தி என்பது அவருக்குண்டான ஞாபக சக்திதான். ஒரே சமயத்தில் பத்து விஷயங்களை கவனித்து அதை அப்படியே ஞாபகத்தில் வைத்துக் கொள்ள அவரால் முடிந்தது. அதனாலேயே பாபா அவரை ருத்ர வீணை பற்றியெல்லாம் ஏட்டில் எழுதி வைக்கச் சொன்னாரோ என்னவோ?*

*அன்றும் சந்தியாவந்தன கர்மா முடித்து அதில் 108 காயத்ரி மந்திரத்தையும் ஜெபித்து, இருபத்து ஏழுக்கும் பக்கமான பிராணாயாம பயிற்சியும் செய்து முடித்து இறுதியாக சந்தியாவந்தனம் செய்யப் பயன்படுத்திய நீரை அந்த பரமேஸ் வரனுக்கு அர்ப்பணம் செய்யும் விதமாக*

**'காயேன வாசா...**
**மனசேந்த்ரீர்வா...**
**புத்யாத்மனாபா...**
**ப்ரகர்தே ஸ்வபாவாது...**
**கரோமியச்சது...**
**சகலம் பரஸ்மை**
**ஸ்ரீமந் நாராயணாயேது சமர்ப்பயாமி'**

*என்றபடியே அதுவரை தான் பயன்படுத்திய ஜலத்தை அப்படியே அர்க்யமாக கீழே விட்டார். அப்போது கச்சிதமாக எதிரே வந்து நின்றான், அந்த வாஸ்து சாஸ்திர நிபுணன் விநாயகராமன்.*

"நமஸ்காரம்!"

"பரம நமஸ்காரம்... வாருங்கள் வாஸ்து நிபுணரே!"

"என்ன... சந்தியா வந்தன கர்மாவில் உள்ளீரா?"

"முடிந்தது. இப்பொழுதுதான் அர்க்யம் விட்டு முடித்தேன்."

"இன்று பல பிராமணர்கள் அவ்வாறு நடந்து கொள்வதில்லை..."

"இப்பொழுது எதற்கு அந்த பேச்சு... யார் பிழையோடு திகழ்கிறார்கள் என்று பார்ப்பதைவிட யார் நிறைவோடு திகழ்கிறார்கள் என்று பார்ப்பது ஒரு நல்ல பண்பாகும்..."

"நீங்கள் சொல்வதும் சரிதான்... நான்தான் பேசத் தெரியாமல் பேசிவிட்டேன். அது போகட்டும்... நீங்கள் இன்னுமா இந்த இல்லம் விட்டு நீங்கவில்லை..."

விநாயகராமன் அங்கு தொட்டு இங்கு தொட்டு திரும்பவும் சாஸ்திரிகளின் மடியிலேயே கை வைப்பது போல பேசவும், சாஸ்திரிகள் முகம் மாறியது.

"என்னை நீங்கள் தவறாகப் புரிந்துகொள்ளக்கூடாது... நான் மிகுந்த நல்ல எண்ணத்தில் கூறுகிறேன். நீங்கள் விரைவில் வீடு மாறுங்கள்..."

"இது எனக்கான அறிவுரை போலவே தெரியவில்லை."

"உண்மைதான்... இது அறிவுரை அல்ல... உங்களுக்கான எச்சரிக்கை என்று கூட சொல்வேன்..."

"எச்சரிக்கப்படுகிற அளவுக்கா நான் ஆகிவிட்டேன்."

"நீங்கள் செய்த புண்ணியம்தான் நான் இப்போது உங்களுடன் பேசிக் கொண்டிருப்பது... தயவுசெய்து என் பேச்சைக் கேளுங்கள்..."

"போதும் நிபுணரே... என்னைக் காப்பாற்ற இந்த ஊர் தோடீஸ்வரர் முதல் ஞான குருவான பாபாஜி வரை பலர் இருக்கின்றனர்..."

"தவறு சாஸ்திரிகளே உங்கள் நம்பிக்கையை நான் பாராட்டுகிறேன். நாயன்மார்களில் ஒருவரைக் கூட கடலில் தூக்கிப் போட்டனர். ஆனாலும் அவர் மிதந்து தப்பிக்க இறைவன் திருவருள் துணை நின்றது என்பதெல்லாம் உண்மை தான். ஆனால், அவராகப் போய் கடலில் விழுந்திருந்தால்

இறைவன் அவருக்கு அருள் செய்திருக்கமாட்டான். இதை நான் ஏன் கூறுகிறேன் என்றால் நெருப்பென்று தெரிந்தும் அதில் கை வைத்தால் அது சுடத்தான் செய்யும். அது அதன் இயல்பு. இந்த மனையும் உங்கள் வரையில் அப்படித்தான்.

முன்பு நான் இந்த மனையைப் பார்த்த போது மனையை மட்டுமே பார்த்தவனாக இருந்தேன். இப்பொழுதோ தோடிபுரம் முழுவதையும் பார்வையிட்டுவிட்டேன்... இங்கே எட்டு திக்கும் எந்தவிதமான சக்தி அம்சங்களோடு உள்ளது என்பது எனக்கு இப்போது நன்கு தெரியும்.

ஒரு மனைக்கான வாஸ்து பலம் அது இருக்கும் ஊரின் எட்டுதிக்கிலிருந்தும்தான் வருகிறது... அந்த வகையில் வாஸ்து பலன் கூறுபவர்கள் மனையை மட்டும் பார்க்கக் கூடாது... அந்த மனை இருக்கும் ஊரின் எட்டு திக்கையும் பார்த்து முதலில் அதன் பலன் மற்றும் பலவீனம் அறிந்து கொண்டு பிறகே மனைக்கான வாஸ்து பலத்தை கணிக்க வேண்டும். அம்மட்டில் உங்கள் இல்லத்தின் நைருதி பாகத்தில் அதற்கான நேர் கோணத்தில் உயரமான மரங்கள் இருக்க வேண்டும். பாரமான கற்கள், மண்மேடுகள் இருக்கலாம்... அதாவது வட கிழக்கில் இருந்து வரும் ஈசான்ய அலையானது தென்மேற்கின் வழியாக வெளியேறிவிடக்கூடாது. ஈசான்ய பலம் என்பதே ஒரு இல்லத்தின் எல்லா விதமான நல்லது கெட்டதற்கும் காரண மாகும். துரதிர்ஷ்டவசமாக உங்கள் இல்லத்தின் நைருதி கோணத்தில் புறத்தில் நிறைய நீர் நிலைகள் உள்ளன. இதுவே வடக்கில் இருந்திருந்தால் நீங்கள் மிகப் பெரிய செல்வந்தராக - பொன் வாணிகம் செய்பவராகவே இருந்திருப்பீர்கள். நீங்கள் அவ்வாறு இல்லாது போகக் காரணம் இந்த சூழல்தான்... இப்படி நைருதியில் நீர் நிலை அமைப்பு புறத்தில் மட்டுமல்ல... அகத்திலும் உங்கள் இல்லத்தில் காணப்படுகிறது. உங்கள் வீட்டு கழிவுநீரை நீங்கள் அங்கே தேக்கியுள்ளீர்கள். அதில் நீர்க் கொடிகள் வளர்ந்துள்ளன. மரம் வளர்ந்து நிற்க வேண்டிய இடத்தில் கொடி படர்ந்து கிடப்பது என்பது துளியும் நல்லதல்ல...”

விநாயகராமன் தனது சாஸ்திர ஞானத்தை விளக்கிக் கொண்டே சென்றான். ஒரு கட்டத்துக்கு மேல் சாஸ்திரிகளால் அதைக் கேட்க முடியவில்லை. “போதும் நிபுணரே... போதும்... இனி நீங்கள் ஒரு வார்த்தை பேசக் கூடாது. எது நடந்தாலும் சரி.

அது இனி என் பாடு. தயவுசெய்து நீங்கள் போய் வாருங்கள்," சாஸ்திரிகள் சீறி விழுந்தார்.

விநாயகராமன் முகமும் பதிலுக்கு கலங்கிவிட்டது. சிறிது நேரம் பேச்சே வரவில்லை. இருந்தும் சுதாரித்துக் கொண்டு "இறுதியாக ஒரு வார்த்தை... இந்த இல்லத்தில் ஒரு மயான சமாதி ஏற்பட்டே தீரும். சமாதியாகப் போவதுதான் யார் என்பது எனக்குத் தெரியவில்லை. இனி தாங்கள் கூப்பிட்டுப் பேசினாலும் நான் தங்களுக்கு பலன் கூற மாட்டேன்..." என்றபடி விநாயகராமனும் வேகமாக எழுந்து வெளியேறத் தொடங்கினான். அவன் வெளியேறும் போது அந்த வீட்டின் காவல் நாகம் எங்கோ போய்விட்டு உள் நுழைந்து கொண்டிருந்தது. அதைப் பார்க்கவும் கருக்கென்றது. நின்று சில வினாடிகள் அதைப் பார்த்துவிட்டு அச்சமுடன்தான் கிளம்பினான். வாசலைக் கடந்து வீதிக்கு வந்தபோது எதிரில் ராம்லாலும் வந்தபடி இருந்தான்.

கோரமான அவன் முகமும், அவன் பார்க்கும் விதமும் விநாயகராமனை என்னவோ செய்தது. விநாயகராமனுக்கு சுமாராக சாமுத்ரிகா லட்சணமும் தெரியும்.

அது அவனை ஒரு கொலைகாரனாகக் காட்டியது. ஒருவருக்கு புருவத்தில் கோரை முடிகளே வளர்ந்திருக்கக் கூடாது. முள்போல முடி வளர்ந்து அது கிட்டத்தட்ட அரை அங்குல நீளமெல்லாம் இருந்தால் அவர்களுக்குள் மிருக புத்தி நிறைய இருக்கும்.

மிருகத்துக்கு எந்த விதமான தர்ம நியாயங்களும் கிடையாது. புலி மானைப் பார்த்து பரிதாபப்பட்டால் அதனால் உயிர் வாழ முடியாது. அடித்துச் சாப்பிட்டால் அதன் வரையில் அதற்கு பாதிப்பும் கிடையாது. பாவமும் கிடையாது... ஆனால், அதுவே மனிதன் வரையில் பெரிய பாவத்தில் கொண்டு சென்றுவிட்டுவிடுகிறது.

இந்த ராம்லாலும் ஒரு. பெரிய பாவிதான் என்று அவன் முகத்தைப் பார்த்த மாத்திரத்தில் எண்ணினான் விநாயகராமன். அவனது புருவத்தில் ஒரு வித மாந்திரீக மைகளைப் பூசும் பழக்கமும் அவனுக்கு இருக்க வேண்டும் என்றும் தீர்மானித்துக் கொண்டேதான் நடந்தான்.

ராம்லாலும் விநாயகராமனைப் பார்த்துக்கொண்டே தான் நடந்தான். உள்ளே நுழையவும் சாஸ்திரிகள் குதூகலமாக ராம்லாலை வரவேற்றார்.

"வாருங்கள்... வாருங்கள்..."

"வந்து கொண்டேதானே இருக்கிறேன்..."

"பாபாஜியின் சிலை பூரணமாக முடிந்துவிட்டதா?"

"ஆஹா... அதைக் கூறத்தான் வந்தேன்... உதவிக்கு சிலரை அனுப்பினால் அந்த சிலையை ஒரு வண்டியில் போட்டுக் கொண்டு எடுத்து வந்துவிடலாம்..."

"ஆஹா... உதவிக்கு பணியாட்கள் எதற்கு? நானே பாபாஜி வரையில் ஒரு பணியாளன்தானே?"

"இல்லை சாஸ்திரிகளே... ஒருவருக்கு இரண்டு பேர் வேண்டும். நான் சொல்வதை தயவுசெய்து கேளுங்கள்..."

"சரி. இப்பொழுதே வைஜெயந்திக்கு தகவல் தந்து சிலரை அழைத்துக் கொண்டு வருகிறேன். நாமும் புறப்படலாம்."

- சாஸ்திரிகள் துடிப்புடன் பேசினார்.

ராம்லாலின் பார்வையோ உள்ளே அந்த ராக மந்திர ஏட்டுக் கட்டு எங்கே இருக்கிறது என்பதில்தான் சென்று நின்றிருந்தது.

சாஸ்திரிகள் உடைமாற்றி வருவதற்காக உள்ளே சென்றுவிட்டார். ராம்லாலும் மெல்ல நடந்து பூஜை அறை வாசலில் போய் நின்றான். தீபங்களின் சுடர் ஒளியில் சாஸ்திரிகள் வீட்டு பூஜை அறை ஜொலித்துக் கொண்டிருந்தது. ஒரு சிறிய மேடை. அதில் ஒரு சிறிய பாணலிக்கம். அந்த பாணலிங்கத்தின் முன்னால்தான் அந்த ஏட்டுக்கட்டு இருந்தது. பச்சைத் துணியால் சுற்றி வைக்கப்பட்டிருந்தது.

'எத்தனை அரிய செல்வம் இது... இப்படித் துணியைப் போட்டு வைத்திருக்கிறார்களே. இது மட்டும் கையில் கிடைத்து அந்த ருத்ர வீணையும் கிடைத்துவிட்டால் உலகையே ஆட்டுவிக்கலாமே...'

கண்களில் ஆசைக் கனலுடன் மனதிலும் எண்ணப் புனலுடன் பூஜை அறையை பார்த்தவன் அந்த சர்ப்பம் எங்கு சென்றிருக்கும் என்று ஒரு பார்வை பார்த்தான். அது தற்சமயம் அங்கு இல்லை என்பதாக அவன் நினைத்து முடிக்கு முன் அவன்

கழுத்தில் சொத்தென்று ஒரு மாலை போல் விழுந்தது அந்த சர்ப்பம்.

அவ்வளவுதான்! அவனுக்கு சப்த நாடியும் ஒடுங்கி விட்டது.

"சாஸ்திரிகளே... சாஸ்திரிகளே... என்றான் பலமாக. அதற்குள் சாஸ்திரிகளே வந்து விட்டார். அவரும் ராம்லாலின் கழுத்தில் சர்ப்பத்தை பார்த்து விக்கித்துத்தான் போனார். ஒரு வினாடி என்ன செய்வது... ஏது செய்வது என்றே தெரியாமல் துடித்தவர், சட்டென்று கைகளைக் கூப்பினார். "பாபாஜி மேல் ஆணை... சர்ப்பமே! அவரை எதுவும் செய்யாமல் நீங்கிவிடு." என்று மெய்யுருக கைகளைக் கூப்பினார். அந்த சர்ப்பமும் சத்தியத்துக்கு கட்டுப்பட்டது போல கழுத்தில் இருந்து விலகி கீழே விழுந்து பூஜை அறைக்குள் சென்று அந்த ராக மந்திர ஏட்டுக்கட்டு மேல் படம் எடுத்தபடி நிற்கத் தொடங்கியது.

ராம்லால் 'அப்பாடா' என்று பெருமூச்சு விட்டான்.

"என்ன அதிசயம்... ஒரு நாகம் ஒரு ஏட்டுக்கட்டுக்கு காவல் இருப்பது எண்ணிப் பார்க்க முடியாத ஒரு விஷயம் என்றால் அது பாபாஜியின் பெயருக்கு கட்டுப்பட்டு நடப்பது அதை விட அதிசயம்" என்றபடியே ராம்ரால், சாஸ்திரிகளுடன் நடக்க ஆரம்பித்தான். அவனிடம் இப்பொழுது பலத்த மாற்றம்.

ஏற்கெனவே கன்னியர் கரட்டு மலையில் வீணை நாதம் கேட்டதும், பாபா சிலை இடம் மாறி ஒரு உச்சிப் பாறை மேல் சென்று அமர்ந்து கொண்டதும் அவனை ஒரு உலுக்கு உலுக்கி விட்டிருந்தது. இப்பொழுது சர்ப்பம் அவனை நன்றாகவே உலுக்கி எடுத்துவிட்டது. அதன் காரணமாக பலத்த மௌனத்துடன் - தீவிர சிந்தனை புழுக்கமுடன்தான் நடந்தான் அவன்.

"ராம்லால்ஜி... என்ன எதுவும் பேசாமல் வருகிறீர்கள்...?"

"எதைப் பேசுவது...? எப்படிப் பேசுவது...? நான் மிகவும் குழப்பத்தில் இருக்கிறேன் சாஸ்திரிகளே..!"

"குழப்பத்திற்கு காரணம்?"

"இந்த பாபாஜி விஷயத்தை என்னால் எடையிடவே முடியவில்லை..."

"அப்படியா?"

"ஆமாம்... இமயமலைச்சாரலில் ஒரு குதிரை வியாபாரி மகனாய்ப் பிறந்து அந்த மலைச்சாரலில் ஆடு மாடுகளை மேய்த்த ஒரு சராசரி இஸ்லாமிய குடும்பத்தைச் சேர்ந்தவர்தான் இந்த பாபா... ஆனால், இங்கோ அவர் தெய்வமாகப் பார்க்கப் படுகிறார்... மக்கள் சில நேரங்களில் விசித்திரமாக நடந்து கொள்ளக்கூடியவர்கள். அதிலும் இந்துக்கள் ஒரு நடுகல்லைக் கூட சிவலிங்கமாகக் கருதி அதற்கு பூப்போட்டு வணங்கி விடுவார்கள். ஆகையால் மக்கள் வணங்குவதால் ஒரு மனிதனைப் பெரியவனாகவோ இல்லை அரியவனாகவோ கருத முடியாது. ஆனால், நடக்கும் சம்பவங்கள் - எனது அனுபவங்கள் பாபாவை ஒரு இறையருள் மிக்கவராகத்தான் காட்டுகின்றன. எங்கள் மதத்தில் நாங்கள் இறைவன் ஒருவனைத் தவிர யாரையுமே பெரிதாக எண்ணியதில்லை; எண்ணவும் கூடாது... எங்களுக்கு எங்கள் முன்னோர்கள் அப்படித்தான் சொல்லிக் கொடுத்துள்ளனர். ஆனால், இன்று எனக்கு நேரிட்ட அனுபவங் கள் என்னை வெகுவாக யோசிக்க வைக்கின்றன..."

- ராம்லால் தன்னை மறந்து பாபா பற்றி, அவரது பூர்வீகம் பற்றி, அப்படியே தனது மதத்தில் நிலவும் நம்பிக்கை என்று இந்து மதத்திற்கும் தனக்கும் சம்பந்தமே இல்லாதது போல பேசவும் சாஸ்திரிகளுக்கு குழப்பமாகிவிட்டது.

நடந்தபடியே அவனை ஒரு சந்தேகப் பார்வை பார்த்தார்.

"என்ன சாஸ்திரிகளே அப்படிப் பார்க்கிறீர்...?"

"இல்லை... பாபாவை மிக மிக தெரிந்தது போல பேசுகிறீர்களே... எப்படி என்று யோசித்துப் பார்க்கிறேன். அப்படியே என் மதம் உங்கள் மதம் என்று நீங்கள் ஏதோ இந்து மதத்திற்கு தொடர்பில்லாதவர் போல பேசுவது வியப்பாகவும் உள்ளது."

"அது... அது... பாபாவைப் பற்றி நான் அறிந்திருந்த விஷயங்கள் அவை. மற்றபடி என் மதம் இந்து மதம் தான்... நான் ஒரு முரட்டு மகாராஷ்டிரன் மாவீரர் சிவாஜியின் இந்து ராஷ்ட்ரக் கனவுதான் என் கனவும்கூட.... ஆம். அதுதான் உண்மை..."

- ராம்லால் திக்கித் திணறினான். பூசி மெழுகுவது போல் இருந்தது அவன் பேச்சு. சாஸ்திரிகள் முதல் முறையாக ராம்லாலை சற்று அவநம்பிக்கையோடு பார்த்தார்.

அவனோ தொடர்ந்து சமாளித்தான்.

"ஆமாம்... நாம் இப்பொழுது எங்கே போகப் போகிறோம்?"

"வைஜெயந்தியின் மனைக்கு..."

"அந்த நவரத்ன மாளிகைக்குத்தானே..."

"அங்கேயேதான்..."

- சாஸ்திரிகள் மறு பதில் சொன்ன அந்த நொடியில் ருத்ர வீணை இசை அவர்கள் காதில் ஒலிக்க ஆரம்பித்திருந்தது. மிக மெல்லிய சப்தம்... ஆனால், துல்லியமாக ஒலித்தது ஆனந்த பைரவி ராகத்தில் 'சபாபதிக்கு நிகரான தெய்வமுண்டோ?' என்கிற பாடல்.

சாஸ்திரிகள் அப்படியே தன்னை மறக்கத் தொடங்கி விட்டார். வழிநெடுக தோடிபுரத்து வீட்டுத் திண்ணைகளில் ஓய்வாக அமர்ந்திருந்தவர்கள் அவ்வளவு பேரும் தங்களை மறந்திருந்தனர். ராம்லாலுக்குகூட அந்த இசைக்கு நடுவே எதையும் பேசத் தோன்றவில்லை. மௌனமாக நடந்தான். அவனையுமறியாமல் அவனது சிரம் ரசனையோடு ஆடியது.

நெடுநேரம் வரை வீணை இசை கேட்டது.

அது அடங்கிய பிறகும் சாஸ்திரிகள் அதன் நாத இன்பப் பிடியில் இருந்து விடுபடாதவராகவே இருந்தார். ராம்லாலையே யாரோ ஒரு புதியவரை பார்ப்பது போலத்தான் பார்த்தார்.

"என்ன சாஸ்திரிகளே... என்னை ஏதோ புதியவனைப் பார்ப்பது போல பார்க்கிறீர்கள்?"

"நீங்கள்... நீங்கள்... ஓ ராம்லால்! நான் மறந்தே போனேன்."

"சரிதான்... வீணை இசை உங்களை இந்த உலகத்தையே முற்றாக மறக்க வைத்துவிட்டது என்று கூறுங்கள்."

"உண்மைதான்... அபூர்வமான இசை. அற்புதமான இசை..."

"நானும் கூட என்னை மறந்துதான் போனேன். ஆனாலும் இப்படி ஊர் முழுக்க இது எப்படிக் கேட்கிறது என்பதில் என் புத்தி சென்றுவிட்டது..."

"அது ருத்ர வீணைக்கே உண்டான சக்தி..."

"அதுசரி... அதை வாசித்தது..?"

"வைஜெயந்தியின் சகோதரன்..."

"என்ன... அந்த தாசியார்க்கு ஒரு சகோதரனா?"

"ஆமாம். அவளை தாசி என்று பொதுவாக குறிப்பிடா தீர்கள். வைஜெயந்தி மாசுமருவில்லாதவள். அவள் கோவில் தாசி. கோவில் தாசிகள் பிராமணர்களுக்கு சமமான வர்கள்..."

"ஆச்சரியமான விளக்கமாக இருக்கிறதே..?"

"உண்மையும் அதுதான் ராம்லால். இறைவனுக்கு மிகமிகப் பிடித்த நடனத்தில் அதன் முத்திரைகளை எடுத்துக் கொண்டு நாட்டியமாடியபடியே வணங்குவது என்பது சாதாரணமான ஒன்றா என்ன?"

"இதை உங்கள் சாஸ்திரங்கள் அனுமதிக்கிறதா?"

"நமது சாஸ்திரங்கள் என்று கேட்டால் என்ன...?"

சாஸ்திரிகளின் மடக்கலில் சற்று திணறிய ராம்லால் ஆமோதிப்பாக சிரித்தான்.

"சாஸ்திரோக்தமான வழிபாடே அதுதான். முதலில் இறைவனுக்கு மிகப் பிடித்தமானது நாட்டிய வழிபாடு. பின்பே வேத மந்திர வழிபாடு. நாட்டிய வழிபாட்டுக்கு தாசி.. வேத மந்திர வழிபாட்டுக்கு அந்தணன்..."

- சாஸ்திரிகள் விளக்கமளிக்கவும் காவிரிக் கரை ஓரமாக மயானம் வரவும் சரியாக இருந்தது. பிணம் ஒன்று வெந்து கொண்டிருந்தது. மூக்கைக் கீறிக் கொண்டு போனது புகை. ராம்லாலுக்கு குடலைப் புரட்டியது.

"சாஸ்திரிகளே... என்ன இது.. மயான வழியாக எங்கே போகிறோம்?"

"தற்சமயம் வைஜெயந்தி வாழ்ந்து வரும் அந்த நவரத்ன மாளிகைக்குத்தான்..."

"அது இப்படியா மயானத்தை ஒட்டியுள்ளது?"

"ஆம்... வாருங்கள் போகையில் நீங்கள் அதைக் காணலாம்." சாஸ்திரிகள், ராம்லாலை அடக்கி இழுத்துச் சென் றார். மயான வெளியில் நிறைய மரங்கள். எங்கு பார்த்தாலும் ஒரே அடர்த்தி... புகையின் வியாபிப்பு வேறு. பட்சிக் கூட்டங்கள் ஏனோ மயான மரங்களில் அடைவதில்லை. மீறி அடைந்தால் ஆந்தைகளும், கோட்டான்களுமே அடைகின்றன.

ராம்லால் வியப்பாக மயானத்தைப் பார்த்தான். கொஞ்சம் அச்சமாகக்கூட இருந்தது. திடீரென்று ஒரு சிறுவனின் அழுகுரல் கேட்டு சாஸ்திரிகள் உட்பட ராம்லாலையும் அதிர வைத்தது.

மயானத்தில் யாரது அழுது கொண்டு?'

சாஸ்திரிகள் பார்வை சுற்றிச் சுழன்றதில் மயானப் புலையனின் குடிசைக்கு வெளியில் புலையன் ஒரு பாலகனை மிரட்டியபடி இருந்தான். அந்த பாலகன் முகத்தில் பால்வடியாத குறை.

சாஸ்திரிகளும், ராம்லாலும் மயானத்தை ஒட்டிய பாதையில் தங்களை நோக்குவதையும் கவனித்தவன் அங்கிருந்த படியே அந்த பாலகனை மிரட்டுவதை விட்டுவிட்டு கை கூப்பி நமஸ்காரம் சொன்னான்.

"அடி பணிஞ்சுக்கறேன் சாமி..."

"இருக்கட்டும்... இருக்கட்டும்... இது யார் குழந்தை?"

"என் குழந்தைதானுங்க..."

புலையன் அப்படிச் சொன்னதுதான் தாமதம் சாஸ்திரிகள் முகம் திடுக்கிட்டது.

"அப்பா... உனக்குத்தான் யாருமே கிடையாதே? உன் மனைவியும் உன்னைவிட்டுப் போய்விட்டாளே... அப்படி இருக்க..." - சாஸ்திரிகள் இழுத்தார்.

"தெய்வமாக பார்த்துக் கொடுத்ததுங்க."

"என்னப்பா சொல்றே?"

"ஆமாம் சாமி... இந்த பாலகன் ஒரு அநாதை. இப்ப நான்தான் இவனுக்கு எல்லாம். இவனுடைய அப்பா உங்களை போல ஒரு வேத பிராமணர். குஷ்ட நோய் வந்து செத்துப் போனார். சாகும்போது இவனை என்கிட்ட ஒப்படைச்சுட்டு போய்ட்டார். பிராமணப் பையன். வேதம் படிச்சு பெரிய ஆளா வரணுமில்லையா? அதான் பள்ளிக்கூடத்துக்கு போடான் னேன். 'முடியாது... நான் இங்க உன்கூடதான் இருப்பேன்'னு அடம் பிடிக்கறான்..."

- புலையனின் பதிலைக் கேட்டு ஸ்தம்பித்தார் சாஸ்திரிகள்.

"என்ன ஒரு விந்தை... ஒரு பிராமணனின் குழந்தை உன்னிடம் வந்து சேர்ந்திருக்கிறதே... அதே சமயம் நீ இவனை ஒரு பிராமணக் குழந்தை போலவே வளர்க்கவும் நினைப்பதை எப்படிப் பாராட்டுவது என்றே தெரியவில்லை..."

- சாஸ்திரிகள் சொன்னதைக் கேட்டு அந்த புலையனோ சற்று கூசினான்.

“என்ன சாமி நீங்க வேற... இந்த புலைத் தொழில் ஒரு தொழிலுங்களா? பேயும் பிசாசும் திரியற ஒரு சுடுகாட்டுல சகிக்க முடியாத பிண வாடையை சகிச்சுகிட்டு... த்தூ!

இந்த பையன் பாவம் சாமி. இவனை ஊர்ல யாரும் ஏத்துக்கலை. அதான் இங்க வந்துட்டான். ஏன் சாமி... நீங்க ரொம்ப நல்ல மனுஷர்தானே?”

- புலையன் எங்கே வருகிறான் என்பது சாஸ்திரிகளுக்குப் புரிய ஆரம்பித்துவிட்டது.

‘நீங்க ஏன் இவனை வளர்க்கக் கூடாது...? என்றுதான் அடுத்து இவன் கேட்கக் கூடும்... ஆனாலும் இவன் மூலமாக தொழுநோய் ஊர் முழுக்க பரவினால் அதைப் பரப்பிய பாவம் என்னை அல்லவா சேரும்?’

சாஸ்திரிகள் மனதுக்குள் நினைப்பதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் மழுப்பலாக சிரித்தபடியே “நான் நல்லவன் என்று உனக்கு யார் சொன்னது? நானும் ஒரு சராசரி மனிதன்தான். உண்மையில் நீதான் மிகச் சிறந்தவன். அடுத்து உனக்குத்தான் வாரிசு இல்லை. அதனால்தான் இந்த பாலகனை இறைவன் உனக்கு அளித்திருக்கிறான். இவனை சிறந்த சான்றோனாக ஆக்குவது வெற்றியில் முடியாது. பேசாமல் இவனை இங்கேயே வைத்துக் கொள். இவன் தந்தை வியாதி இவனிடம் இருக்கலாம். அது சமூகத்தில் பரவுவது ஆபத்தில் முடியும். அதனால் சொல்கிறேன். நீயும் சற்று விலகியே நில்...”

- சாஸ்திரிகள் சமூகத்தைக் காப்பதாக எண்ணிக் கொண்டு அந்த சிறுவன் வரையில் ஒரு மோசமான கருத்தை முன் வைத்தவராக அங்கிருந்து கிளம்பினார். புலையனுக்கு அவரிடம் ஏன் பேசினோம் என்று இருந்தது. அவர் விலகவும் அந்த பாலகனைப் பார்த்து முறைத்தவன், “உனக்கும் பெருநோய் இருக்கும்னு சொல்லாம சொல்லிட்டுப் போறார் சாமி... நிஜமாடா...? உன் உடம்புல அது எங்க ஒளிஞ்சிருக்குது?”

கோபமாகக் கேட்டான். பதிலுக்கு அந்த பாலகனோ கன்னங்குழிய சிரித்தான். அந்த சிரிப்பு அப்படியே புலையனை மயக்கிவிட்டது... பச்சரிசிப் பல் வரிசை தெரிய ஒரு மலர்ந்த சூரியகாந்தி போன்ற முகத்தோடு அந்த பாலகனின் சிரிப்பு புலையனை அப்படியே உருக்கி மாற்றிவிட்டது.

"இல்லடா கண்ணு இனி உன்னை நான் இப்படியெல்லாம் மிரட்ட மாட்டேன். உன் அப்பா பாவம் பண்ணதால அவருக்கு பெருநோய் வந்துச்சு. நீ எந்த பாவத்தை பண்ணே... உனக்கே வர்றதுக்கு..?

அதெல்லாம் உனக்கு எதுவும் வராது... வந்தாதான் என்ன? எல்லா உடம்பும் இந்த சுடுகாட்டுக்குத்தானே வந்து சாம்பலாகணும். பளபளன்னு யாராலயும் உடம்பை வெச்சுக்க முடியாதே? அது நைஞ்சு நூலாகித்தானே போகணும்... தினம் தினம் உடம்பை சுட்டு பொழப்பு நடத்தற எனக்குக் கூட இந்த விஷயமெல்லாம் தெரியல பாரு..." என்றபடியே புலையன் சிறுவனை இழுத்து கட்டிக்கொண்டான்.

**ந**வக்கிரக மாளிகையின் வெளியே மராத்திய வீரர்களின் தீர்க்கமான காவல். சாஸ்திரிகளும், ராம்லாலும் வரவும் சேகண்டி ஒலி எழுப்பியது. தகவலும் உள்ளே சென்றது. வெளியே சாஸ்திரிகளும், ராம்லாலும் தேங்கி நின்றனர் ராம்லால் அதற்காக ஆச்சரியப்பட்டான்.

"சாஸ்திரிகளே இந்த ஊரில் எனக்கு வழியெல்லாம் ஆச்சரியங்கள் கண்ணில் படுகின்றன... முதலில் வீணை இசை. அடுத்து மயானத்தில் ஒரு பிராமண சிறுவன். அதற்கும் அடுத்து ஒரு அற்புதமான மாளிகை இப்படி மயானத்தின் அருகே இருப்பது... அதைவிட ஆச்சரியம்... இந்த மாளிகைக்கு உள்ள காவல்..."

ராம்லால் வியப்பது போல கேள்விதான் கேட்டான் சாஸ்திரிகளும் பதில் கூறினார்.

"இந்த மாளிகை உள்ளபடியே ஒரு அற்புதமான விஷயம். இந்திரலோகத்து மயனே வந்து கட்டித் தந்தது என்பார்கள். இது முதலில் சோழப் பேரரசுக்கு சொந்தமாக இருந்தது. பின்னர் மராத்தியர்க்கு சொந்தமாகி இப்பொழுதும் இது அரச குடும்பங்கள் பக்தி சிரத்தையோடு வந்து செல்லும் ஒரு இடமாகத்தான் இருக்கிறது. தனி மனிதர்கள் இங்கே வரக்கூடாது. இந்த ஊரைச் சேர்ந்த யாரும் வந்ததில்லை. நான்கூட இதோ அந்த நந்தவனம் வரைதான் வந்திருக்கிறேன்..."

சாஸ்திரிகள் கைகாட்டிய திக்கில் பாபாவின் சமாதி. இஸ்லாமியர்களுக்கே உரிய முறையில் பச்சைத் துணியால் மூடப்பட்டு ஊதுபத்தி வாசமும் கமழ்ந்து கொண்டிருந்தது.

பச்சைத் துணிமேல் பிறைச் சின்னம். அதைப் பார்த்த ராம்லால் நெடு நேரம் கூர்ந்து கவனித்தான்.

உள்ளிருந்தும் 'வரலாம்' என்று அழைப்பு... இருவரும் மெல்ல உள்ளே கால் வைத்தனர் முகப்பில் ஒரு பெரிய வராண்டா. அதில் நடந்து ஒரு பெரிய நிலைகால் கதவைத் தாண்டிக் கொண்டு ஹாலுக்குள் கால் வைத்தனர் ஹாலில் ஒரு புறத்தில் ஒரு பெரிய பாபாவின் திரு உருவப்படம். வைஜெயந்தியே வண்ணச் சாந்துகளைக் கொண்டு மெல்ல மெல்ல வரைந்து கொண்டிருந்தாள். பார்க்க மலைப்பூட்டும் காட்சி.

சாஸ்திரிகள் உற்சாகமாகி கைகளைத் தட்டி "பலே மகளே... பலே... பிரமாதம்! உன்னிடம் இவ்வளவு ஓவியத் திறனா?" என்று கேட்டு அந்த படத்தையும் கூர்ந்து பார்த்தார். பாபாவே உயிர் பெற்று எழுந்து வந்துவிட்டது போலத்தான் இருந்தது.

ராம்லாலும் கவனித்தான்... வியந்தான்... அருகில் தரைமேல் பட்டுத் திண்டும் மெத்தையும் விரிக்கப்பட்டு முன்னால் பழரசங்களும் பழவகைகளும் வைக்கப்பட்டிருந்தன. அதில் சாஸ்திரிகளையும், ராம்லாலையும் அமரச் சொன்னாள் வைஜெயந்தி. ராம்லால் அமர்ந்துவிட்டான். சாஸ்திரிகளோ "பரவாயில்லை மகளே... நான் நிற்கிறேன்" என்றவர், "பாபாஜியின் திரு உருவச்சிலை தயாராகிவிட்டது. நீ உன் சேவகர்களில் சிலரை அனுப்பினால்கூட போதும். சிலையை நான் சுமந்து வந்து விடுவேன்..." என்றார். அதைக் கேட்டு வைஜெயந்தி சிரித்தபடியே, "என்ன சாஸ்திரிகளே என்னை ஆழம் பார்க்கிறீர்களா?" என்றுதான் திருப்பிக் கேட்டாள்.

"என்ன மகளே கூறுகிறாய்..? நான் எதற்கு உன்னை ஆழம் பார்க்க வேண்டும்...?"

"பாபா சிலைதான் ஆலயத்திற்கு வந்துவிட்டதே! இன்னும் எதற்கு ஆட்கள்?"

"என்னது..! பாபா சிலை ஆலயத்திற்கு வந்துவிட்டதா...? யார் சொன்னது?" - வேகமாக முன்னால் வந்தான் ராம்லால்.

"இப்பொழுதுதான் நான் ஆலயத்திற்கு சென்றுவிட்டு வருகிறேன். அங்கே கல்மண்டபத்தில் ஜம்மென்று அமர்ந்து கொண்டிருக்கிறார் பாபா.. தத்ரூபமான சிலை. பாபா உயிரோடு இருந்தபோது எப்படி ருத்ர வீணையைப் பிடித்துக் கொண்டு

வாசிப்பாரோ... அப்படியே இருக்கிறது. நீங்கள்தான் அங்கே கொண்டு வந்து வைத்திருக்க வேண்டும் என்று நினைத்தேன். உச்சந்தலை மேல் நீங்கள் பாபா சிலையை வைத்துக் கொண்டு அங்கே வியர்வை வழிய வந்து சேர்ந்ததாக சிலையைப் பார்த்தவர்கள் கூறினார்கள். நீங்களோ இங்கே என்னிடம் ஒன்றும் தெரியாதது போல கேள்வியெல்லாம் கேட்கிறீர்கள். எதற்கு என்னை இப்படிச் சோதிக்கிறீர்கள்?"

பாபாஜியை திரைச்சீலை ஓவியமாய் வரைந்தபடியே வைஜெயந்தி கேட்க ராம்லால் ஸ்தம்பித்துவிட்டான் சாஸ்திரிகளும் அதிர்ச்சியுடன் ராம்லாலைப் பார்த்தார்.

"என்ன ராம்லால்... சிலையை ஆலயத்தில் சேர்த்து விட்டுத்தான் என் இல்லத்திற்கு வந்தீர்களா? எவ்வளவு பெரிய காரியம்? இவ்வளவு பெரிய காரியத்தை செய்துவிட்டு எதற்காக ஆட்கள் துணை வேண்டும் என்று கேட்டீர்கள்? எனக்கு ஒன்றும் புரியவில்லையே..."

- சாஸ்திரிகளின் கேள்விமுன்னால் ராம்லால் விக்கித்துப் போனவன், "சத்தியமாய் கூறுகிறேன் சாஸ்திரிகளே. எனக்கு எதுவும் தெரியாது. ஒரு தனிமனிதனால் அந்த சிலையை தொட்டுத் தூக்கி வரவும் முடியாது. அது அவ்வளவு கன மானது..."

"அப்படியானால் ஆலயத்தில் நான் பார்த்தது வேறு சிலையையா?" - வைஜெயந்தி அழுத்தமாகக் கேட்டாள்.

"அது எனக்குத் தெரியாது... ஒன்று மட்டும் கூறுவேன். பாபா விக்கிரகம் கன்னியர் கரட்டு மலையிலேயே என்னை வெகுவாக சோதித்துவிட்டது. இப்பொழுது அம்மையார் கூறும் தகவல் என்னை சிலிர்க்கவே வைத்துவிட்டது..."

"என்ன ராம்லால்! ஏதேதோ பேசுகிறீர்கள்? பாபா விக்கிரகம் உங்களைச் சோதித்தது என்றால் அது எப்படி?" வைஜெயந்தி தான் கேட்டாள்.

ராம்லாலும் கல்மண்டபத்தில் இருந்து மொட்டைப் பாறைமேல் போய் அமர்ந்து கொண்ட சம்பவத்தைக் கூறி, "இப்பொழுதுகூட சிலை அங்கேதான் இருக்கிறது அல்லது இருக்க வேண்டும்" என்றான்.

"அப்படியானால் இப்பொழுதே போய் பார்த்துவிடு வோம். எதற்கு சந்தேகம்?" என்றபடியே ஓவியத் தூரிகைகளை

சற்று தூர வைத்துவிட்டு அருகாமைச் சேகண்டியை தட்டினாள் வைஜெயந்தி. சப்தம் கேட்டு கையில் வேல் கம்புடன் சேவகன் ஒருவனும் வந்து நின்றான்.

"சாரட்டை - வெளியே புறப்பட உடனே தயார் செய்." என்று அவனுக்கு கட்டளையிட்டாள்...

அடுத்த சில நிமிடங்களில் ராம்லாலும், சாஸ்திரிகளும் ஒரு புறம் சாரட்டில் ஏறிக் கொள்ள, மறுபுறம் சாரதி ஏறிக் கொள்ள, சாரட் அவர்களை மட்டும் சுமந்து கொண்டு கன்னியர் கரடு நோக்கி ஓடத் தொடங்கியது.

அதே சமயம் அந்த நவரத்ன மாளிகைக்கு வெளியே சுடுகாட்டை ஒட்டிய ராட்சஸ தோதகத்தி மரம் ஒன்றின் பின்னால் ஒளிந்து நோக்கிய நிலையில் ஒரு இஸ்லாமிய வீரன், "ஷாநவாஸ்... நீ சரியாகவே இயங்கிக் கொண்டிருக்கிறாய். எப்படியோ ருத்ர வீணை இருக்கும் மாளிகைக்குள்ளேயே கால் வைத்து விட்டாயே... பலே..."

என்று தனக்குள் சொல்லிக் கொண்டு தனது குறுந் தாடியை குரூரமான விழிப் பார்வையுடன் நீவியும் விட்டுக் கொண்டான்!

## இன்று

**தெ**ன்னந்தோப்பில் உள்ள கல்மண்டபம் அது. ஆடி பதினெட்டாம் பெருக்கின்போது காவிரி வெள்ளத்தைக் காண தோடீஸ்வரர் ஆண்டுக்கு ஒரு முறை எழுந்தருளும் மண்டபம் அது. இப்பொழுதே ஆளரவமே இன்றி வெறிச்சோடிக் கிடக்க, அந்த மண்டபத்தின் முன் உள்ள படிக்கட்டின் மேல் கன்னத்தில் கை வைத்தபடி அமர்ந்து கொண்டிருந்தான் சங்கரன்.

மொபெட் அங்கு நுழையும் சப்தம் கேட்கவும் நிமிர்ந்து பார்த்தான். சாமிநாதன்! பின்னாலேயே மற்றொரு மொபெட்டில் பானுவும்...

சங்கரனுக்கு இருவரையும் ஒருசேரப் பார்க்கவும் அப்பாடா என்றிருந்தது.

"வாடா... எவ்வளவு நேரமா காத்திருக்கேன் தெரியுமா? பானு, நீ கூட இன்னிக்கு லேட்..." என்று அவளிடமும் சற்று பாய்ந்தான்.

“என்னடா... ஏதாவது ரொம்ப முக்கிய விஷயமா?”

“ஆமாண்டா. கேட்டா உங்களால நம்பவே முடியாது. பர்ட்டிக்குலரா பானு - நீ துளி நம்பமாட்டே....”

- சங்கரனின் பீடிகை இருவரையும் கூர்மையாக்கியது.

“சரி, என்னன்னு முதல்ல சொல்.”

“அதுக்கு முந்தி, உன் அப்பா எப்படி இருக்கார்? அதை நீ முதல்ல சொல்.”

“இருக்கார்... ஏண்டா புதையல் எடுத்தோம்னு நொந்து நூலாகிக் கிடக்கறார்.”

“அது எப்படிடா சாமி ஒரு புதையல் கரியாகும்..? அதை நீ யோசிச்சு பார்த்தியா?”

“ஒண்ணும் புரியலடா என் அப்பாவுக்கு புதையல் கரியானது கூட பெரிய விஷயமா தெரியல. கரெக்டா கலெக்டர் வந்த சமயத்துல பானு அம்மாவான சுந்தராம்பாம்மா வந்ததைத் தான் அவரால ஜீரணிக்க முடியலை.”

“ஏன் எங்க அம்மா வந்தா என்ன?” பானுவும் கேள்வியோடு பேச்சைத் தொடங்கினாள்.

“அதுசரி... எந்தக் காலத்துல என் அப்பாவுக்கும் உன் அம்மாவுக்கும் ஒத்துப் போயிருக்கு - இன்னிக்கு ஒத்துப் போக..?” - சாமிநாதன் திரும்பினான்.

“டேய்... உன் அப்பா சுந்தராம்பாம்மாளை சந்தேகப்பட றாரா? அதைச் சொல்லுடா முதல்ல.”

“ஆமாண்டா... அவங்கதான் புதையலை ஏதோ மேஜிக் பண்ணி கரியாக்கிட்டதா நினைக்கறார்...”

“என்னது மேஜிக்கா...? என் அம்மாவா?” பானு பாயத் தொடங்கினாள்.

“பானு, அவசரப்படாதே. இந்த டவுட் எனக்கும் இருந்தது. சாமிநாதன் அதை ஊர்ஜிதப்படுத்தறான்.”

“இல்ல சங்கரா... என் அம்மாவைப் பத்தி தப்பா பேசினா என்னால தாங்கிக்க முடியாது. அதை நீ முதல்ல புரிஞ்சுக்கணும்.”

“பைத்தியமே... உன் அம்மாவைப் பத்தி தப்பா பேசணும்னு இங்க எனக்கோ இல்ல சாமிநாதனுக்கோ எந்த இன்டென் ஷனும் கிடையாது - அதை நீ புரிஞ்சுக்கோ ”

“இல்ல சங்கரா புதையல் கிடைச்ச விஷயமே என் அம்மாவுக்கு ரொம்ப லேட்டாதான் தெரியும். எதார்த்தமா என்

அம்மா இவங்க வீட்டுப் பக்கம் போயிருந்திருக்காங்க. கலெக்டர் சார் பார்த்துட்டு என் அம்மா பேர்ல அவருக்கு இருக்கற ஈடுபாட்டுல பேசியிருக்காரு. இதுதான் நடந்தது. அதுக்கு இப்படி ஒரு பழியைப் போடறது துளியும் நல்லா இல்லை."

"திரும்பவும் சொல்றேன் பானு... நீ அவசரப்படறே. நான் சொல்றத நிதானமா கேட்டுட்டு பதில் சொல். அசோகன் யார்?"

"என் தம்பி..."

"பிறப்பால அவன் உன் தம்பிதான். இப்ப அவன் நிலை?"

"லேசான சித்த பிரமை."

"ஆர் யூ ஷ்யூர்?!"

"என்ன சங்கரா... உன் வீட்லதானே அவனை அம்மா விட்ருக்காங்க. அவனைப் பார்த்துமா உனக்கு சந்தேகம்?"

"எக்ஸாக்ட்லி."

"என்ன உளர்றே... அவனை அப்ப யாருன்னு சொல்ல வர்றே?"

"பாபா!" சங்கரன் பட்டென்று தேங்காயில் நல்ல நெத்திக்காயாக உடைப்பது போல சொன்னதுதான் தாமதம் - இருவரும் திடுக்கிட்டுப் போய் பார்த்தனர்.

"பாபாவா?" என்று கூட்டாக கேட்கவும் செய்தனர்.

"பாபாவேதான்... முந்நூறு வருஷத்துக்கு முந்தி ஒரு ருத்ர வீணையோட இமயமலை பக்கம் இருந்து இந்த ஊருக்கு வந்து இப்ப இருக்கற தாசி பங்களாவுல சமாதியாவும் ஆயிட்ட அதே பாபாதான்..."

"சங்கரா... என்னடா இது புதுக் கதை...

"கதை இல்லடா. காயத்ரி கண்ணால பார்த்து என்கிட்ட சொன்ன சத்தியமான உண்மை. அசோகன் உடம்புல புகுந்துகிட்டிருக்கறது பாபாவாம். இந்த உண்மை சுந்தராம்பாம்மாவுக்கு தெரிஞ்சு அசோகனை வந்து பார்த்து அவன் கால்ல விழுந்து நமஸ்காரமும் பண்ணியிருக்காங்க..."

- சங்கரன் சொல்லச் சொல்ல பானு வாய் பிளந்தாள்.

"அப்புறம்?"

"அப்புறம் என்ன... ருத்ர வீணையைத் தேடி உபாசகர் வந்துட்டதால ருத்ர வீணையை அவர் அடைஞ்சுடாம தடுக்க பாபாவே வந்துட்டதா நினைக்க எண்ணம் இருக்கு.

உபாசகருக்கு சாமிநாதன் அப்பா உதவி செய்ததால அவரைக் கொஞ்சம் தட்டி வைக்கத்தான் புதையலைக் கரியாக்கி சிக்கலை உண்டுபண்ணியிருக்காங்க சுந்தராம்பாம்மாங்கறது, காயத்ரி - அப்புறம் என்னோட அபிப்பிராயம்."

"இப்படி நடந்துக்கறதுல அவங்களுக்கு என்ன லாபம்?" சாமிநாதன் கேட்டான்.

"என்ன அப்படி கேட்டுட்டே... உன் அப்பா சுந்தராம்பாம்மாவை மதிக்கறதில்ல. இவங்க தேடித் தேடிப் போய் மதிச்சாலும் உன் அப்பா மதிக்கறதில்ல. ஆகையால ஒரு பழிவாங்கற உணர்ச்சியோடயே இருந்திருக்காங்க. உபாசகர் வரவும் அவரைப் பயன்படுத்தி சுந்தராம்பாம்மாவை அடக்க முயற்சி செய்திருக்கிறார் உன் அப்பா அதுக்கு சுந்தராம்பாம்மா கொடுத்த பதிலடிதான் புதையல் கரியான கதை..."

"இல்ல... என் அம்மா எதிரிகிட்ட கூட இப்படி ஏமாத்தி கண்ணாமூச்சியெல்லாம் விளையாட மாட்டாங்க. அவங்க தெய்வம்..." - பானு படபடத்தாள்.

சங்கரன் முறைத்துப் பார்த்தான். அவளுக்கும் அதற்கு அர்த்தம் தெரிந்தது.

"பானு... நீ தேவையில்லாம உணர்ச்சிவசப்படறே! உன் அம்மாவை நீ மதி. நல்லா பாசமா இரு. நான் தப்பு சொல்ல மாட்டேன். அது உன் விருப்பம். ஆனா, அதுக்காக அவங்கள தெய்வம் அப்படி இப்படின்னுல்லாம் சொல்லி இங்க சங்கரன் சொல்றதை நம்பாம மட்டும் போய்டாதே..." சாமிநாதனும் சங்கரனின் கருத்துக்கு ஒத்து ஊதினான்.

"அப்ப அசோகன் பாபா என் அம்மா, பாபாவோட உதவியால உன் அப்பாவை மறைமுகமா மிரட்டியிருக்காங்க. இதுதானே உங்க கருத்து?"

"ஆமாம்... ஆமாம்..."

"சரி... இது எவ்வளவு தூரம் உண்மைன்னு நான் கண்டு பிடிக்கறேன். சரி, விஷயம் இவ்வளவுதானா? இல்லை இன்னும் இருக்கா?"

"பானு. அந்த விஷயத்துல புதையல் கரியானதை நேர்ல பார்த்ததுல போலீஸோ இல்ல தாசில்தாரோ நம்பலை. "இது ஹைடெக் யுகம். இப்ப போய் புதையல் கரின்னுகிட்டு'னு

கிண்டல்தான பண்ணியிருக்காங்க. இந்த கிண்டலால ஆழமா பாதிக்கப்பட்டுத்தான் அப்பா ஒரு முக்கியமான கேள்வியைக் கேட்டாரு..."

"என்ன கேள்வி...?"

"ஹைடெக் யுகத்துல புதையல் கரியாகறத நம்ப முடிய லேங்கறீங்களே... ஒரு பங்களாவுக்குள்ள யாரும் போறதில்ல. போறவங்களுக்கும் ஏதாவது ஆயிடுதுங்கறத ஒத்துக்கறீங்களா... இதுமட்டும் சரியாங்கறதுதான் அவர் கேள்வி..."

சாமிநாதன், கல்யாணசுந்தரம் எண்ணியதைச் சொன்னதுதான் தாமதம் பானுவும் சரி, சங்கரனும் சரி, மௌனமாகிவிட்டனர்.

அந்த கேள்விக்கு அவ்வளவு சக்தி.

அதே கேள்வி கல்யாணசுந்தரத்தையும் குத்திக் கிழித்துக் கொண்டுதான் இருந்தது. எவ்வளவு மனக் கவலையிலும் மது பாட்டிலையே தொட்டிராதவர் கல்யாணசுந்தரம். அப்படிப் பட்டவர் ஒரு குவார்ட்டர் அடித்துவிட்டு காச்சுமூச்சு என்று கத்த ஆரம்பித்துவிட்டார்.

"அடியே பொட்டச்சிறுக்கி... உன் பங்களா மர்மத்தை நான் கண்டுபிடிக்கறேண்டி. இதுக்காக எதுக்கு கண்டவங்க கால்ல விழுந்துகிட்டு... உன்னை என் கால்ல விழவைக்கறேன் சுந்தராம்பா. இது சத்தியம்" என்று ஆக்ரோஷமாய் சத்தியமும் செய்த கல்யாணசுந்தரம், அந்த இரவு பத்து மணிப் போதில் விறுவிறுவென்று தனியாளாக தாசி பங்களா நோக்கி நடக்கத் தொடங்கிவிட்டார். அவர் அப்படிப் புறப்படுவது ரங்காயிக்கும் தெரியாது. சாமிநாதனுக்கும் தெரியாது.

"இனி யாரையும் நம்பிப் பிரயோஜனமில்லை. நானே போறேன். நாளைக்கே அவளை ஊர் முன்னால அவமானப் படுத்தறேன்... என்ன பெரிய தாசி பங்களா? புடலங்கா பங்களா?"

கல்யாணசுந்தரம் துண்டை உதறி தோளில் போட்டுக் கொண்டு புறப்பட்டு விட்டார்.

'யார் தடுத்தாலும் சரி... எது வந்தாலும் சரி, அந்த மாளிகைக்குள்ள நுழைஞ்சு அங்க என்ன இருக்கு இல்லேங்கற அவ்வளவு ரகசியங்களையும் பட்டவர்த்தனப்படுத்தறேன்' என்று மனதுக்குள் முணுமுணுத்தபடியே கல்யாணசுந்தரம் நடப்பதை அந்த வேளையில் ஒருவர்கூட பார்க்காததுதான் ஆச்சரியம்.

நல்ல இருட்டு!

ஒற்றையடிப் பாதையில் வேட்டி நுனியைப் பிடித்துக் கொண்டு விசுக் விசுக் என்று அவர் நடந்து செல்வதிலும் ஒருவித வேகம். மயானமும் குறுக்கிட்டது!

எதையும் சட்டை செய்யாமல் நடந்தவரை புலையனும் பார்த்து அதிர்ச்சியை முகத்தில் காட்டினான்.

இறுதியாக தாசி பங்களாவும் வந்துவிட்டது. அப்பொழுது தான் சுந்தராம்பாளும் திலகமும் வந்துவிட்டு கதவை பூட்டிக் கொண்டு திரும்பிக் கொண்டிருந்தனர் அவர்கள் கண்ணில் படாதபடி ஒரு மரத்தின் பின்னால் ஒளிந்த கல்யாணசுந்தரம் அவர்கள் தலை மறையவும் விறுவிறுவென்று சென்று தாசி பங்களாவின் பூட்டிய கதவு முன்தான் நின்றார்.

பெருமூச்செறிந்தது. வியர்த்தும் கொட்டியது. சந்தனக் கலர் ஜிப்பா உடம்போடு உடம்பாக ஒட்டிக்கொள்ள வேறு செய்தது. அதே சமயம் கல்யாணசுந்தரம் ஒரு பார்க்கக் கூடாத காட்சி ஒன்றையும் பார்த்து வாயைப் பிளக்கத் தொடங்கினார். அது...?

அதிர்ச்சியில் உறைந்து போய்விட்ட கல்யாணசுந்தரம் எதிரில் பாபா போல ஒரு உருவம் மௌனமாக சென்று கொண்டிருந்தது. கல்யாணசுந்தரத்துக்குள் ஒரே அதிர்ச்சி. அது பாபாவேதான்!

அந்த நொடி அதிர்ச்சியில் கல்யாணசுந்தரத்தின் உடம்புக்குள் அங்கங்கே ரத்தக் குழாய்கள் வெடிப்பதுபோல் கூட இருந்தது. இதயத்திலும் தாறுமாறான துடிப்பு. அப்படியே ஸ்தம்பித்துப் போய் கீழே விழுந்தவருக்கு ஒரு பக்கம் கையும் காலும்கூட இழுத்துக் கொண்டது!

தன் வீடு அமைந்திருக்கும் தெருவைத் தொட்ட நிலையில் சுந்தராம்பாளுக்குள் சட்டென்று ஒரு சிறு தேக்கம். காலில் முள் குத்திவிட்டதுபோல தேங்கி நின்றவளை திலகமும் கவனித்தாள்.

"அக்கா

"திலகம்... ஒரு விஷயத்தை மறந்துட்டே பார்த்தியா?"

"எதக்கா...?"

"என்னையா கேட்கறே...? நல்லா யோசிச்சுப் பார்... சாவிக் கொத்தை அங்கேயே மறந்துவெச்சிட்டு வந்துட்டோம்..."

திலகமும் உடனே கைகளை உதறிக் கொண்டாள். "எப்ப வும் இப்படி மறந்தது கிடையாது... இதுதான் முதல் தடவை. இதுவே கடைசி தடவையாவும் இருக்கணும்..." - சுந்தராம்பாள் சொல்லிக் கொண்டே திரும்பினாள்.

திரும்பவும் தாசி பங்களா நோக்கிய நடை.

இரவு நேரம்!

தோடிபுரத்துவாசிகள் தெருக்களில் தங்கள் திண்ணை களில் காற்றாடிக் கொண்டிருந்தனர். வைத்யநாதய்யர் வீட்டில் அவர் மிருதங்கப் பயிற்சியில் இருந்தார். சங்கரராமய்யர் மகள் பரத நாட்டிய ஒத்திகையில் இருந்தாள். இன்னொரு வீட்டில் வாய்ப்பாட்டு ஒத்திகை.

'அலைபாயுதே... என் மனம் மிக மிக அலைபாயுதே!' என்கிற அந்த பிரபலமான பாடல். அவ்வளவு பேருமே சுந்தராம்பாள் வரவும் எழுந்து நின்று மரியாதை காட்டினார்கள். சுந்தராம்பாள் ஒரு மௌனப் புன்னகையில் அதற்கு அங்கீகாரம் அளித்தபடியே நடந்தாள். எதிர்ப்பட்டார் தமிழாசிரியர் அருணாசலம். திவ்யமாக வணக்கம் சொன்னார்.

"வணக்கம்மா..."

"யாரு தமிழய்யாவா... நல்லா இருக்கீங்களா?"

"எனக்கென்னம்மா குறை. எங்கம்மா பங்களா பூஜைக்கா...?"

"ஆமாங்கய்யா..."

"நீங்களும் விடாம பூஜை செய்துகிட்டிருக்கீங்க. அதோட எதிரொலிதான் இந்த தெருவுல கேட்குது. ஒரு வீட்ல வாய்ப்பாட்டு, ஒரு வீட்ல பரதம், ஒரு வீட்ல மிருதங்கம்னு... கலைகள் அமோகமா காவிரி ஆத்து புதராட்டம் தழைச்சு வளர்ந்துகிட்டிருக்கறது நம்ம ஊர்லயாதான் இருக்கும்..."

- சுந்தராம்பாள் அதற்கு ஒரு பதிலைக் கூறாமல் சிரித்துக் கொண்டே நகரக் காலெடுத்தாள்.

"அம்மா, ஒரு சின்ன விண்ணப்பம்... அவர் விடுவதாக இல்லை.

"என்னங்கய்யா?"

"ஒரு தடவை பள்ளிக்கூடம் பக்கம் வந்துட்டுப் போங்க. இந்த வருஷம் நம்ம பள்ளிக்கூடம்தான் மாநிலத்துல முதல்ல

வரணும்னு ஆசைப்படறேன். இரண்டொருத்தர் அந்த நம்பிக்கையை உறுதிப்படுத்திக்கிட்டு வர்றாங்க. நீங்களும் வந்து ஆசீர்வாதம் பண்ணா எனக்கு துளிகூட சந்தேகமேயில்லாம போய்டும்...''

- தமிழாசிரியர், சுந்தராம்பாளை ஏதோ ஒரு கலை மகளின் வடிவமாகவே பார்க்கிறார் என்பது அவரது பேச்சில் தெரிந்தது. ஆமோதித்தபடியே நடந்தாள் சுந்தராம்பாள். திலகம் இப்படிப் பல காட்சிகளைப் பார்த்திருக்கிறாள். சாதாரணமாக இந்த மாதிரி கட்டங்களில் சம்பந்தப்பட்டவர்கள் முகத்தில் ஒருவித கர்வம் தெரியும். ஆனால், சுந்தராம்பாள் இந்த மாதிரி தருணங் களில் எல்லாம் கலங்கிப் போவாள். அதுதான் ஏன் என்று தெரியவில்லை திலகத்துக்கு... இன்று கேட்டுவிடுவது என்று தீர்மானித்தவள் நடைக்கு நடுவில் அதை கேட்கவும் செய்தாள்.

''அக்கா...''

''என்ன திலகம்?''

''உங்களை ஒண்ணு கேட்கலாமா?''

''என்ன...?''

''இல்ல... சாதாரணமா யாராவது உங்களைக் கடவுள் மாதிரி நினைச்சு பேசும்போது ஏன் நீங்க சந்தோஷப்படாம கவலைப்படறீங்க...?''

''அது சந்தோஷப்படற விஷயமா திலகம்...?''

''என்னக்கா சொல்றீங்க?''

''கடவுள்னா காப்பாத்தணும். என்னால யாரை காப்பாத்த முடியும்? இவங்கள்லாம் இப்படிப் பொய்யா நம்பறாங் களேன்னு வருத்தப்படத்தானே முடியும்?''

''நீங்க பேசறது எனக்கு புரியலக்கா... எவ்வளவோ பேர் கோவில்ல உங்ககிட்ட குறை சொல்றாங்க. அதை எல்லாம் தீர்த்துத்தானே வைக்கறீங்க?''

''நானா?'' சுந்தராம்பாள் அப்படித் திருப்பிக் கேட்க, திலகத்துக்கே அதிர்ச்சியாக இருந்தது. அப்படி கேட்ட விதமே, 'நானில்லையடி பைத்தியமே...' என்று சொல்வது போலவும் இருந்தது. கூடவே குழப்பமாகவும் இருந்தது.

தாசி பங்களாவில்கூட ஒரு எல்லையோடு அவள் நின்றுவிடுவாள். சுந்தராம்மாள்தான் உள்ளே எங்கோ போய்

விட்டு வருவாள். ஒரு சராசரி ஆசையில் திலகமும் சிலசமயம் தாசி பங்களாவில் சுந்தராம்பாளைத் தேடிக் கொண்டு பின்னாலேயே போயிருக்கிறாள். ஆனால், அப்பொழுதெல்லாம் சுந்தராம்பாளைஅவள் பார்க்க முடியாமல் வெறும் அறை களைத்தான் பார்த்திருக்கிறாள். அந்த சமயங்களில் சுந்தராம் பாள் மாயமாகிவிட்டது போல தோன்றும். எது உண்மை என்றும் தெரியாது. அதுபற்றி சுந்தராம்பாளிடம் கேட்கவும் தைரியம் கிடையாது.

இன்று இந்த அளவுக்கு அவளிடம் கேள்வி கேட்டதே திலகத்துக்கு பெரிய விஷயமாக தோன்றியது. அதைவிட பெரிய விஷயம், சுந்தராம்பாள் அவளிடம் திருப்பி கேள்வி கேட்டது. திலகம் பதிலுக்கு என்ன கேட்பது என்பது தெரியாமல் குழம்பிய போது எதிரே புலையனின் பிரவேசம். மயான வாயிலில் பெரிய கும்பிடு போட்டபடி... உள்ளே ஒரு எரியும் சடலத்தின் புகை மூட்டம்.

"என்ன சம்பந்தா?" சுந்தராம்பாள் முதல் தடவையாக அவன் பெயரைச் சொல்லி விசாரித்தாள். 'புலையனுக்கு பெயர் சம்பந்தனா?' என்று திலகத்துக்குள்ளும் ஒரு ஆச்சரியம் உருண்டோடியது.

"அம்மா..."

"சொல்லு..."

"என்ன இது இரண்டாவது தட்வை...?"

"ஒரு சாவிக்கொத்தை மறந்து வெச்சுட்டேன். எடுத்துக்கிட்டு போகத்தான் வந்திருக்கேன்..."

"அப்படீங்களா... நான்கூட பிரசிடெண்ட்டு வந்திருக்கறது தெரிஞ்சுதான் வந்திருக்கீங்கன்னு நினைச்சேன்."

"பிரசிடெண்ட்டா... யாரு? கல்யாணசுந்தரமா?"

"ஆமாம்மா ஆவேசமா பங்களா பக்கம் போனார் அவரை எல்லாம் என்னால் தடுக்க முடியுமா? அதான் வேடிக்கை பார்த்தேன். என்ன நடக்குமோ ஏது நடக்குமோ தெரியலி யேன்னு நொந்து போய் கிடக்கறேன்..."

புலையனின் பதில் சுந்தராம்பாளைக் கிள்ளியது. வேகமாக நடக்கத் தொடங்கினாள். திலகமும் பின்தொடர்ந் தாள்.

பங்களா வாசலுக்கு சென்றபோது சுந்தராம்பாளுக்கு அதிர்ச்சி காத்திருந்தது. வெளியே கையும் காலும் இழுத்துக் கொண்ட நிலையில் கல்யாணசுந்தரம் கிடக்க, அவரைச் சுற்றிலும் நான்கு புறமும் படம் எடுத்த நிலையில் நாகங்கள்! திலகத்துக்கும் வியர்த்தது.

சுந்தராம்மாள் கிட்டே நெருங்கவும் சர்ப்பங்கள் விலகிச் செல்லத் தொடங்கின. குனிந்து கல்யாணசுந்தரத்தைப் பார்த்தபோது அவரது வாய் கோணிக்கொண்டு கண்கள் செருகிக் கொண்டிருந்தன. சுந்தராம்பாள் நிமிர்ந்து திலகத்தைப் பார்த்தாள்.

"திலகம்... ஓடிப்போய் சாமிநாதனை கூட்டிக்கிட்டு வா."

அடுத்த நொடி திலகம் அங்கிருந்து ஓடத் தொடங்கி னாள் சுந்தராம்பாளுக்கு கல்யாணசுந்தரத்தைப் பார்க்க பரிதாபமாக இருந்தது.

பல வருடங்களுக்குப் பின்னால் மனது சுழன்று கொண்டு ஓடியது.

**ஒரு நாள் இப்படித்தான் சுந்தராம்மாள் தாசி பங்களா நோக்கி புறப்படும்போது கல்யாணசுந்தரம் இடையிலேயே வந்து சேர்ந்து கொண்டார்.**

**"நானும் உன்னோட பங்களாவுக்கு வரப்போறேன்."**

**"இல்லீங்க... நீங்க வரவேண்டாம்..."**

**"ஏன் சுந்தரம்? நான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்க போறவன். வந்தா என்ன தப்பு?"**

**"கல்யாணமே பண்ணிக்கிட்டாலும் அப்பகூட 'நீங்க இங்க வரக்கூடாது. வேண்டாம்'னுதான் சொல்வேன்."**

**"நான் வந்தா என்ன தப்பு?"**

**"இது தப்பு - சரி சார்ந்த விஷயம் இல்ல. இந்த பங்களா விஷயத்தை இப்படித்தான் கொண்டுகிட்டு போகணும்கறது எங்க தலையெழுத்து. மீறி எந்த ஒரு ஆம்பளையாவது அங்க வந்தா அவங்க..."**

**சுந்தராம்பாள் எதையோ கூற முயன்று பின் விருப்பமில்லாதவள் போல் நிறுத்திக் கொண்டாள்.**

**"என்ன சுந்தரம்... ஏதோ சொல்ல வந்தே. அப்படியே விழுங்கிட்டியே..."**

***"வேண்டாங்க. அந்த பங்களா பத்தி மட்டும் எதுவும் பேசாதீங்க..."***

***"சுந்தரம்... இது என்ன பைத்தியக்காரத்தனம். நான் உன்னை கட்டிக்கப் போறவன். என்கிட்டயே ரகசியமா?"***

***"இது ரகசியம் மட்டுமில்ல. எங்களுக்கான சாபம்."***

***"உளறாதே... நீ தாசி குலத்தைச் சேர்ந்தவளா இருந்தும் நான் உன்னை விரும்பறத நினைச்சுப் பார். எல்லாரும் கூத்தியாளா வெச்சுக்கத்தான் ஆசைப் படுவாங்க. நான் சம்சாரமாவே வெச்சுக்க முன்வந்திருக் கறவன். என்கிட்டயே ஒளிவு மறைவா?"***

***மெல்ல கல்யாணசுந்தரம் வரம்பு மீறத் தொடங் கினார். சுந்தராம்பாள் முகமும் சிவக்க ஆரம்பித்தது. அதற்குப் பிறகு அவள் எதுவும் பேசவில்லை. ஆனால், கல்யாணசுந்தரம் பேசிக்கொண்டே போனார்.***

***"நான் ஆம்பளை... அங்கே பெருசா பேய் பிசாசே இருக்குன்னே வெச்சுக்க. அது என்னை அடிச்சாப்பிடும்? அப்படி அடிச்சா அதை சமாளிக்க எனக்கு தெரியாதா என்ன? இல்ல நீதான் என்னை விட்டுட்டு வேடிக்கை பார்ப்பியா?" இப்படி கண்டபடி கத்துகத்து என்று கத்தினார்.***

*நல்லதோ கெட்டதோ சில நேரங்களில் பேசினால் அது அப்படியே பலித்துவிடும்... நம்மைச் சுற்றியுள்ள பிரபஞ்ச வெளியில் நமக்குத் தெரியாதபடி தேவர்களும் தேவதை களும் பைசாசங்களும் போய் வந்து கொண்டிருக்கின்றன. அவர்களில் யார் காதுகளில் நாம் பேசுவது விழுகிறதோ அதற்கேற்ப அவர்கள் 'அப்படியே ஆகட்டும்' என்று கூறிவிடுவார்கள்.*

*அதன்பின் அது அப்படி ஆகியே தீரும்.*

*இதனாலேயே எப்பொழுதும் நல்லதையே நினைக்க வேண்டும். நல்லதையே பேசவும் வேண்டும் என்பார்கள் கல்யாணசுந்தரம் அன்று பேசியபோதுகூட ஏதாவது ஒரு தேவதை 'அப்படியே ஆகட்டும்!' என்று கூறியிருக்க வேண்டும். அதுதான் கல்யாணசுந்தரம் இத்தனை காலம் கழித்து இப்பொழுது இப்படி இங்கே கிடக்கிறாரோ என்றெல்லாம் தோன்றியது சுந்தராம்பாளுக்கு...*

நேரமும் உருண்டு கொண்டேயிருந்தது!

**கை**யில் லாந்தருடன் திலகம் வந்து நிற்பதைப் பார்த்த ரங்காயிக்கு தூக்கியடித்தது.

வரவே வராதவள் வந்திருக்கிறாள் அதுவும் ராத்திரி வேளையில்... பின்னாலேயே மொபெட்டை நிறுத்திவிட்டு சாமிநாதனும் வந்து கொண்டிருந்தான்.

"வா திலகம்... என்ன விஷயம்?"

"ரங்காயிக்கா... எங்க உங்க மகன்?"

"அதோ இப்பதான் வர்றான். என்ன விஷயம்?"

"அம்மா கூட்டிக்கிட்டு வரச் சொன்னாங்க..."

"சுந்தராம்பாம்மாவா? அதுவும் இந்த நேரத்துலயா?"

"ஆமாம். ரொம்ப அவசரம்...!" திலகம் தத்தளித்தாள்.

"என்ன விஷயம்? ஏன் உங்க குரல் நடுங்குது?"

- சாமிநாதன் கத்தரித்தான்.

"அது... அது..."

"என்ன...? சொல்லித் தொலைங்க." - வெடித்தான்.

"உங்கப்பா எங்க பங்களா பக்கம் வந்து பாக்கக்கூடாததை பார்த்து மயங்கி விழுந்துட்டாரு. அதுல கை கால் இழுத்துக்கிச்சி..."

- திலகம் சொல்லி முடித்த நொடி சாமிநாதன் வேகமாக வாசல்புறம் நோக்கித்தான் சென்றான். கதவோரம் அவிழ்த்து விட்ட செருப்பை அணிந்து கொண்டவன் அசுர கதியில் ஓட ஆரம்பித்தான்.

ரங்காயி தலையில் கைவைத்தபடி ஒரு ஓரமாக உட்கார்ந்துவிட்டாள். திலகமும் அப்படியே நழுவி தாசி பங்களா நோக்கி ஓடத் தொடங்கினாள்.

**தி**புதிபுவென்று ஓடிவரும் காட்டுக்குதிரை போல ஓடி வந்து நின்ற சாமிநாதன் கீழே கிடந்த கல்யாணசுந்தரத்தைப் பார்த்து அப்படியே நொறுங்கிப் போனான். பின் சுதாரித்தவன் "என்ன நடக்குது இங்கே... எதனால என் அப்பாவுக்கு இப்படி ஆச்சு?" என்று பெரிதாகக் கத்தத் தொடங்கினான்.

சுந்தராம்பாள் அவனை சற்று கோபத்தோடு பார்த்தாள்.

"என்ன பாக்கறீங்க...? உங்களைத்தான் கேக்கறேன். இங்க என்ன நடந்துச்சு...?"

"அதை உன் அப்பாகிட்டயே கேள்..."

"என்ன... உங்க பங்களாக்குள்ள நுழையப் பார்த்தவரை உங்க சித்து வேலையக் காட்டி இப்படி ஆக்கிட்டீங்களா?"

"சாமிநாதா... வார்த்தைகளை அளந்து பேசு."

"என்ன அளந்து பேசு? எவ்வளவு நாளா காத்துக்கிட்டு இருந்தீங்க? ஒருபக்கம் அங்க புதையல் கரியாகுது. இன்னொரு பக்கம் இங்க ஆளே மடங்கிப்போய் கிடக்கறாரு... உங்களுக்கு எதிரா யாராவது நடந்துகிட்டா அவங்களை இப்படித்தான் எதையாவது பண்ணி கீழே தள்ளுவீங்களா?"

"சாமிநாதா... இது கோபப்படற நேரமோ வாக்குவாதம் பண்ற நேரமோ இல்ல. முதல்ல உங்கப்பாவைத் தூக்கிக்கிட்டு டாக்டர் கிட்ட போ."

"என் கேள்விக்கு முதல்ல நீங்க பதில் சொல்லுங்க. இப்படியே எல்லா நாளும் நீங்க பொழுதைக் கழிச்சிட முடியாது. என் அப்பாவுக்கு மட்டும் ஏதாவது ஒண்ணு ஆகட்டும்... அப்ப வெச்சுக்கறேன். ஒரு பெரிய வெடிகுண்டை வாங்கிட்டு வந்து முதல்ல இந்த தாசி பங்களாமேல எறிஞ்சுட்டுதான் மறுவேலை பார்ப்பேன்... வரேன்."

சாமிநாதன், கல்யாணசுந்தரத்தைத் தொட்டு தூக்கிக் கொண்டு விறுவிறுவென்று நடந்தான். எதிரே வந்த திலகத்துக்கே அவன் பேச்சு திகைப்பாகத்தான் இருந்தது. ஆனால், அதைக் கேட்ட சுந்தராம்பாள் முகத்தில் சிரிப்பு.

ஒரு தமிழாசிரியர் அவளை தெய்வமாகக் குறிப்பிட்ட போது வருந்தியவள், சாமிநாதன் அவளைத் தூற்றியபோது சிரிப்பதைப் பார்த்து திலகம் குழம்பித்தான் போனாள்.

# 15

## அன்று



**சா**ரட் நல்ல அசுர வேகத்தில்தான் சென்று கொண்டிருந் தது தாடையை தடவிக் கொண்டு உட்கார்ந்திருந்தான் ராம்லால். அவனுக்குமேல் அதீத சிந்தனையில் சாஸ்திரிகள்.

சாரட்டும் கன்னியர் கரட்டை அடைய, புரவிகள் இரண்டும் நுரை கொப்பளிக்கின்றன. ராம்லால் சாரட்டை விட்டு துள்ளிக் குதித்தபடி இறங்கினான் மேலே கரட்டு உச்சியைப் பார்த்தபடியே ஓடினான்.

கல்மண்டபத்தை அடைந்தவன் அங்கே விக்கிரகம் இல்லாததைப் பார்த்து அதிர்ந்தான். மேலிருந்து உடனே கீழே இறங்கி சாஸ்திரிகளையும் நெருங்கினான்.

"என்ன ராம்லால்... பாபாஜியின் விக்கிரகம் இல்லையா?"

"ஆமாம் சாஸ்திரிகளே அந்த விக்கிரகம் இங்கிருந்து எப்படிச் சென்றது என்றே தெரியவில்லை..."

"நீங்கள் கொண்டு சென்று வைத்ததாகத்தானே தகவல் வந்தது?"

"நான் உங்களோடு இருக்கும்போது எப்படிச் சென்றிருக்க முடியும்... எல்லாம் புதிராக இருக்கிறதே?"

"பாபாஜியின் விஷயம் என்றாலே பெரும் புதிர்தான்..."

"சரி, வாருங்கள்... ஆலயத்திற்கு சென்று பார்ப்போம்...

- சாரட் திரும்பவும் ஓடத் தொடங்கியது.

**தோ**டீஸ்வரர் ஆலயத்தில் ஒரே கூட்டம். எல்லோரும் புதிதாக தோன்றியிருக்கும் பாபாஜி சிலை பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தனர்.

"தத்ரூபமாக இருக்கிறது... யார் கொண்டு வந்து வைத்தார்கள் என்பதுதான் தெரியவில்லை."

"என்ன அப்படிக் கூறுகிறீர்கள்...? அந்த சிற்பிதான் சுமந்து வந்தார்... அட... அதோ அவரே வந்துவிட்டாரே?" கூட்டத்தவரில் ஒருவர் கை நீளவும் ராம்லாலும், சாஸ்திரிகளும் உள்நுழைந்து கொண்டிருந்தனர்.

அவர்கள் பார்வையும் பாபாஜி சிலைமேல்தான் இருந்தது.

அதே சிலைதான். ருத்ர வீணையும் கையுமாக பாபாஜி அமர்ந்திருக்கும் கோலத்தில்...

சிலர் சிலைக்கு மாலை அணிவித்து சாம்பிராணி புகை கூட போட்டிருந்தனர். எங்கும் ஒரே சுகந்த வாசம்.

அப்போது பட்டரும் உள்ளிருந்து ஓடி வந்தார்.

"வாருங்கள் சாஸ்திரிகளே... பார்த்தீர்களா பாபாஜியை!" என்றும் கேட்டார்.

சாஸ்திரிகளும் கண்களில் பனிப்போடு பார்த்தார் ராம்லால்தான் அதிகம் வெளிறிப் போயிருந்தான். அவனால் துளிகூட நம்ப முடியவில்லை.

"சாஸ்திரிகளே... இந்த சிலை இங்கே வந்தவுடன் இதை அதோ அந்த மூலையில் வைத்துவிடலாம் என்று சிலர் முயன்றனர் அவர்களால் அசைக்கக்கூட முடியவில்லை. இவ்வளவு கனமான சிலையை எப்படி ஒரே ஒரு மனிதன் தன் தோளில் சுமந்து வந்தான் என்பது தெரியவில்லை. ஆமாம்... எங்கே அந்த சிற்பி?"

"இதோ... இவர்தான் அவர்..."

"அட... பார்ப்பதற்கு ஈர்க்குச்சிபோல இருக்கும் இவரா இந்த சிலையை தொட்டுத் தூக்கியது?"

ராம்லால் தொடர்ந்து மௌனத்திலேயே இருந்தான். அருகே சென்று தொட்டு வருடிப் பார்த்தான். 'கண்கள் திறப்பது' என்கிற ஒரு விஷயம் மட்டும் பாக்கி உள்ளது அதற்குள் விக்கிரகம் இங்கே வந்துவிட்டது.

ஏற்கெனவே பாபாஜி விக்கிரகம் அவனுக்குள் ஏகத்துக்கும் போக்கு காட்டிவிட்டது. இது உச்சபட்ச காட்சி.

'என்ன செய்வது?'

'இதை எப்படி எடுத்துக் கொள்வது?'

'அதிசயம் என்று ஒத்து ஊதுவதா? இல்லை நான்தான் கொண்டு வந்தேன் என்று பொய் சொல்லி அனைவரின் அன்பையும் பெறுவதா... எது உசிதம்?'

ராம்லாலுக்குள் சிந்தனை நீண்டுகொண்டே போனது. இறுதியில் 'நான்தான் சுமந்து வந்தேன்' என்று கூறிவிட அவன் தீர்மானித்தபோது வைஜெயந்தியும் ஆலயத்திற்கு வந்துவிட்டாள். அவள் கையில் ஒரு தங்க உளியும் சுத்தியலும் இருந்தன.

ராம்லாலை அவள் நெருங்கிட, அனைவரும் அவளை வரவேற்று முடித்தனர்

"வா மகளே இந்த அதிசயத்தைப் பார்த்தாயா? பாபாஜி, நீயும் நானும் வருமுன் ஆலயத்திற்குள் வந்துவிட்டார் சிற்பி ராம்லாலோ 'நான் கொண்டு வரவில்லை' என்கிறார். ஒரே புதிராக இருக்கிறது" என்றார் சாஸ்திரிகள்.

"இல்லை சாஸ்திரிகளே... நான்தான் பாபாஜியை சுமந்து வந்தேன். எனக்கு இப்பொழுதுதான் நினைவுக்கு வருகிறது. அதை நான் எப்படி மறந்தேன், எதனால் மறந்தேன் என்பது தான் பெரிய புதிரராக இருக்கிறது" என்று ராம்லாலும் யாரும் எதிர்பாராத ஒரு பதிலைக் கூறி முடித்தான்.

சாஸ்திரிகளோ முதல் தடவையாக அவனை அந்த பதில் ஒன்றுக்காகவே சந்தேகத்தோடு பார்த்தார்.

"சுமந்து வந்த உங்களுக்கு ஞாபகமறதியா விந்தை தான்" என்ற வைஜெயந்தி, "எது எப்படி இருப்பினும் பாபாஜி உரிய இடத்துக்குத்தான் வந்திருக்கிறார்.." என்றாள். சாஸ்திரிகள் அதற்கு மறுப்புக் கூறவில்லை. ஆனால், பட்டர் முகத்தில் மட்டும் சிறியதாக ஒரு உணர்ச்சி.

"என்ன பட்டரே ஏன் உங்கள் முகம் ஒருமாதிரி செல்கிறது?"

"அது வந்து..."

"எது வந்து...? எதுவாக இருந்தாலும் போட்டு உடையுங்கள்..."

"மகளே... நான் கூறுகிறேன் என்று தப்பாக கருதிவிடாதே. பாபாஜி ஒரு மகத்தான மனிதர்தான். அருளாளரும்கூட. நமது ஊருக்கே ஒரு பெரிய பொலிவைத் தந்தவர். ஆனாலும் வேற்று மதத்தவர் அவரது உருவச்சிலை நமது ஆலயத்துக்குள்

இடம்பெறுவது என்பது ஆகமப்படி சரியல்ல... நாயன்மார்கள், உபதேவதைகள் என்கிற தெய்வாம்சம் பொருந்திய விக்கிரகங்கள் கூட எந்த வரிசையில் எப்படி இடம்பெற வேண்டும் என்பதற்கு விதிமுறைகள் உள்ளன. பாபாஜியை இதில் எந்த வரிசையில் சேர்ப்பது?"

- பட்டர் நியாயமான கேள்வியைத்தான் கேட்டார். அந்த நொடி சாஸ்திரிகளுக்கு திருமலை ஞாபகம்தான் வந்தது. சப்த கிரி என்றும் திருப்பதி என்றும் அழைக்கப்படும் திருமலையில் அந்த ஆலயம் பெருவளர்ச்சியும் விஸ்தரிப்பும் பெறக் காரணமான நாயக்க அரசர்கள், அரசியர் சிலை இடம் பெற்றிருப்பதும் அனுதினமும் அவர்கள் பெருமாளை சேவித்தபடி இருப்பதும் நினைவுக்கு வந்தது.

மதுரை மீனாட்சியம்மை ஆலயத்திலும் ஊஞ்சல் மண்டபத்தில் மந்திரி ராமப்பய்யர் எதிரில் ஒரு மீனாட்சி விக்கிரகத்தை நிறுவி அதை அனுதினமும் சேவித்தபடி இருப்பார்.

இதெல்லாம் சாஸ்திரிகளுக்கு நினைவுக்கு வந்தன. "பட்டரே... பாபாஜி இந்த ஆலயத்திற்கு உயிரோட்டம் தந்தவர். இந்த ஊர் மக்களைக் காப்பாற்றியவரும்கூட! வறட்சியைப் போக்கி காவிரியில் வெள்ளம் ஓடச் செய்தவர் இறந்து விட்டதாகக் கருதியவரையே உயிர்பிழைக்க வைத்தவர். பல அற்புதங்கள் - அதிசயங்களுக்கு சொந்தக்காரர் அவர். ஆகவே அவரது திருவுருவச் சிலை கோவிலுக்குப் புறத்தில் எங்கு வேண்டுமானாலும் அமையலாம். அதில் தவறில்லை.

என் வரையில் பாபாஜியை நாங்கள் இங்கே கொண்டு வந்து பிரதிஷ்டை செய்யவில்லை. அவர் சிலை ஒரு தேவ சக்தியால் தானாக இங்கு வந்ததாகவே கருதுகிறேன். எனவே இது இங்கே இருப்பதுதான் உசிதம். இதனால் ஆகம பங்கம் ஏதுமில்லை. மாறாக வெளியே இதை தூக்கி எறிவதே ஆகம பங்கமாகும். நாமும் பரந்த மனதோ, நன்றி உணர்வோ இல்லாதவர்களாகி விடுவோம். சித்தர்கள்-ஞானியர்களை மத வளையத்துக்குள்ளும், ஜாதி வட்டத்துக்குள்ளும் அடைத்துப் பார்ப்பது மிகமிக மலிவான ஒரு செயல். நாமெல்லாம் ஒரு நேர்கோடு போன்றவர்கள். ஆரம்பம், முடிவு நமக்கு உண்டு. ஆனால், ஞானிகள் அப்படிப்பட்டவர்கள் அல்ல. அவர்கள் வட்டங்களைப் போன்றவர்கள் வட்டத்தில் ஆரம்பம் எது, முடிவு எது என்று யாரால் கூற முடியும்?

இதற்கு மேல் இந்த விஷயத்தை குறுகிய புத்தியோடு பெரிதுபடுத்தாமல் அப்படியே விட்டுவிட்டு பாபாஜியை வணங்க முயலுவோம். அதுவே நமக்கு மேன்மையானதாகும்."

சாஸ்திரிகள் கருத்துதான் இறுதியில் ஏற்கப்பட்டது. வைஜெயந்தி உற்சாகமாக தங்க உளியையும் சுத்தியலையும் ராம்லால் எதிரே நீட்டினாள். எல்லோரும் கூப்பிய கரங்களுடன் சூழ்ந்து நிற்கும் நிலையில் ராம்லால் மெல்ல சிலையை சமீபித்து 'கண் திறப்பது' என்கிற சடங்கிற்கு தயாரானான்.

எல்லோரையும் ஒரு சுற்று சுற்றிப் பார்த்தான். பட்டர்கூட கண் திறந்த உடன் கற்பூர தீபாராதனை காட்ட தட்டுடன் - அகல தீபமுடன் தயாராக இருந்தார். ஓடிச் சென்று மலர்தூவுவதற் காக கோவில் நந்தவனத்து அரளிச் செடியில் மலர்ந்திருந்த மலர்களை அப்படியே கொத்தாக பறித்து வந்திருந்தனர்.

ராம்லாலும் சற்றே நடுங்கும் கைகளுடன் பாபாஜியின் சிலையில் புருவத்துக்கு கீழே கையைக் கொண்டு சென்று தங்க உளியின் நுனியை கண்ணின் பாப்பா மணிமேல் வைத்த நொடி பாபாஜி அவனை முறைத்துப் பார்ப்பதுபோல ஒரு பிரமை தட்டி அப்படியே சில அடிகள் பின்னால் வந்தான்.

"என்னாயிற்று ராம்லால்?"

"ஒன்றுமில்லை... ஒன்றுமில்லை... பாபாஜியே நேரில் பார்க்கிற மாதிரி ஒரு பிரமை..."

"இருக்கும்... இருக்கும்... அவர் பார்த்தால் உங்கள் பாபங்கள் தீர்ந்துவிட்டது என்று பொருள்."

பட்டர்தான் கூறினார்.

ராம்லாலுக்கு வியர்த்தது.

மனதிலும் புதிது புதிதாக எண்ணங்கள்.

அப்படியே தெம்பை வரவழைத்துக் கொண்டு பாபாஜி யின் இரு கண்களிலும் திறப்பை உண்டாக்கியவன் வியர்த்து வடிந்துவிட்டிருந்தான். அடுத்த நொடி பாபாஜி சிலைமேல் மலர்கள் சொரிந்தன. பட்டர் கற்பூர ஆரத்தி காட்டினார். சாஸ்திரிகளும், வைஜெயந்தியும் கண்களில் நீர் பெருக, கைகளைக் கூப்ப - அங்கே நிற்கவே ராம்லாலுக்கு என்னவோ போல் இருந்தது.

மெல்ல நழுவியவன் விறுவிறுவென்று நடந்து ஆலயத் துக்கு வலப்பக்கம் செல்லும் பாதை நோக்கி நடந்தான். அந்த

பாதைக்கு இருபுறத்தில் ஒருபுறம் அடர்வான மாந்தோப்பு; இன்னொருபுறமோ தென்னந்தோப்பு.

தென்னந்தோப்பில் கறுப்பு புரவி ஒன்று நின்று கொண்டிருந்தது. அதைப் பார்த்தவன் அப்படியே நின்றான். தென்னை மரம் ஒன்றின் கீழ் ஒரு இஸ்லாமிய வீரன். அவனைப் பார்க்கவும் ஓடினான்.

"மன்சூர்..."

"வா ஷாநவாஸ்... உனக்காகத்தான் காத்துக் கொண்டிருக் கிறேன்."

"நீ எப்பொழுது வந்தாய்?"

"நான் வந்து இரு தினங்களாகிவிட்டன."

"டெல்லிப் பட்டணத்தில் உன் குடும்பத்தவர், என் குடும்பத்தவர் எல்லோரும் நலமா?"

"எல்லோரும் நலமே... ஆமாம், நீ வந்த விஷயம் என்னாயிற்று? நீ எப்பொழுது இங்கு வந்தாய். நவாப்ஜான் பாபாவை சந்தித்தாயா?"

"இல்லை மன்சூர் நான் வரும் முன்பே நவாப்ஜான் அல்லாவிடம் போய் சேர்ந்துவிட்டார்"

"அப்படியா... போகட்டும். அந்த மாளிகைக்குள் நுழைந்து விட்டாயல்லவா?"

"இல்லை. இப்பொழுதுதான் காலடி எடுத்து வைத்திருக்கிறேன். ஆனால், அதற்குள் என்னென்னவோ நடந்துவிட்டது. நானும் இப்பொழுது பெருங்குழப்பத்தில் இருக்கிறேன்."

"என்ன கூறுகிறாய் நீ?"

"நவாப்ஜான் அந்த ருத்ர வீணையை இந்த தோடி புரத்துக்காரர்களிடம் கொடுத்துவிடக்கூடாது என்பது நமது விருப்பம். அப்படியே அந்த வீணையுடன் நவாப்ஜானையும் கூட்டிக் கொண்டு டெல்லி திரும்பிவிட வேண்டும் என்கிற திட்டத்தில்தான் நான் நவாப்ஜானை பின்தொடர்ந்து வந்தேன். ஆனால், அல்லாவின் தனிப்பெருங்கருணை நவாப்ஜானிடம் பெருகி வழிந்ததால் இடைவழியில் எனக்குப் பெரிதும் உடல் நலம் இல்லாமல் போய் படுத்த படுக்கையாகிவிட்டேன் குணமான நிலையில் நான் இங்கே வந்து சேர்ந்தபோது பாபாஜி

என்கிற பெயரில் நவாப்ஜான் ஒரு தெய்வமாகவே ஆகிவிட்டதை பார்த்தேன்.''

''நவாப்ஜான் நம்மைப்போல ஒரு மனிதன். அவனது குருநாதன் கூறினான் என்பதற்காக இந்த தோடிபுரம் நோக்கி வந்தவன் அவனை நேர்மையானவன், நன்றியுடையவன், குணமுள்ளவன் என்று கூறு; ஒப்புக்கொள்கிறேன் தயவு செய்து அவனையும் கடவுளையும் ஒன்றுபடுத்திப் பேசாதே... அல்லாவுக்கு இணை உலகில் எவரும் இல்லை...''

''அப்படி இல்லை மன்சூர் எப்படி அல்லாவின் பிரதிநிதியாக நபிபெருமானார் வந்தாரோ அப்படித்தான் நான் நவாப்ஜானையும் பார்க்கிறேன். ஆலயத்தில் சாஸ்திரிகள் சொன்னது போல ஞானிகளை, அருளாளர்களை நாம் ஒரு வட்டத்துக்குள் அடைக்கப் பார்ப்பது தவறு... நவாப்ஜான் அந்த வீணையைக் கொண்டு பல அதிசயங்களை நிகழ்த்தியுள்ளார். இன்று ஊரே அவரைக் கடவுளாகக் கொண்டாடுகிறது. எனக்கும் சில அனுபவங்கள். அந்த அனுபவங்களைச் சொன்னால் நீ நம்பமாட்டாய். மாயம் என்பாய். ஆனால் ஒன்று நவாப்ஜான் இறந்தாலும் அவரது ஆன்மா இங்கேயே சுற்றி வருவதுபோல்தான் எனக்கு தோன்றுகிறது...''

''முட்டாளைப்போல பேசாதே ஷாநவாஸ். இந்த ஆத்ம விசாரமெல்லாம் நமக்கெதற்கு? வீணை என்னாயிற்று அதைக் கூறு?''

''அது இனி நமக்கு கிடைக்காது. உரியவர்களிடம் அது சென்று சேர்ந்துவிட்டது. அதை முறையோடு சேர்த்ததால் நவாப்ஜானும் ஊரே கொண்டாடி மகிழும் ஒருவராகி விட்டார் இந்த விஷயத்தில் நீயும் நானும் எதுவும் செய்ய முடியாது. வீணையை மறந்துவிட்டு ஊருக்குப் புறப்படுவது தான் உகந்த வழி. அதனால்தான் நான் சிலையை செய்து கண் திறந்த நிலையில் இதோ இந்த தங்க உளியுடன் ஓசைப்படாமல் வந்துவிட்டேன்.''

''ஷாநவாஸ்...! இதற்காக நீ பட்ட பாடுகளை ஒரு வினாடி எண்ணிப் பார்...''

''எனது பாடு சுயநலமானது. ஆனால், நவாப்ஜானின் பாடு நேர்மையானது. நேர்மை முன் சுயநலம் ஜெயிக்க முடியவில்லை மன்சூர் ஜெயிக்கவும் கூடாது.''

"பைத்தியக்காரா... அந்த வீணையை அபகரிக்க யார் யாரோ திட்டமிட்டிருக்கின்றனர். நீயும் நானும் விட்டுவிட்டு செல்வதால் அது இங்கேயே காலகாலத்துக்கும் பாதுகாக்கப் படும் என்று மட்டும் நம்பிவிடாதே. ஷிமோகாவில் உள்ளற மாந்திரீகர்கள், காபாலிகர்கள், பைராகிகள் என்று ஒரு கூட்டமே குறிவைத்து தோடிபுரம் நோக்கி வந்தபடி உள்ளது."

"தெரியும். இதில் ஷிமோகா மாந்திரீகர்களும், காபாலி கர்களும் புறமுதுகிட்டு ஓடிவிட்டனர். வீணையின் அருகில் கூட நெருங்க முடியவில்லை. பைராகிகளுக்கும் அதுதான் முடிவு."

"அப்படியானால் வெறும் கையுடன் ஊர் திரும்புவதுதான் உன் முடிவா?"

"அதுதான் கௌரவமான செயல். நான் ஒரு நல்ல காரியமும் செய்திருக்கிறேன். என் கைகளால் பாபாஜியை செதுக்கியிருக்கிறேன். போகிற போக்கில் கற்றுக்கொண்ட வித்தைக்கு இன்றுதான் முழு அர்த்தம் கிட்டியுள்ளது ராம்லால்" என்று கூறிக் கொண்ட ஷாநவாஸ் நெகிழ்ச்சியுடன் பேசவும், மன்சூர் என்கிற அந்த வீரனும் அதற்குமேல் அவனிடம் பேசுவதில் எந்த பொருளும் இல்லை என்பதுபோல உணர்ந்து மௌனமானான் பின் இருவரும் அந்த புரவியை மரத்தி லிருந்தும் அவிழ்த்துப் பிடித்துக் கொண்டு அப்படியே ஊரை விட்டு விலக ஆரம்பித்தனர் நடுவில் கோவில் மணி சப்தம் காதைத் தீண்டவும், ஷாநவாஸ் மட்டும் திரும்பிப் பார்த்தான். பின் கழுத்தை வளைத்து ஆகாயத்தைப் பார்த்து பெரும் நெகிழ்ச்சியுடன் மனதுக்குள் இறைவனை எண்ணிக் கொண்டான். அவர்கள் இருவரும் விலகிய அதேசமயம் அந்த ஊருக்குள் இசையில் மேதை என்றும் புதிய ராகங்களைக் கண்டறிந்த ஒரு ஞானி என்றும் தஞ்சை நகரமே சொல்லிக் கொண்டிருக்கும் முத்துவிநாயகம் பிள்ளை என்பவர் தனது பரிவாரங்களுடன் ஊருக்குள் நுழைந்து கொண்டிருந்தார்.

## இன்று

**க**ல்யாணசுந்தரத்தை தோளில் போட்டுக் கொண்டு வீட்டுக்குள் நுழைந்த சாமிநாதனைப் பார்த்து அப்படியே விக்கித்துப் போய்விட்டாள் ரங்காயி.

படுக்கையில் அவரைக் கிடத்தியவன் மேற்கொண்டு என்ன செய்வது என்று யோசிக்கும்போது திலகம் மூலம் செய்தியறிந்த பானு தன் கிட் பேக்குடன் உள்நுழைந்து கொண்டிருந்தாள். அவளோடு உபாசகரும் சேர்ந்து வந்து கொண்டிருந்தார்.

கோணவாயும் குத்திய விழிகளுமாய் இருந்தவரை ஊன்றிப் பார்த்தவர் "அம்பிகே" என்றார் பலமாக. பானு மளமளவென்று முதலுதவி அளிக்கத் தயாராகிவிட சாமிநாதனிடம் குமுறல்.

"பாத்தீங்களா சாமி... அந்த தாசி பங்களா பக்கம் போய் எங்கப்பா இப்படிக் கிடக்கறதை... அப்படி என்னதான் அங்கு இருக்குதோ தெரியல சாமி. நீங்களும் வெட்டியா ஊரை சுத்திச் சுத்தி வர்றீங்களே தவிர உருப்படியா ஒரு காரியம்கூட பண்ணலை." சாமிநாதன் வெடித்துச் சிதறினான்.

"சாமிநாதா... நீ இப்ப துக்கத்துல இருக்கே. கோபமும்கூட கலந்துடுத்து. இந்த மாதிரி சமயங்கள்ல ரொம்ப கவனமா பேசணும். வார்த்தைகளை விடக்கூடாது."

"போதும் சாமி... நான் கேட்டதுல என்ன தப்பு? அதை முதல்ல சொல்லுங்க. நீங்கதான் பெரிய மந்திரவாதி ஆச்சே. அப்பாவுக்கு எதனால் இப்படி ஆச்சுன்னு சொல்லுங்களேன்."

"இப்பதான் கவனமா பேசணும்னேன். என்னை மந்திர வாதின்னு கொச்சைப்படுத்தறே. உன் அப்பா இப்படி இருக்க அவரோட ஆத்திரமும் அவசரமும்தான் காரணம்.

மீன் பிடிக்க போறவன் வலையோட போகணும். பதி லுக்கு ஒரு குச்சியோட போனா பிரயோஜனம் கிடையாது. வேட்டைக்கு தக்குன ஆயுதம் முக்கியம். உங்கப்பா அவசரப் பட்டுட்டார்."

"போதும் சாமி... நீங்கள்லாம் பேசத்தான் லாயக்கு. நான் கண்டுபிடிக்கறேன் - அந்த பங்களா மர்மத்தை..." சாமிநாதனிடம் ஆவேசம் அடங்கவில்லை. பானு ஒரு ஊசியை போட்டுவிட்டு அவன் பதிலுக்காக ஒரு பார்வை பார்த்தாள்.

"என்ன பானு... உங்கம்மாவையும், உங்க பங்களா மர்மத்தையும் பத்தி பேசறேனேன்னு கோபமா?"

"ப்ச்ச்... இப்ப எதுக்கு அந்த பேச்சு. உங்கப்பாவை இம்மீடியட்டா தஞ்சாவூர்ல ஒரு நியூராலஜி ஸ்பெஷலிஸ்ட் கிட்ட காட்டணும். எதையோ பார்த்து பயந்து கீழே விழுந் துருக்கார் அப்ப அதிர்ச்சியில அவர் தலைல அடிபட்டு

அதனாலதான் அவர் கான்ஷியஸ் இல்லாம இருக்கார் இப்படியே விட்டா பிளட் கிளாட் ஆகி ஒன் ஸைடு பர்மனன்ட்டா செயலிழந்து போயிடும்..."

'பானு, பயமுறுத்தாதே... நான் இப்பவே போய் டாக்ஸி... இந்த ஊர்ல ஏது டாக்ஸி... ஓகே... நான் எப்பாடுபட்டாவது ஒரு டாக்ஸி கூட்டிக்கிட்டு வரேன்." என்றவன் ஓடினான். வாசல் தாண்டும்போது வீட்டு வாசலில் டாக்டர் ஒருவர் தன் கிட் பேக்குடன் நுழைந்து கொண்டிருந்தார். பானு சொன்ன அதே நியூராலஜி ஸ்பெஷலிஸ்ட்!

"டாக்டர்...?"

"டாக்டரேதான். இதுதானே மிஸ்டர் கல்யாணசுந்தரம் கறவர் வீடு..."

"அ... ஆமா... நீங்க எப்படி?'

"நான் நியூராலஜிஸ்ட் ராகவன். இங்க கோவிலுக்கு வந்திருந்தேன் அப்ப சுந்தராம்பாம்மாவையும் பார்க்கப் போயிருந்தேன் அவங்கதான் உங்க அப்பாவுக்கு தலைல அடிபட்டு பேச்சு மூச்சு இல்லாம இருக்கறதா சொன்னாங்க. அதான் வந்தேன்..."

"ஓ... இதைத்தான் கும்பிடப் போன தெய்வம் குறுக்க வந்ததுன்னு சொல்வாங்களே... வாங்க டாக்டர்..." - சாமிநாதன் அவரை அழைத்துக் கொண்டு திரும்பினான். வெளியே ஓடியவன், போன வேகத்தில் டாக்டரோடு வரவும், பானு முதல் எல்லோருக்குமே ஒரே ஆச்சரியம்.

"பானு... நீ சொன்ன டாக்டர் நம்ம ஊர்லயே இருந்துருக்கார் பார்..." சாமிநாதன் கூற, டாக்டர் மளமள வென்று பரிசோதித்து முடித்து மருந்தும் எழுதிக் கொடுத்து விட்டு சாமிநாதனைப் பார்த்து ஒரு பெருமூச்சுவிட்டார்.

"டாக்டர்..."

"பயப்படாதீங்க. தலைல கொஞ்சம் பலமான அடி, அதான் இப்படி பிரமை பிடிச்ச மாதிரி இருக்கார் இது கொஞ்சம் காம்ப்ளிகேடிவ் ஆன விஷயம்தான். மெல்லத் தான் குணமாகும். இந்த மாத்திரை மருந்துகளைக் கொடுத் துகிட்டு வாங்க."

"டாக்டர் மெல்லத்தான்னா... எவ்வளவு நாளாகும் டாக்டர்?"

"ஒரு ஆறு மாச காலம்னு வெச்சுக்குங்களேன்."

"ஆறு மாசமா அய்யோ இவர் பார்த்து பண்ண வேண்டிய காரியங்கள் நிறைய டாக்டர் "

"இனி ஓய்வுதான். ரொம்ப உணர்ச்சிவசப்பட்டா அது உடல்நிலையை இன்னும் மோசமாக்கிடும். கவனம்... நான் வர்றேன்."

டாக்டர் வந்த வேகத்தில் கிளம்பியது உபாசகரை கொஞ்சம் சந்தேகப்பட வைத்தது. டாக்டர் வெளியேறும் போது உபாசகரும் உடன் சென்றார் செல்லும்போதே மனதுக்குள் ஒரு மந்திரத்தை அப்பியாசித்தபடியேதான் சென்றார். வாசலைக் கடந்த நிலையில் அந்த மந்திரத்துக் கான முணுமுணுப்போடு டாக்டரைப் பார்த்தபோது டாக்டர் தெரியவில்லை. அசோகன்தான் தெரிந்தான் ஒரு குறுஞ் சிரிப்பு சிரித்தான் அந்த சிரிப்புக்குள் ஏராளமான உட் பொருள்!

உபாசகரோ ஸ்தம்பித்து விட்டிருந்தார்

**லா**ட்ஜ் ஜன்னலின் திரைச்சீலையை விலக்கியபோது எதிரே பிரகதீஸ்வரர் கோவில் கோபுரம் தொலைதூரத்தில் தெரிந்தது. பார்த்துக் கொண்டே நின்றுகொண்டிருந்தான் ருத்ரேஸ்வர்

குளித்து முடித்து உடை மாற்றிய நிலையில் வந்த மந்த்ரிணிக்கு ருத்ரேஸ்வரின் தீர்க்கமான மௌனம் ஒரு ஆச்சரியம். அவள் பார்க்க அவன் சதா படித்தபடி இருப் பான். இல்லாவிட்டால் கண்களை மூடி தியானத்தில்தான் இருப்பான். இப்படி எங்கோ வெறித்துப் பார்த்தபடி இருப்பது எல்லாம் மிகமிகப் புதிய விஷயங்கள்

"ஈஸ்வர்..." என்றாள் மென்மையான குரலில். அவனும் திரும்பினான். நெற்றியில் புருவம் சற்று மை பூசப்பட்டு மிகவும் கடுமையாகத் தெரிந்தது.

"என்ன ஈஸ்வர் நெற்றியில...?"

"அஞ்சனாத்ரிங்கற கவச மை...

"எதுக்கு?"

"கவசம் எதுக்கு ஒருவருக்கு?"

"பாதுகாப்புக்கு..."

"இதுவும் அதுக்குத்தான்...

"அப்ப இப்ப ஆபத்துலயா இருக்கோம்?"

"இனி அது வரலாம்கறது என் யூகம்...

"எப்படி... எந்த வகைல?"

"தோடிபுரம் போனா உனக்கு நான் சொல்லாமலே விளங்கிடப் போகுது..."

"அப்ப தோடிபுரத்துக்கு திரும்ப போகப் போறோமா?"

"நிச்சயமா. என் வரைல தோடிபுரம்தான் உண்மையான மானஸரோவர் உண்மையான அமர்நாத். உண்மையான திருவண்ணாமலை."

"எப்ப போகப் போறோம் ஈஸ்வர்?"

"இன்னிக்கே... இப்பவே... நீ தயார்தானே?"

"நான் எப்பவோ தயார்... ஆமா அங்க போனா தங்க இடம் இல்லையே? எங்க, எப்படி தங்குவோம்?"

"அதுக்குதான் நான் உரிய ஏற்பாட்டை செய்திருக்கேனே..."

"அப்படியா... எப்ப செய்தீங்க?"

"இனி கேள்வி கேட்காதே. நடக்கறத மட்டும் கவனி."

ஈஸ்வர் கட்டளைக் குரலில் கூறிவிட்டு லக்கேஜ்களை எடுத்து வைத்துக் கொள்ளத் தொடங்கினான். மந்த்ரிணியும் தயாரானாள் ருத்ரேஸ்வர் ஒரு புளியங்கொட்டையளவு கோமேதகக்கல் கொண்ட மோதிரம் ஒன்றை எடுத்து மோதிர விரலில் அணிந்து கொண்டான். அதை கவனித்த மந்த்ரிணியும் கேட்டாள்.

"ஈஸ்வர்...! அது என்ன கல்வெச்ச மோதிரமா?"

"ஆமாம்... கோமேதகம். எனக்கு ராகு ஆறுல மறைவு. ஆறாமிடம் ரோகஸ்தானம். அங்க ராகு மறைஞ்சது நல்லது தான். அதேசமயம் உடல்நலனுக்கு அப்பப்போ சில பிரச்சினைகள் வரும். அதை தடுக்கவும் சமாளிக்கவும் ராகுவோட பணியைச் செய்யற இந்த கோமேதகத்தை அணிஞ்சிக்கிறேன்..."

"இந்தக் கல் எப்படி உங்களுக்கு உதவி செய்யும்? இதுக்கு அவ்வளவு சக்தியா?"

"அதுல என்ன சந்தேகம்? இந்த உலகமே பஞ்ச பூதங்களால ஆனது. உன் உடம்பு... என் உடம்பு... இதோ இந்த கட்டடம்... அந்த மரம் எக்ஸெக்ட்ரா எக்ஸெக்ட்ரா- எல்லாமே பஞ்ச பூதக்

கலவைதான்... பஞ்சபூதக் கலவையான எல்லாமே மாறக் கூடியதும்கூட. அப்படியே அழியக்கூடியதும்கூட... ஆனா இந்த நவரத்னங்கள் மட்டும் எந்தக் காலத்துலயும் இந்த பூதங்களால் எந்த பாதிப்புக்கும் உள்ளாகறதில்லை. இந்த பஞ்ச பூதங்களோட தங்கத்தையும் சேர்த்துக்கோ தங்கத்தை ஒரு நிலையான மாறாத செல்வம்னும் சொல்வாங்க. நம்ம மதத்துல சுருக்கமா தங்கத்தை மகாலட்சுமின்னும் சொல்வாங்க.

தங்கத்தை தண்ணியாலயே, காற்றாலயோ, நெருப் பாலயோ எதுவும் செய்ய முடியாது. அதை அழிக்க முடி யாது. மாற்ற முடியாது. நிகரில்லாத உலோகம். அதனால உறுதியான நல்ல மனசு கொண்டவங்கள தங்க மனசுக் காரங்கன்னு சொல்றோம். இப்படிப்பட்ட தங்கம் ஒருத்தர் உடம்புல இருக்கறது ஒரு உன்னதமான விஷயம். அந்த தங்கத்துல இந்த மாதிரி கற்கள் சேரும்போது இதுக்கு பல மடங்கு சக்தி கூடிடுது..."

"அப்ப இந்த கல் பேட்டரி சிப் மாதிரியா?"

"இதோட பணி சிப் மாதிரிதான். இப்ப ஒருத்தர் பிறக்கும் போது வான்வெளில புதன் கிரகம் நீச்ச கதில அதாவது சக்தி யில்லாம சஞ்சரிச்சுவிட்டு இருக்கன்னு வெச்சுக்கோ... அவர் உடம்புலயும் புதன் கிரகப் பணி நீச்ச கதில பலமில்லாமதான் இருக்கும். இதனால புதன் கிரகம் தொடர்பான கல்வி, கணக்கு வழக்கு, இதர எழுதற படிக்கற ஆற்றல் அவருக்கு ரொம்ப குறைவா இருக்கும். இந்தக் கல் மோதிரம் விரல்ல ஏறும்போது இதோட இயக்கம் புதன் கிரகத்தோட நீச்சகதிக்கான காம்பன் சேஷன் மாதிரி ஆயிடுது.

சர்க்கரை வியாதி உள்ளவங்க தங்கள் உடம்புல இன்சுலின் குறையும்போது ஊசி மூலமா இன்சுலின் போட்டுக்கற மாதிரி தான் இதுவும். குறிப்பிட்ட கிரகத்தோட குறைபாட்டை ஈடு செய்து நிரந்தரமா பலப்படுத்திக்கத்தான் கற்களையே அந்த பிரம்மா படைச்சிருக்கான்.

அதனாலதான் ராஜாக்கள் இந்த கற்களால ஆன கிரீடங் களை தலைக்கு மேல தரிச்சுகிட்டு சபையை நடத்தினாங்க.

ஒரு அரசன் சராசரி மனிதனைப்போல இருந்தா தேசம் தாங்குமா? அவன் கட்டாயம் பலவானா எல்லா விதத்துல யும் சிறப்பா இருக்கணும். அதுக்கு அவன் ஜாதகத்துல எல்லாவித பலன்களும் இருக்கணும். ஆனா, இந்த உலகத்துல

பிறந்திருக்கற யாருக்குமே எல்லா நாளும் எல்லா கிரகங் களும் நல்ல நிலைலயே சஞ்சரிச்சுகிட்டு இருக்காது. ஒண்ணு இப்படி, ஒண்ணு அப்படின்னுதான் இருக்கும். அப்ப அந்த குறைபாட்டுல இருந்து தப்பிச்சுக்கற ஒரு மார்க்கம்தான் கல். அரசன் அதை தலைக்கு மேல சுமந்து கதிர்வீச்சை அடைஞ்சு தன்னை பலப்படுத்திக்கிறான்.

நாமளோ மோதிர விரல்ல அதை போட்டுக்கறோம். இந்த மோதிர விரல் நரம்புதான் இதயம் வரை போகுது. அதனால இதோட பவர் அதே நரம்பு வழியா இதயம் வரை போய் அங்க இறைக்கப்படற ரத்தத்துல கலந்து உடம்பு முழுக்க பரவி கோளோட சக்தியை உடம்பு முழுக்க ஒரு மெல்லிய - நம்மால உணர முடியாத மின் சக்தியா வெச்சுருக்கு. இதுதான் சூட்சமம்..."

ருத்ரேஸ்வர் கல்லுக்கும், தங்கத்துக்கும் அளித்த விளக்கம் மந்த்ரிணிக்கு புதியது. அப்படியே அவன் கையைப் பற்றி அந்த கல்லை ஆசையாகப் பார்த்தாள்

பாத்தபடி "இது ஒரிஜினலா?" என்று கேட்டாள். "நல்ல கேள்விதான்... ஒரிஜினல் கல் போட்டால்தான் வேலை செய்யும். டூப்ளிகேட்டை போட்டா ஒரு பிரயோஜனமும் இல்லை. இது ஒரிஜினல்ங்கறதுக்கு ஆதாரம்: எனக்கு சின்ன அளவுல வர்ற சளி, காய்ச்சல், தலைவலி தொல்லை கூட இப்ப எனக்கு வர்றதில்லை மந்த்ரிணி..." என்றபடியே அந்த கோமேதகக்கல் மோதிரத்தை முத்தமும் இட்டான். அதில் நிறையவே செருக்கு. அப்படியே இருவரும் புறப்பட்டு காரில் ஏறி அமர்ந்து கொண்டனர் காரும் தோடிபுரம் நோக்கி சீற ஆரம்பித்தது.

**தோ**ட்டத்து குடிசையில் உபாசகர் 108 விளக்குகளை அதுவும் நெய்விளக்காக ஏற்றி வைத்துவிட்டு நடுநாயகமாக அவரும் அமர்ந்து கொண்டார். அப்படியே ஜெபிக்க ஆரம் பித்தார். இது தெரியாத் கணேசன், "ஸ்வாமி... ஸ்வாமி" என்று அவரை அழைத்தபடியே வந்தான்.

எப்பொழுதும் உபாசனை செய்பவர்கள் உபாசிக்கும் தெய்வத்திடம் ஒரு குட்டி விண்ணப்பமும் செய்து கொள் வார்கள் ஜெபம் முடியும் வரை எந்தவிதமான தடையும் ஏற்பட்டுவிடாமல் உபாசனா தேவதையே தன்னைப் பாதுகாக்க வேண்டும் என்று வேண்டிக் கொள்வார்கள்.

ஜெபிக்கும்போது தடை வருகிறது என்றால் அவர்களுக் கான காலகதியில் கிரகங்கள் அவர்கள் ஆசைக்கு எதிராக உள்ளன என்பது பொருள். கோள்களை எதிர்த்துக் கொண்டு மனோதிடத்தோடு செயல்பட அசாத்திய மனஉறுதி வேண்டும். உடம்பில் மனம்தான் ஆத்மாவாக சக்தி அம்சமாக கருதப் படுகிறது.

ஒரு ஆற்றை அணைகட்டி தேக்கி நிறுத்துகிற மாதிரி இந்திரியங்களை, அதாவது பஞ்ச பூதங்களால் ஆன இந்திரியங்களை மனமாகிய அணை கொண்டு தடுத்து தேக்கி நிறுத்திடத் தெரிய வேண்டும். பரம்பொருளின் பரிபூரண அனுக்கிரகம் பெற்றவர்களுக்கே இது சாத்தியமாகும். இல்லா தவர்கள் உடைந்து போவார்கள். அவர்கள் உபாசனை கலையும். இதை வைத்தே அவர்கள் தங்கள் பலவீனமான நிலையைத் தெரிந்து கொள்ளலாம்.

உபாசகருக்கும் கணேசனால் அவர் நோக்கம் கலைந்து போயிற்று. சலனத்துடன் கண் திறந்து கணேசனைப் பார்த்தார். அந்த பார்வையில் கோபமும் இருந்தது. கணேசனும் அதை உணர்ந்தான்.

"ஸ்வாமி... அவசரப்பட்டுட்டேனோ?"

"பட்டதுக்கு பிறகு இது என்ன கேள்வி?"

"மன்னிச்சுக்குங்கோ. ஒரு முக்கியமான விஷயம். அதான் ஓடி வந்தேன்..."

"என்ன... கல்யாணசுந்தரத்துக்கு கை கால் இழுத்துண்ட விஷயமா?"

"இல்ல... என் அப்பாவும் அம்மாவும் நிஜமாலுமே ஒரு நாலு நாள் திருப்பதிக்கு போகப் போறா..."

"அதுக்கென்ன இப்போ?"

- உபாசகர் அப்படி ஒரு கேள்வி கேட்பார் என்று கணேசன் எதிர்பார்க்கவேயில்லை. திகைத்தான்.

"உன்னத்தான் கணேசா உங்கப்பாம்மா திருப்பதி போறதால எனக்கென்ன?"

"என்ன ஸ்வாமி அப்படிச் சொல்லிட்டேள், அந்த ராகமந்த்ர ஏட்டுக்கட்டை பாம்புகிட்ட இருந்து எடுக்க இது எவ்வளவு பெரிய சந்தர்ப்பம்..."

கணேசன் கோடு போட்டான். உபாசகர் கண்கள் அகண்டு விரிந்தன. ஊருக்குள் நடந்தபடி இருக்கும் சின்னச் சின்ன சிக்கல்களில் தான் முக்கிய நோக்கத்தையே மறந்து விட்டதை உணர்ந்தவர், "சபாஷ் கணேசா... இப்படித்தான் இருக்கணும்..." என்றபடியே வேகமாக எழுந்தார். அவன் முகத்திலும் அதற்குப் பிறகு புன்னகை தவழ ஆரம்பித்தது.

"ஆமாம்... இது என்ன ஸ்வாமி இத்தனை விளக்கு...? நீங்களும் ஜெபிச்சுண்டு இருந்த மாதிரி தெரிஞ்சதே..."

"அவ்வளவும் நெய்விளக்கு கணேசா. நான் ஜெபிச்சதும் காயத்ரியை...".

"சாதாரண காயத்ரி மந்திரத்தையா ஜெபிச்சுண்டு இருந்தேள்...?" கணேசன் சாதாரணமாகத்தான் கேட்டான். ஆனால், உபாசகர் கண்ணிரண்டும் சிவக்க ஆரம்பித்துவிட்டன..

"ஸ்வாமி... நான் ஏதாவது தப்பா சொல்லிட்டேனா?"

"காயத்ரி மந்திரம் உனக்கு சாதாரண மந்திரமா?"

"ஸ்வாமி..."

"சொல்... அது சாதாரண மந்திரம்னு உனக்கு யாருடா சொன்னா?"

"அதுவந்து... அதுவந்து... இந்த மந்திரம்தான் எல்லார்க்கும் தெரியுமே. கஸெட்லகூட வந்துடுத்து. இன்னிக்கு யார் ஆத்துக் காவது போனா இந்த மந்திரம் சான்டிங் பண்ணப்பட்டுண்டு இருக்கறதை பாக்கறோமே..."

"இதுக்குத்தான் ஒசத்தியான விஷயங்களை பரோபகார புத்தியோட எல்லோருக்கும்னு கொடுக்கக் கூடாதுங்கறது..."

"என்ன ஸ்வாமி சொல்றேள்?"

"சுரைக்காய்க்கு உப்பு இல்லேங்கறேன். முட்டாளே! மந்திரங்கள்ல காயத்ரிதான் தலைசிறந்த மந்திரம். அதோட சப்தக் கட்டுமானம் வேற எந்த மந்திரத்துலயும் கிடை யாது. அதை எப்படிச் சொல்லணும்னு இருக்கு. எந்த இடத்துல ஏறணும், எந்த இடத்துல இறங்கணும்... எவ்வளவு மாத்திரைக்கு அழுத்தம் கொடுக்கணும்கறதுலதான் அது உனக்குள்ற வேலை செய்யற விதமே இருக்கு. இந்த மந்திரம் இன்னிக்கு ரொம்ப பேர் வாய்ல படாத பாடு பட்டுண்டு இருக்கு.

நல்ல ஒரு வயலினை வாசிக்கத் தெரியாதவன் வாசிச்சா எப்படி ரொய்ங்... ரொய்ங்னு நாராசமா சப்தம் வருமோ

அப்படித்தான் ரொம்ப பேர் காயத்ரியை இன்னிக்கு ஜெபிச்சிண்டு இருக்கா.

இப்ப சொல்றேன் கேட்டுக்கோ.

காயத்ரி, மந்திரங்களின் தாய்.

சப்தங்களின் அற்புதக் கோவை.

சரியான சப்த அளவுகளோட அதை ஒருவர் மனசுக்குள்ள உச்சரிக்கும்போது மனசு பூரா அந்த சப்த அலையால ஆக்கிரமிக்கப்படறது... தொடர்ந்து 32 முறை, 64 முறை, 108 முறைன்னு அது மனசுக்குள்ற ஜெபிக்கப்படும்போது அந்த சப்தக்கட்டுமானம் மனசுல சொட்டுச் சொட்டா விழற ஜலம் மாதிரி விழுந்து அப்படியே பொங்கி வழிஞ்சு ஹ்ருதயத்துல பரவி ரத்தத்துல கலந்து உடம்பு பூரா ஓடி எங்கெங்க நாடிகள் இருக்கோ அங்கங்க சென்று அதுல சீர் இல்லைன்னா அதை சீர் பண்ணி மொத்த உடம்பையே ஒரு மின்கோபுரம் மாதிரி சக்திகோபுரம் ஆக்கறது. இப்படிப்பட்ட சக்தி ரொம்ப அபூர்வமானது. இந்த சக்தி உணர்ச்சியில இந்த உடம்பு எவ்வளவுக்கெவ்வளவு ஊறத் தொடங்கறதோ அத்தனைக் கத்தனை மனசுக்கு மாற்றங்கள் ஏற்பட்டு அதுல புதுசு புதுசா செல்களுக்கு சக்தி ஏற்பட்டு நமக்குள்ற யாரும் எதையும் சொல்லாமலே இந்த பிரபஞ்ச விஷயங்கள் விளங்க ஆரம் பிக்கறது.

இந்த உலகத்துல எந்த ஒரு விஷயத்தை எடுத்துண்டாலும் அதைப் புரிய வைக்க இதைப்போல, அதைப்போலன்னு உதாரணம் காட்டி பேசறதுதான் வழக்கம். அப்படி ஒரு உதாரணம் காட்டாம, அதாவது கம்பேர் பண்ணாம யாருக்கும் எதையும் புரிய வைக்க முடியாது. இனிப்பா எதை சாப்பிட் டாலும் 'சர்க்கரையாட்டம் இனிச்சது'ன்னு சொல்வோம். கசந்தா 'ஒரே பாகக்கா கசப்பு'ன்னுவோம்... இருந்தும் சில உணர்ச்சிகளை விளக்க முயற்சிக்கும்போது சரியான வார்த்தை கள் இல்லாம தவிப்போம். 'எப்படிச் சொல்றதுன்னே தெரி யலே'ம்போம். அப்ப நம்ம மொழிகூட சின்னதாயிடும். உணர்வு நிலை பெரிசாயிடும். அப்படி வார்த்தைகளால் புரிய வைக்க முடியாத உணர்ச்சிகள் எவ்வளவோ இருக்கு. அதெல்லாம் காயத்ரி உபாசனையால நமக்குள்ள ரகசியமா அர்த்தமாகும். அப்படி அர்த்தமாகும்போதுதான் பேசிப் புரிய வைக்கறதும்

அதற்கான முயற்சிகளும் ரொம்ப சாதாரணமான ஒண்ணுன்னு தோணும். மொத்தத்துல பேச்சே வீண் அப்படின்னுகூட மனசு நினைக்கும். மௌனம்கறது எவ்வளவு சக்தி வாய்ந்த விஷயம்கறது புரிய ஆரம்பிக்கும். இந்த நிலையை தொட்டவங்க கிட்ட தன்னால பேச்சு குறைஞ்சு போயிடும். பேச்சு மூலமாதான் கிரகங்களும் தன் வேலையைக் காட்டும். 'ஒரு வார்த்தை கொல்லும்... ஒரு வார்த்தை வெல்லும்'னு ஒரு பழமொழியே இருக்கு... 'போடா'ன்னு அலட்சியமா அவர் மனதை பாதிச்சு அவர் நம்மை பகைவனா பார்க்க ஆரம்பிப்பார். அதே இடத்துல 'சௌக்யமா'ங்கற ஒரு வார்த்தையை வெச்சுட்டா அவரே நண்பனாயிடறார். இதெல்லாம் பேசுறதுல இருக்கற நல்லது கெட்டதுகள். பேசாமலே இருந்துட்டா எதுவும் இல்லை பாரு... உடனே பேசாம எப்படி சார் இருக்கறதுன்னு கேட்கக்கூடாது... பேசுவது எப்பவும் பலவீன மானது. மௌனம் அதைவிட பலமானதுன்னு தெரியணும். அதுக்காகத்ததான் இதைச் சொன்னேன். இந்த மௌனத் தோட சக்தியை யாரும் யாருக்கும் சொல்லிக் கொடுத்து புரிய வைக்க முடியாது... நாமளா சுயமா வலிகளாலயும், சந்தோஷத் தாலயும் மட்டுமே தெரிஞ்சுக்க முடியும். மௌனத்தோட சிறப்பையும் மதிப்பையும் சொல்ற ஸ்வாமி ஒருத்தரும் இருக் கார். அவர்தான் தட்சிணாமூர்த்தி.

சிவாலயங்கள்ல தென்திசையைப் பார்த்தபடி இருப்பார். தெட்சிணம்னா தென் பாகம்னு ஒரு பொருள் உண்டு. அந்த பாகத்தை அவர் பார்த்தபடி இருப்பார். அவருக்குப் பின்னால் முதுகுப் பக்கம் உள்ளதுதான் வடக்குதிசை. அதாவது குபேர திசை. பொன்னுக்கும் பொருளுக்கும் அதிபதியானவனோட திசை அது... அதை பார்த்தபடி இருந்தா மனசுல ஆசைகள்தான் அதிகரிக்கும். உலகப்பற்றும் அதிகமாகும். பற்றுதல் அதிகமானாலே பாவமும் தானா அதிகமாயிடுமே... அதனாலதான் அந்த மூர்த்தியே 'நான் வடக்கு பார்க்க தயாரில்லை. தெற்காகிய பற்றுக்கு எதிர்திசையைப் பார்க்க றேன்'னு உக்காந்துண்டுருக்கறதா சொல்வா நன்னா கவனிச்சுப் பாரு... அவர் ஒரு ஆலமரத்தடில உட்கார்ந்திருப்பார். கீழே கற்பாறை இருக்கும். நாலு ரிஷிகளும் உக்காந்துண்டுருப்பா... இந்த ரிஷிகள் பிரம்மாவோட பிள்ளைகள்... 'சுவாமி...! எங்களுக்கு உலக வாழ்க்கை பற்றி தெரியணும். ஏன் மனிதப்

பிறப்பு எடுக்கறோம்? எதனால மனித மனசுல ஆசை, பாசம், கோபதாபம் ஏற்படறது? ஏன் ஒருத்தன் தேவனா பிறக்கறான்?'னு பல கேள்விகள் கேட்க அதுக்கு மௌனத்துலயே பதில் சொல்ற மூர்த்திதான் தட்சிணாமூர்த்தி. இவர் குருவோட அம்சமானவர். ஜாதகத்துல குரு பலம் இல்லாதவாளுக்கு அனுக்கிரஹம் பண்றதுக்குன்னே இருக்கறவர். இவர் சந்நிதிக்கு போய் நெய் விளக்கு போட்டு மனசார வழிபடும்போது குரு பலம் ஏற்படும்கறது வாஸ்தவமான உண்மை.

இன்சுலின் மருந்துன்னு ஒண்ணு இல்லைன்னா சர்க்கரை வியாதிக்காராளால இந்த பூமில வாழ முடியுமா?

அப்படித்தான் குரு பலம் இல்லாதவாளுக்கான இன்சுலினா தட்சிணாமூர்த்தி இருக்கார். இவரும் 'பேச்சு வீண்' அப்படின்னு சொல்றவர். 'மௌனம் சர்வ ஔஷதம்' கறது இவர் சொல்ற செய்தி.

பாத்தியா... காயத்ரில ஆரம்பிச்ச விஷயம் ஆறா பெருகி எங்கெங்கோ போறதை... பேச்சு பலவீனமானதுன்னு சொல் லிண்டே நான் எவ்வளவு பேசிட்டேன் பாரு..."

உபாசகர் ஒரு வழியா நிறுத்தி பெருமூச்சும் விட்டார். கணேசன் வாயடைத்துப் போயிருந்தான். 'ஒரு தப்பை செய்யப் போக அதற்குப் பின்னால் இவ்வளவு பொருள் பொதிந்த விஷயங்களா? அப்படியானால் மொத்த வாழ்க்கையில் எவ்வளவு அர்த்தப் பொதிகள் இருக்கக்கூடும்? இதனால் தான் 'கற்றது கை மண் அளவு; கல்லாதது உலகளவு என்று சரியாக சொல்லி வைத்தார்களோ?' கணேசன் அப்படியே மனதுக்குள் பல சிந்தனைகளில் விழுந்தான். உபாசகர் லொட லொடவென்று போட்ட சப்தத்தால் ஆன பேச்சால் விளைந்த தெளிவைவிட மௌனத்தால் அவனுக்குள் விளைந்த தெளிவு பலமிக்கதாக இருப்பதையும் எண்ணியவன், 'உண்மைதான்... நமக்குள் நாமாக ஒவ்வொன்றையும் அறிவதில் உள்ள அழுத்தமே தனிதான்' என்றும் தீர்மானித்தவன், அப்படியே நெய் விளக்குகளைப் பார்த்தான்.

"என்ன கணேசா என் பேச்சு உனக்குள்ள பலமான சிந்தனைகளை எழுப்பற மாதிரி தெரியறதே..."

"ஆமாம் ஸ்வாமி. நீங்க பேசி புரியவெச்சதைவிட அதைக் கொண்டு நான் எனக்குள்ள கேள்வி கேட்டு

புரிஞ்சுண்டதுதான் அதிகம். இருந்தாலும் சில சந்தேகங்கள். இதுக்கும் நீங்க மௌனத்துல விடை இருக்குன்னு சொல்லிடாம தயவுசெய்து வார்த்தைகள்ல அர்த்தம் சொல்லணும்..."

"கேளு... தெரிஞ்சதை சொல்றேன்."

"உங்களுக்கு தெரியாததும் இருக்கா...?"

"தெரியாததுதாம்ப்பா அதிகம். தெரிஞ்சது ரொம்ப ரொம்ப குறைவு. எனக்கு மட்டுமில்ல... உலகத்துல எல்லார்க்குமே இது பொருந்தும். அதுக்குதான் சுட்ட பழம், சுடாத பழம் கதை. அவ்வைப் பாட்டி முன்னால முருகன் 'சுட்ட பழம் வேணுமா, சுடாத பழம் வேணுமா'ன்னு கேட்டப்போ பாட்டிக்குள்ற வந்த குழப்பம்... அப்புறம் அவ பழத்தை ஊதவும் 'என்ன சுட்டுடுத்தா?'ன்னு முருகன் கேட்க, அந்த நொடி வந்த சிலிர்ப்பு- இதெல்லாம் சாதாரண விஷயங்களா என்ன?

உலகம் முழுக்க ஆயிரம் இலக்கியங்கள் இருக்கலாம். ஆனா இவ்வளவு சிம்பிளா, அதேசமயம் ஷார்ப்பா 'தெரிஞ்சது குறைவு-தெரியாதது அதிகம்'னு சொல்ற ஒரு கதை எங்க யாவது உண்டா?"

"உண்மைதான் ஸ்வாமி. இப்பதான் எனக்கு அவ்வையும் முருகனும் எவ்வளவு பெரியவங்க, முக்கியமானவங்கங்கற அந்த பரிமாணம் புரியறது. போகட்டும் ஸ்வாமி... இந்த கேள்விக்கு மட்டும் பதில் சொல்லுங்கோ... எதுக்கு இத்தனை நெய்விளக்கு? ஒரு விளக்கு போதாதா? எல்லாத்துலயும் ஒரே சுடர்தானே இருக்கு..." கணேசன் ஒரு சரியான கேள்வியைக் கேட்டதாகவே உபாசகருக்கு தோன்றியது.

"சாக்ரடீஸ் சொன்ன 'ஏன் என்ற கேள்வி... இன்று கேட்காமல் வாழ்கை இல்லை'ங்கறதுக்கு ஏற்ற மாதிரி ஒரு கேள்வியதான் கேட்டிருக்கே... இங்க இருக்கற விளக்குகள் ஆடம்பரத்துக்காக ஏற்றப்பட்டது இல்ல... இதுல 108-ங்கற ஒரு எண்ணிக்கை இருக்கு. எண்களே மொத்தம் ஒன்பதுதான் இதுதான் கூடிக் குறைஞ்சும், வகுக்கப்பட்டும், பெருக்கப்பட்டும் லட்சம் கோடியாகறது. இதுல பூஜ்யத்தோட பங்கு ரொம்ப உன்னதமானது. இது தனியா இருந்தா மதிப்பு இல்லை. ஆனா, இது பக்கத்துல எந்த எண் விழறதோ அத்தனை மடங்கு இது உடனேயே கூடிடும்... இதோட சிறப்பை பத்தி மட்டும் ஒரு நாள் பூரா பேசலாம். இந்த நூத்தி எட்டுக்குள்ள கவனிச்சுப் பார்...

ஒண்ணு முதல் ஒன்பது எண்ணும் இருக்கு அப்படியே பூஜ்ஜியமும் இருக்கு. வேற எந்த எண்ணுக்கு நடுவுல பூஜ்யம் விழுந்தாலும் ஒண்ணுல இருந்து ஒன்பதுங்கற அந்த முழுக்கணக்கு வராது. மொத்தத்துல 108-ங்கறது ஒரு பரிபூரண எண்கள் கொண்ட அமைப்பு, 1008-ம் அப்படித்தான் இருந் தாலும் 1008-ல இரண்டு பூஜ்யம் வந்துடறது. அதனால ஒரே ஒருமுறை வந்து முழு பரிபூரணம் கொள்ற ஒரு சிறப்பு 108-ல இருக்கு. அதனாலேயே இறை நாமாக்கள் 108 ஆகவே எங்கேயும் இருக்கு. 1008, 10008-ங்கறதெல்லாம் விருத்தியோட சேர்ந்தது.

இப்படி 108-ங்கற சிறப்புல இங்க 108 தீபச்சுடர்கள் எரிஞ்சபடி இருக்கு. இது சுடர்விடக் காரணம் நெய். நெய் ஒண்ணு தான் தான் எரியும்போது காற்றுல சில நல்ல வாயுக்களை உருவாக்கறது. ஏன்னா நெய்ங்கறது பால்ல இருந்து கிடைக்கற ஒண்ணு. ஜில்லுன்னு இருக்கற பாலுக்குள்ள வெண்ணெய்ங்கற கொழுப்புல இருந்து பிறக்கற நெருப்புதான் இந்த தீபம். இந்த தீச்சுடருக்கும் மற்ற தீச்சுடர்களுக்கும் நிறைய வித்தியாசம் உண்டு. மற்ற தீச்சுடர்கள் தாவர வகைல இருந்து கிடைப்பது.

நெய் அப்படி இல்லை. அந்த தாவரம் பசுவுக்கு உணவாகி, அந்த உணவாலயே உருவான பாலுக்குள்ள இருந்து கிடைக்கற ஒண்ணு. விருட்ச சாஸ்திரம், ஒரு சிறு செடி கொடின்னு எது ஒண்ணை பறிக்கணும்னாலும் அதை வணங்கிட்டு அதன் அனுமதியோடதான் அதை வெட்டணும்னு சொல்றது. ஆனா அப்படி எல்லோரும் நடந்துக்கறோமாங்கறது தெரியாது. அதனாலதான் நாம சாப்பிடற சாப்பாடுகூட தோஷமுள்ளதா ஆயிடறது. அந்த தோஷத்தை நெய்விட்டு நீக்கறோம். எந்த ஒரு பிராமணனும் தான் சாப்பிடற சாப்பாட்டுல நெய் சேர்க்காம சாப்பிடமாட்டான். காரணம்...? நெய்தான் அன்ன சுத்தி! எல்லாத்துக்கும் மேலா இன்னொரு விஷயமும் இருக்கு. நெய்யும் பாலும் ஒருத்தருக்கு எப்ப கிடைக்கும்? அவா பசுமாட்டை வெச்சு காப்பாத்தினாதானே...? பசுவை வெச்சு காப்பாத்தறவன் தாயைக் காப்பாத்தறதுக்கு சமானமானவன். பசுவுக்குள்ளதான் முப்பத்து முக்கோடி தேவர்களும் இருக்கா... அந்த தேவர்களையும் வெச்சு காப்பாத்தறவன்னும் ஒரு பொருள் வந்துடறது. ஆகையால நெய்யுங்கறது ஒரு புண்ணிய சரக்கு... தெய்வீகமானது. இந்த தெய்வீகமானதை இன்னொரு

தெய்வீகமான விஷயத்துல இணைக்கற செயலும் உன்னத மானதுதானே?

இப்ப இந்த நொடி இத்தனை விளக்குகள் எரிஞ்சபடி இருக்க இங்க இருக்கற காற்றுக்கு தனி ஒரு பிராண சக்தி இருக்கு. இது மனதை ஒருமைப்படுத்த ரொம்ப உதவும். உடம்புக்குள்ள சமத்காரத்தை ஏற்படுத்தித் தரும்... இன்னும் கூட காயத்ரி ஜெபம் பற்றியும், இங்க இருக்கற நெய் விளக்குகள் பற்றியும் பேச விஷயம் இருக்கு. ஆனாலும் உனக்கு இவ்வளவு போறும்னு நினைக்கறேன்..." உபாசகர், கணேசனை ஒரு ஆட்டு ஆட்டிவிட்டார். கணேசன் மெல்ல கைகளைக் கூப்பினான். மனது நெகிழ்ந்தும் போயிருந்தான்.

உபாசகர் நீண்ட தன் விளக்கத்தை முடித்த கையோடு "நாளைக்கு காலைல உங்காத்துக்கு நான் வரேன். இந்த தடவை அந்த சர்ப்பதை தப்பிக்க முடியாதபடி பிடிக்கறோம். அப்படியே அதை என்ன செய்தா அந்த வீட்டை விட்டு நீங்கும் கறதை நான் உனக்கு நாளைக்கு சொல்றேன். இப்ப நீ கிளம்பு..." என்றார். பெரிதாக கும்பிடு போட்டுவிட்டு மனம் முழுக்க நிரம்பிவிட்ட புதிய சேதிகளோடு கணேசன் அங்கிருந்து புறப்பட்டான்.

**ஊ**ருக்குள் நுழையும்போதே ருத்ரேஸ்வர் கண்களை இடுக்கிக் கொண்டு எந்த பக்கம் சென்றால் ஜெயம் உண் டாகும் என்று தனக்குள் கேட்டுக் கொண்டான் விசேஷ காயத்ரிகளால் மனதுக்குள் ஒரு சக்தியை திரட்ட முடிந்தவன் அப்படியே தன் காரை பிரசிடெண்ட் கல்யாணசுந்தரம் வீட்டை நோக்கித்தான் செலுத்தினான்.

மந்த்ரிணி கூட கேட்டாள்.

"ஈஸ்வர்... பிரசிடெண்ட் கூட நமக்கு பழக்கம் இல்லையே... அவர் உதவுவாரா?"

"யாரா இருந்தாலும் இப்ப நான் போய் பார்த்தா உதவி செய்வாங்க. ஏன்னா... நான் கிளம்பின நேரம் அப்படி! ஒரு ரயில் வண்டில ஏ.ஸி. கோச்சுல ஏறிண்ட ஒரு பயணி மாதிரி நான். அந்த கோச்சுல பயணிக்கறவன் சௌகர்யமா ஜிலுஜிலுன்னு, அதிக சப்த அவஸ்தைகள் இல்லாமதான் பயணிப்பான். அதுக்குதான அந்த கோச்சும் இருக்கு. அந்த மாதிரிதான் நேரக் கண்ணிகள்ல சரியான ஒரு சக்தி படைத்த நேரத்துளியைக்

கண்டுபிடிச்சு அந்த நேரத்துல நாம் ஒரு காரியத்தை தொடங்கினா அந்த நேரத்தோடு சேர்ந்து நாமும் ஜெயிச் சுண்டே இருப்போம்." - ருத்ரேஸ்வர் சொன்னது மந்த்ரிணிக்கு கொஞ்சம் போலத்தான் விளங்கியது. ஆனால், ஒன்று மட்டும் புரிந்தது. ஒரு செயலுக்கும் அதை தொடங்கும் கால நேரத்துக்கும் பெரிதாக ஒரு தொடர்பு இருக்கிறது என்பதுதான் அது. அதை கண்ணாரக் காணவும் செய்தாள்.

**யா**ரோ டாக்டர்தான் தன் கணவருக்கு வைத்தியம் செய்ய வந்துவிட்டதாகக் கருதி ரங்காயி, ருத்ரேஸ்வரையும் மந்த்ரிணியையும் உள்ளே அழைத்துச் சென்றாள். ருத்ரேஸ் வருக்கு கல்யாணசுந்தரத்தைப் பார்க்கவும் வெலவெலத்து விட்டது.

"எப்படி இப்படி ஆச்சு?"

"தெரியல... யாரா இருந்தாலும் தாசி பங்களாவுக்கு போனா இப்படி ஏடாகூடமா ஏதாவது நடந்துடுது..."

"இவர் எதுக்கு அங்க போனார்?"

"அது ஒரு பெரிய கதை... ஆமா, நீங்க இவருக்கு வைத்தியம் பார்க்க வரலையா?"

ரங்காயி அப்படிக் கேட்கவும்தான் ருத்ரேஸ்வருக்கே புரிந்தது - ரங்காயி தன்னை ஒரு டாக்டராக எண்ணிக் கொண் டிருப்பது... அதையே உறுதியாகப் பிடித்துக் கொண்டவன் "கவலைப்படாதீங்க... இவரை குணப்படுத்தறது என் பொறுப்பு. நான் எம்.பி.பி.எஸ். வைத்தியனல்ல. நான் ஒரு நாட்டு வைத்தியன். அதிகபட்சம் 15 நாள்ல இவரை முழுசா குணப்படுத்திடுவேன்." என்றான்.

"இப்ப நான்தான் ஊட்டி விட வேண்டியிருக்கு. பேச்சும் போயிடிச்சு. ஆமா... 15 நாள்ல இவரை பரிபூரணமா குணப்படுத்த முடியுமா?"

"அப்ப என்மேல உங்களுக்கு நம்பிக்கை இல்லைன்னு சொல்லுங்க..."

"அப்படி இல்ல... இங்கிலீஷ் வைத்தியத்துலயே இவர் குணமாக ஆறு மாசம் ஒரு வருஷம் ஆகும்னாங்க."

"இங்கிலீஷ் வைத்தியத்தை விட்டுத் தள்ளுங்க. இந்த வியாதிக்கு நீங்க ஆஸ்பத்திரிக்கு போனா சம்பந்தமே இல்லாத எல்லா டெஸ்ட்டையும் எடுக்க சொல்வாங்க. அந்த டெஸ்ட்

முடிவுகளைப் பார்த்து ரொம்ப சாவதானமா நாங்க என்ன நினைச்சோமோ அதுதான்னு இதைப் பார்க்கும்போது ஊர்ஜிதமாகறதுன்னு சொல்வாங்க. மெஷின் சொல்றத நம்பி வைத்தியம் பண்ண இவங்க எதுக்கு? ரொம்ப காம்ப்ளிகேடிவா ஒரு எலும்பு முறிவு, துப்பாக்கி குண்டு-உள்ள-ரத்த ஓட்டத்துல கலந்து எங்க இருக்குன்னு தெரியலங்கற மாதிரி விஷயங்களுக்கு எக்ஸ்ரே, ஸ்கேன் எடுத்தா பரவாயில்ல. இப்பல்லாம் ஒண்ணும் இல்லாத சாதாரண விஷயத்துக்குகூட எக்ஸ்ரே, ஸ்கேன் - ஏன்னா அதுல கமிஷன் கிடைக்குதே...? ஊசி மருந்து விஷயத்துலயும் அப்படித்தான். எல்லாமே ஹெவி டோஸ். அந்த நிமிஷம் சம்பந்தப்பட்ட வியாதி குணமானா சரி... ஆனா அதே ஹெபி டோஸ் கொஞ்சநாள் கழிச்சு வேற வடிவத்துல வரும். அதை அப்ப பாத்துக்கலாம் இல்லயா? அதுலயும் வரும்படி வரும் இல்லையா? இதை எல்லாம் ரொம்ப நோபல் ஒர்க்'குன்னு போலியா கூச்சல் போடுவாங்க. இன்றைய மருத்துவம் இப்படித்தான் இருக்கு. ஆனா, நான் அப்படி இல்ல... என் வைத்திய முறையே வேற. இப்ப பாருங்க..." - ருத்ரேஸ்வர் ஒரு பிரசங்கமே நடத்திவிட்டு கல்யாணசுந்தரம் அருகில் சென்றான். அப்போது சாமிநாதனும் வந்து சேர்ந்திருந்தான். அவனும் கவனிக்க ஆரம்பித்திருந்தான். கல்யாணசுந்தரமும் கோணவாயோடு ருத்ரேஸ்வரை ஒரு தினுசாகப் பார்த்தார். ருத்ரேஸ்வர் அவர் தோள்பட்டை அருகே குறிப்பிட்ட வர்மப் புள்ளி ஒன்றை தேடத் தொடங்கியிருந்தான். அப்படியே அதைக் கண்டறிந்து அங்கே ஆட்காட்டி விரலால் ஒரு அழுத்து. வளைந்து கொண்டுவிட்டிருந்த வாயும் நேரானது. ரங்காயி அதைப் பார்த்து புல்லரிபட்டவள் போலானாள். சாமிநாதனே அந்த காட்சியை பார்த்து விக்கித்துப் போய் நின்றான்.

"இப்போதைக்கு இது போதும்... இனி அவர் தன் கையாலயே எல்லாம் செய்யலாம். அடுத்து இவர் கால்.. அப்புறம் இவர் பேசறதுக்குன்னு படிப்படியா குணப்படுத்தறேன்..." என்ற ருத்ரேஸ்வரை மிகுந்த நம்பிக்கையோடு பார்த்தாள் ரங்காயி. "என்ன சாப்பிடறீங்க நீங்க... நிஜமா இவ்வளவு வேகமா இவர் குணமாவார்ன்னு துளிகூட நினைக்கல" என்றும் கூறினாள். ஓடிப்போய் பாயை எடுத்து வந்து விரித்தாள். மந்த்ரிணியை ருத்ரேஸ்வர் ஒரு ஓரப்பார்வை பார்த்தான். அவளிடமோ அமுக்கமாய் ஒரு புன்னகை.

ருத்ரேஸ்வர் அவள் வரையில் மனித சக்தியின் பலவித மான பரிமாணங்களை வெளிக்காட்டும் ஒருவனாகத்தான் தெரிந்தான். சாமிநாதனும் பதிலுக்கு நன்றி கூறும் பாவனையில் கும்பிட்டான்.

"நீங்க...?"

"காசி எனக்கு சொந்த ஊர் ஆனா, பூர்வீகம் இந்த தமிழ்நாடுதான். அங்க நான் யூனிவர்சிடில விசிட்டிங் புரொபசர். மித்தாலஜி பற்றி ஆராய்ச்சி பண்றவன். தோடிபுரத்துலகூட நிறைய மித் இருக்கறது தெரிஞ்சு ஆராயத்தான் வந்துருக் கேன். வர்மமும் நாட்டு வைத்தியமும் கொஞ்சம் தெரியும்."

'அடேயப்பா... ஏகப்பட்ட விஷயங்கள் தெரிஞ்சவரா இருக்கீங்களே... எங்க தங்கப் போறீங்க?"

"தெரியல. ஏதாவது லாட்ஜ்லதான் ரூம் போடணும்."

"லாட்ஜா... இந்த ஊர்லயா?" சாமிநாதன் சிரித்தான். ரங்காயி அதற்குள் மோர் கொண்டு வந்தாள்.

"இதுல உப்பு போட்ருக்கா?"

"ஆமாம்... ஏன்...?"

"அப்ப இது வேண்டாம். நான் சர்க்கரை, உப்பு சேக்கற தில்ல. அப்படியே வெளி இடங்கள்ல பால், மோர் குடிக்கறதில்ல."

"காரணம்?"

"பால், மோர்ல விழுந்துட்டா நான் உங்களுக்கு சிறு துரோகம் கூட செய்யக்கூடாது. அப்புறம் அந்த பாவம் என்னை சும்மா விடாது."

"அப்ப எங்களுக்கு நீங்க துரோகம் செய்யப் போறீங்களா?"

"அப்படி இல்ல. என்னையறியாம நான் உங்க குடும்பத் துக்கு ஒரு தீங்கு இழைச்சாலும் பாவம், பாவம்தானே...? அத னால யார் வீட்லயும் நான் பால், தயிர், மோர் மட்டும் எடுத்துக்கறதில்ல."

ருத்ரேஸ்வரின் விளக்கம் சாமிநாதனுக்கே புதிதாக இருந்தது. அர்த்தம் இருப்பதாகவும் தோன்றவே, அதை ரசித்து மதிப்போடு பார்த்து சிரித்தான். அப்படியே "லாட்ஜெல்லாம் இந்த ஊர்ல கிடையாது. நீங்க இங்க தெரிஞ்ச யார் வீட்லயாவது தங்கிகிட்டாதான் உண்டு..." என்றான் ரங்காயிக்கு சட்டென்று உபாசகர் தங்கியிருக்கும் தோட்டத்து குடிசை ஞாபகத்துக்கு வந்தது.

"சாமிநாதா... இவங்கள நம்ம உபாசகர் சாமி தங்கியிருக்கற அந்த தோட்டத்து வீட்லயே தங்க வைக்கலாமே...?" என்றாள். உபாசகர் பேரை அவள் சொல்லவும் ருத்ரேஸ்வரும் கெட்டியாக பிடித்துக் கொண்டான்.

"யார்...? நரசிம்ம பாரதி ஸ்வாமியா?"

"ஆமாம்... அவரை உங்களுக்குத் தெரியுமா?"

"சரிதான். அவர் என்கூடதானே காசில படிச்சார்?"

"சாமி உங்ககூட காசில படிச்சவரா?"

"ஆமாம். சித்து விளையாடத் தெரிஞ்சவர் என் குருநாதர். அவரண்ட நானும் படிச்சேன் நரசிம்ம பாரதியும் படிச்சார். ஒரு ஆச்சரியம் என்னன்னா என்னைவிடவே வர்மம் பற்றி, நாட்டு வைத்தியம் பற்றியெல்லாம் நிறைய தெரிஞ்சவர் நரசிம்மபாரதி. அவர் எப்படி உங்கப்பா விஷயத்துல ஒண்ணும் பண்ணாம இருந்தார்ன்னுதான் தெரியல..." ருத்ரேஸ்வர், நரசிம்மபாரதி விஷயத்தில் பற்ற வைத்தது பிரமாதமாக வேலை செய்தது. ரங்காயி வாயைப் பிளந்தாள்.

"சாமிக்கு எல்லாம் தெரியுமா?"

"தெரியுமாவா... அவர் இதுல எல்லாம் பெரிய ஜீனியஸ். நன்னா இருக்கறவாளை பைத்தியமாக்கறது-உக்காந்த இடத்துல இருந்துண்டே விரோதிகளா நினைக்கறவாளை ஆட்டிப் படைக்கறதுன்னு ஜகஜ்ஜால வித்தை எல்லாம் பண்ணுவாரே?"

- ருத்ரேஸ்வரின் இட்டுக்கட்டிய பேச்சு ஒவ்வொன்றுமே கல்யாணசுந்தரத்தையும் அதிர வைத்து முகம் கோணச் செய்திருந்தது.

"காசில நாங்கள்லாம் அவரண்ட ரொம்ப வெச்சுக்க மாட்டோம். அவ்வளவு ஏன்... அவரோட குருநாதர்தான் ஜெயந்திநாத சுவாமிகள் அவருக்கே கைகால் விளங்காம பண்ணினவர் இவர்னுகூட சொல்வா. யாருக்குத் தெரியும்?"

ருத்ரேஸ்வர் பேசிய ஒவ்வொரு விஷயமும் பற்றிக் கொண்டு எரிந்தது. ரங்காயியிடம் அதன் எதிரொலி.

"சாமிநாதா... அவரை முதல்ல அந்த குடிசையை விட்டு வெளிய போகச் சொல். இவங்க அங்க தங்கட்டும். அப்பதான் உன் அப்பாவும் 15 நாள்ல பொழைச்சு எழுந்திருப்பார்." என்றாள் சிடுசிடுப்போடு. சாமிநாதனுக்கு என்ன சொல்வது என்றே தெரியவில்லை. குழம்பிப் போனான்.

"உங்க பேர் என்னன்னு தெரிஞ்சுக்கலாமா?"

"சாமிநாதன். என் மூத்த மகன். இவனுக்கு ஒரு தம்பி இருந்தான். ஆனா " ரங்காயி புதிதாக ஒரு விஷயத்தை வெளியே எடுத்தாள்.

"ஆனான்னா... என்ன? இப்ப அவர் உயிரோடு இல்லையா?"

"இல்லீங்க... அவன் சின்ன வயசுல கும்பகோணம் மகா மகத்துல காணாம போய்ட்டான். அம்மா அதை சொல்றாங்க. நானும் அவனும் இரட்டையா பிறந்தவங்க. என்னைப் பார்த்தா அவனைப் பார்க்க வேண்டாம். அவனைப் பார்த்தா என்னைப் பார்க்க வேண்டாம்..."

"அடடா... உங்க குடும்பத்துலதான் அவ்வளவு சோகம்...! நான் இதைக் கொஞ்சம்கூட எதிர்பார்க்கல மிஸ்டர் சுவாமிநாதன். ஆங்... அப்புறமா ஒரு முக்கியமான விஷயம். எங்களுக்காக உபாசகரை நீங்க காலி பண்ணச் சொல்ல வேண்டாம். நாங்க வேற இடம் பாத்துக்கறோம்."

ருத்ரேஸ்வர் தன் நாடகத்தின் திரைக்கதையில் எதிர்பாராத திருப்பமெல்லாம் கொடுத்தான். அப்பொழுது அங்கு யாரும் எதிர்பாராதபடி உபாசகரே நுழைந்து கொண் டிருந்தார். அவர் கையில் அவர் ஊருக்குள் நுழையும்போது எடுத்து வந்திருந்த அதே தகரப் பெட்டி. தோளில் ஜோல்னாப் பை!

அவரை அந்த கோலத்தில் அவர்கள் யாருமே எதிர் பாக்கவில்லை. சாமிநாதனுக்கு காலை நண்டு கவ்வினதுபோல இருந்தது. ரங்காயியும் நெளிந்தாள். கல்யாணசுந்தரமோ, "ஏய்யா... உனக்கு எல்லா வைத்தியமும் தெரியுமாமே... எல்லாம் தெரிஞ்சிருந்தும் நீ எனக்கு எதுவும் பண்ணலை பார்த்தியா?" என்ற கேள்வியை குழறலோடு ஒருவராலும் புரிந்துகொள்ள முடியாத விதத்தில் கேட்டார். உபாசகர் பதில் ஏதும் கூறாமல் ருத்ரேஸ்வரைப் பாத்தார்.

"நீ ஊருக்குள்ள நுழைஞ்ச உடனேயே எனக்கு குடிசைல கவுளி சொல்லிடுத்து... என்னோட நீ எப்படி எல்லாம் போட்டி போடுவேன்னும் எனக்குத் தெரியும். ஆனா, நான் அதுக்கு இடம் கொடுக்கப் போறதில்லை. துஷ்டனைக் கண்டா தூர விலகுங்கறது என் கொள்கை. நான் ஒதுங்கிக்கிறேன்.

நீ இங்க என்னைப்பத்தி பேசிண்டு இருந்ததை எல்லாம் கேட்டேன். எனக்கு எது தெரியும், எது தெரியாதுங்கறது அந்த அம்பாளுக்கு தெரியும். இவாகிட்ட நீ பொய் சொல்றேன்னு சொல்லி வழக்காட நான் விரும்பலை... போகப் போக நல்லது கெட்டதை அனுபவத்தாலேயே இவா தெரிஞ்சுக்கறதுதான் எல்லாருக்குமே நல்லது. சாமிநாதா... இந்தா உங்க குடிசையோட சாவி. இதுநாள் வரை அடைக்கலம் கொடுத்த உங்களுக்கு என்னோட பரம நன்றிகள். நான் வரேன்."

சாவியை அங்கே வைத்துவிட்டு புறப்பட்டவரைப் பார்த்து சாமிநாதன் ஒரு வினாடி ஆடிப்போய்விட்டான்.

"சாமி நில்லுங்க..." என்றான். உபாசகரும் திரும்பினார்.

"நீங்க எங்க போய் தங்குவீங்க?"

"அது என் கவலைப்பா. நீ படாதே."

"இல்ல சாமி. எனக்கு நீங்களும் வேணும். அதே சமயம் இவரும்..."

"இல்லப்பா... நீரும் நெருப்பும் ஒண்ணா இருக்க முடியாது. அப்படி இருந்தா ஏதாவது ஒண்ணுதான் இருக்க முடியும். நான் வரேன்..." உபாசகர் விறுவிறுவென்று கிளம்பி வெளி யேறியே விட்டார் எல்லாமே க்ஷணத்தில் நடந்து முடிந்து விட்ட மாதிரிதான் இருந்தது. சாமிநாதனுக்கு தான் சற்று அவசரப்பட்டுவிட்டோமோ என்றுகூட தோன்றியது. ரங்காயி கூட 'உபாசகர் ஒரு வேளை நல்லவரோ? நாம்தான் அவசரப் பட்டுவிட்டோமோ' என்பதுபோல சிந்திக்க, ருத்ரேஸ்வர் அதை வேகமாக கலைக்க ஆரம்பித்தான்.

"பாத்தீங்களா... இங்க நாம பேசிக்கிட்டிருந்தது அந்த ஆளுக்கு தெரிஞ்சிருக்கு. என்னைக் கண்டாலே கொஞ்சம் அவருக்கு பயமும்கூட. அதான் புத்திசாலித்தனமா தானா முன்வந்து விலகிட்டார். எப்படியோ பயம் இருந்தா சரி..." என்று தன் குடுமியைக் கோதிவிட்டுக் கொண்டான். ஆனால், ரங்காயி முதல் சாமிநாதன் வரை அவர்களின் முகங்களில் எல்லாம் குழப்பமான குழப்பம். ஊடே கர்ணம் வைத்ய நாதய்யர் குரல் கேட்டது.

"என்ன கல்யாணசுந்தரம்... இப்ப எப்படி இருக்கு உடம்புக்கு?" என்றபடியே உள்ளே வந்தவர் - கல்யாணசுந்தரம் சாதாரணமாக அமர்ந்திருப்பதைப் பார்த்து அசந்து போனார்.

"என்ன ஓய்... நேத்து பாத்தப்போ கையும் காலும் கோணிண்டு இருந்தது. இன்னிக்கு நல்ல குணப்பாடு தெரியறதே..."

"பாக்கற விதமா வைத்தியம் பார்த்தா குணமாயிட்டு போறார்..." -இடையிட்டது ருத்ரேஸ்வர்தான்.

"நீங்க யார்... தெரியலியே...?"

"அடியேன் பேர் ருத்ரேஸ்வர். காசில பண்டிதனா இருக்கேன். அங்க பனாரஸ் யூனிவர்சிடில விசிட்டிங் புரொபசர் கூட.... மித்தாலஜில ஆராய்ச்சி பண்ற ஒரு வேத பிராமணன். கொஞ்சம் ஆயுர்வேதம், மூலிகை வைத்தியம்னும் விஷயமறிஞ் சவன்..."

"ஓ... அப்ப உம்ம வேலைதானா இது?"

"ஆமாம்... ஏதோ என்னால முடிஞ்சது..."

"ரொம்ப சாதாரணமா சொல்லிட்டேளே இது எவ்வளவு பெரிய விஷயம் தெரியுமா ஓய்...? எது எப்படி இருந்த போதிலும் உங்க உபகாரத்துக்கு ரொம்ப நன்றி. சிவராத்திரி வேற வரப்போறது. இந்த ஊர் கோவிலோட பிரதான நிகழ்ச்சி அது. இப்ப பார்த்து எங்க பிரசிடெண்ட் இப்படி படுத் துட்டாரேன்னு நினைச்சேன். நல்லவேளை.. நீங்க வந்துட் டேள்..." கர்ணம் தன் பேச்சில் சிவராத்திரியைத் தொடவும் சிலீரென்று நிமிர்ந்தான் ருத்ரேஸ்வர்.

"அட, ஆமாம்... இன்னும் பத்துப் பதினைஞ்சு நாள்தான் இருக்கு சிவராத்திரிக்கு..."

"அதுக்குள்ள இவர் பரிபூரணமா குணமாயிடுவாரா...? ஏன் கேக்கறேன்னா... இவர் நாதஸ்வர கச்சேரி இல்லாம இதுவரை ஒரு சிவராத்திரிகூட நடந்ததில்ல..."

"சிவராத்திரிக்கு உங்க கோவில்ல இவர் கச்சேரிதான். அதுக்கு நான் பொறுப்பு... சரியா?"

"அதுபோதும். அதுபோதும்... அப்புறம் கல்யாண சுந்தரம்..! ஒரு நாலு நாள் நான் திருப்பதி போய்ட்டு வர லாம்னு இருக்கேன். நானும் என் பார்யாளும் மட்டும்தான் போறோம். கணேசன் தனக்கு வேலை இருக்குன்னு வர மாட்டேங்கறான். எனக்குத் தெரியாம என்ன வேலைடான்னு கேட்டா முறைக்கறான். அதான் உங்களண்ட சொல்லிட்டு போகலாம்னு வந்தேன். உடம்பை கவனமா பார்த்துக்குங்கோ.

உங்களுக்கும் சேர்த்து அந்த ஏழுமலையான் கிட்ட வேண்டிண்டு வரேன். இந்த வருஷம் சிவராத்திரி 306 ஆவது சிவராத்திரியாம்... ‘கோயிலொழுகு’ங்கற நம்ம கோவில் புத்தகத்துலயும் இந்த சிவராத்திரில நிறைய அற்புதங்கள் நடக்கும்னு போட்ருக்கு. ஆகையால சிவராத்திரியை எல்லாரும் ரொம்பவே எதிர்பார்க்கறா உங்களுக்கும் அதுக்குள்ள குணமாயிட்டா கேட்கவே வேண்டாம்...” கர்ணம் பொங்கி வழிந்தார் சாமிநாதனோ சிந்தனையிலேயே இருந்தான் ருத்ரேஸ்வர் கரங்கள் உபாசகர் வைத்துவிட்டுப் போன சாவியைத் தேடி எடுத்துக் கொண்டு சாமிநாதனை ‘வந்து இடத்தை காட்டுகிறாயா’ என்பது போல பார்த்தன. கர்ணமும் சொல்லிக் கொண்டு கிளம்ப, அவர்களும் புறப்பட்டனர்.

கல்யாணசுந்தரம் முகத்தில் ஒரு தனி நம்பிக்கை ஒளி!



# 16

## அன்று

**ரா**ம்லாலை ஊர் முழுக்க தேடிவிட்டு அவன் எங்கும் இல்லை என்கிற செய்தியோடு வந்த சேவகர்களை ஆச்சரியமாக பார்த்தாள் வைஜெயந்தி. கூடவே இருந்தார் சாஸ்திரிகள். அவரிடமும் அதே ஆச்சரியம்.

“அந்த மனிதர் பெரும் மாயாக்காரராக இருக்கிறாரே சாஸ்திரிகளே...”

“ஆமாம் மகளே... நானும் அதுபற்றித்தான் சிந்திக்கிறேன். பாபா சிலைக்கு உரிய காணிக்கையை பெறாமலேயே போய் விட்டார். நம்மை எல்லாம் கடன்காரன் ஆக்கிவிட்டார். அதே சமயம் நமது பாபாவும் அவரிடம் தனது அருள் ஜாலத்தைக் காட்டியிருக்கிறார் என்றே கருதுகிறேன்.’ இருவரும் பேசிக் கொண்டிருக்கும்போது மாலி, வைஜெயந்திக்காக பழரசத்தை எடுத்து வந்து நீட்டினாள். அதை வாங்கிய வைஜெயந்தி தான் பருகாமல் சாஸ்திரிகளிடம் நீட்டினாள்.

“இல்லை மகளே... நீ பருகு...”

“என் தந்தையைப் போன்ற நீங்கள் இருக்க, நான் பருகுவது முறையல்ல சாஸ்திரிகளே...’

“அப்படியல்ல... நீ கர்ப்பவதி. உனக்கு உடல் ஆரோக்கியம் மிக முக்கியம். அதுதான் உன் தாய் பார்த்துப் பார்த்து உபசரிக்கிறாள்...”

- மாலியும் சாஸ்திரிகள் பெருந்தன்மையோடு பேசுவதற்கு மகிழ்ந்தாள் இருந்தும் அவள் முகத்தில் ஒருவித ஏக்கப் பெருமூச்சு.

“மாலி... உன் முகத்தில் கவலை தெரிகிறதே... வைஜெயந் திக்கு எப்படிப் பிரசவம் ஆகும் என்றா?”

"இல்லை சாஸ்திரிகளே... என் கவலை எல்லாம் என் பிள்ளையை எண்ணித்தான்..."

அவள் அப்படிக் கூறவும்தான் சாஸ்திரிகளுக்கே வீரேந்திரன் ஞாபகம் வந்தது.

"ஏன்... அவனுக்கென்ன...? நலமாகத்தானே இருக்கிறான்...?"

"நலமாக இருக்கிறான். அதே சமயம் பழுத்த சந்நியாசி போல நடந்து கொள்கிறான். இதே பழரசத்தை அவனுக்கும் கொடுக்க ஆசைப்பட்டேன். தூக்கி எறிந்துவிட்டான். அப்படியே 'இனி என்னைப் பார்க்க வராதே. என் தவம் நீ வந்தால் கலைந்து போகிறது' என்கிறான். எனக்கு ஒன்றும் புரியவில்லை." மாலியின் கண்களில் தாய்மையின் தவிப்போடு கூடிய கண்ணீரின் பெருக்கு. சாஸ்திரிகளே அதைப் பார்த்து பெருமூச்சு தான் விட்டார். அவரால் பதிலுக்கு எதுவும் கூறமுடியவில்லை. அந்த நேரம் பார்த்து வீரேந்திரனின் ருத்ர வீணை வாசிப்பில் ஹரி காம்போதி ராகம் கரைபுரளத் தொடங்கியது. அதுவரை அங்கே நிலவிய சலனம், சஞ்சலம், ஏக்கம், குழப்பம் எல்லாமே அகன்று அனைவர் மனமும் அந்த ராகவெள்ளத்தில் அமிழத் தொடங்கிவிட்டது!

**கா**விரிக் கரை!

நீண்ட மணல்வெளிமேல் இசை வித்தகர் முத்துவிநாயகம் பிள்ளையின் குழுவினர் குளித்து முடித்த நிலையில் ஆடைமாற்றிக் கொண்டிருக்க, முத்துவிநாயகம் பிள்ளை இடுப்பளவு நீரில் நின்று சூரிய நமஸ்காரம் செய்தபடி இருந்தார். அ; பர் காதிலும் ருத்ர வீணை இசை பாய்ந்திருந்தது. அவரிடம் ஸ்தம்பிப்பு. அப்படியே நின்றுவிட்டார். தண்ணீர் ஓட்டத்தில் அவரது இடுப்பு வேட்டியைக் காவிரி கொண்டு ஓடப் பார்த்தது. முத்துவிநாயகம் பிள்ளைக்கு அதைத் தடுக்கத் தோன்றவில்லை. கரையில் சிஷ்யகோடிகள்கூட சிரத்தை அசைத்தபடி ருத்ர வீணையின் இசை வெள்ளத்தில் சிக்கியிருந்தார்கள். ஏறத்தாழ அரை மணி நேரம்... அதுதான் நிலை. இசை ஒரு முடிவுக்கு வந்து ஒலிப்பது நின்ற பிறகே அவர்களுக்கெல்லாம் தங்களைப் பற்றிய பிரக்ஞையும் தாங்கள் காவிரிக்கரை மேல் நிற்பதும் உறைத்தது. ஆனால், அப்போது கூட முத்துவிநாயகம் பிள்ளைக்கு பிரக்ஞை கலையவில்லை. அதே சமயம் தண்ணீர் வடிந்து இடுப்புக்கு கீழே

அவரது நிர்வாணம் தெரியவும் அவரது சிஷ்யர்களில் சிலர் மறைத்தனர். பிறகுதான் அவருக்கே சுயநினைவு ஏற்பட்டது. அந்த கூட்டத்தில் வயது முதிர்ந்த- முத்துவிநாயகம் பிள்ளை யின் தந்தையான- சோமசுந்தரம் பிள்ளையும் இருந்தார். தன் மகன் மெய்மறந்ததை கவனித்துக்கொண்டே இருந்தவர் “முத்துவிநாயகம்... இப்பொழுது நீ மயங்கினாயே... அந்த மயக்கத்திற்குக் காரணமான இசை எதிலிருந்து வந்தது என்று தெரியுமா?” எனக் கேட்கவும், முத்துவிநாயகம் பிள்ளை தலை தாழ்ந்தது.

“நீ உண்மையைத் தெரிந்து கொண்டுவிட்டாய். நான் ருத்ர வீணை பற்றி சொன்னபோது நீ நம்பவில்லை. ஆனால், இப்பொழுது நீயே அதை உணர்ந்துவிட்டாய்...”

“ஆமாம் அப்பா... உண்மைதான்! என்ன ஒரு அற்புதமான இசை அது. நாடி நரம்புகளில் பரவச மின்சாரமாய் அது பாய்ந்து ஓடிய அந்த அனுபவம் இப்பொழுதும் நீடிப்பது போலவே உணர்கிறேன்.”

“இறைவன் இசை வடிவானவன் என்பதற்கு ருத்ர வீணை ஒன்று போதும். ‘நானே இசைச் சாகரம்... என்னை வெல்ல எவருமில்லை’ என்கிற கர்வம் இந்த ருத்ர வீணை உள்ளவரை ஒரு இசைக்கலைஞனுக்கு கூட வரக்கூடாது.”

“அப்பா...” தலையை துவட்டிக் கொண்டே ஒரு புதிய பத்தாறு வேஷ்டியை எடுத்து கச்சம் வைத்த கட்டிக் கொண்டே முத்துவிநாயகம் பிள்ளை அழைத்ததில் பாசம் வழிந்தது.

“நீ என்ன கேட்கப் போகிறாய் என்பது தெரியும். அந்த வீணையை வாசித்தது யார் என்பது உனக்குத் தெரிய வேண்டும். அதுதானே?”

“ஆமாம் அப்பா... அது மட்டுமில்லை. அந்த வீணையை நானும் ஒரு முறை இசைத்து மகிழ விரும்புகிறேன்”

“அது இப்பொழுது தோடீஸ்வரர் ஆலய சொத்தாகி விட்டது என்று அறிந்தேன். இருந்தாலும் பாதகம் இல்லை. கோவில் தாசியான வைஜெயந்தியின் தாயானவள் ஒரு காலத்தில் என்னிடம் தஞ்சைவரை வந்து இசை பயின்றவள். அவளது சதிர்க் கச்சேரிகள் பலவற்றுக்கு நான் தலைமை தாங்கியிருக்கிறேன் எனவே, எனக்காக அவள் எதையும் செய்வாள். வா, போய் அவளை சந்திப்போம்...”

"அப்பா... முதலில் ஆலயத்திற்கு செல்வோம். தோடீஸ்வரனை தரிசித்துவிட்டு பிறகு எங்கு வேண்டுமானால் செல்லலாம்..."

முத்துவிநாயகம் பிள்ளையின் பக்தியான பேச்சு சோமசுந்தரம் பிள்ளைக்கும் மகிழ்ச்சியைத்தான் தந்தது.

"அப்படியே ஆகட்டும்..." என்றார். அவரது குழுவில் தவில் வித்வான், மிருதங்க வித்வான், வயலின் வாசிப்பவர், வீணைக்காரர், கடம் வித்வான், கஞ்சிராக்காரர், அடவு பிடிப்பவர், ஜதிசொல்பவர், புல்லாங்குழல் இசைக் கலைஞர் என்று ஒரு பெரும் கூட்டமே இருந்தது. அவர்களுக்கெல்லாம் உதவியாளர்கள் வேறு. அவர்களெல்லோருமே சோமசுந்தரம் பிள்ளையையே தங்கள் குருவாகக் கொண்டு அவர் பேச்சுக்கு மறுபேச்சு பேசாதபடி கட்டுப்பாடுடன் திகழ்ந்தனர். நெற்றியில் விபூதிப் பூச்சு. மையத்தில் குங்குமப் பொட்டு. திறந்தமேனிமேல் ஜவ்வாது வாசம். காதுகளில் வைரக் கடுக்கன், கைகளிலும் நவரத்னக்கற்கள் பதித்த மோதிரங்கள் என்று வாத்தியக்காரர்களுக்கும் இசைக் கலைஞர்களுக்கும் உரிய தோரணைக்கு அவர்களிடம் பஞ்சமேயில்லை. அவ்வளவு பேரும் காவிரிக் கரையில் நின்றபடியே தோடிபுரம் கோபுரத்தைப் பார்த்தனர். சோமசுந்தரம் பிள்ளை பரவசத்தோடு கன்னத்தில் போட்டுக் கொண்டே ஸ்தல புராணம் சொல்ல ஆரம்பித்தார்

"இந்த ஊருக்கு தோடிபுரம்னு பேர் வந்ததுக்கு ஒரு சரியான காரணம் உண்டு. அதே போல தோடீஸ்வரன்னு இந்த ஊர் ஸ்வாமியைக் குறிப்பிடவும் ஒரு கதை உண்டு. உங்களுக்கெல்லாம் ராவணனை தெரிஞ்சிருக்கும். அசுரர் குலத்துல பிறந்து தேவர்களை எல்லாம் ஆட்டிவெச்சவன். நவக்கிரகங்களையே தன் சிம்மாசனம் முன்னால படியா போட்டு அதுமேல ஏறி நின்னுதான் சிம்மாசனத்துலயே உட்கார்ந்தான். அவன் செயல்ல 'நான்தான் ஈரேழு உலகத்துலயும் நிகரில்லாதவன்' கறத உணர்த்தற கர்வம் அங்குலத்துக்கு அங்குலம் இருந்தது. ஒரு கட்டத்துல அவனுக்கு தானே கடவுள்ங்கற எண்ணமும் வந்துடிச்சு. இத்தனைக்கும் ராவணன் பரம சிவ பக்தன். அப்படிப்பட்டவன் சிவபிரானை மயக்க இசையைத்தான் பயன்படுத்தினான். அதுலயும் அவனோட காம்போதி ராகம் கேட்டா கல் கூட கரையும். சிவனும் கலைக்கு மயங்கி அனுக்கிரகம் பண்ற மூர்த்தியாச்சே. ராவணனுடைய எல்லா பழுதுகளையும் அவன் இசை சிறப்புக்காகவே

மன்னிச்சார். இதை கவனிச்ச சரஸ்வதி, 'மகாதேவனை மயக்க மகாதேவன்கிட்ட வரம் வாங்க லட்சம் கோடி வருஷம் தவமெல்லாம் இருக்க வேண்டாம். ஒரே ஒரு நாதோபாசனை போதும், மயக்கிடலாம்' கறத கண்டுபிடிச்சு-இந்த ஊர்ல இருந்த பரமசிவபக்தர் ஒருத்தர்க்கும் தெரிவிச்சா. அந்த சிவபக்தர் 'நான் எந்த நாள் மகாதேவனை தரிசிக்கப் போறேன், எனக்கு எங்க வரம் கிடைக்கப் போகுது'ங்கற கவலைல இருந்தவர். அவருக்கு கலைவாணி அருளால மகாதேவனை இசையால சுலபமா வசப்படுத்த முடியும்கற உண்மை தெரிய வரவும், உடனேயே தன் இசைச் சிறப்பைக் காட்ட ஆரம்பித்தார். எவ்வளவோ ராகங்கள்... எத்தனையோ பாவங்கள். ஆனால், மகாதேவன் பிரசன்னமாகலை. இறுதியா தோடி ராகத்தை கையில் எடுத்தார் இந்த ராகத்துக்கும் மகாதேவன் வசமா கலைன்னா இதே காவிரில குதிச்சு தற்கொலை செய்துக்கவும் தீர்மானிச்சார் அப்பவும் ஈசன் மனமிரங்கலை. வேற வழி இல்லாத நிலைல தனது முடிவின்படியே காவிரில குதிச்சு உயிர் விடப் போனவரை ஒரு அசரீரி மூலமா ஈசனும் தடுத்து ஆட்கொண்டார் அப்படியே வானத்துல விடைமேல காட்சியும் தந்த மகாதேவன் 'இனி இந்த ஊரும் தோடிபுரமா கட்டும், நானும் இங்க தோடீஸ்வரனா இருக்கேன்'னு அனுக்கிரகம் பண்ணினார். இதுதான் இந்த தோடிபுரம் ஸ்தல வரலாறு. இங்க தோடி ராகம் பேராலேயே இந்த ஈசன் இருக்கறதால இங்க இசைச் சிறப்பு அதிகம். இந்த ஊர்ல பிறக்கற குழந்தையோட அழுகைலகூட ஒரு திருத்தமான ராகம் இருக்கும்னு சொல்வாங்க.

இசைல மேன்மையடைய நினைக்கறவங்க இந்த ஊருக்கு வந்து தோடீஸ்வரனை வேண்டிக்கிட்டா அவங்களோட இசையாற்றலும் பெருகும். இப்ப நான் சொன்னதை மனசுல வெச்சுகிட்டு அந்த தோடீஸ்வரனைப் பாருங்க... காணக் கிடைக்காத காட்சி இது..."

சோமசுந்தரம் பிள்ளை ஸ்தல வரலாற்றை சொல்லி முடிக்க அது முத்துவிநாயகம் பிள்ளை மனதில் ஒரு புதிய நெருப்பை கொளுத்திப் போட்டிருந்தது.

சோமசுந்தரம் பிள்ளையின் இசைக் குழுவினர் தோடி புரம் வந்திருக்கும் செய்தி கோவிலுக்கும், பின் வைஜெயந்தியின்

இல்லத்துக்கும் சென்றதுதான் தெரியும். மாலி பரபரத்துப் போனாள். ஓடிப் போய் ஒரு பொன்னாடையையும், ஆலயத் திற்கு ஸ்வாமிக்கென கட்டியிருந்த மலர் மாலையையும் எடுத்துக் கொண்டாள். வைஜெயந்தியையும், அழைத்துக் கொண்டு கோவில் நோக்கி ஓடினாள். செல்லும்போதே வைஜெயந்தியிடம் "மகளே... சோமசுந்தரம் பிள்ளை ஒரு பெரிய இசைக்கடல். என்னைப் பெரிதும் ரட்சித்தவர். அவரைப் பார்த்த மாத்திரத்தில் காலில் விழுந்து வணங்கு. அவரது ஆசி அந்த நடராஜ பெருமானின் ஆசிக்கு சமம்..." என்றாள். ஆனால், வைஜெயந்தியிடம் பெரிய பரவசமோ பதட்டமோ இல்லை. அவள் வயிற்றில் குழந்தை குதூகலமாக உருண்டு புரள்வதில் அவள் ஒரு இனம்புரியாத உணர்ச்சிகளில் இருந்தாள். வைஜெயந்தியும் மாலியும் சாரட்டில் இருந்து இறங்கி கோவிலுக்குள் நுழையும்போது சோமசுந்தரம் பிள்ளையின் குழுவினர் கோவிலுக்கு வந்துவிட்டிருந்தனர். தோடீஸ்வரன் சந்நிதிமுன் நின்று மனமுருக பாடியபடி இருந்தார் முத்து விநாயகம் பிள்ளை. கூட்டத்தவர்கள் ரசித்தபடி இருந்தனர். அவர் பாடுவது கோயிலுக்குள் நுழையும் வைஜெயந்தியின் காதிலும் ஒலித்தது. ஆனால், அவளால் அவர் குழைவுகளில் பெரிய இனிமையை உணர முடியவில்லை. அதனால் சாதாரண மாக இருந்தாள். அதே வேளையில் அவர்கள் இருவரையும் பார்க்கவும் பட்டர், முத்துவிநாயகம் பிள்ளை பாடுவதைக் கூட பொருட்படுத்தாமல் கோவில் ஊழியர்களுடன் கோவில் தாசிக்குண்டான ஐதீக மரபுப்படி வைஜெயந்தியை வரவேற்க கருவறையில் இருந்து ஓடோடி வந்தார். இது முத்துவிநாயகம் பிள்ளையை கடுமையாக பாதித்தது. பாட்டும் பாதியில் நின்றுபோனது. சோமசுந்தரம் பிள்ளையும் தன் மகனின் பாட்டு பாதிக்கப்பட்டுவிட்டதை உணர்ந்து கோபமடைய, மாலி ஓடிவந்து அவர் காலில் விழுந்தாள்.

"நமஸ்காரம் குருவே... தங்களை நான் இன்று இங்கே காணுவேன் என்று துளிகூட எதிர்பார்க்கவில்லை" என்று குழைந்தாள். அப்படியே "இவள் என் மகள் வைஜெயந்தி" என்று அறிமுகம் செய்ய, வைஜெயந்தி தன் கர்ப்ப வயிற்றுடன் பெரிய ஈடுபாடு எதுவுமின்றி சாதாரணமாக அவர் காலடியில்

விழுந்து எழுந்தான். சோமசுந்தரமும் அதை எல்லாம் அளந்த படியே "எப்படி இருக்கிறாய் மாலி?" என்று நலன் விசாரிக்கத் தொடங்கினார்.

"நான் நலமாக இருக்கிறேன். தாங்கள் எப்படி இருக்கி றீர்கள்?"

"நீயே நன்றாக இருக்கும்போது இசைக் குடும்பத்தை சேர்ந்த எனக்கா குறை வந்துவிடப் போகிறது?" சோம சுந்தரம் பிள்ளையின் கேள்வியில் லேசான குத்தல் ஒளிந் திருந்தது. அது மாலிக்கும் விளங்கியது. வைஜெயந்திக்கும் விளங்கியது.

"நல்லது குருதேவரே... தங்களுக்கு நான் மரியாதை செய்ய விரும்புகிறேன்..." என்றவள், தான் கொண்டு வந்திருந்த சால்வையை போர்த்தி மலர் மாலையையும் அணிவித்தாள்.

சோமசுந்தரம் பிள்ளை மனதும் ஓரளவு சமாதான மடைகிறது. ஆனால், முத்துவிநாயகம் பிள்ளை மனதோ கனன்றபடியே இருந்தது. தொண்டையை செருமிக் கொண்டு தான் ஒருவன் இருக்கிறேன் என்று காட்டிக் கொண்டார். சோமசுந்தரம் பிள்ளையும் "மாலி... நீ உன் மகளை அறிமுகப் படுத்தினாய்... நானும் என் மகனை அறிமுகப்படுத்துகிறேன். இவனை இன்று தெரியாதவர்கள் சேர சோழ பாண்டிய மண்டலத்திலோ- இல்லை சேது நாட்டிலோ ஒருவர்கூட இல்லை. அதேபோல இவன் இசைச் சிறப்பு மைசூரிலும் மிகப் பிரசித்தம். தஞ்சையில் மராத்தியர்கள்கூட முத்துவிநாயகத்தின் இசை என்றால் மகுடிக்கு கட்டுப்பட்ட நாகமாக மடங்கி விடுகிறார்கள். மதுரையில் ராணி மங்கம்மாள் முன் பாடி இசைக்குயில் பட்டத்தையும், ராமநாதபுரத்தில் கிழவன் சேதுபதி முன் பாடி 'இசைச் சாகரன்' என்ற பட்டத்தையும் செஞ்சியில் திவான்பகதூர் முன் பாடி 'சங்கீத வேழம்' என்றும் பட்டங்கள் பல பெற்றவன். தெலுங்கு, தமிழ், சம்ஸ்கிருதம் இவைகளுடன் இந்துஸ்தானியும் அறிந்தவன்."

தன் மகனைப் பற்றி வானளாவப் புகழ்ந்தார் சோம சுந்தரம் பிள்ளை. ஏனோ வைஜெயந்தி காதுகளைப் பொத்திக் கொள்பவள் போல முகம் சிணுங்கினாள். "மிகவும் மகிழ்ச்சி குரு தேவரே... தங்கள் வருகை நல்வரவாகட்டும். இங்கே இன்று முதல் நீங்கள் எங்கள் விருந்தினர்கள்" என்றவள், கோவில்

ஊழியர்களைப் பார்த்து, "கோவில் விடுதியில் இவர்கள் தங்க எல்லா ஏற்பாடுகளும் செய்து கொடுங்கள்" என்றாள்.

சோமசுந்தரம் பிள்ளை, மாலி தன்னை தன் இல்லத்திற்கு அழைப்பாள் என்று எதிர்ப்பார்த்திருந்தார். ஆனால், அவளோ விடுதியில் தங்கச் சொன்னது அவர் மனதை என்னவோ செய்தது. சங்கடப்பட்டாலும் அதை ஒருவாறு வெளிக்காட்டாமல் அடக்கிக்கொண்டார். அதன் பின் அனைவருக்குமே மரியாதைகள் செய்யப்பட்டன. இடை இடையே... "பரவாயில்லை. பிடித்தாலும் பிடித்தாய் புளியங்கொம்பாகவே பிடித்து விட்டாய்" என்று கூறிக்கொண்டே இருந்தது வைஜெயந்தியை வெகுவாக புண்படுத்தியது.

சாரட்டில் வீடு நோக்கி திரும்பும்போது மாலியிடம் மனம் விடலானாள்.

"அம்மா... உன் குருநாதரைப் பார்த்தால் ஒரு நல்ல மனிதராகவே தெரியவில்லை. வார்த்தைக்கு வார்த்தை அவரிடம் குத்தல்..."

"நானும் உணர்ந்தேன் வைஜெயந்தி. என்ன செய்வது? நான் உன் வயதில் இருந்தபோது எப்படியெப்படியோ வாழ வேண்டியிருந்தது. அந்த நாளில் என்னைப் பார்த்தவருக்கு இன்று என்னை ஒரு ராணி போல பார்க்கும்போது சற்று அதிர்ச்சியாகத்தான் இருக்கும். இப்படி ஒரு வாழ்வு கிடைக்கும் என்று நான்கூட எண்ணவில்லையே..."

"போதும் அம்மா உன்னை நீயே தாழ்வாக நினைப்பதை மாற்றிக் கொள். நல்லவேளை... எங்கே அவர்களை நமது மாளிகைக்கு விருந்துக்கு அழைப்பாயோ என்று பயந்து விட்டேன்."

"முதலில் அப்படி ஒரு எண்ணம் இருந்தது. ஆனால், அவர் தன் பேச்சாலேயே என்னை - மரியாதையோடு அவரை நெருங்கவிடாதபடி செய்துவிட்டார்..."

இருவரும் பேசிக்கொண்டே மாளிகை நோக்கி விரைந்தனர்.

**ஆ**லயத்தில் பிராகாரத்தை சுற்றி வந்து பார்த்துக் கொண்டிருந்தனர் இசைக்குழுவினர் முத்துவிநாயகம் பிள்ளை பாபாஜியின் சிலையைப் பார்த்துவிட்டு, "இதென்ன வினோத

மாக இருக்கிறது?" என்று கோவில் பட்டரிடம் கேட்க, பட்டரும் பாபாவின் பெருமைகளை சொல்லத் தொடங்கினார்.

ஒரு அளவுக்குமேல் அதைக் கேட்க முத்துவிநாயகத்தால் முடியவில்லை. ஆனால், பட்டர் சொன்னதில் பாபாவும் ருத்ர வீணையை வைத்திருந்து அதை வாசித்தவர் என்பதும் தெரிய வர, அவர் கவனமெல்லாம் இப்பொழுது வீணை எங்கே என்பதிலேயே சென்றுவிட்டது.

"இப்பொழுது வீணை மாலியின் மகன் வீரேந்திரன் வசம் உள்ளது. அவனோ பரிபூரணமாக இந்த ஆலயச் சொத்தாகிவிட்டான்..."

"நான் அவனைக் காணமுடியுமா?"

"இல்லை... அவன் யாரையும் காணப் பிரியப்படுவதில்லை. அது மட்டுமில்லை. அந்த மாளிகையை விட்டும் வெளியே வரமாட்டேன் என்று சங்கல்பித்துக் கொண்டிருக்கிறான்..."

"வினோதமான சங்கல்பம்..."

"என்ன செய்ய... ஒரு வகையில் வீரேந்திரன் இந்த ஊருக்கு செய்த கெடுதலுக்கு இப்படி இருப்பதுதான் சிறந்த பரிகாரம்..."

"அதுசரி... வீரேந்திரன் என்ன அவ்வளவு இசை அறிவு உள்ளவனா?"

"இல்லைதான். ஆனால், ருத்ர வீணையை அவன் தொட்ட நொடி ராகங்கள் ஆறாக ஓடி வரத் தொடங்கிவிட்டன..."

"போகட்டும்... மறுபடி கேட்பதற்கு மன்னிக்க வேண்டும். பாபா என்கிற பெயரில் ஒருவரின் சிலை ஏன் இந்தக் கோவிலுக்குள்..."

"அவர் இந்த ஊரைப் பொறுத்தவரை நாயன்மாரைப் போன்றவர் ருத்ர வீணையுடன் அவர் செய்த சாகசங்கள் அற்புதங்கள் கொண்டவை."

"அது என்ன?"

"மன்னிக்க வேண்டும்... உங்களுடன் கதை பேச எனக்கு அவகாசம் இல்லை. பாபா பற்றி அறிய வேண்டும் என்றால் இந்த ஊரில் சதாசிவ சாஸ்திரிகள் என்று ஒருவர் இருக்கிறார். அவர் இல்லத்திற்கு செல்லுங்கள். அவர் பாபாவின் பெருமை களை மட்டுமல்ல... ருத்ர வீணையின் பெருமைகளையும் கூறுவார் அவர் இல்லத்தில் பாபாவே தன் கைப்பட எழுதிய

ராகமந்த்ரம் என்கிற ஏட்டுக்கட்டை சர்ப்பம் ஒன்று காவல் காப்பதையும் காணலாம்." பட்டர் சொல்லச் சொல்ல முத்துவிநாயகம் பிள்ளையை ஆவல் தாலாட்டத் தொடங்கியது. அடுத்த கணமே சதாசிவ சாஸ்திரிகளை சந்திக்க தயாராகி விட்டார்.

## இன்று

**வி**டிந்துவிட்டது!

கணேசன் வீட்டைப் பூட்டிக் கொண்டு காவிரிக் கரைக்கு புறப்பட தயாராகும்போது பூஜை அறையை ஒரு பார்வை பார்த்தான். அமைதியாக காட்சியளித்தது. அந்த நொடி காவல் நாகம் எங்கே இருக்கும் என்கிற கேள்வியுடன் வீட்டின் ஒவ்வொரு மூலையையும் போய் பார்த்தான். அது கண்ணுக்கே படவில்லை. ஒருவேளை அது ஏட்டுக்கட்டைத் தொடும்போது மாயமாக அந்த நேரம் அங்கே தோன்றுகிறதோ என்றுகூட அவனுக்கு சந்தேகம் வந்துபோது 'ஸ்ஸ்ஸ்...' என்கிற சப்தம் அவன் காதைத் தீண்ட - அண்ணாந்து கூரையைப் பார்த்தான். அது கூரை மூங்கிலை வளைத்துப் பிடித்துக் கொண்டு 'என்னைத்தானே தேடுகிறாய்... இதோ இங்கே இருக்கிறேன் நான்' என்கிற மாதிரி படம் விரித்தபடி பார்த்தது.

அந்த நொடியே வியர்த்தும்விட்டது. அதை ஒரு பார்வை பார்த்தவன் 'இன்று உன்னை ஒரு வழி பண்ணுகிறேன் பார்' என்பது போல பார்த்தான். பின் கதவைப் பூட்டிக் கொண்டு வெளியே வந்தவன் எதிரில் உபாசகர்.

"ஸ்வாமி..."

"எங்க கிளம்பிட்டே கணேசா?"

"காவேரிக்கு..."

'வெறும் கையோடயா கிளம்பிட்டே?" அவர் கேட்டது அவனுக்குப் புரியவில்லை.

"ஸ்வாமி... என்ன சொல்றேள்."

"அந்த சர்ப்பத்தையும் பிடிச்சுண்டு போ..."

"இப்பவா?"

"இப்பவேதான். கதவைத் திற சொல்றேன்..."

"நாகபந்தன மந்திரத்தை சொல்லி பானைல பிடிச்சு ஆத்துல விட்டுடச் சொல்றேளா?"

"ஆமாம். ஓடுற காவேரியில பானையோட விட்டுடு. எப்படி திரும்பி வர்றதுன்னு பார்ப்போம். யாராவது பாத்தாலும் அஸ்திக் கலசம்தான் மிதந்துண்டு போறதா நினைப்பா. கிட்டயே வரமாட்டா..."

- உபாசகர் அவனுக்கு எடுத்துக் கொடுக்கும்போது பட்டர் அழைத்ததாகச் சொல்லிக் கொண்டு ஒருவன் வந்தான்.

உபாசகரும் புன்னகைத்தபடியே, "நான் இப்ப கல்யாணசுந்தரம் தயவுல அவர் தோட்டத்து குடிசைல இல்ல. பட்டர் ஆத்துலதான் இருக்கேன். பெட்டியும் கையுமா கோவிலுக்கு போன என்னை பட்டர் பொண்ணு மைதிலிதான் ஆட் கொண்டா. அம்பாளுக்கு எப்பவும்தான் என்மேல தனிக் கருணையாச்சே" என்று கண் சிமிட்டியபடியயே, "போய் என்னன்னு கேட்டுட்டு வந்துடறேன் நீ நான் சொன்னபடி கச்சிதமாக காரியத்தை முடி. பயப்படாதே" என்றார். அவர் விலகவும், கணேசனும் சற்று தைரியத்தை வரவழைத்துக் கொண்டு திரும்பவும் பூட்டிய கதவை திறந்தான். உள்ளே நுழைந்தான். அப்படியே முன்பு இருந்த இடத்தில் அந்த நாகம் இருக்கிறதா என்று அண்ணாந்து பார்த்தான். அது அங்கே இல்லை. அடுத்தடுத்து என்ன செய்ய வேண்டுமோ அதை செய்யத் தொடங்கினான் பானை ஒன்றை எடுத்து வந்து நடுக்கூடத்தில் வைத்தவன் ஒரு வெள்ளைத் துணியையும் எடுத்து வந்தான். மடிமேல் போட்டுக் கொண்டு நாகபந்தன மந்திரத்தைக் கூற ஆரம்பித்தான்.

ஒரு நிமிடம். இரு நிமிடம்.

மூன்று நிமிடம். பத்து நிமிடம்.

பதினைந்தாவது நிமிடம்... அவன் உச்சாடனத்திற்கு பலன் கிட்டியது போல சரசரவென்று நெளிந்து கொண்டு அந்த நாகமும் அவன் வைத்திருக்கும் பானை நோக்கி வந்தது. அப்படியே குழிக்குள் இறக்குவது போல பானைக்குள் புகவும் செய்தது. அடுத்த நொடியே வெள்ளைத் துணியைப் போட்டு அதை இறுக்கமாக மூடியவன் 'அப்பாடா' என்று பெருமூச்சு விட்டான். பிறகு வெளியே வந்தவன் விறுவிறுவென்று காவிரி நோக்கி நடையிடத் தொடங்கினான். எல்லோரும் காவிரிக்கு

செல்லும் வழக்கமான பாதையில் பானையுடன் சென்றால் எல்லோரும் பார்த்துவிட்டு, என்னவோ ஏதோ என்று விசாரிக்கக் கூடும் என்று அனுமானித்தவன் ரகசியமான ஒரு குறுக்கு வழியில் நடக்கத் தொடங்கினான். வழியில் கோனார் தோட்டம் ஒன்று குறுக்கிட்டது. அங்கே அடர்த்தியான தழைத்த வாழை மரங்கள் அதிகம். அந்த வாழைத் தோட்டத்திற்கு சாமிநாதன் வாழைத் தார் வாங்க வந்திருந்தான் கோனாரோ 'நீயே போய் நல்ல தாராக பார்த்து வெட்டிக் கொள்' என்று கூறிவிட்டார்.

அதற்காக அரிவாளும் கையுமாக கோனார் தோட்டத்து வாழை மரம் ஒன்றின் அருகில் இருந்தவன் பானையும் கையுமாக கணேசன் செல்வதைப் பார்த்து ஆச்சரியப்பட்டான். அப்படியே பின்தொடர்ந்து சென்றவன் அவன் காவிரிக் கரையில் புதர்களைக் குடைந்து கொண்டு உள்ளே செல்வது தெரிந்தது. சாமிநாதனும் பூனை போல பின்னேயே சென்றான்.

காவிரி ஆற்றில் சுமாரான நீரோட்டம். தண்ணீரிடம் ஓரளவு வேகம் இருந்தது. நீர்த்தாழை செடிகளும் கண்ட கண்ட சக்கை சகதிகளும் மிதந்து வந்து கொண்டிருந்தன தோடிபுரம் ஊர்ப்படித்துறை நெடுந்தூரத்தில் இருந்தது. கணேசன் இறங்கிய இடத்தில் யாரும் இல்லை. சர்ப்பமோ உள்ளே 'ஸ்ஸ்ஸ்ஸ்' என்று புரண்டும் நெளிந்தும் சீறிக் கொண்டே இருந்தது. அதை அப்படியே ஓடும் ஆற்றுநீரின் மேல மிதக்கவிட்டான்.

'என் மனையில் இது நாள் வரை வாழ்ந்த பாம்பே... போதும் உன் காவலும்... ஆவலும். போய்வா! இனி உனக்கு எதுவானாலும் பழியோ பாவமோ என்னைச் சேராது' என்று மனதுக்குள் நினைத்தபடியே திரும்பத் தொடங்க அந்த காட்சியை பார்த்துக் கொண்டிருந்த சாமிநாதனுக்கும் அவன் என்ன செய்கிறான் என்பது தெரிந்துவிட்டது.

திரும்பிவரும் கணேசனின் கண்ணில் படாதபடி ஒளிந்து கொண்டவன் தொடர்ந்து கணேசனைப் பின்தொடர, காவிரியில் கலசமும் மிதந்தபடி போய்க் கொண்டேயிருந்தது. ஒரு இடத்தில் மந்த்ரிணி கரையில் நின்றபடி இருக்க, காரும் ஒரு இடத்தில் தெரிய, ருத்ரேஸ்வர் குளித்தபடி இருந்தான். அவன் பார்வையிலும் அந்த மிதந்து செல்லும் பானை

பட்டுவிட்டது. அது அவன் நின்று குளித்தபடி இருக்கும் இடம் நோக்கியும் வந்தது. முதலில் அஸ்திப் பானை என்று எண்ணியவன், அருகே வந்து அவன் வயிற்றின் மீது மோதி நிற்கவும் கூர்ந்து கவனித்தான். உள்ளிருந்து 'ஸ்ஸ்ஸ்' சப்தம் கேட்கவும், ருத்ரேஸ்வர் முகத்தில் மாறுதல். பானையை இரு கைகளால் பிடித்துக் கொண்டவன், அப்படியே கண்களை மூடி உள்ளே இருப்பது எது என்பதில் இருந்து அதை யார் அனுப்பியது என்பது வரை க்ஷணத்தில் தன் மந்திர ஜெப சக்தியால் கண்டு பிடித்துவிட்டான். மந்த்ரிணியோ நடுங்கினாள்

"ஈஸ்வர் என்ன அது?"

"பார்த்தா தெரியல... பானை மந்த்ரிணி."

"விளையாடாதீங்க. அதை எதுக்குப் பிடிச்சுக்கிட்டு இருக்கீங்க..."

எதுக்கா பார் என்ற ஈஸ்வர் மெல்ல துணியை விலக்கினான். உள்ளிருந்த பாம்பு அப்படியே வீறுகொண்டு நிமிர்ந்தது. கண்களில் கனலோடு ருத்ரேஸ்வரைப் பார்த்தது.

"ஓ... என்னை அப்படிப் பாக்காதே. நான் உனக்கு விடுதலை தரப்போறவன். குற்றவாளி நான் இல்லை" என்றபடியே கரை ஏறியவன், பானையை கீழே வைக்கவும் சர்ப்பம் அதிலிருந்து விடுதலையாகி விறுவிறுவென்று ஓடத் தொடங்கியது.

"ஈஸ்வர்... இது என்ன பானைல பாம்பு."

"அது ஒரு மனைப் பாம்பு மந்த்ரிணி. அதை அடிக்காம கொல்லாம ஆத்துல விட்ருக்கான் வீட்டுக்காரன் ஆனா, இதுக்கு ஆயுசு கெட்டி. அதான் நான் பார்த்து காப்பாத்தவும் செய்துட்டேன்."

"யா... யார் இப்படிச், செய்தது?"

ருத்ரேஸ்வர் சிரித்தான். பின் "போகப் போக உனக்கு நான் சொல்லாமலே தெரியும் பார்" என்று கண்ணசைத்தபடியே தலையை துவட்டிக் கொண்டான்.

அந்த நாகமோ கண்ணைவிட்டு மறைந்து விட்டிருந்தது. பாவம் கணேசன்! அது வீடு நோக்கி திரும்பிக் கொண்டிருப்பது தெரியாமல் கதவைத் திறந்து உள் நுழைந்து கொண்டிருந்தான்... பின்னாலேயே சாமிநாதன்!

சாமிநாதன் தன்னை கவனிப்பதையோ பின்தொடர்வதையோ துளிகூட உணராத நிலையில் கணேசன் உள்ளே

நுழைந்தவன், நேராக பூஜை அறைக்குத்தான் சென்றான். ராகமந்திரம் ஏட்டுக்கட்டையும் எடுத்துவன், அதை பெருமிதத்தோடும் பரவசத்தோடும் மார்போடு வைத்துக் கொண்டு சிறிது நேரம் மகிழ்ந்தான். பின் அதே இடத்தில் வைத்தவன் கொல்லைப்புறம் யாரோ கதவு தட்டும் சப்தம் கேட்டு ஓடிச் சென்று பார்த்தான். கதவைத் திறந்தபோது உபாசகர் நின்றபடி இருந்தார். சிரித்தார் கணேசனும் சிரித்தபடியே, "ஸ்வாமி! நல்லபடியா நீங்க சொன்னதைச் செய்துட்டேன்..." என்றான் "சபாஷ்" என்று உணர்ச்சிவசப் பட்டார் உபாசகர். அப்படியே கட்டிக்கொண்டார். அந்த நொடி தெருவிலும் கோவில் பணியாளன் ஒருவன் மத்தள முரசு கொட்டிக் கொண்டே சிவராத்திரி வரப்போவது குறித்தும் அன்றைய நிகழ்ச்சி குறித்தும் கூறிக் கொண்டே சென்றான்.

'இதனால எல்லாருக்கும் தெரிவிச்சுக்கறது என்னன்னா, வர்ற சிவராத்திரியை ஒட்டி நம்ம கோவில்ல விசேஷ பூஜை களும் ஆராதனைகளும் நடக்க இருக்குது. அதுக்காக இன் னிக்கு கோவில்ல கொடி ஏற்றமும் இருக்குது. இன்னில இருந்து யாரும் வெளியூர் போகவோ வரவோ கூடாது. இந்த கட்டுப பாட்டை எல்லோரும் சந்தோஷமா ஏற்று அனுபவிச்சு ஒத்துழைக்கணும்னு கோவில் கமிட்டி கேட்டுக்குது...'

கோவில் ஊழியன் திபுதிபுவென்று முரசை அறைந்து கொண்டே சொல்லியபடி போக, அதைக் கேட்டபடியே உள்ளே நுழைந்த கணேசனுக்கும் உபாசகருக்கும் அதிர்ச்சி காத்திருந்தது. பூஜை அறை மேடைமேல் அந்த ஏட்டுக்கட்டு இல்லை. ஆனால், சர்ப்பம் படம் எடுத்தபடி நின்றுகொண் டிருந்தது.

சர்ப்பத்தை பார்த்த உபாசகரும் கணேசனும் விக்கித்துப் போய் நின்றனர். சர்ப்பம் மட்டும் இருக்கிறது. ஆனால், ஏட்டுக் கட்டை காணவில்லை. உபாசகருக்கு குழம்பியது. ஊடே அந்த சர்ப்பம் தன் இடத்தில் இருந்து சீறியபடி அவரை விரட்டத் தொடங்கியது. உபாசகருக்கு புரிந்துவிட்டது. ஏட்டுக்கட்டை தொலைத்த கோபம் அதனிடம். உபாசகரும் ஓட ஆரம்பித்தார். கணேசன் ஒரு ஓரமாக போய் அப்படியே அமர்ந்துவிட்டான்.

**கா**விரிக்கரை கல்மண்டபத்தில் நகம் கடித்தபடியே அமர்ந்திருந்தான் சாமிநாதன். அவன் சங்கரனுக்கும் பானு

வுக்கும் காத்திருப்பது போல் தோன்றியது. அவர்களும் வந்துவிட்டோம் என்பது போல ஒன்றுசேர்ந்து வந்த நிலையில் அவன் எதிரில் சென்று நின்றனர். சாமிநாதன் இருவரையும் ஒரு பார்வை பார்த்தான். இதற்கு பொருளே வேறு. பானுவை தன் காதலியாக எண்ணியதும், ஆனால் அவளோ சங்கரனோடு ஜோடி சேர்ந்துவிட்டதும், இன்று இருவருமே எதிரில் நிற்பதும் அவனது மறைந்த காதலை உரசிப்பார்க்கிற மாதிரிகூட இருந்தது. சங்கரன் அவனது அத்யந்த நண்பன். ஓரளவு சாமிநாதன் மனநிலை எப்படிப்பட்டது என்பதை யூகிக்க கூடியவன். பானுவோடு தன்னைப் பார்க்கும் சாமிநாதன் என்ன நினைக்கிறான் என்பதை உணர்ந்து கொண்ட நொடி அவளிடம் இருந்து விலகி சாமிநாதன் அருகில் போய் அமர்ந்தான்.

"சாமி... எதுக்குடா இரண்டு பேரையும் வரச்சொன்னே? வரச்சொல்லிட்டு இப்படி உக்காந்துண்டு இருந்தா என்னடா அர்த்தம்..."

"

"இதோ பார்... பானுவை பாக்கும்போது உனக்கு பழைய நினைப்பெல்லாம் வருதுன்னு நினைக்கறேன்..." சங்கரன் கொஞ்சம் தோலுரிக்க முயல, சுதாரிக்க ஆரம்பித்தான் சாமி... மார்பில் பனியனுக்குள் கைவிட்டு பச்சைப் பட்டால் கட்டப்பட்டிருந்த ராகமந்த்ர ஏட்டுக்கட்டை வெளியே எடுத்தான். அதைப் பார்த்த உடனேயே சங்கரனுக்கு தெரிந்து விட்டது.

"சாமி... இது நம்ம கர்ணம் வீட்டு பூஜை அறைல இருக்குமே... அந்த கட்டுதானே?"

"அதேதான்... உபாசகர் இதை சுடப்பார்த்தார். அதுக்காக இதை காவல் காத்துக்கிட்டிருந்துச்சே நாகப்பாம்பு... அதையும் மந்திரம் போட்டு பிடிச்சுட்டார். அந்த பாம்பை ஒரு பானைல போட்டு கட்டி ஆத்துல கொண்டு போய் விடறதுக்கு கணேசன் போய்க்கிட்டிருந்தான் அவன் கெட்ட நேரம் அதை நான் பார்த்துட்டேன். பிறகுதான் எல்லாம் இந்த புத்தகக் கட்டை வசப்படுத்தன்னு தெரிஞ்சது. எங்கிருந்தோ வந்திருக்கிற உபாசகர் இதை எடுத்துக்கிட்டுப் போறத என்னால ஒத்துக்க முடியல. அவர் மேலயும் எனக்கு இப்போ நிறைய சந்தேகங்கள் அதனால அவங்களுக்குத் தெரியாம நானே இதைக் கொண்டு வந்துட்டேன்."

சாமிநாதன் பேச்சோடு பேச்சாக அந்த கட்டை அவிழ்த்தான். உருது எழுத்தில் புத்தகத்தின் முதல் பக்கம் தலைப்பட்டது. ஆவலாக மூவரின் விழிகளும் கவனித்தன. பானு இடையில் அவ்வளவாக அதில் ஆர்வம் காட்டாமல் தூரப் போய் நிற்கத் தொடங்கினாள்.

"பானு..."

"இல்ல சாமிநாதன். நான் இந்த விஷயத்துல எந்த இன்ட்ரஸ்ட்டையும் காட்டத் தயாரா இல்லை."

"பைத்தியம் மாதிரி பேசறியே. உனக்கு என்ன ஆச்சு?"

"நான் சொல்றேன் சங்கரா... பானுவுக்கு என் மேல கோபம். ஏன்னா, நான் அவங்கம்மாவை கடுமையா பேசிட்டேன். அதான்..."

"சுந்தராம்பாம்மாளை தப்பா பேசிட்டியா... ஏண்டா? அவங்க என்னடா பண்ணாங்க?"

"இதோ பார் நான் இப்ப ஏகப்பட்ட குழப்பத்துல இருக்கேன். யாரை நம்பறது, யாரை நம்பக்கூடாதுன்னே தெரியல... என் அப்பாவோட நிலையை நீ நினைச்சுப் பார். அவர் அந்த பங்களாவுல என்ன இருக்குன்னு பாக்கப் போயிருக்கார். ஆனா, இப்ப அவரால நடமாடக் கூட முடியல. ஒரு மர்மமான பங்களா புரியாத புதிரா இருக்கறதாலதானே இவ்வளவு கூத்தும்?"

"அதுக்காக... என் அம்மாவைக் கண்டபடி பேசறத என்னால எப்படி சாமிநாதன் தாங்கிக்க முடியும். அம்மாகிட்ட நிறைய ரகசியங்கள் இருக்கு. அதை நான் மறுக்கலை. ஆனா அம்மாகிட்ட வஞ்சனை, சூது, ஏமாற்றுவேலை இதெல்லாம் நிச்சயம் இல்லை."

"ஆமாண்டா சாமி... உங்கப்பாதாண்டா அவசரப் பட்டுட்டார்..."

"இல்லடா... சில விஷயங்கள கூட்டிக் கழிச்சுப் பார்த்தா ஒண்ணுமே புரியல. குறிப்பா புதையல் கரியானது. அப்புறம் அப்பாவுக்கு இப்படி இருக்கிறது... எல்லாமே எங்கப்பாவை கட்டிப்போட யாரோ செய்யற சதியாத்தான் தெரியுது. பானு... நீ நடுநிலையோட நான் சொல்றதை யோசிச்சுப் பார் அப்ப உனக்கு உண்மை தெரியும். உன்கிட்ட நான் இன்னும் சில கேள்விகளை கேட்க விரும்பறேன்..." - சாமிநாதன் ஒரு பெரிய

வழக்குக்கு தயாராவது போல தயாரானான் அவளும் நிமிர்ந்தாள்

"அசோகன் உனக்கு என்ன உறவு?"

"தம்பி."

"உன் அம்மாவுக்கு...?"

"மகன்"

"மகனை எங்கயாவது அம்மா வணங்குவாங்களா?" சாமிநாதனின் முதல் கேள்வி அவளைத் தைத்தது.

"அசோகனுக்கு பைத்தியம்னுதானே இந்த ஊருக்கு கூட்டிக்கிட்டு வந்திருக்கீங்க...?"

"ஆமா..."

"ஆனா, அவன் ஊர்ல நினைச்ச இடத்துல எல்லாம் திரியறான். அவனைப் பார்த்தா ஒரு பைத்தியம் மாதிரியே தெரியல..." சாமிநாதனுக்கு சங்கரனும் வக்காலத்து வாங்க தொடங்கினான்.

"பானு... சாமி கேக்கறது சரிதான். காயத்ரிகூட உன் அம்மா பத்தி இந்த மாதிரி நிறைய சொன்னா அசோகன் இப்ப அசோகன் இல்ல. அவனுக்குள்ள பாபா பூந்து வந்திருக்கறதா உன் அம்மா நினைக்கற மாதிரி தெரியுது. உனக்கு இது பத்தி எல்லாம் எதுவும் தெரியாதா...?"

- பானுவிடம் அழுத்தமான மௌனம். என்ன சொல்வது, எதைச் சொல்வது என்றே அவளுக்கு தெரியவில்லை. அதே சமயம் அவர்கள் எந்த அசோகனைப் பற்றி பேசிக் கொண்டிருந்தார்களோ அதே அசோகன் சற்று தொலைவில் ஒரு மரத்தின் பின் நின்றபடி அவர்கள் பேசுவதை எல்லாம் கேட்டு சிரித்துக் கொண்டிருந்தான். கல்மண்டபக் கூரை மேல் அந்த நாகமும் கீழே நடப்பதை கூர்ந்து பாத்தபடியே இருந்தது. குறிப்பாக அதன் பார்வை அந்த நோட்டு கட்டின்மேல் இருந்தது.

ஆனால், உருதுவில் எழுதப்பட்டிருந்ததால் எதுவும் புரியவில்லை.

"இதை பாபாவே எழுதினதா சொல்வாங்க. நிச்சயம் ரொம்ப ரொம்ப சீக்ரெட்டான விஷயமாத்தான் இருக்கணும். இல்லேன்னா முந்நூறு வருஷமா ஒரு பாம்பு இதை பாதுகாத்துகிட்டு இருக்குமா?"

*"இப்ப அந்த பாம்பு ஆத்தோட போயிடிச்சா? நீ பாத்தியா?"*

*"இல்லேன்னா இதை எப்படிடா நான் எடுத்துக்கிட்டு வரமுடியும்?"*

*"இதுல என்ன இருக்குன்னு தெரிஞ்சுக்க முயற்சி செய்வோம். பிறகு ஒரு முடிவுக்கு வருவோம். பானு எங்களை தவறா புரிஞ்சுக்காதே. இந்த விஷயத்துல உன் ஒத்துழைப்புதான் எங்களுக்கு மிக முக்கியம்."*

*"நோ ப்ராப்ளம் சாமி... எனக்கே என் வீட்டு விஷயம் ஒரு பெரிய புதிர்தான். அம்மா எதைக் கேட்டாலும் பதில் சொல்ற தில்ல. பாட்டி வாயைத்தான் நான் கிண்டுவேன். பாட்டியோ, எல்லாம் வர்ற சிவராத்திரி வரைதான். அதுக்குப் பிறகு நம்ம குடும்ப விஷயம் எல்லாருக்கும் தெரிஞ்ச ஒரு ரகசியமா கிடும். நமக்கும் விடுதலை கிடைச்சிடும்னு சொல்றா... குறிப்பா எங்க காதல் கை கூடணும்... நானும் என் அம்மா மாதிரி அந்த பங்களா பூஜைக்கு போகக் கூடாதுங்கறதுல பாட்டி ரொம்ப தீவிரமா இருக்காங்க..."*

*"அப்படின்னா வர்ற சிவராத்திரிதான் எல்லா குழப்பங்களுக்கும் முடிவான நாளா?"*

*"ஆமா... அதே சமயம் இந்த நோட்டு இப்ப நம்ம கைல கிடைச்சிருக்கறதுக்கும் நிச்சயம் ஏதோ சம்பந்தம் இருக்கு."*

*"ஆனா, இதுல என்ன இருக்குன்னே தெரியலியே..."*

*அவர்கள் தங்களுக்குள் முட்டி மோதிக் கொள்ள-மரத்தின் பின் இருந்த அசோகன் முகத்தில் முடிவு தெரிந் தது. மரத்தைச் சுற்றிக் கொண்டு அவன் வந்தபோது ஒரு காஷ்மீர் சென்ட் வியாபாரியின் தோற்றத்தில் இருந்தான். கையிலும் ஒரு பிரீஃப்கேஸ். தொளதொளவென்று பைஜாமா குர்தா-தலையில் சர்தார்ஜி தொப்பி. தோடிபுரத்தில் சென்ட் விற்க வருபவன் போல வந்தான். அவர்களும் பார்த்தனர். அவனும் சிரித்தான்.*

*"என்னய்யா... யார் நீ?"*

*"சென்ட் வியாபாரிங்க. வாங்கிக்கறீங்களா?"*

*"ஊருக்குள்ள போய் விக்காம இங்க யார் இருக்கான்னு வந்திருக்கே?"*

"வழி தெரியாம வந்துட்டேன்க. எனக்கு காஷ்மீர் பக்கமுங்க."

"நல்லா தமிழ் பேசறே..?"

"எல்லா பாஷையும் பேசினாதானே ஊர் ஊரா போய் விக்க முடியும். ஆனா தாய்மொழி உருதுங்க..."

"உருதா?" - கேட்கும்போதே அந்த நோட்டின் மீது அவன் பார்வை சென்று "அட 'ராகமந்த்ரம்'கற உருது புத்தகம். உங்களுக்கு உருது படிக்கத் தெரியுமா?" என்றான். "இல்ல... இது எங்க வீட்ல ரொம்ப வருஷமா இருக்கு. இதுல என்ன இருக்குன்னு படிச்சு சொல்லேன்" சாமி சட்டென்று முடிவுக்கு வந்து புத்தகத்தை நீட்டவும், அவனும் வாங்கி பக்கங்களை புரட்டினான். அப்படியே முகத்தில் ஏராளமான உணர்ச்சிகளை பிரதிபலித்தான்.

"என்னப்பா..?"

"இது அபூர்வமான நோட்டு. இதுல எந்த ராகத்தை வாசிச்சா மழை பெய்யும், எந்த ராகத்தை வாசிச்சா தீ பிடிக்கும், எந்த ராகத்தை வாசிச்சா செத்த பொணத்துக்கு உயிர் வரும்னுல்லாம் எழுதப்பட்டிருக்கு. இதை எழுதினவர் பேர் கூட நவாப்ஜான் பாபா... முந்நூத்தி ஆறு வருஷம் கழிச்சு... அதாவது இந்த 2004-ம் வருஷம் இது படிக்கப்படும். அதுக்குப் பிறகு நிறைய அதிசயங்கள் தோடிபுரத்தில் நடக்கும்னு போட்ருக்கு. குறிப்பா அப்ப ருத்ரன்னு ஒருத்தன் வருவான். அவனால ஊரறிய 'ருத்ர வீணை' வாசிக்கப்படும்னும் போட்டுருக்கு..."

அவன் அப்படிச் சொல்லவும், மூவரும் அப்படியே ஸ்தம்பித்துவிட்டனர்.

"அந்த ருத்ரன் வெளிய இல்லை... இந்த ஊர்லயேதான் இருக்கான்னும் போட்ருக்கு..."

சென்ட் வியாபாரி வடிவில் பாபாவாகிய அசோகன் சொன்னது அப்படியே பற்றி எரிய ஆரம்பித்தது.

"இன்னொரு விஷயம்-இதை பாதுகாக்கற நாகம் ரொம்ப நல்லதாம். அதுக்கு தீங்கு செய்ய வேண்டாம்னும் சொல்லியிருக்கார்..." - அப்படிச் சொல்லும்போது கல்மண்டபம் மேல் பார்த்தபடி இருந்த நாகம் அவிழ்ந்து விழுவது போல அந்த ஏட்டுக்கட்டு மேலே விழுந்தது.

அவ்வளவுதான்... செண்ட் வியாபாரியும் கைகளை உதறி சில அடி பின்னோக்கி சென்றதோடு பயந்து ஓடுவது போல் ஓடவும் செய்தான் சிறிது தூரம் ஓடி திரும்ப அசோகனாக மாறி மரத்தின் பின்னால் நின்றுகொண்டு நடப்பதை கவனிக்கத் தொடங்கினான். முகத்தில் மாறாத அதே மர்மப் புன்னகை.

அந்த சர்ப்பம் புத்தகக் கட்டை தன் உடம்பால் வளைத்துப் பிடித்தபடி சரசரவென ஊர்ந்து பக்கத்து மாமரத்தின் மேல் ஏற ஆரம்பித்தது. மரத்தில் ஒரு பெரிய பொந்து. அதற்குள் புகுந்து மறைந்தும் போனது.

“சாமி... அந்த பாம்புக்கு எதுவும் ஆகலைடா அது சௌகர்யமா இந்த மரத்துல இருக்கற பொந்துக்குள்ற நுழைஞ்சுடுத்து. ஒரு வகைல இந்த புத்தகம் இதோட பாதுகாப்புல இங்க இருக்கறதும் நல்லதுக்குதான். இதை மீறி நாம எடுத்துண்டும் போக முடியாது. என்ன சொல்றே?”

-சங்கரன் கேட்க மௌனமாக சாமிநாதன் ஆமோதித்தான். அவன் பார்வை என்னவோ அந்த மரப்பொந்தின் மேலேயே இருந்தது. அதேசமயம் பலமான கைதட்டல் சப்தம். மூவரும் திருப்பினார்கள். உபாசகர்தான் கைகளைத் தட்டியபடி வந்து கொண்டிருந்தார். நெருங்கியவர் மூவரையும் தீர்க்கமாக பார்த்தார் அப்படியே அண்ணாந்து மரப் பொந்தையும் பார்த்தவர், மரத்தின் அருகே சென்று அதைத் தொட்டு கண்களில் ஒற்றிக் கொண்டார். “நாகமாதா... என்னை மன்னிச்சுடு. இனி உன் காவலுக்கு நான் பங்கமா இருக்கமாட்டேன். உன்னைப் பத்தி, அந்த புத்தகம் பத்தி எல்லாம் தெளிவா தெரிஞ்சுண்டுதான் வந்திருக்கேன்” என்று மரத்தை ஒரு மனிதனைப் போல நினைத்து பேசியவர், அவர்கள் அருகில் வந்தார். ஒரு சிரிப்பு சிரித்தவர், “புதுசா கூட்டணி அமைச்சிருக்கீங்க போல இருக்கு...?” என்று ஆரம்பித்தார். அவர்களிடம் இறுக்கம்.

“என்ன சாமிநாதா என் கூட பேசமாட்டியா? நான் அவ்வளவு வேண்டப்படாதவன் ஆய்ட்டேனா?”

“ஆமாம் சாமி. உங்க செயலை எங்களால புரிஞ்சுக்கவே முடியலே. எங்களுக்கே தெரியாம அந்த கணேசனை கைக்குள்ள போட்டுக்கிட்டு அவங்க வீட்ல இருந்த இந்த

ஏட்டுக்கட்டை திருட முயற்சி செய்திருக்கீங்க. என் அப்பாவை யும் குணப்படுத்த விருப்பமில்லாம வேடிக்கை பார்த்துருக் கீங்க.

"நீ ரொம்ப அவசரப்பட்டுப் பேசறே... அந்த ருத்ரேஸ்வர் பேச்சைக் கேட்டு மட்டும் எந்த முடிவுக்கும் வந்துடாதே. அவன் லேசுப்பட்டவன் இல்ல. அதை தெரிஞ்சுக்கோ "

"இதையேதான் அவர் உங்கமேல சொல்றாரு..."

"அங்கதான் நீங்க சுதாரிக்க வேண்டியது இருக்கு... நான் இந்த ஊருக்கு ருத்ர வீணைக்காகத்தான் வந்திருக்கேன் அதை வெளிப்படையாவே சொல்றேன். எதுக்குன்னும் தெரிஞ்சுக்குங்க. எனக்கு ஒரு கண் தெரியாத மனைவி இருக்கா. ஒரு மின்னலிலே அவ கண் போயிடுச்சு. அவளுக்கு பார்வையை ருத்ர வீணையாலதான் தரமுடியும். அதுமட்டுமல்ல... என் ஊர் இப்ப வறட்சியோட பிடில இருக்கு... ஒரு காலத்துல சக்தி புரம்னா பசுஞ்சோலை. ஆனா, இப்ப அந்த ஊரே சகாரா பாலைவனமா போய் ஊர்லயே ஒருத்தர்கூட இல்லை. குறிப்பா சக்திபுரம் மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோவில்ல இருக்கற பட்டர்கூட வெளியூருக்கு பஞ்சம் பிழைக்க போய்ட்டார். இப்ப அங்க சந்நிதில ஒருவேளை பூஜைக்கு வழி இல்ல... கோவில் சிலைகள் ஒவ்வொண்ணா திருடு போய்ண்டு இருக்கு. இதையெல்லாம் தடுத்து என் ஊரையும் தோடிபுரம் மாதிரி நான் மாத்தணும்னா எனக்கு 'ருத்ர வீணை' வேணும். ஒரு மண்டலம்... அதாவது 48 நாள் இந்த வீணை என் வசம் இருந்தா போறும். என் ஊர் மாறிடும். பல நல்ல காரியம் நடந்துடும். என் விருப்பம்கறது ஊரோட நன்மையை உத்தேசம் பண்ணினது. ஆனா, அந்த ருத்ரேஸ்வர் விருப்பம் இப்படிப் பட்டதில்லை. அசுரன் ஒருத்தன் ஈஸ்வரன் கிட்ட வரம் கேட்டுட்டு அப்புறமா அந்த பரமன் தலைல கை வைக்க ஆசைப்பட்ட மாதிரி... என் அறிவுக்கு எட்டின அளவுல என் உபாசனா சக்தியால நான் உணர்ந்ததை வெச்சு சொல்றேன். ருத்ரேஸ்வர் 'ருத்ர வீணை'யை கிட்டத்தட்ட பத்து கோடி ரூபாய்க்கு வெளிநாட்டுக்கு விற்க முடிவு பண்ணியிருக்கான். அதுக்கான வியாபாரப் பேச்சு இப்ப அந்த தோட்டத்து குடிசை வீட்ல நடந்துண்டு இருக்கு. நான் இங்கேயே இருக்கேன். நீங்க மூணு பேரும் துளிகூட தாமதம் இல்லாம போய்ப் பாருங்க. உண்மை தெரியும். பிறகு மற்ற விஷயங்கள பேசலாம்..."

உபாசகர் மிகத் தெளிவாக கூறியதோடு தன் மடியில் இருந்து ஒரு அஞ்சனப் பெட்டியை எடுத்தவர் அதில் இருந்து துளி மையை எடுத்து மூவருடைய புருவத்திலும் லேசாக பூசியவராக “இது உங்களை அவன் உணராம தடுக்க உதவும்... அதேசமயம் இதோட சக்தி ஒண்ணரை நாழிகைதான். அதாவது கிட்ட தட்ட 40 நிமிஷம்... உம்... முதல்ல போய்ட்டு வாங்க. அதுக்குப் பிறகுதான் நமக்கு நிறைய வேலையே இருக்கு...” என்று கை காட்டினார்.

மூவரும் சற்று தயங்கிவிட்டு பின் வேகமாக நகர்ந்தனர். அவர்கள் விலகவும் அங்கே மென்மையான கொலுசு சப்தம் காதில் ஒலிக்க மைதிலி வந்து நின்றாள் அவளைப் பார்த்தவர் பரவசத்தோடு கைகளை கூப்பினார்

“அம்மா... நீ சொன்னபடியே செய்துட்டேன் அவாளும் போய்ட்டா...”

“பாத்துண்டுதானே இருந்தேன் நரசிம்மபாரதி.”

“அனேகமா அவா உண்மையை தெரிஞ்சுண்டு வந்துடுவா. அப்படிப்பட்டவா கிட்ட நீயே நேர்ல் பேசலாமே தாயே...”

“ஏன்... உன்னை அவங்க நம்ப மாட்டாங்கற தயக்கமா?”

“நிச்சயமா அப்படி எல்லாம் இல்லை. ஒரு ‘ருத்ர வீணை’க்காக நான் வந்திருக்கறதோ, இல்லை அந்த ருத்ரேஸ்வர் போன்ற வியாபாரிகள் வந்திருக்கறதோ பெரிசு இல்லை. ஆனா, அதைப் பாதுகாக்க அம்பாளே வந்திருக்காங்கறதை இவா தெரிஞ்சுண்டா அது எவ்வளவு பெரிய விஷயம்?”

“எப்ப எதை யார் தெரிஞ்சுக்கணும்கறதுல ஒரு கணக்கு இருக்கு. சொல்றத நீ கேள். மற்றதெல்லாம் தானா நடக்கும்...”

“அம்மா... எனக்கு உன் தரிசனத்தை கொடுத்தே. என்னை நெறிப்படுத்தவும் செய்தே. இதே மாதிரி அந்த ருத்ரேஸ்வரை ஆட்கொண்டு அனுக்கிரஹம் பண்ணக்கூடாதா தேடலும் போட்டியும் எதுக்கு...? இடைல கல்யாணசுந்தரம் போலவும் காயத்ரி போலவும் சிலர் கஷ்டப்பட வேண்டிய அவசியம்தான் என்ன?”

“எல்லா கேள்விகளுக்கும் சரியான விடை இருக்கு நரசிம்மபாரதி. வரப்போற சிவராத்திரி இந்த கேள்விகளுக் கெல்லாம் மட்டுமில்ல... பல அதிசயங்களை இந்த உலகத்துக்கு உணர்த்தப் போற ஒரு நாளாகும் அவைகளை நடத்திக்

கொடுக்கவும், சிக்கல் சிடுக்கல்களை நீக்கவும்தான் நான் வந்திருக்கேன்."

மைதிலி தன் பேச்சின் முடிவில் உபாசகர் கண்களுக்கு கையில் வீணையுடன் சப்த மாதாக்களில் ஒருத்தியான பிராம்மியின் தோற்றத்தில் காட்சி கொடுக்க - உபாசகருக்கு உச்சி முதல் பாதம் வரை சிலிர்த்துக் கொண்டது. அப்படியே சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார். மரக்கிளைமேல் அந்த சர்ப்பமும் அந்த அரிய காட்சியைக் கண்டபடி படம் விரித்திருந்தது.

**தோ**ட்டத்து குடிசை!

மூவரும் குடிசையை நெருங்கியபோது வெளியே இரண்டு கார்கள் நின்றுகொண்டிருந்தன. ஒன்று ருத்ரேஸ்வருடையது. இன்னொன்றில் கர்நாடகாவின் ரிஜிஸ்தர் எண். உள்ளேயும் ஹிந்தியில் பேச்சு வார்த்தைகள்.

"ருத்ரேஸ்வர்ஜி... உங்களால அந்த 'ருத்ர வீணை'யை பிரச்சினை இல்லாம எடுக்க முடியுமா?"

"முடியும்கற நம்பிக்கைலதானே உங்க கிட்ட பணம் வாங்கியிருக்கேன்..."

"இந்த விஷயத்துல அலஹாபாத் ஸ்வாமிஜிகூட 'என்னால ஒண்ணும் முடியாது. இனிமே நீங்க ஆசிரமம் பக்கமே வரக்கூடாது'ன்னு சொல்லிட்டார் அவராலேயே முடியாதுன்னு தெரியும்போது உங்களால..."

"உங்களுக்கு சந்தேகமா இருந்தா உங்க பணத்தை வாங்கிட்டு நடையைக் கட்டுங்க. வீணை என் வசம் ஆகட்டும். அப்புறம் அதைக் கேட்டு சர்வதேச அளவுல என்கிட்ட நேர்ல வருவாங்க. அப்ப நான் பார்த்துக்கறேன்."

"கோவிச்சுக்காதீங்க. ரொம்ப கவனமா நீங்க நடந்துக்கணும். ஏன்னா இந்த தமிழ்நாட்டுல பிரஸ் கூட அந்த சுந்தராம்பாள் மேல ரொம்ப மதிப்பா இருக்காங்க. யாரும் இந்த ஊர் மிதிகல் மேட்டர் பற்றி பேசமாட்டேங்கறாங்க. அவ்வளவு பயம்..."

"அவங்க சாதாரண மனுஷங்க. நான் அப்படி இல்ல. எனக்கு இப்ப 36 வயசு ஆகுது. ஆனா, இந்த இளம் வயசுல 1008 சண்டி ஹோமம் பண்ணினவன் நான். அவ்வளவு பலனையும் தாரையா வார்த்து அந்த 'ருத்ர வீணை'யை நெருங்குவேன்.

என்கிட்ட எந்த குட்டி தேவதையும் வரமுடியாது. எனக்கு என் ஜாதக பலம் என்னன்னு தெரியும். ஒருத்தர் ஆயுள் எப்ப முடியும், எப்படி முடியும்கறத ஒரு தேர்ந்த ஜோதிடனை விட துல்லியமா சொல்ல முடிஞ்சுவன் நான். ஊருக்கு சொல்லத் தெரிஞ்ச எனக்கு என்னைப் பத்தி தெரியாதா? எனக்கு இப்ப நடக்கற தசையும் யோக தசை... அந்த தசையையும் ஆட்சி பெற்ற கிரகத்தோட புத்தி நடக்கறவேளை இது. இப்ப நான் மண்ணைத் தொட்டாலும் பொன்னாகணும். கடவுளால கூட இப்ப என்னை எதுவும் செய்ய முடியாது."

"உங்களைப் போலவே அந்த நரசிம்மபாரதிங்கற உபாசகரும் இங்கு முயற்சி செய்துகிட்டிருக்காரே அவரும் உங்களை மாதிரி மந்த்ர தந்த்ர யந்த்ர பலம் உள்ளவர்தானே?"

"மந்த்ர தந்த்ர யந்த்ர பலம் இருந்தா போறாது. இந்த மாதிரி சமயத்துல தர்ம நியாயம்னு மடங்கிப் போயிடக் கூடாது. என்வரைல எனக்கு வெற்றிதான் குறி. அதுக்காக எதையும் நான் இழப்பேன். ஒரு பேச்சுக்கு சொல்றேன். என் உயிரைக் கொடுத்தாதான் வீணை கிடைக்கும்னா நான் விக்கிரமாதித்தன் கதை உங்களுக்கு தெரிஞ்சிருக்கும். 'உனக்கு குபேர நிதி வேணும்னா உன் தலையைக் கொடு'ன்னு காளி சொன்னப்போ அவன் யோசிக்கலை. 'தலை போயிட்டா உயிர் போய்டும். உயிர் போனா பொணமாயிடுவோம். பொணத்தால குபேர நிதியை வெச்சுகிட்டு என்ன பண்ண முடியும்'னு லாஜிக் பாக்காம தலையைக் கொடுத்தான் விக்கிரமாதித்தன் காளியே அத னால பிரமிச்சுப் போனா. நானும் அப்படி ஒரு பிரமிப்பை அந்த பரமேஸ்வரனுக்கும் பரமேஸ்வரிக்கும் கொடுக்கப் போறவன். இப்பதானே கால் ஊனியிருக்கேன். போகப்போக பாருங்க நான் எப்படி காய் நகத்தறேன்னு..." ருத்ரேஸ்வரின் விஸ்தாரமான விளக்கத்தில் அவன் குரூரம் நன்றாகவே வெளிப்பட்டது. மூன்று பேருமே அதைக் கேட்டு கையை உதறிக் கொண்டு அவன் பார்க்கும் முன் அங்கிருந்து சென்றுவிடும் எண்ணத்துடன் நகர்ந்தனர். இருந்தும் சங்கரனுக்கு நெஞ்சு கொதித்தது.

"சாமிநாதா இவன் என்னடா இவ்வளவு பெரிய எமகாதகனா இருக்கான்..."

"பதட்டம் வேண்டாம் சங்கரா முதல்ல உபாசகரைப் போய் பார்ப்போம். அவர் என்ன சொல்றார்னு கேப்போம்."

சாமிநாதன் அவனை அடக்கி வழிப்படுத்தி மாந்தோப்புக்கும் அழைத்து வந்தான். உபாசகர் கல்மண்டபம் நடுவில் தீர்க்க மான தியானத்தில் இருந்தார். மூவரும் வரவும் காத்திருந்த மாதிரி கண் திறந்தார்...

“என்ன... பார்க்க வேண்டியதை பார்த்து கேட்க வேண்டியதை கேட்டாச்சா?”

“ஆச்சு ஸ்வாமி... எங்களால இதை நம்பவும் முடியல; நம்பாம இருக்கவும் முடியல.”

“நம்பு சங்கரா... நம்பு, இனியும் நம்ப முடியலைன்னு ஒரு மூணாம் மனுஷன் மாதிரி பேசாதே...”

“சாமி... அந்த ருத்ரேஸ்வர் பத்தி தெரிஞ்சுகிட்டோம். அப்படியே வர்ற சிவராத்திரிக்குள்ற பல அதிசயங்கள் நடக்கப் போகுதுங்கறதையும் தெரிஞ்சுகிட்டோம்... இதுல நாங்க என்ன செய்யப் போறோம்னுதான் தெரியல...”

“என்னப்பா கேள்வி இது. ருத்ர வீணைங்கற ஒரு விலை மதிப்பில்லாத பொக்கிஷத்தைக் குறிவெச்சு ஒரு தர்ம யுத்தம் இங்க நடக்க ஆரம்பிச்சாச்சு. ஆனா, அதுவோ சிவன் சொத்து. அதைத் தொடவும் வாசிக்கவும் ருத்ரனுக்குத்தான் அதிகாரம்.”

“ருத்ரன்னா அவன்தான். அதே சமயம் அவனது பரிவார தேவர்கள் பேரும் ருத்ரர்கள்தான். அவாளை படைச்சதும் அந்த ஈஸ்வரன்தான் ஈஸ்வர சொத்து ஈஸ்வர அம்சம் உள்ளவாகிட்டதான் போகமுடியும்...”

“அப்போ அந்த ருத்ரன்கறது யார் சாமி?”

“இந்த ஊர்லயே இருக்கற ஒருத்தன்னு ஏடு சொல்றது. மற்ற விஷயங்கள் போகப் போக தானா தெரியவரும்னு அந்த அம்பாளும் சொல்றா...”

“அம்பாளா?”

“நான் ஒரு உபாசகன். அம்பாள் உபாசகன் அப்படித் தானே சொல்வேன்....” உபாசகர் சமாளித்தார்.

“குழப்பறீங்க. ஒரு பக்கம் அந்த ருத்ரேஸ்வர் இன்னொரு பக்கம் ருத்ரன் கிட்ட தான் வீணை கிடைக்கும்னு தகவல். ஆனா அவனோ நான் எப்படியும் அடைஞ்சே தீருவேன்கறான். எங்க ஊர் சொத்துக்கு இப்படி ஒரு போட்டியா?”

"தப்புப்பா உங்க ஊர்ல இருக்கற உலகத்தோட சொத்துக்கு இப்படி ஒரு போட்டியான்னு கேள்..."

"சரி, சாமி... நீங்க விஷயத்துக்கு வாங்க. ருத்ரன் வருவான்னு சொன்னீங்களே அது யார்னு எப்படித் தெரிஞ்சுக்கறது?"

"நல்லவேளை. ஒரு உண்மையைத் தெரிஞ்சுக்குங்க. அந்த வீணையைத் தொட்டு வாசிக்க யாரால முடியறதோ அவன்தான் ருத்ரன்..."

"அது எங்க இருக்குன்னே தெரியல. இதுல எப்படி சாமி அதை எடுத்து வாசிச்சு பார்த்து முடிவுக்கு வர்றது...?"

"பொறு சாமிநாதா ஏன் துடிக்கறே. அந்த ருத்ரன் நீயாகூட இருக்கலாம். சங்கரனாவும் இருக்கலாம். அவ்வளவு ஏன் அந்த கணேசனா கூட இருக்கலாம்..."

"அப்ப இந்த போட்டில நீங்க இல்லையா?"

சாமிநாதன் அப்படிக் கேட்கவும், உபாசகர் முகம் அப்படியே இருண்டுவிட்டது. நெடுநேரம் அவரிடம் பேச்சே வரவில்லை.

"சாமி... நான் என்ன ஏதாச்சும் தப்பா கேட்டுட்டேனா?"

"இல்லப்பா... முதல்ல நான்தான் ருத்ரன்னு நினைச்சுண்டு வந்தேன். ஆனா 'நீ இல்லடா ருத்ரன்'னு அந்த அம்பாள் சொல்லாம சொல்லிட்டா..."

"எந்த அம்பாள் எப்ப சொன்னா...?"

உபாசகர் பதிலுக்கு சிரித்தபடி "அதைவிடு... 'ருத்ர வீணை'யை ருத்ரன் கிட்ட ஒப்படைக்கற ஒரு யக்ஞம் நடக்கப் போறது. அதுல நம்ம ஒவ்வொருத்தருக்கும் ஒரு பங்கு இருக்கு. நான் சொன்ன மாதிரி உங்கள்ல ஒருத்தர் ருத்ரனா இருக்கலாம். அதை மறந்திடாம இனிதான் ரொம்ப கவனமா நடந்துக்கணும்..." - உபாசகர் மெல்ல கோடு போட ஆரம்பித்தார். அதே சமயம் தோடீஸ்வரன் ஆலயத்துக்குள் ஒரு பன்னிரண்டு வயது சிறுவன் பால்மணம் மாறா முகத்துடன் நெற்றியில் நீறுமணக்க தன் மாமா ஒருவருடன் நுழைந்து கொண்டிருந்தான். அவனைக் கோவில் புல்வெளியில் மேய்ந்து கொண்டிருந்த காளை ஒன்று நிமர்ந்து பார்த்துவிட்டு தன் கழுத்து மணிகளை பலமாக உதறிவிட்டுக் கொண்டது!

**கோ**வில் பிராகாரத்தில் கால் வைத்திருந்த அந்த சிறுவனுக்கு இருந்தால் பத்துப் பன்னிரண்டு வயது இருக்க லாம். அவனோடு அவன் மாமா பத்ரிநாராயணன் என்பவர். அழுக்கு வேட்டி, கசங்கிய துண்டு, தாடையில் ஒரு ஐம்பது நாள் தாடி என்று அப்பட்டமான மடப்பள்ளி சமையல்காரன் தோற்றம்.

அவன் கூட மேலே சட்டை போட்டிருக்கவில்லை.

ஒரு துண்டுதான் அவன் மேலாடையாக இருந்தது.

இருவரும் கோவிலுக்கு ஸ்வாமி தரிசனம் செய்ய வந்த மாதிரியே தெரியவில்லை. அவர்கள் பார்வை யாரையோ துழாவியது.

உள்ளே அர்த்த ஜாம பூஜை முடிந்து திரை போட்டுவிட்டு கதவை பூட்டிக் கொண்டிருந்தார் பட்டர்.

கச்சிதமாக அவர் எதிரே போய் இருவரும் நின்றனர் பட்டருக்கும் அவர்களைப் பார்த்த உடன் ஒருவித திகைப்பு.

"பத்ரி... நீயா?"

"நானேதான் மாமா... நீங்க எப்படி இருக்கேள்?"

"நான் நன்னா இருக்கேன். நீ எங்கடா இந்தப் பக்கம்...?"

"உங்கள பார்க்கத்தான்..."

"வா- இப்படி உட்கார்- ஆமா என்னை பாக்கன்னு சொல்றே. கைல பெட்டி துணி மணி ஒண்ணுத்தையும் காணோமே...?"

"கைய வீசிண்டு வந்தா எப்படி மாமா இருக்கும்?"

"விவரமா சொல்லுடா... யார் இந்த பையன்?"

"இவன்... இவன்..."

"சொல்லு. இவனுக்கென்ன? ஏன் தயங்கறே?"

"ஓடிப்போன என் தங்கை பாலாமணியோட பிள்ளை யாண்டான் இவன். பேர் மணிகண்டன்."

"ஓ... அவளோட புள்ளையா ஆமா அவ இப்ப எங்க இருக்கா?"

- பட்டர் இந்த கேள்வியைக் கேட்டபோது மணிகண்டன் என்கிற அந்த சிறுவன் அருகில் தூணில் செதுக்கப்பட்டிருந்த ஒரு சிவலிங்கம் மேல் கை வைத்து அதை ஆசையாக வருடிக் கொண்டிருந்தான். பட்டரும் கவனித்தார்.

"அதை ஏன் மாமா கேக்கறேள்...! ஒரு சிவராத்திரி அன்னிக்கு இவனைப் பெத்துப் போட்டுட்டு அப்படியே உயிரை விட்டுட்டா இவனோட அப்பனும் அப்படியே விட்டுட்டு ஓடிப்போனவன்தான். எங்க இருக்கான்... என்ன பண்றான்னே தகவல் கிடையாது. நான்தான் இவனை வளர்த்துண்டு வரேன். எவ்வளவு நாளைக்குத்தான் என்னால இவனை சுமக்க முடியும்?"

"அதனால?"

"அதான் இங்க அழைச்சுண்டு வந்துட்டேன். உங்களுக்கு கோவில்ல கூடமாட ஒத்தாசைக்கு வெச்சுக்கலாமே மாமா..."

"என்னடா இது இப்படி திடுதிப்னு வந்து இப்படிச் சொல்றே?"

"ஏன் மாமா இவன் பாரமா இருப்பானேன்னு நினைக்கறேளா?"

"அப்படி இல்ல... படிக்கற வயசு இவனுக்கு. எங்கயாவது வேதம் படிக்க அனுப்பிச்சாகூட புண்ணியம். அத்த உட்டுட்டு இப்பவே எடுபிடியா இவனைப் போட்டா அது எப்படிடா?"

"ஒரு ஆச்சரியம் என்னன்னா... வேதம் படிக்க பாடசாலைக்குப் போகாமலே அவ்வளவு வேதத்தையும் தலைகீழா ஒப்பிக்கிறான். விஷ்ணு சஹஸ்ரநாமம், தேவாரம், திருவாசகம் எல்லாம் தலைகீழ்... இப்ப கூப்ட்டு தேவாரத்துல ஒரு பாட்டு கேளுங்கோ... ஒப்பிப்பான். எங்க கத்துண்டான்? யார் சொல்லிக் கொடுத்தா? தெரியல. ஆனா பிச்சுப் பிச்சு ஓதறுறான்! கேட்டாக்க 'கோவில்ல ஓதுவார்கள் சொல்லும்போது கேட்டேன். அது தானா வந்துடுத்து'ங்கறான்..."

"அப்படியா?"

"சந்தேகமா இருந்தா கூப்ட்டு கேட்டுப் பாருங்கோ..."

பட்டர் மணிகண்டனை அருகில் அழைத்தார்.

அவனும் ஓடி வந்தான்.

"உன் பேர் என்ன?"

"மணிகண்டன்."

"அப்படின்னா என்ன அர்த்தம் தெரியுமா?"

"தெரியும். அய்யப்பனோட பேர் அது. திருமாலும் சிவனும் பெற்ற பிள்ளை அய்யப்பன் மணிங்க்றது நாதம்

*எழுப்பக்கூடியது. நாதம்கறது ஒருவித சப்தம். அதாவது இசை. இசையைப் போன்ற குரல், அதாவது கண்டன் உடையவன்கறது பொருள்!"*

*மணிகண்டனின் விளக்கத்தில் பட்டர் விக்கித்து விட்டார். அவருக்கே மணிகண்டன் என்கிற பெயருக்கு அப்படி ஒரு பொருள் இருப்பது தெரியாது. கழுத்திலே மணிமாலையைக் கட்டியிருப்பதால் மணிகண்டன் என்று பேர் வந்திருக்கும் என்றுதான் எண்ணியிருந்தார். ஆனால், ஒரு ஞானியைப் போல அபூர்வ விளக்கம் தந்தான் மணிகண்டன். அப்படியே பார்த்து சிரித்தான். அதில் மழலைத்தனமுடன் மேதா விலாசமும் மின்னியது.*

*"எங்க... ஏதாவது ஒரு பாட்டு பாடு பாப்போம்..."*

*"சிவன் மேலயா?"*

*"உம்... அப்படியே இருக்கட்டும்..."*

*"திருவிளையாடல் புராணத்துல இருந்து பாடட்டுமா?"*

*"பேஷா..."*

*- மணிகண்டனும் பாட ஆரம்பித்தான்.*

**'மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் கைகலும்**
**எண்ணில் நல்ல கதிக்கு யாதுமோர் குறைவில்லை.**
**கண்ணில் நல்லஃதுறும் கழுமல வளநகர்ப்**
**பெண்ணில்நல் லாளொடும் பெருந்தகை இருந்ததே..**

*மளமளவென்று ஒரே மூச்சில் ஒப்பித்தவனைப் பார்த்து திணறிப் போனார் பட்டர்.*

*"பத்ரி... நீ போ. இவனை நான் பாத்துக்கறேன். எனக்கு இனி ஒரு பிள்ளை இல்ல. ரெண்டு பிள்ளை. இவன் நன்னா படிக்க வேண்டிய பிள்ளை. படிக்க வெச்சா பிரமாதமா வருவான். இவனைக் கோவில் வேலைல போட்டு வீணடிக்கக் கூடாது. நீ போ... கவலையே படாதே..." என்றார் பட்டர். பிறகு "வந்ததும் வராததுமா உன்னைப் 'போ போ'ன்னு துரத்தறேன் பார். ஆத்துக்கு வந்து ஒரு வா சாப்டுட்டு காலம்பற நீ ஊருக்குப் போ..." என்றார்.*

*தலையாட்டினார் பத்ரிநாராயணன்.*

*மணிகண்டனோ சிவலிங்கத்தின் மேலேயே கண்ணாக இருந்தான். பட்டரும் கவனித்துவிட்டு கேட்டார்.*

"ஆமா... சிவலிங்கத்தையே பார்த்துண்டு இருக்கியே... அதுல அப்படி என்ன இருக்கு?"

"இதுல என்ன இல்லை?" திருப்பிக் கேட்டான் மணிகண்டன். திடுக்கிட்டார் பட்டர்.

"சரி, என்ன இருக்குன்னு நீதான் சொல்லேன்."

"இதுல எல்லாமே இருக்குன்னும் சொல்லலாம். எதுவுமே இல்லைன்னும் சொல்லலாம்... அதாவது கடவுள் இந்த உலகத்துல இருக்கார்னு ஒரு கூட்டம் சொல்றது. இல்லைன்னு இன்னொரு கூட்டம் சொல்றது. அந்த மாதிரி.

ஒரு கோர்ணத்துல பார்த்தா இது உருளையான ஒரு கல். இன்னொரு கோணத்துல பார்த்தா சம்மணம் போட்டு அமர்ந்திருக்கற ஒருத்தரை கறுப்பா இருட்டுல பாக்கற மாதிரி...

மலைமேல இருக்கற லிங்கத்தை தூர இருந்து பார்க்கும் போது அதோட தலைபாகம் மசூதி கூரை மாதிரியும் இருக்கும். ஒரு சிலுவையைப் பாக்கற மாதிரியும் இருக்கும். ஆனா, கிட்ட போனாலோ அது வெறும் கல்லா தெரியும்.

லிங்கத்தை ஆண் குறின்னும் சொல்வா. அடி பாகமாகிய ஆவுடை பெண் குறி. இரண்டும் சேர்ந்தா அங்கே இன்பம் உண்டாகறது. இன்பத்துக்குள்ள இன்னொரு உயிர் உண்டா கறது. அந்த உயிருக்குள்ள இன்னொரு உயிர் அதுக்குள்ள இன்னொரு உயிர் இப்படியே தொட்டுத் தொட்டுப் போனா அதுல இருந்து வந்தவாதான் நாம். நம்மோட மூலம் அது... இதை விரசமில்லாம அடக்கமா சொல்ற ரூபம்தான் லிங்கம்.

உயிர்னா மனுஷ உயிர் மட்டும்தானா?

கடலுக்குள்ள இருக்கற பெரிய திமிங்கிலம் தன்னைத் தான் உலகின் மிகப்பெரிய உயிராவும் சக்திமிக்கதாவும் நினைச்சுக்கும். உண்மையும் அதுதான்.

இந்த பூமியில நாலுல ஒரு பங்குதானே நிலம். மூணு பங்கு கடல்தானே? அந்த கடலுக்குள்ளே வாழற மீன்கள் தானே மிகப்பெரிய உயிர் இனம். நம்ம மனிதர்களோட எண்ணிக்கையைவிட அதோட எண்ணிக்கைதானே அதிகம்? அப்படிப்பட்ட அது என்ன நினைக்கும்? கடவுள்ங்கறவர் தன்னைப்போல ஒரு திமிங்கிலமாதான் இருப்பார்னுதானே?

இதே எண்ணம் சிங்கத்துக்கும் இருக்கலாம். எறும்புக்கும் கூட இருக்கலாம். நாம என்னடான்னா நம்மைப்போல மனித உருவுலதான் அவர் இருப்பார்னு நினைக்கறோம். இது எவ்வளவு பெரிய பேத்தல் தெரியுமா? அவருடைய உண்மையான வடிவம் யாருக்குத் தெரியும்? இந்த வடிவம்தான் அவர்னு எப்படி சொல்ல முடியும்? லிங்கத்துக்குள்ற எல்லா வடிவமும் இருக்கு. வடிவமே இல்லாத தன்மையும் இருக்கு.

இப்படிப்பட்ட லிங்கத்துக்குள்ள இல்லாத விஷயம் எது?'

- மணிகண்டன் கையை ஆட்டி திருப்பிக் கேட்டபோது பட்டரிடம் ஸ்தம்பிப்பு. அவர் தினமும் லிங்கத்துக்குத்தான் பூஜை செய்கிறார். ஆனால், ஒரு முறைகூட இப்படி எண்ணிப் பார்த்ததில்லை. அந்த நொடி மணிகண்டன் ஒரு ஞானக் கடலாகத்தான் அவர் கண்ணுக்குத் தெரிந்தான். ஓடிவந்து அவன் கன்னத்தை தடவி திருஷ்டி கழித்தார்.

பிறகுதான் கிளம்பினார்கள்!

இரவு நேரம்!

சமையலெல்லாம் முடிந்துவிட்டிருந்தது. பூ கட்டிக் கொண்டிருந்தாள் மைதிலி. பக்கத்திலேயே கண் தெரியாத தவிப்போடு காயத்ரி. மோட்டு வளையைப் பார்ப்பவள்போல கண்களை வைத்துக் கொண்டு "அக்கா... எங்க இருக்க?" என்று கேட்டாள்.

மைதிலி சிரித்தாள் மௌனமாக ஒரு பாத்திரத்தை தட்டி தான் இருப்பதை காட்டிக் கொண்டாள்.

"எனக்கு இவ்வளவு தூரம் நடந்துருக்கு... ஆனா, நீ எனக்கென்னன்னு இருக்கே! எனக்குத் தெரியும் நீதான் எனக்கு கண்ணு போகவே காரணம். நீ ஏதோ பண்ணிட்டே..." என்றாள்.

அப்போது அசோகனும் வந்தான். அவள் பேசியதைக் கேட்டு சிரித்தான். மைதிலியையும் பார்த்தான்.

அவள் முகத்திலும் மந்தகாசமான புன்னகை.

சங்கரன் எங்கோ போயிருந்தான் எனவே மிகவும் சௌகர்யமாக இருந்தது. அதேசமயம் உபாசகர் உள்ளே வந்தார். உடன் அவரது மனைவி. கண் தெரியாத நிலையில் ஒரு துணிப் பையுடன் அவள் நடந்த வருவதைப் பார்த்தாள் மைதிலி. அசோகனும்.

உள்ளே நுழைந்த உபாசகர் இருவரையும் பார்த்து கைகளைக் கூப்பினார். கண்கள் கலங்கிவிட்டிருந்தன.

"இவ என் மனைவி ராஜம். ஒரு இடி விழுந்ததுல கண் போயிடுத்து. டாக்டர்கள் கைய விரிச்சுட்டா. ஆனா, எனக்கு இந்த ஊர்ல இருக்கற அம்பாள் மேல நம்பிக்கை இருக்கு. அவ கருணையை எதிர்பார்த்துதான் இந்த ஊருக்கும் வந்திருக்கேன்..." என்றபடி மைதிலியைப் பார்த்தார்.

பட்டரும் அந்த மணிகண்டனுடனும், பத்ரிநாராயண னுடனும் உள்ளே நுழைந்தார்.

அவருக்கும் உபாசகர் மனைவியைப் பார்க்க ஆச்சரியம்.

"உபாசகர் ஸ்வாமி... இவா?"

"என் ஆத்துக்காரி. பேர் ராஜம். கண் தெரியாது. இவ்வளவு நாள் சென்னைல என் அண்ணாவாத்துல இருந்தா நான்தான் தகவல் கொடுத்து வரச் சொன்னேன்."

"கண் தெரியாத நிலைல தானாவே வந்துட்டாளா?"

"என்ன ஸ்வாமி இது கேள்வி... என் அண்ணா கொண்டு வந்து விட்டுட்டு போறார்."

"நான் பார்க்கவேயில்லையே..."

"நானே பாக்கல... காவேரிக் கரை மண்டபத்துல உக்காந் துண்டு இருந்தேன். எதிர்ல தடவிண்டே நடந்து போயிண் டிருந்தா விட்ருந்தா ஆத்துல விழுந்து கைலாசத்துக்கு போயிருப்பா. நல்லவேளை பார்த்துட்டேன்... ஆமா இவா...?"

"இவன் பேர் மணிகண்டன். பேசிப் பாருங்கோ தெரியும். பெரிய ஞானஸ்தன். இவன் பத்ரி நாராயணன். எனக்கு தூரத்து உறவு. மணிகண்டனுக்கு யாருமில்லை. இனி நம்மாத்துலதான் தங்கப் போறான்..."

"இங்க ஏற்கெனவே நாங்க ரெண்டு பேர். இதுல இந்த அம்பி வேறயா?"

"சுமையா நினைச்சா உங்கள மாதிரிதான் நினைக்கத் தோணும். சுவையா நினைச்சா இவனையோ உங்களையோ பாரமா நினைக்க என்னால முடியல. உங்களுக்கு உதவற புண்ணியத்துலயாவது என் ஊமைப் பொண்ணுக்கு ஒரு கல்யாணமும், இந்த குருட்டுப் பொண்ணுக்கு ஒரு பார்வையும் கிடைக்கட்டுமே..."

- பட்டர் குரல் தழுதழுத்துவிட்டது. உபாசகரும் கொஞ்சம் உருகித்தான் போனார் மைதிலியைப் பார்த்தார் அவள் முகத்தில் மர்மமான அதே புன்னகை!



# 17

## அன்று

சந்தியா வந்தனம் செய்து முடித்துவிட்டு விளக்கேற்று வதற்காக பூஜை அறைக்குள் புகுந்தார் சாஸ்திரிகள். மேடைமேல் பத்திரமாக இருந்தது ராகமந்திர ஏட்டுக்கட்டு. சர்ப்பத்தைக் காணவில்லை. அந்த நொடி அவருக்குள் கொஞ்சம் போல ஆச்சரிய உணர்ச்சி.

'அது இந்த மாதிரி தருணங்களில் எங்கு போகிறது?"

'அது தனது உணவிற்கு என்ன செய்கிறது?'

'ஒரு நாகத்தின் ஆயுள் காலம் எவ்வளவு?'

'தொடர்ந்து காவல் காத்துக் கொண்டிருக்குமா?' அவருக்குள் இப்படிப் பல கேள்விகள். இந்த பூ உலக வாழ்வில் சில கேள்விகளுக்குத்தான் விடை தெரிகிறது. பல கேள்வி களுக்கு விடை தெரிவதேயில்லை. தோடிபுரத்தில் மீமாம்சம் பேசும் ஒருவரும் இருக்கிறார். அடிக்கடி அவர் சாஸ்திரிகளை சீண்டுவார். சாஸ்திரிகள் பட்டையும் கொட்டையுமாக இருப்பதைப் பார்த்து 'நல்ல வேஷம்' என்று கிண்டலும் செய்வார். அவர் வரையில் கடவுள் என்பவர் ஒரு கற்பனை. சாதாரண கற்பனைகூட இல்லை. ஒருவித குரூரமான கற்பனை என்பார் 'கடவுள் பெயரைச் சொல்லிக் கொண்டு இங்கே நீங்கள் ஊரை ஏமாற்றிக் கொண்டிருக்கிறீர்கள்' என்பார். பூஜை, நிவேதனம் எல்லாமே ஒருவித வீண் செயல் என்று ஏகடியம் பேசுவார். 'சரி... எதுதான் சரியான செயல்?' என்று கேட்டால் சிரிப்பார். ஏனோ அவர் ஞாபகம் அந்த வேளையில் சதாசிவ சாஸ்திரிகளுக்கு வந்தது.

அறிவு சில கேள்விகளில் திணறும்போது கிடைப்பதை எல்லாம் பற்றிக்கொண்டு எழுந்து நிற்க முயலும். அப்போது

மனதுக்குள்ளும் பலவிதமான எண்ண ஓட்டங்கள் ஓடும். எப்பொழுதோ தெருமுனையில் பார்த்த ஒருவர் திடீரென்று ஞாபகத்திற்கு வருவார்.

இவரை இப்பொழுது எதற்கு நினைக்கிறோம் என்கிற விவஸ்தைகூட கிடையாது. அந்த மாதிரி தருணங்களில்தான் மனம் பற்றியே நாம் எண்ணிப் பார்ப்போம்.

மிக விசித்திரமான ஒருவிஷயம் இந்த மனம்.

இதில் ஏதேதோ விழுந்து கிடக்கிறது. அவ்வளவும் ஒரு நேரத்தில் எழுந்து ஆட்டம் போட ஆரம்பித்துவிடுகிறது. சாஸ்திரிகள் வரையில் சர்ப்பம் தொடர்பான கேள்விகள் தோன்றியவுடன், கூடவே நாத்திகம் பேசும் அந்த மனிதர் ஞாபகமும் சேர்ந்து தோன்றவும் ஒரு உண்மை மட்டும் விளங்கியது.

சர்ப்பம் விஷயத்தில் குழப்பம் இருக்கிறது. அது பகுத்தறிவில்லாத ஒரு உயிர் என்பது தான் அறிந்து வைத் திருக்கும் செய்தி. பிறந்தது முதல் எவ்வளவோ உயிர்களைப் பார்த்தாகிவிட்டது. அவ்வளவுமா இப்படி காவல் இருக்கிறது. அது அதற்கு அது அதன் இயல்பு. அதற்கென்று நிர்ணயமான ஒரு வாழ்க்கை முறை. அதில் அது முடிந்துபோயும் விடுகிறது. ஆனால், அவைகளை மீறிக் கொண்டு புதிராகவும் சில விஷயங்கள் அங்கேதான் கேள்வி எழுகிறது. அப்படி கேள்விகள் தோன்றும்போது அறிவு நம்பும்விதமாக விடை கிடைக்காவிட்டால் குழப்பம் ஏற்படுகிறது இப்பொழுது இந்த பாம்பு விஷயமும் இப்படித்தான்... ஒரு பாம்பு எப்படி காவல் காக்க முடியும்... அதற்குள் எண்ணம் என்று ஒன்று இருக்க முடியுமா...?

ஏனோ சாஸ்திரிகளால் அந்த மாதிரி கேள்வியை புறந் தள்ள முடியவில்லை. விளக்கேற்றி எதிரில் சுவரில் மாட்டி யிருக்கும் சில தஞ்சாவூர் ஸ்வாமி ஓவியங்களைப் பார்த்தவராக வணங்கக்கூட தோன்றாமல் வெளியே வந்தார்

மீண்டும் அந்த மீமாம்சகர் ஞாபகம்!

'ஓய்... சாஸ்திரிகளே...! உம்மகிட்ட ஒரு கேள்வி கேட்கணும்யா. தினசரி இந்த கோவிலுக்கு போய் அங்க இருக்கற லிங்கத்தை வழிபாடு செய்துட்டு வர்றீரே.... உமக்கு என்னய்யா கிடைக்கிறது?' - ஒரு நாள் அவர் கேட்ட கேள்விதான் முதலில் எழும்பியது. தொடர்ந்து வாதப் பிரதிவாதங்கள்

'திருப்தி கிடைக்கிறது ஸ்வாமி... திருப்தி.'

'உமக்கு அங்கே போனால்தான் திருப்தி எனக்கு போகாமலே திருப்தி. யார் பெரியவன்?'

'நீர் பொய் சொல்கிறீர் ஆலயத்துக்குப் போகாத ஒருவனுக்கு திருப்தி எப்படி கிட்டும்?'

'அட என்னய்யா நீர்... அந்த ஆண்டவன்தான் தூணிலும் இருக்கான், துரும்பிலயும் இருக்கான்னு சொல்றீர். எல்லா இடத்துலயும் இருக்கறவன் எனக்குள்ளயும்தானே இருந் தாகணும். எனக்குள்ள அவன் இருந்தா நானும் கடவுள்தானே? நானே கடவுளா இருந்துண்டு எதுக்கு வெளிய போய் தேடணும். இப்ப சொல்லும் யார் புத்திசாலி?'

- சதாசிவ சாஸ்திரிகளும் குழம்பித்தான் போனார்.

'கடவுள் எல்லா இடத்திலும் நீக்கமற நிறைந்துதான் இருக்கிறார் இருந்தும் எதற்கு ஆலயம் என்று தனியாக...? இந்த அவ்வைக் கிழவிகூட 'கோவில் இல்லா ஊரில் குடி யிருக்க வேண்டாம்' என்றெல்லாம் சொன்னதும் எதற்காக?' சாஸ்திரிகள் குழம்பக் குழம்ப, அந்த மனிதர் கேள்விகளை அடுக்கிக் கொண்டே போனார்.

'சாஸ்திரிகளே... உங்களிடம் இன்னொரு கேள்வி. நான் என்னைக் கடவுள் என்று சொல்லிக் கொண்டது உங்களுக்குத் தவறாக தெரிந்தால் கடவுள் எங்கோ தனியாக என்னையும் உங்களையும்போல இருப்பதாகத்தான் பொருள் அப்படி இருந்தால் அவரை நீங்கள் ஒருமுறையாவது பார்த்திருக்கி றீர்களா? பார்க்காத ஒன்றின் மேல் நம்பிக்கை வைப்பது சரியா...? நாளைக்கே நான் நூறு தலை, ஆயிரம் கைகளுடன் ஒரு விசித்திரமான ஜந்துவைப் பார்த்தேன் என்று சொன்னால் அதையும் கடவுள் விஷயம் போலவே நம்புவீர்களா? இல்லை நான் பொய் கூறுவதாக சொல்வீர்களா?'

அவரின் அடுத்த கேள்வி சாஸ்திரிகளை கிடுக்கிப் பிடி போட்டுவிட்டது. என்ன பதில் சொல்வது என்றும் தெரியவில்லை.

'என்ன ஓய் எனக்கு என்ன பதில் சொல்றதுன்னு தெரியலியா? உமக்கு நான் பதில் சொல்லட்டுமா?'

அந்த நபர் காதைக் குடைந்தார்.

*அதற்கும் மௌனம்தான் சாஸ்திரிகளிடம்...*

*'நீங்கள்லாம் ஒரு கோழை, கடவுளை ஒரு மகாசக்தி படைச்ச ஒருத்தரா உங்களுக்கு சொல்லிட்டுப் போய்ட்டாங்க. அதனால அவர் இருந்தா அவர் தயவு தேவைங்கறதுக்காகவும், அவருடைய கோபத்துக்கு ஆளானா ஏதாவது வந்துடும்னு பயப்படறதாலயும்தான் நீங்க கடவுளை வணங்கறீங்க. இதையே ஒரு மனுஷன் உங்க எதிர்க்க செய்தா அவனை சர்வாதிகாரின்னு திட்றீங்க.*

*என் வரைல ஒவ்வொரு பக்தனும் ஒரு கோழை. பக்திக்கு இன்னொரு பேர் பயம்!*

*பயந்தாங்கொள்ளிகள்தான் பக்தர்கள். உங்க பயத்தை அப்பப்ப புதுப்பிச்சுக்கதான் கோவிலுக்குப் போறீங்க. உண்மைல சுடுகாடு பயப்படுத்தற இடம் இல்லை. கோவில்தான் பயப்படுத்தற இடம்.*

*இந்த அவ்வை மாதிரி கிழவிகள் 'கோவில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'னு சொன்னதுக்கு உண்மையான காரணம் என்ன தெரியுமா? பயம் இல்லேன்னா மனுஷன் திமிர்பிடிச்சவன் மாதிரி காட்டு மிருகம் மாதிரி நடந்துக்க ஆரம்பிச்சிடுவான். அவனைக் கொஞ்சம் தட்டி வைக்கணும். அதுக்குதான் அப்படிச் சொன்னா அப்புறம் அவங்க பொழப்பும் நடக்கணும் இல்லையா?*

*ஒரு சிந்தனையாளனுக்கு சிந்தனையாளன் ஏமாத்திக்க முடியாது இல்லையா? ஆனால், பக்தனுக்கு பக்தன் பிரமாதமா ஒருத்தரை ஒருத்தர் ஏமாத்திக்கலாம்.*

*என் சாமிதான் பெரிய சாமின்னு ஒருத்தர் சொல்லலாம். இல்லையில்லைன்னு இன்னொருத்தர் சொல்லிக்கலாம். நீங்கள்லாம் இப்படி நல்லாவே ஏமாத்திக்கலாம்...' அந்த மனிதனின் ஒவ்வொரு வார்த்தையும் சாஸ்திரிகளை சுட்டுப் பொசுக்கியது. அந்த நிமிஷம் தான் வணங்கும் அந்த தோடீஸ்வரனைக் கூப்பிட்டு அவர்முன் காட்டி 'இதோ கடவுள்... இனி நீ வாயே திறக்கக் கூடாது' என்று கத்த வேண்டும் போலக் கூடத் தோன்றியது. ஆனால், அப்படி எல்லாம் கூப்பிட்டால் உடனே வருகின்றவனா அந்த ஈசன்?*

*'புராணக் கதைகள் சிலவற்றைப் படிக்கும்போது ஆயிரம் வருஷம் தவமெல்லாம் செய்த பிறகுதான் அவர் தரிசனம்*

கிட்டியதாக செய்தி... ஒரு மனிதன் ஆயிரம் வருஷமெல்லாம் சோறு தண்ணியில்லாமல் தவம் செய்ய முடியுமா? ஒரு வேளை இப்படிச் சொன்னால்தான் கேள்வி கேட்காமல் விடுவார்கள்... கடவுளும் அணுக கஷ்டமானவர் என்று விட்டு விடுவார்கள் என்பதாலா?

இது ஒருபக்கம் என்றால் ஒரு தவமும் செய்யாமல் சிலருக்கு கூப்பிட்டவுடன் அவர் வந்த கதைகளும் இருக்கவே செய் கின்றன... எதை எடுத்துக் கொள்வது? எது உண்மை?

இந்த கடவுள் விஷயம் மட்டும் ஏன் இப்படி மண்டையைக் காய விடுகிறது.

உண்மையில் அவர் இருக்கிறாரா? இருந்தால் வருவ தற்கென்ன? அவர்தான் மனிதர்களைப் படைத்தார் என்றால் அவர் படைத்த மனிதர்களில் சிலரே அவரை இல்லை என்னும்போது அவர் அதை எப்படிச் சகிக்கலாம்? தலையில் தட்டி ஒரு குட்டு குட்ட வேண்டாமா?' சாஸ்திரிகள் தத் தளித்துப் போய்விட்டார். அந்த நிமிஷம் பாபா ஞாபகம்தான் வந்தது. 'அவர் இருந்தால் நிச்சயம் ஒரு நல்ல பதிலை சொல்லியிருப்பார். இல்லை ஒருவேளை அவரும் குழம்பிப் போயிருப்பாரோ... யார் கண்டது?' சாஸ்திரிகள் பாம்பு தொடர் பான எண்ணத்தில் ஆரம்பித்து கடவுள் சிந்தனைக்கு மாறி இறுதியாக பாபாவிடம் வந்து நின்றார்.

மனது முழுக்க அசூயையாக வேறு இருந்தது.

வாசல்புறம் திண்ணையில் போய் அமர்ந்தார்.

அவர் மனைவி பாலா பிரசவத்துக்காக தாய் வீடு போயிருந்தாள்.

தாயும் தந்தையும்கூட காசி யாத்திரை போய்விட்டனர்.

ஊர் ஊராக கோவில் கோவிலாகப் போவதில் அவர் களுக்கு அப்படி ஒரு ஆசை. அந்த நேரத்தில் தெருவில் அந்த வாஸ்து சாஸ்திர நிபுணன் விநாயகராமன் வேறு போய்க் கொண்டிருந்தான். அவன் சொன்னதெல்லாம் வேறு அவர் நினைவில் வந்தது.

அவன் சிரித்துக் கொண்டே போனான்.

அதில் ஏகப்பட்ட உட்பொருள்.

'நான் சொன்ன பல விஷயங்களை நீங்கள் நம்பவில்லை. இந்த வீடு உங்களை பாடாய்ப்படுத்தப் போகிறது பாருங்கள்' என்று அவன் எச்சரிக்கிற மாதிரிகூட இருந்தது.

மனது தன்னையும் மறந்து 'ஈசனே இது என்ன சோதனை? எனக்கெதற்கு இப்படி எல்லாம் குழப்பங்கள்? இது மனதா இல்லை மைதானமா? இருக்கிறது என்று சொல்லிக் கொண்டு ஒருவன், இல்லை என்று சொல்லிக் கொண்டு இன்னொருவன்... நான் எதை எடுத்துக் கொள்வது... எந்தப் பக்கம் போவது?'

மனதார வருந்துவது என்பதெல்லாம்கூட எப்பொழு தாவதுதான் நிகழும்... அன்று அவர் வரையில் அப்படி ஒரு வருத்தம்.

அப்பொழுது கிட்டத்தட்ட பாபா போலவே தோற்றம் - ஆனால் நெற்றியில் விபூதிப் பட்டையுடன் ஒருவர் தெருவில் வந்தபடி இருந்தார்.

சாஸ்திரிகளைப் பார்த்துவிட்டு தேங்கி நின்றார். பின் "ஐயா! நான் ஒரு யாத்ரீகன். நெடுந்தூரத்தில் இருந்து வரு கிறேன். கொஞ்சம் தண்ணீர் கிடைக்குமா? ஒரே களைப்பாக இருக்கிறது!" என்றார்.

தண்ணீரை மட்டும் இல்லை என்று கூறிடக்கூடாது.

சாஸ்திரம் தெரிந்தவர் சாஸ்திரிகள்... சாஸ்திரம் தெரிந்த வர்களைத்தான் சாஸ்திரிகள் என்றும் கூறுவோம். எனவே வந்தவரை ஒரு சிவனடியாராக எண்ணிய சாஸ்திரிகள் "உள்ளே வாருங்கள்... உணவுண்டு இளைப்பாறிவிட்டு பின் செல்லலாம்" என்றார். அவரும் சாஸ்திரிகளைப் பின்தொடர்ந்தார்.

சிறிது நேரத்திலேயே இருவரும் ஒருவரைப் பற்றி ஒருவர் விசாரித்துக் கொள்ளத் தொடங்கிவிட்டனர்.

"தங்கள் பெயர்?"

"தோடீஸ்வரன்."

"அடடே... இது எங்கள் ஊர் இறைவன் பெயர்."

"என்ன செய்வது... அதுதான் என் பெயர். என் பெயரில் ஒரு கடவுள் இருப்பதால் அவரை பார்த்துப் போவோமே என்றுதான் வந்திருக்கிறேன்..."

"'தரிசித்து' என்று சொல்லுங்கள்... 'பார்த்து' என்பது மலிவாகத் தெரிகிறது."

"அதுவும் சரிதான்... அபூர்வமாகக் கிட்டுவது என்பது தான் 'தரிசனம்' ஆகும். அன்றாடம் கிடைத்தால் அது 'பார்ப்பது' என்பதுதானே?"

அந்த மனிதரின் பதிலில் ஒரு வினாடி திடுக்கிட்டுப் போனார் சாஸ்திரிகள். குடிக்கத் தண்ணீர் கொடுத்துவிட்டு அவரை வெறித்தவர்,

"ஐயா! தாங்கள் தினமும் கடவுளைப் பார்ப்பதாக கூறுவதை எதை வைத்து நான் நம்புவது?" என்று ஒரு கேள்வியைக் கேட்டார்.

"நான் உங்களை நம்பச் சொல்லவில்லையே...?"

"இல்லை... அது சாத்தியமா என்று தெரிந்து கொள்ளத் தான் அப்படிக் கேட்டேன்..."

"உங்கள் கேள்வியே தவறு... அன்றாடம் கடவுளைப் பார்ப்பது என்பது முடியாத ஒன்று என்று தாங்கள் கருதி னால் எப்படி கடவுளைப் பார்க்கிறீர்கள் என்றுதான் கேட்க வேண்டும்? அப்படி கேட்டால்கூட நான் உங்களைப் பார்த்து சிரிப்பேன் சாஸ்திரம் தெரிந்த ஒரு சாஸ்திரி ஒரு சிறுவனைப்போல இப்படிக் கேட்கிறாரே என்று..."

- தோடீஸ்வரன் என்கிற அவர் பதிலில் ஒருவித இகழ்ச்சி கொடிகட்டிப் பறந்தது.

"ஐயா தோடீஸ்வரரே... நீங்கள் சொல்வது ஒருவகையில் உண்மைதான். நான் மிகவும் குழம்பிப் போயுள்ளேன். எனக்கு எதை எப்படிக் கேட்க வேண்டும் என்றே தெரியவில்லை.

கடவுள் இருக்கிறாரா என்பதிலேயே பெரிய குழப்பமெல்லாம் வந்துவிட்டது..."

"அது எப்படி? நீங்கள் இருக்கிறீர்களே... நீங்கள் இருந்தால் கடவுளும் இருந்துதானே தீர வேண்டும்."

"எப்படி... அப்படி?"

"என்ன எப்படி? இந்த வீடு இருக்கிறது... என்றால் இதைக் கட்டியவன் ஒருவன் இருந்துதானே தீர வேண்டும். நீர் இருக்கிறீர் என்றால் உம்மைப் படைத்த ஒருவனும் இருக்கத்தானே வேண்டும்?"

- முதல் போடே பெரும் போடாக இருந்தது.

"அது சரி... அப்படிப்பட்டவரை சிலர் இல்லை என்கிறார்களே..."

"அதுவும் உண்மைதான்... சொல்லிவிட்டுப் போகட்டுமே! உமக்கு என்ன?"

"என்ன சொல்கிறீர்கள்... இருக்கும் ஒருவர் எப்படி இல்லாமல் போக முடியும்?"

"முதலில் என் கேள்விக்கு பதில் கூறுங்கள் இருப்பது என்றால் என்ன?"

"இருப்பது என்றால்... இருப்பது என்றால்... இப்பொழுது நான் இருக்கிறேன்; நீங்களும் பார்க்கிறீர்கள். நான் இறந்து விடவில்லை. இதுதான் இருப்பது என்பது?"

"அப்படியா நீங்கள் இருப்பதை நீங்கள் எல்லா காலத்திலும் உணர முடியுமா?"

"ஏன் உணர முடியாமல்...? அபத்தமாக இருக்கிறதே உங்கள் கேள்வி?"

"அப்படியா... நேற்று இரவு நீங்கள் இருந்தீர்களா?"

"ஏன் இல்லாமல்? உறங்கிக் கொண்டிருந்தேன்..."

"உறக்கம் என்றால்?"

"தூங்குவது... அதாவது ஓய்வு எடுத்துக் கொள்வது?"

"மனதுக்கா... உடம்புக்கா?"

"இரண்டுக்கும்தான்...!"

"என்றால் தூங்கும்போது இதயம் துடிப்பதில்லையா? ரத்தம் ஓடுவதில்லையா? நீரும் சுவாசிப்பதில்லையா?"

"அது எப்படி.... அப்படி ஆனால்தால் இறந்து விடுவோமே..."

"பிறகு எதை வைத்து உடம்பு மனது இரண்டும் ஓய்வு பெறுவதாகக் கூறினீர்கள்?"

"அது... அது... சரி... மனதுக்கு மட்டும் ஓய்வு என்று வைத்துக் கொள்ளுங்களேன்."

"ஓய்வின்போது எங்கே இருந்தீர்கள்?"

"தூக்கத்தில்..."

"தூக்கத்தில் எங்கு இருந்தீர்கள்?"

"தூக்கத்தில் ஒருவர் எங்கு இருக்க முடியும்...? இருக்கும் இடத்தில்தான்...!"

"உறுதியாகக் கூறமுடியுமா?"

"இது ஆனாலும் அபத்தமான கேள்வி... உலகில் யார் உறங்கினாலும் உறங்கும்போது அவர்கள் உறங்கும் இடத்தில் தான் இருப்பார்கள்..."

"உங்களைப் பற்றிக் கேட்டால் உங்களுக்கு மட்டுமே பதில் கூறுங்கள்..."

"சரி, கேளுங்கள்..."

"நீங்கள்தான் கூறவேண்டும் தூக்கத்தில் இருந்தீர்களா இல்லையா என்று?"

"அப்படி வருகிறீர்களா நீங்கள் என்றால் சரி... தூக்கத் தில் நான் இருக்கிறேன்... அதை உணர முடியாததால் இல்லாமலும் போய்விடுகிறேன் என்றுதான் கூற வேண்டும்..."

"தினசரி இருக்கும் நீங்களே இப்படிக் குறிப்பிட்ட நேரம் இல்லாமலும் போகலாம். கடவுள் மட்டும் போகக் கூடாதா?"

- தோடீஸ்வரர் எதையோ உணர்த்த வருகிறார் என்பது சாஸ்திரிகளுக்கு விளங்கிவிட்டது. இதிகாசம், புராணம் என்று போய் தனக்குத் தெரியாத புரியாத விஷயத்தைத் தொட்டு ஏதாவது பதில் வரும் என்றுதான் நினைத்தார். ஆனால், இவ்வளவு சுலபமான ஒரு பதிலைக் கூறுவார் என்று துளிகூட நினைக்கவில்லை. அதே சமயம் அதை ஒரு முழுமையான பதிலாகவும் மனதால் நினைக்க முடியவில்லை. சாமர்த்தியமான ஒன்றாகத்தான் அவருக்குத் தோன்றியது. மௌனம் சாதித்தார்.

"என்ன... எனது பதிலை ஏற்பதா வேண்டாமா என்று குழப்பமாக உள்ளதா?"

"ஆமாம்... நீங்கள் சாதுர்யமாகப் பேசுவதாகத் தோன்றுகிறது."

"என்ன செய்வது...? கடவுள் பற்றி உங்களுக்குத் தெரிந்த விதத்தில் நீங்கள் சிந்தித்து வைத்திருப்பதோடு என் எண்ணம் ஒத்துப் போகவில்லை... அதனால் இப்படிக் கூறுகிறீர்கள்..."

"சரி... என் வரையில் கடவுள் இருக்கிறார். நாத்திகன் வரையில் அவர் இல்லை. அதனால் அவர் வரவில்லை.

இருக்கும் எனக்கு நான் அழைத்தால் வரவேண்டு மல்லவா?"

"ஒரு குழந்தை 'யானையை பானைக்குள் அடைத்துத் தா' என்கிறது. நீங்கள் என்ன செய்வீர்கள்?"

"பானை உடைந்து விடும். அபத்தம். என்பேன்."

"கடவுள் நீங்கள் அழைத்து உடனே வந்தாலும் அபத்தம்தான்... இந்த உலகம் உடைந்துவிடும்..."

"இது என்ன பேத்தல்...?"

"என் பதில் எல்லாம் பேத்தல். உங்கள் குழப்பங்கள் எல்லாம் சத்தியமான உண்மைகளோ?"

"என்னை விடுங்கள். தெளிவாக பதில் கூறுங்கள். கடவுள் வந்தால் உலகமே மாறிவிடுமோ...?"

"உண்மைதான்... கடவுள் வந்தால் நீங்கள் அவரிடம் குறைந்தபட்சம் இந்த உலகுக்கே நான் ராஜாவாக வேண்டும் என்று கேட்டாலும் கேட்கலாம் அல்லவா?"

"உலகுக்கே ராஜாவாவது என்பது குறைந்தபட்சமா?"

"இல்லையா பின்னே... அண்ட சராசரங்களுக்கு அதிபதியாவதா பெரிது...? நம்மை ராஜாவாக நாம் நினைத்துக் கொண்டால் முடிந்தது. ஆனால், மன அமைதியோடு நிம்மதி யாக வாழ்வது என்பதுதானே உலகில் பெரிய செல்வம்?"

"நிம்மதி பெரிய செல்வம். சந்தேகமில்லை. அதைக் கடவுளிடம் கேட்பதுதானே புத்திசாலித்தனம்...?"

"இங்கே மட்டும் புத்திசாலித்தனம் வந்துவிடும். மற்ற இடங்களில் எல்லாம் குழம்பிக் கொண்டே இருங்கள்..."

"நான் மட்டுமா குழம்புகிறேன்? கடவுள் விஷயத்தில் குழம்பாதவர் யார்? கண்ணை மூடிக் கொண்டல்லவா நம்ப வேண்டியுள்ளது?"

"அதற்கு நம்பாமல் 'அவர் இல்லை' என்று இருந்து விடுவது ஆயிரம் மடங்கு மேலானது..."

"நீங்கள் சாமர்த்தியமான பேச்சாளி... நான் எப்படி பேசினாலும் மடக்கி விடுகிறீர்கள் உங்களைப் புரிந்து கொள்ளவும் முடியவில்லை..."

"தன்னையறியாதவர்களால் எதையும் அறிய முடியாது சாஸ்திரிகளே..."

"தன்னை அறிவது என்றால்...? தயவுசெய்து விளங்குங்கள்..."

"நீங்கள் யார் எதற்குப் பிறந்தீர்கள் ஏன் உலகில் ஆயிரமாயிரம் ஜீவராசி இருக்கும்போது மனிதப் பிறப்பெடுத்தீர்கள்... இன்னாருக்கு மட்டும் மகனாக இந்த ஊரைக் கொண்டு எதனால் பிறந்தீர்கள் என்று கேள்விகள் கேட்டு அதற்கு விடை தெரிந்துகொள்வது என்பதுதான் தன்னை அறிவது."

"இதற்கெல்லாம் விடை உள்ளதா?"

"என்ன ஒரு மதியீனம்...? குடிக்க தண்ணீர் தந்தீர்களல்லவா? அது எங்கிருந்து வந்தது? காவிரியிலிருந்து. காவிரி எங்கிருந்து வந்தது? குடகுமலையில் இருந்து... குடகு மலைக்குத் தண்ணீர் எப்படி வந்தது? மழை மேகங்களால்... மழை மேகங்கள் எப்படி உருவாகின? கடல் நீரால்... அதன் மேல் நிலவிய சூரிய வெப்பத்தால்... வெப்பம் எங்கிருந்து வந்தது? சூரியனால்... சூரியன் எங்கிருந்து வந்தான்... இறைவன் படைத்ததனால்... நான் குடித்த தண்ணீருக்கே ஒரு மார்க்கம் இதுபோல இருந்து கடவுளிடம் சென்று முடிகிறது. நீங்கள் உங்களை அறிவதா பெரிய விஷயம்?"

"உங்களின் இந்த பதில் மிகத் தெளிவாக உள்ளது. நானும் கடவுளிடம் முடிபவனாகவே இருக்கலாம். ஆனால், இதை எல்லாம் மறுத்துப் பேசுபவர்களை என்னவென்று சொல்வது?"

"அவர்களை ஏன் பொருட்படுத்துகிறீர்கள்?"

"அவர்களும் கடவுளை உணர்ந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? அதற்குத்தான்..."

"உணர்வது என்பது ஒரு செயல் என்றால், உணராதது என்பது இன்னொரு செயல். இரண்டுமே கடவுள் வரையில் ஒன்றுதான். பசிக்கின்றவன் சாப்பிடுவான். பசியில்லாதவன் வேண்டாம் என்றுதன் சொல்வான் அவனுக்கே பசி எடுக்கும்போது சாப்பிட வருவான். அதே போல நாத்திகம் ஒரு நிலைப்பாடு. அது தப்பானதோ தவறானதே அல்ல. உண்மையில் ஆத்திகனாக இருப்பது எளிது. நாத்திகனாக இருக்கத்தான் நிறைய தைரியம் வேண்டும். ஆத்திகன் கடவுள் பார்த்துக் கொள்வான் என்று லேசாகிவிடுவான் ஆனால், நாத்திகன்

அப்படி அல்ல... தன்னைத் தானே சுமப்பதாக நினைத்து தன்னையே சுமப்பவன். அப்படிச் சுமப்பதற்காக தனக்குத் தானே பெருமைப்பட்டுக் கொள்பவன்... தன்னையே கடவுளாக நினைத்துக் கொண்டு அவன் ஏதாவது பேசினால் அதில் எந்தத் தவறும் கிடையாது..."

தோடீஸ்வரன் என்கிற அவர் ஒரு பெரிய விளக்கம் கொடுத்தது சாஸ்திரிகளுக்கு அந்த ஆலயத்து தோடீஸ்வரனே நேரில் வந்து விளக்கியது போல் இருந்தது.

"சரி... நான் எந்தப் பாதையில் செல்வது?"

"உங்களுக்குப் பிடித்த பாதையில் போங்கள்..."

"நான் கடவுள் உண்டு என்று தொடக்கம் முதலே நம்பிவிட்டேன்..."

"அப்பொழுது அதுதான் உங்களுக்குத் துணை செய்யும் சரியான பாதையாக இருக்கும்..."

"சரியான இந்த பாதை சமயத்தில் குழப்புகிறதே..."

"இந்த குழப்பம் கடவுளை நம்பாதவர்களுக்குக்கூட சமயங்களில் வரும். ஒருவேளை கடவுள் நிஜமாக இருக்கிறாரோ... நாம்தான் அவரை நம்பாமல் ஏமாந்து கொண்டிருக்கிறோமோ என்று..."

"இப்படிக் குழம்புவது பலவீனமான ஒன்றுதானே?"

"இதுதான் பலமான ஒன்று... நல்ல நிலையில் இயங்கும் மனம் எல்லாவிதமான பரிசீலனைகளையும் செய்ய வேண்டும். வெயில் அருமையை நிழலில் மட்டுமே உணர முடியும். ஒன்று தெரியாத நிலையில் இன்னொன்று தெரியவே தெரியாது..."

"இப்படி எல்லாம் நீங்கள் சொல்வதைப் பார்த்தால் நாம் எப்படி நினைக்கிறோமோ அப்படி என்றாகிவிடுகிறது. தனியாக சிவன் என்றோ விஷ்ணு என்றோ பிரம்மா என்றோ யாரும் இருக்க வாய்ப்பில்லை என்றும் தேன்றுகிறதே..."

- தோடீஸ்வரர் சிரித்தார்.

"இப்படிச் சிரிப்பதன் காரணம்?"

"உங்களுக்குள் விழுந்துவிட்ட விஷயங்கள் உங்களைப் பாடாய்ப் படுத்துகின்றன. அதுதன் இப்படி ஒரு கேள்வி. உங்களிடம் இனி தத்துவம் பேசக்கூடாது. முன்னோர்கள் போன

வழிதான் சரி. அதில் போனால் நீங்கள் புரிந்து கொண்டு வழிக்கு வந்துவிடுவீர்கள்..."

"எப்படி?"

"சிவன், பிரம்மா, விஷ்ணு இருக்கிறார்கள் கைலாயம், சத்யலோகம், வைகுண்டம் இருக்கிறது. இவர்கள் மேல் நீங்கள் வைக்கும் பக்திக்கு ஏற்ப அவர்களை ஒரு நாள் நீங்கள் அடையலாம்."

"அப்பாடா... எங்கே இவர்கள் எல்லாம் இல்லாதவர்கள் என்று கூறி இவ்வளவு நாள் நான் செய்த பக்திக்கு அர்த்தம் இல்லாமல் போய்விடுமோ என்று பயந்துவிட்டேன்."

தோடீஸ்வரன் இந்த இடத்திலும் சிரித்தார்.

"அடிக்கடி சிரிக்கிறீர்கள்..."

"சிரிப்பு வார்த்தைகள் இல்லாத ஒரு மொழி."

"அப்படியானால் அந்த மொழிவழி எனக்கு என்ன கூறினீர்கள்?"

"கூற முடிந்தால்தான் பேசி விடுவேனே..."

"சரி... மேலும் சில கேள்விகள்..."

"கேளுங்கள்."

"சர்ப்பம் ஒன்று என் மனையில் ஏட்டுக்கட்டு ஒன்றை காவல் காக்கிறது. இது சாத்தியமா?"

"சர்ப்பம் வடிவில் யாராவது கந்தர்வனோ இல்லை வித்யாதரனோ, அதுவும் இல்லை, தேவர்களில் ஒருவனோ காவல் காக்கலாம்."

"அவர்கள் அவர்களாகவே காக்கலாமே..."

"அப்படி சர்ப்பமாக இருந்து காவல் காப்பது என்பது அவர்கள் வரையில் ஒரு வழிபாடு போல.... அப்போதுதான் பார்ப்பவர்கள் மனதில் அச்சமும் பக்தியும் ஒரு சேர எழும்பும்."

"கால காலத்திற்கும் இது தொடருமா?"

"உங்கள் காலம்வரை நீங்கள் இதை உணர்ந்தால் போதும். பிறிதொரு காலத்தில் நடக்க வேண்டியது தானாக நடக்கும்..."

"இப்படிக் காவல் காப்பது எதற்காக?"

"காக்கப்படுவது ஒரு இறை விஷயமாக. உன்னதமானது. அதற்காக..."

"எங்கும் நிறைந்த இறைவனுக்கு தனியாக கோவில் எதற்கு?"

"ஆறு நிறைய தண்ணீர் ஓடினாலும் குடத்தில் பிடித்துக் கொண்டு வந்துதானே வீட்டில் சேர்க்க முடிகிறது. அப்படி அவனை வளைத்துப் பிடிப்பதற்காக..."

"பூஜை, அபிஷேகம் எதற்கு... இறைவன் இதை எப்போது கேட்டான்?"

"மழையும் காற்றும் எதற்கு... நாம் கேட்டா அது நமக்கு கிடைக்கிறது. அது தன்னையே நமக்குத் தருவது போல நாம் அவன் கேளாமலே தருகிறோம். அப்போதும் பெறுபவன் அவனல்ல... நாம்தான்..."

"எப்படி... புரியவில்லை. இறைவனுக்கு நான் அபிஷேகிப்பது எப்படி என்னை வந்து சேரும்?"

"அபிஷேகம் ஒரு செயல். அதை செய்விப்பது மனம். அதன் விளைவை அனுபவிப்பதும் மனம். புறத்தில் செய்யாமல் அகத்தில் நிஜமாக அதை அனுபவிக்க முடியாது."

"இப்படிச் செய்வது விரயமில்லையா?"

"எது சேமிப்பு...?"

"இதை அப்படியே வைத்து ஏழைகளுக்குத் தரலாமே..."

"தாராளமாக... யார் வேண்டாமென்று கையைப் பிடித்து தடுத்தது...? அதே சமயம் அந்த ஏழையே இப்படி நடந்து கொண்டால் என்ன செய்வீர்கள்?"

"அது முட்டாள்தனமில்லையா?"

"இப்படிச் சொல்பவர்கள் எப்பொழுதும் புத்திசாலித் தனமாகவே நடந்து கொள்ள முடியுமா?"

இருவரிடையேயும் கேள்வியும் பதிலும் மாறி மாறி சென்றபடியே இருந்தன. நடுவில் தோடீஸ்வரருக்கு தும்மல் ஏற்பட்டது. சதாசிவ சாஸ்திரிகள் எழுந்து சென்று தண்ணீர் எடுத்து வந்தார்.

ஆனால், தோடீஸ்வரரைக் காணவில்லை. பதிலுக்கு அங்கே சில வில்வ இலைகள் இறைந்து கிடந்தன. சாஸ்திரி களுக்கு 'குபீர்' என்று வியர்த்தது. வந்தது யார் என்றும் விளங்கிவிட்டது.

"இறைவா! என் குழப்பத்துக்கு விடை கூற நீயா வந்தாய்? வந்தது நீ என்று தெரியாமல் உன்னிடம் என்னென்னவோ

*பேசிவிட்டேனே... ஐயோ!" - பதைத்துப் போனார் சாஸ்திரிகள். சற்று தள்ளி அருகிலேயே ஒரு ஏடு. அதை எடுத்துப் பிரித்தார்.*

***'சதாசிவனே...***

***உன்னோடு நான் நிகழ்த்திய வாதப் பிரதிவாதங்களை ஏட்டில் பதிப்பிப்பாயாக.***

***சமாதி எனும் வடிவில் ஒரு உயிர் மாற்றம் உனக்கு வரும். ஊர் அதை உணராதும் போகும். ருத்ர வீணையின் பாட்டையில் நீயும் ஒரு பங்கெடுத்துக் கொள்பவன். உன் சந்ததிகளும் அதைத் தொடர்வார்கள்.'***

*- என்று கீழே லிங்க முத்திரையும் இருந்தது.*

*"இறைவா..." - கைகளை உயர்த்தியபடி உச்ச ஸ்தாயியிக்கு சென்றார் சதாசிவ சாஸ்திரிகள் அந்த வேளையில் அந்த வீட்டுக்குள் ஆவலாதியோடும் ஒரு கூட்டத்தோடும் நுழைந்து கொண்டிருந்தார் தோடிபுரத்தில் வந்து இறங்கியிருக்கும் இசைவித்தகர் முத்துவிநாயகம் பிள்ளை!*

# இன்று

*நடுநிசி நேரம்!*

*திடீரென்று அந்த இரவிலும் ஒரு பதைப்பு சுந்தராம் பாளின் தாய் வடிவாம்பாளிடம். தூக்கத்தில் இருந்து 'மளுக்'கென்று கண்விழித்து எழுந்தாள் முகமெல்லாம் வியர்த்திருந்தது. இத்தனைக்கும் தலைக்கு மேல் மின்விசிறி சுழன்று கொண்டிருந்தது.*

*தாய் எழவும், சுந்தராம்பாளும் எழுந்திருந்தாள். வியர்த்து வடிந்து கிடப்பவளை அதிர்ச்சியாகப் பார்த்தாள்.*

*"அம்மா... என்னம்மா...?"*

*"கெட்ட கனவு கண்டேன் சுந்தரம்...*

*"நினைச்சேன். தண்ணிய குடிச்சுட்டு படு."*

*"இல்ல... இப்பவே நீயும் நானும் நம்ம பங்களாவுக்கு போகணும்."*

*"என்னம்மா நீ... என்ன வந்துச்சு உனக்கு?"*

*"எனக்கு பயமா இருக்கு சுந்தரம். அடிவயிற்றுல ஒரு புரட்டு புரட்டி அப்படியே பிடிக்குது..."*

வடிவாம்பாள் அப்படிச் சொன்னவுடன் அதன்பின் சுந்தராம்பாள் எதுவும் தடை சொல்லவில்லை. மளமள வென்று எழுந்தாள். போய் விளக்கை எடுத்துக் கொண்டு வந்தாள். சேலையையும் சரிசெய்து கொண்டாள்.

"நீயும் நானும் மட்டும் போவோம். திலகம் வேண்டாம்."

"சரிம்மா..." - சுந்தராம்பாள் வளவளவென்று கேள்விகள் கேட்காமல் வடிவாம்பாளோடு ஒத்துப் போவதில் ஏராளமான உள்ளர்த்தம்.

இருவரும் ஓசைப்படாமல் கிளம்பினார்கள்.

அப்படியும் சுந்தராம்பாளின் கை வளையல் சப்தம் பானுவை எழுப்பியது. சட்டென்று கண் விழித்தவள் பாட்டியும் அம்மாவும் எங்கே போகிறார்கள் என்பது தெரியாமல் எழுந்து அமர்ந்தாள். அவர்கள் வாசலைத் தாண்டி விட்டனர்.

பானு சட்டென்று ஹாலில் உள்ள கடிகாரத்தை பார்த்தாள். அதில் மணி இரண்டு காட்டியது.

இப்படி ஒரு நேரத்தில் அம்மாவும், பாட்டியும் வெளியேறி அவள் இதுநாள் வரை பார்த்ததேயில்லை... அதிலும் திலகத்தையும் தவிர்த்துவிட்டுப் போவதில் பெரிதாக ஏதோ மர்மம் இருப்பது போல தோன்றவே, அவர்களைத் தானும் பின்தொடர்ந்தால் என்ன என்றும் தோன்றியது. சில வினாடிகள்தான் அந்த எண்ணம். அதன்பின் தாமதிக்கவில்லை. எழுந்தவள் ஒரு சால்வையை எடுத்து போர்த்திக் கொண்டு அவர்களைப் பின்தொடரத் தொடங்கினாள்.

**தோ**டிபுரம் தெருக்கள் இரவு நேரத்தில் பேரமைதியில் கிடந்தன. கல்யாணசுந்தரம் பிரசிடெண்ட்டான பின் சில நல்ல மாற்றங்கள். எல்லா தெருக்களிலும் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. தெரு நாய்களுக்கும் பஞ்சமில்லை.

மிச்சம் மீதி விழுவது அதிகம் உள்ள ஊர்களில் எல்லாம் நாய்களின் எண்ணிக்கையும் அதிகம் இருக்கும். அந்த அளவு எல்லோருமே பசி பட்டினியில்லாமல் இருக்கிறார்கள் என்றும் எடுத்துக் கொள்ளலாம்.

அந்த தெருநாய்கள்கூட சுந்தராம்பாளும் வடிவாம் பாளும் நடந்து போகும்போது பழகிய பாசத்தோடு பார்த்தன. அதே நாய்கள் பானு தலைக்கு சால்வையைப் போட்டுக்

கொண்டு நடந்து வரவும் குரைக்கத் தொடங்கின. அவைகளை சமாளித்து நடக்க அவள் சிரமப்பட வேண்டியிருந்தது. இதற்காக அவள் மெல்ல மெல்ல நடக்க வேண்டியிருந்தது. மயானம் வழியாகப் போனால் புலையன் பார்வையில் படவேண்டி வரலாம் என்பதால் காவிரி ஓரமாக புதர்களில் நடந்து சென்றாள். சில இடங்களில் காவிரி வாய்க்காலின் குறுக்கீடு. பல இடங்களில் சேற்றில் கால் புதைந்து வெளியே வரவே தவித்தாள்.

ஒரு மாதிரி சமாளித்து தாசி பங்களாவை அடைந்த போது பகீர் என்றது. பாபா சமாதியைப் புதைத்திருக்கும் நந்தவனப் பகுதியில் அம்மாவையும் பாட்டியையும் பார்த்தாள். அவர்கள் முன் சுடுகாட்டுப் புலையன் குழி தோண்டிக் கொண்டிருந்தான்.

பாட்டியிடம் கண்ணீர் பெருகிக் கொண்டிருந்தது. சுந்தராம்பாள் தேற்றிக் கொண்டிருந்தாள். யாருக்காக இந்தக் குழி?

பானுவால் ஆர்வத்தை அடக்க முடியவில்லை. இருந்தும் கட்டுப்படுத்திக் கொண்டு நடப்பதை கவனித்தாள். தூரத்தில் மயானத்தில் நாய் ஒன்றும் நரி ஒன்றும் சேர்ந்து ஊளையிட்டன... அந்த நள்ளிரவில் அந்த சப்தம் அவள் நாடி நரம்பில் ஒரு மாதிரி பயத்தைப் பரப்பியது... சற்று தள்ளி காலடியில் ஒரு சாரைப் பாம்பு வளை கோடு போல எங்கோ போய்க் கொண்டிருந்தது. வாய்விட்டு கத்திவிடலாம் போல இருந்தது. அருகில் இருந்த மரத்தண்டை பற்றிக் கொண்டு பயத்தை தணிக்கப் பார்த்தாள்.

ஒரு வழியாக புலையன் குழியை வெட்டி முடித்து விட்டிருந்தான். சுந்தராம்பாள் பிடித்தபடி நிற்கும் விளக்கின் ஒளியில் அவன் தோண்டிய குழி இடுப்புயரம் இருந்தது. அப்படியே குழிக்கு வெளியே வந்தவன், இருவரையும் பார்த்தான். பின் இருவரும் தாசி பங்களாவுக்குள் நுழைந்தனர். பானு கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டேயிருந்தாள்!

**க**ல்யாணசுந்தரத்தின் தோட்டக் குடிசையில் அந்த அதிகாலை வேளையில் கண் விழித்திருந்தான் ருத்ரேஸ்வர். அருகில் சற்றுத் தள்ளி படுத்திருந்தாள் மந்த்ரிணி. உறக்கத்தில் மேலாடை விலகி ஒரு பெண் படுத்திருக்கக்கூடாத கோலத்தில்

தெரிந்தாள். மறைய வேண்டிய பாகமெல்லாம் தெரிந்தது. ஒரு வினாடி ருத்ரேஸ்வரையே அந்த காட்சி உசுப்பேற்றியது. சட்டென்று உணர்ச்சிவசப்பட்டவன் மெல்ல அவள் அருகில் சென்றான்.

மந்த்ரிணியிடம் தன் ஆசைக்கு அவன் வடிகால் தேட முயன்றால் அவள் ஒன்றும் தடை சொல்லப் போவதில்லை. அவளையே மணந்து கொள்வதாக ஒரு வார்த்தை சொல்லி விட்டால் போதும். அவள் முழுமையாகத் தன்னையே தந்துவிடுவாள்.

ஆனாலும் அவன் வரையில் பிரம்மச்சர்யம் என்பது மந்திர தந்திர சாதனைகளுக்கு மிகமிக உதவுவது. இந்த பல வீனம் அவன் கற்று வைத்திருக்கும் கலையில் அவனை ரொம்ப தூரத்துக்குப் பின்னால் இழுத்துவிடும்.

இந்திரிய பலம்தான் யோக பலத்திற்கு பெரிய காரணி. அதில் வாரிசுகள் தோன்றிவிட்டால் தனது பாவ புண்ணியங்கள் பங்கு போடப்பட்டுவிடும். சகலத்தையும் க்ஷணத்தில் யோசித்தவன், சட்டென்று மனதை அடக்கிக் கொண்டு மந்த்ரிணியின் மேலாடையை இழுத்து மூடினான்.

அவளோ அவன் மூடவும் மெல்ல அரைக் கண் திறந்து பார்த்தாள். அத்துமீறாத அவனது செயலை அவள் ரசிக்கிற மாதிரி இருந்தது.

அவன் குடிசைக்கு வெளியே போய் நின்றான். அவன் வரையில் பிரம்மமுகூர்த்த வேளை ஆரம்பமாகிவிட்டது. இந்த காலை வேளையில்தான் காற்றில் ஜீவ சக்திகள் அதிகம் இருக்கும். மூச்சுப் பயிற்சி செய்யும்போது அந்த சக்தி உள்ளே சென்று உச்சந்தலையில் சஹஸ்ராரம் வரை செல்லும். கீழே குண்டலினியை தொட்டு நிற்கும். யோகிகள் எப்பொழுதும் காலை நேரத்தினை விட்டுவிடவே மாட்டார்கள்.

இதெல்லாம்தான் அவனைக் காலை நேரம் எழுப்பி யிருந்தது. அதே வேளையில் எப்போதும் இல்லாதபடி நாய்களின் ஊளை சப்தமும் கூப்பாடும் அவனை சிந்திக்க வைத்தது.

நடக்கக்கூடாத ஏதோ ஒன்று நடப்பது போலகூட உள்ளுணர்வு சொன்னது. அதே எண்ணமாக காவிரிக்கு புறப்பட்டான். அந்த அதிகாலையில் ஓடும் நீரில் மூழ்கி எழுவது என்பதும் ஒரு அற்புதமான அனுபவம்.

ஆற்றில் குளிக்கும் மனிதன் மட்டுமே ஒருமுறை குளித்த நீரில் மறுமுறை குளிக்காதவன். வீட்டில் குளிக்கும்போதுகூட தலையில் பட்ட நீர்தான் கால்வரை ஓடி கீழ்விழும். ஆனால், ஆற்றில் அது கூட இல்லை. இதனால் தோஷமில்லாத தண்ணீ ரின் தொற்றுதல் நாடி நரம்புகளில் ஒரு மின்சார பரவசத்தை உருவாக்கி சுரப்பிகளில் அது எதிரொலிக்கும். உடம்பின் சுரப்பிகளுக்கும் எண்ணங்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு... எனவே ஆறு உள்ள ஊராகப் பார்த்து குடியேறுவதும், ஆற்றில் குளிப்பதும், அதிகாலை எழுவதும் மிகப் பெரிய ஆரோக்கிய ரகசியங்கள்.

ருத்ரேஸ்வர் ஆறு நோக்கி செல்வதை மந்த்ரிணியும் பார்த்தாள். அந்த நொடி அவன் - அவள் வரையில் ஒரு பெரும் யோகியாகத்தான் உயர்ந்தான். ஆனால், சில நேரங்களில் அவனது குறுக்குப் பாய்ச்சல்தான் அவளைக் குழப்பும் ஒரு சமாசாரம்.

அவளும் நாய்களின் குரைப்பைக் கேட்டாள். தோடிபுரம் வந்ததில் இருந்து அவள் குரைப்பை உணரவில்லை.

**ஆ**ற்றுக்குப் போகும் வழியில் விளக்குடன் சுந்தராம் பாளும், வடிவாம்பாளும் நடந்து போவதை பார்த்த ருத்ரேஸ் வருக்கு பொறி தட்டிற்று. வடிவாம்பாள் அழுதுகொண்டே சென்றது சந்தேகத்தை அதிகப்படுத்தியது. நின்று கவனித்தவன், பின்னாலேயே பானு போவதையும் பார்த்தான்.

ஏதோ நடந்திருக்கிறது!

அவனுக்குள் ஒரு பட்சி கூவிற்று.

தாசி பங்களா பக்கம் போய் பார்த்தால் என்ன என்றும் தோன்றவும் காவிரியைத் தள்ளி வைத்துவிட்டு விறுவிறு வென்று நடந்தான். நல்லவேளை புலையன் கண்ணில் பட வில்லை. பங்களாவை எட்டியபோது புலையன் மண் வெட்டியோடு போவது தெரிந்தது. அதுவும் நந்தவனப் பகுதி யில் இருந்து... அவன் விலகவும் எட்டிப்பார்த்த ருத்ரேஸ்வரை புதிய சமாதி ஒன்று லிங்கமுடன் வரவேற்றது. மாலை எல்லாம் போடப்பட்டிருந்தது. கிடைத்த பூவை வைத்து தொடுத்த மாலை. சமாதியில் விளக்கும் எரிந்து கொண்டிருந்தது. யார் மரணித்தது? கேள்வி கொத்தியது. அடுத்த நொடியே

நந்தவனத்துக்குள் கதவின்மேல் ஏறிக்குதித்தவனாக உள்சென்று அந்த சமாதியை திரும்ப தோண்டத் தொடங்கிவிட்டான்.

மண் கவளங்களை வேகவேகமாக அள்ளிப் போட்ட போது அவனது புஜங்களிலே நல்ல திரட்சி. மிக செழுமையான ஒரு வாலிபனாக அவன் இருப்பதை அவனது வேகமும் அங்கங்களின் தினவும் காட்டின.

சரியான ஐந்து அடி ஆழத்தில் சடலம் ஒன்று தட்டுப் பட்டது முகம் முழுக்க வெள்ளைத் துணியால் மூடப் பட்ட நிலையில். அந்த துணியை விலக்கவும் அதிர்ச்சியாக இருந்தது.

ஒரு அறுபது வயது மதிக்கத்தக்க ஒரு மனிதனின் சடலம் அது. முகத்தில் புதர்போல தாடி! தலைமுடியும் சடை பிடித்திருந்தது! நெற்றியில் சிறிய லிங்கப் பச்சை! கழுத்தில் கனமான ருத்ராட்ச மாலை. மாலையைக்கூட கழட்டாமல் அடக்கம் செய்திருந்திருக்க வேண்டும். சடலத்தையும் குப்புறப் போட்டு அடக்கம் செய்யப்பட்டிருந்தது. ஆகாயம் பார்த்தபடி அடக்கம் செய்வது, அமரவைத்து அடக்கம் செய்வது, குப்புறப் போட்டு அடக்கம் செய்வது என்பதில் ஒவ்வொன்றுக்கும் ஒரு தாத்பர்யம் உள்ளது.

அதில் குப்புறப்போட்டு அடக்கம் என்பது அதன்பின் அந்த மனிதன் தொடர்பான கிளைகள் இந்த உலகில் இல்லை. அவனது சந்ததியே அவனோடு முற்றுப் பெற்றுவிட்டது என்பது பொருள். ருத்ரேஸ்வரும் அதை உணர்ந்து கொண்டான்.

அவன் யாராக இருக்கும் என்றும் யூகித்தான்.

அவனுக்குள் பலவித உபாசனா சக்திகள் உள்ளன. சில யட்ச சக்திகளைக் கூப்பிட்டால் அவை ஓடி வந்து காதுக்குள் அமர்ந்து இறந்துகிடப்பவனின் மொத்த வரலாற்றையும் கூறிவிடும்... ஆனால், அப்படிப்பட்ட சக்திகளை வைத்திருப்ப வர்களுக்கு என்று சில கட்டுப்பாடுகள் உண்டு. அவைகளை அவர்கள் தினமும் கடைப்பிடிக்க வேண்டும். அந்த கட்டுப் பாடுகள் கேட்டாலே முகம் சுளிக்க வைப்பவை. எனவே ருத்ரேஸ்வர் தன் வரையில் யட்ச வசியம் தெரிந்திருந்தும் யட்ச சக்திகளை பயன்படுத்துவதில்லை. எனவே அவ்வேளையில் அவனுக்கு குழப்பமாக இருந்தது.

ஒன்று மட்டும் புரிந்தது.. அந்த மாளிகைக்கும் அவனுக்கும் ஏதோ ஒரு தொடர்பு இருக்கிறது என்பது...

திரும்பவும் பிணத்தை மூடிவிட்டு நிமிர்ந்தான்.

ஒரு உள்ளுணர்வு - தன்னை யாரோ கண்காணிப்பதாக அவனுக்கு உணர்த்தியது. சுற்றிலும் பார்த்தான். ஒரு மரத்தின் பின் ஒளிந்திருந்த நிலையில் பானு சர்வத்தையும் கவனித்துக் கொண்டிருந்தாள். ருத்ரேஸ்வர் சந்தேகப்படுவது தெரியவும், அப்படியே இருளோடு இருளாக கரைந்து நீங்க ஆரம்பித்தாள்.

அவளும் ஒரு முடிவுக்கு வந்துவிட்டிருந்தாள்.

அங்கே புதைக்கப்பட்டிருப்பது அவளது மாமன்!

அங்குள்ள சமாதிகள் எல்லாமும் அவளது வம்சாவளியினர் ஆகத்தான் இருக்க வேண்டும். கி.பி. 1735-ல் முதலாம் ருத்ரன் என்று ஒரு சமாதி... அதன்பின் 1767-ல்... அதற்கும்பின் 1802-ல்... இப்படி வரிசையாக உள்ள ருத்ரர்களில் 11 பேர் வரை வந்துவிட்டனர். ஒவ்வொருவரும் ராசிக்கட்டத்தில் ஒவ்வொரு ராசிக்குரியவர்களாக இருந்தது அடுத்த ஆச்சரியம். அந்த ஒற்றுமையை ருத்ரேஸ்வரும் அங்கே கவனித்தான்... இறுதியாக பன்னிரண்டாம் ருத்ரன். அதற்குமுன் உள்ள ருத்ரன் சமாதியில் 11-ம் ருத்ரன் கும்ப ராசி என்கிற குறிப்பு இருந்தது. அப்படியானால் இவன் 12-ம் ருத்ரன் மீன ராசி... ஒரு சுற்று சஞ்சாரம் முடிந்துவிட்டது. இனி அடுத்து புதிதாக ஒரு தலைமுறை தொடங்க வேண்டும். அது அனேகமாக மேஷ ராசிக்குரியவனிடம் இருந்து தொடங்கலாம். அவனிடமே ருத்ர வீணையும் தஞ்சம் புகும் என்பது வரை யோசித்தவன் நிச்சயம் பங்களாவுக்குள்தான் ருத்ர வீணை இருக்க வேண்டும் என்று தீர்மானித்து உள்ளே நுழைந்து பார்த்துவிடவும் துடித்தான். இருந்தும் ஒருவித பயம் அவனைத் தடுத்து நிறுத்தியது. அவனுக்கும் முன் தோடிபுரம் வந்துவிட்ட உபாசகர் நரசிம்மபாரதியாலேயே அந்த தாசி பங்களாவுக்குள் நுழைந்து பார்க்க முடியவில்லை. அப்படி ஒரு சக்தி யாரையும் விடாமல் காபந்து செய்து வருகிறது. அப்படி இருக்கும்போது தான் நுழைந்தால் என்னாகும் என்று ஒரு கேள்வி அவனுக்குள் எழும்பியது.

*எந்த மாதிரியான மந்திர சக்தியின் காவலில் அந்த தாசி பங்களா இருக்கிறது என்பதையும் அனுமானிக்க முடிய வில்லை... அவனுக்குள் எண்ணங்கள் இப்படியெல்லாம் தோன்றும்போது வானிலும் மழை வருவதற்கான அறிகுறிகள். மின்னல் ஒன்று எலியும் பூனையும் துரத்திக் கொண்டு ஓடுவதுபோல வானில் ஒரு ஓட்டம் ஓடியது. அந்த நொடி மொத்த தாசி பங்களாவே ஒரு எழில் சின்னமாகத் தெரிந்து பின் இருளில் விழுந்தது.*

*ருத்ரேஸ்வரின் மார்பெல்லாம் வியர்வைப் புழுக்கம், மனதிலோ எண்ணங்களின் கசகசப்பு. சட்டென்று ஒரு யுக்தி தோன்றியது. இடையில் கட்டியிருந்த வஸ்திரத்தை அவிழ்த் தவன், அதை நெற்றியருகே வைத்து ஜெபித்துவிட்டு பங்களா வின் முன் வராண்டாவுக்கு சற்று அருகே சென்று தூக்கி எறிந்தான். அது அங்கே விழுந்த நொடி எங்கிருந்தோ வந்த கறுப்பு பூனை ஒன்று அதை கவ்விக் கொண்டு ஓடத் தொடங்கியது. வஸ்திரத்துக்கு கறுப்பு பூனை.... தான் காலடி எடுத்து வைத்தால்?*

*'ஆளுக்குத் தகுந்த மாதிரி அந்த மாளிகை மிரட்டுமோ?' கேள்வியோடு காலை எடுத்து வைத்தான். அடுத்த நொடி சற்று தள்ளி சில அடிகளிலேயே ஒரு பெரிய இடி ஒன்று வஜ்ராயுதம் போல இறங்க, அவனது கண்களும் சிலபல நொடி நேரம் அப்படியே இருண்டே போய்விட்டன.*

*அவனுக்கும் விளங்கிவிட்டது! உள்ளேதான் இருக்கிறது ருத்ர வீணை. ஆனால், அதை இயற்கையே காவல் காக்கிறது.*

*ருத்ர வீணை பற்றிய எண்ணமே இல்லாதவர்கள் உள்ளே சென்றால் எதுவுமே நடக்காது. அவர்கள் வரையில் அது ஒரு மாளிகை மட்டுமே... அங்கே எந்த மர்மமும் இல்லை. ஆனால், மாளிகை பற்றிய எண்ணத்தில் ருத்ர வீணையும், அதை பார்க் கவோ இல்லை அடையவோ எண்ணம் கொண்டு உள்ளே காலை வைத்தால் இயற்கை சூழலுக்கு ஏற்ப தடையை ஏற் படுத்தும் என்பது ருத்ரேஸ்வருக்கு துல்லியமாக விளங்கி விட்டது. மௌனமாக அந்த அதிகாலை வேளையில் பல ரகசியங்களைத் தெரிந்து கொண்டவனாகவும், அடுத்து செய்ய வேண்டியதை கன கச்சிதமாக செய்ய வேண்டும் என்கிற தீர்மானத்தோடும் அங்கிருந்து அகலத் தொடங்கினான்.*

பானுவும் விலகுவதுபோல விலகி பார்த்துக் கொண்டே இருந்தாள்!

**வி**டிந்துவிட்டது.

ஈரச் சிரசும் பவித்ரமான தோற்றமுமாக பட்டர் கதவைத் திறந்து கொண்டு கோவிலுக்குள் நுழைந்தார். ஒவ்வொரு சந்நிதியாக போய் கதவைத் திறந்து விளக்குக்கு எண்ணெய் விட்டு திரியை நிமிண்டி விளக்கேற்றிவிட்டு முதலில் சந்நிதி யில் ஒளியை நிரப்புவதுதான் அவரது முதல் வேலை... என்னதான் முன்னிரவில் நடை சாத்தும்போது விளக்குத் திரியை ஏற்றலோடு விட்டுவிட்டுப் போயிருந்தாலும் சமயங்களில் அணைந்திருக்கும்.

கருவறை என்பது ஒருவிதமான காற்றுப் போக்கை உடையது. சுற்றிலும் நல்ல ஜாதியால் அமைந்த காந்த விசை கொண்ட கருங்கற்களை உடைய சுவர்கள் - அதில் சாளரமோ ஜன்னலோ கூடாது. சுவாமி விக்கிரகத்துக்கு நேர் மேலே ஒரு நூலளவு துவாரம் இருந்து அதுவும் உச்சிக் கலசத்தோடு முடிந்துவிடும். முன் கதவை அடைத்துவிட்டாலோ உள்ளே தேங்கிவிட்ட காற்று மட்டும்தான் விளக்கு எரிய துணை செய்ய வேண்டும். பிரமிடு போல கருவறையின் மேல் பாகம் கூம்பாக இருப்பதால் தரையில் அழுத்தவிசை அதிகமாக இருக்கும். இதனால் அங்கு வைக்கப்பட்டுள்ள பொருட்கள் முதல் நடமாடும் மனிதர்கள் வரை அவர்கள் வேறு இடங்களில் எங்கும் சந்திக்காத ஒருவித விசை அழுத்தத்தை சந்தித்தபடி இருப்பார்கள்.

நாம் வசிக்கும் வீடுகளில் சதுர அமைப்பு உள்ளதால் விசை படுக்கைபோல பரவலாக இருக்கும். அதில் ஒரு அழுத்தமோ, கூர்மையோ இருக்காது... ஆனால், கருவறைக்குள் அப்படி இருக்க வாய்ப்பு இல்லை. அந்த இடத்தில் மந்திரங்களை உச்சரிக்கும்போது அவை அந்த விசையில் கலந்து அங்கே உள்ளே அடங்காமல் சுவரில் பட்ட பந்து எப்படி விசையோடு திரும்புகிறதோ அப்படி அது வெளியேறும். வெளியில்தான் பக்தர்கள் வரிசையில் காத்துக் கொண்டிருப்பார்கள் அவர்கள்மேல் அந்த மந்திர விசைக் கதிர்கள் பட்டு அவர்கள் உடம்பில் ஊடுருவும். ஆலயத்திற்கு சென்றால் மனதுக்கு அமைதி கிடைக்க இப்படிப்பட்ட விளைவுகள்தான் காரணம்.

ஒரு ஆலய கருவறைக்குள் இப்படி பல சூட்சம விஷயங்கள் அடங்கியுள்ளன. குறிப்பாக அபிஷேக வேளையில் அபி ஷேகிக்கப்படும் பொருட்களின் குணத்தோடு அது அபிஷேகம் செய்பவர்களைத் தாக்கும். அதனால் உடம்பு, மனது இரண் டிலும் ஒருவித புத்துணர்ச்சியும், ஒருவித புத்துயிர்ப்பும் ஏற் பட்டு அது நீண்ட நாளைக்கு பலவிதங்களுக்கு உதவிகரமாக இருக்கும். இந்த உணர்ச்சிகளை எல்லாம் நாம் அனுபவிக்கலாம். வார்த்தைகளால் பிறருக்கு உணர்த்த முடியாது.

பெரும்பாலும் கருவறைக்குள் பணியில் இருக்கும் பட்டர்கள், குருக்கள் ஒற்றை நாடியில் யோக சரீரம் கொண்டவர்களாகவே இருப்பார்கள். இவர்கள் முற்கரும வினை காரணமாக அந்த பணிக்குள் விழுந்தவர்கள். எனவே இவர்கள் பணி என்பது முன்ஜென்ம வினைக் கழிவுக்காக நிகழ்வது... இது ஒருவகையில் வாங்கிய கடனை அடைப்பது போன்றது.

அதனாலேயே கருவறையின் அருள் அலைகள் இவர் களுக்கு பெரிய லௌகீக சுகங்களுக்கு அடிகோலுவதில்லை. யோகிக்கும் பொருளுக்கும் தொடர்பு இருக்கக் கூடாது. எனவே பெரும்பாலும் இவர்கள் வாழ்வதற்குத் தேவையான அளவு மட்டும் இவர்களுக்கு பொருள் கிடைக்கும்படியான ஒருவித அமைப்பே இவர்களிடம் இருக்கும். சில விதிவிலக்குகளும் உண்டு.

ஆனால், பட்டர் அதற்கு விதிவிலக்கில்லை.

அவரும் போயும் போயும் இப்படி மணி அடிக்கும் ஒரு உத்தியோகத்திற்கு வந்துவிட்டோமே என்று எண்ணியதும் இல்லை... இறைவழிபாட்டில் நாம் வழிபடுவதைவிட சிறந்த ஒரு செயல் பிறர் வழிபடக் காரணமாக இருப்பது... எனவே கானகம் சென்று தவம் செய்வதற்கு ஒப்பான ஒரு விஷயம் கருவறையில் பூஜை செய்யும் வாய்ப்பு. ஆனால், பட்டரின் மகன் சங்கரனுக்கு அது துளியும் பிடிக்கவில்லை. 'பெரிய அளவில் வருவாய் இல்லாத இந்த உத்தியோகம் எதற்கு?' என்பது அவன் கேள்வி... அடுத்து தினசரி பூஜை செய்யும் பட்டர்களுக்கு அந்த கடவுள் நிறைய வரங்களை அள்ளித் தந்து சந்தோஷமாக வைத்திருக்கச் செய்ய வேண்டும்... ஆனால், அப்படிச் செய்ய அந்த தெய்வம் விரும்பவில்லை. தினசரி இப்படி ஆறுகால பூஜை செய்பவருக்கு அருள் தராத கடவுளா ஆலயத்துக்கு வந்து போகின்ற

வர்களுக்கும் தந்துவிடப் போகிறார்' என்பதும் அவன் கேள்வி.

பட்டர் அவன் குதர்க்கமாக சிந்திப்பதாகத்தான் கருதி னார். பக்தியை பொருளால் எடை போட்டால் தப்பான நிறைதான் வரும்... போகப் போக காலத்தால் அவன் புரிந்து கொள்வான் என்று நம்பினார்.

இருந்தும் இப்படித் தினம் தினம் ஒவ்வொரு கருவறை யாக திறந்து விளக்கேற்றும் அவன் உடன் இருந்தால் மிகவும் உதவியாக இருக்கும் என்றுதான் தோன்றிது. பதலிலுக்கு இன்று மணிகண்டன் வந்து நின்றான்.

காலையிலேயே காவேரிக்கு போய் குளித்துவிட்டு வந்து நெற்றி நிறைய நீறுடன் எதிரில் நின்றான். அவனைப் பார்த்த பட்டர் பரவசப்பட்டுப் போனார்.

"கொடுங்க மாமா! நான் போய் மற்ற சந்நிதிகளைத் திறந்து எண்ணெய் போடுறேன்..." - என்றான்.

"உனக்கு சிவதீட்சை கொடுக்காம கருவறைக்குள்ள அனுமதிக்கக் கூடாது. நீ புறத்து காரியங்களைச் செய்தா போதும்..." என்றார் பட்டர் அப்பொழுது இருவருமே தோடீஸ்வரர் சந்நிதிக்கு வெளியில் நின்றபடி இருந்தனர். உள்ளே அதிசயம். சிவலிங்கத்தின் தலை பாகத்தில் ஒரு அகல் விளக்கு எரிந்தபடி இருந்தது. அதைப் பார்த்த மணிகண்டனும் கேட்டான்...

"மாமா... என்ன இது லிங்கத்தோட... தலைக்குமேல அகல் விளக்கு...?" - அவன் சொல்லவும் பட்டரும் திரும்பிப் பார்த்தார். சற்றுமுன் பார்த்தபோதுகூட அப்படி ஒரு விளக்கு எரிய வில்லை. அதுவும் லிங்கத்தின் தலைமேல் விளக்கு ஏற்றுவது பெரிய பிழை. சாஸ்திரம் தெரிந்த யாரும் அப்படிச் செய்ய மாட்டார்கள்... பட்டருக்கே அதைப் பார்க்க பதைத்தது... ஓடிச் சென்று அந்த விளக்கை எடுத்து கீழே வைக்கப் போனார். விளக்கு இருந்த தலைபாகத்தில் ஒரு ஏடு!

ஆச்சரியம் அதிகரித்தது.

எடுத்துப் பார்த்தார் சிற்றெறும்பு ஊர்வது போல எழுத்துகள் கண்களை இடுக்கிக் கொண்டு படிக்கத் தொடங்கினார்.

**'வானுடரும் வழிபடும் தோடிபுரத்தினில்**
**வருகின்ற சிவராத்திரி தன்னில்**
**திருவுடைய ருத்திரனும் நேரில் வந்தே**
**அருளுடைய ருத்ர வீணை தன்னை**
**பெரு உடையார் மண்டபத்தில் அமர்ந்தே மீட்டி**
**ஒரு வழியைக் காட்டிடுவான்!**
**மறுமைக்கு வழிகாட்டும் திருநாள் தன்னில்**
**இம்மையும் சீர்பெறும் ருத்ரதரிசனம் காண்பார் தமக்கு'**

- ஏட்டைப் படித்த பட்டருக்கு கைகள் நடுங்கின.

தோடிபுரத்தில் மட்டும் ஈசன் இதுபோல ஏடு மூலமாகவே பேசுவான் என்பது காலகாலமாக நிலவிவரும் நம்பிக்கை. பட்டர் தன் வாழ்நாளில் இப்படி ஒரு ஏட்டைப் பார்த்த தில்லை. முதல் முறையாக இன்றுதான் பார்க்கிறார். யார் எழுதியது...? எப்படி வந்தது? போன்ற கேள்விகளை எல்லாம் தூக்கிப் போட்டுவிட்டு ஓடினார். இந்த விஷயத்தை கர்ணத் திடமும், பிரசிடெண்ட் கல்யாணசுந்தரத்திடமும் கூற வேண்டும் என்கிற துடிப்பு அவரிடம். ஆனால், மணிகண்டன் முகத்திலோ ஒருவித சிரிப்பு!

**த**லைமுழுகிவிட்டு ஒரு மூலையாகப் பார்த்து அமர்ந் திருந்தாள் வடிவாம்பாள். பானுவின் பாட்டி. சுந்தராம்பாளும் தலைமுழுகிவிட்டு எங்கே போகிறேன், எதற்குப் போகிறேன் என்று ஒரு விஷயம்கூட கூறாமல் வில் வண்டியில் ஏறிக் கொண்டு எங்கோ போய்விட்டாள். திலகத்துக்கு எல்லாமே ஆச்சரியமாக்த்தான் இருந்தது. அவளையும் அழைத்துக் கொண்டுதான் கிளம்பினாள்.

பானுவோ ஒரு தீர்மானத்தில் இருந்தாள்.

இன்று பாட்டியை போட்டு ஒரு புரட்டு புரட்டி எடுத்து விடுவது என்பது அவளது எண்ணமாக இருந்தது. காரணம்... முன்னிரவில் அவள் பார்த்த காட்சிகள். ஒரு மரணம் என்பது ஊர் கூடி ஒப்பாரி வைத்து நிகழ்ந்து முடியும் ஒரு சடங்கு. ஆனால், இங்கே இவர்களிடம் அதில்கூட ஒரு ரகசிய நடவடிக்கை.

"பாட்டி." - **அழைத்தாள்.** அவளும் ஏறிட்டாள்.

"என்ன தலை முழுக்கு போட்டுருக்கே...?"

"

"வாயைத் திறந்து பதில் சொல்லமாட்டியா? கண்கூட கலங்கி இருக்கு...?"

"சும்மா இரு பானு... இப்ப என்கிட்ட எதுவும் கேட்காதே. நானே மனசு ஒடிஞ்சு போய் கிடக்கறேன்."

"இப்ப என்ன நடந்துடிச்சு... உன் மனசு ஒடியற அளவுக்கு..?"

"பானு... எதுவும் கேக்காதேன்னு சொன்னேன்ல..?"

"ஏன்... கேட்டா என்ன தப்பு...? தீட்டு உனக்கு மட்டும் தானா? தாய்மாமன் செத்தா தீட்டு எனக்கும்தானே?" பானு அப்படி கேட்ட நொடி கன்னத்தில் அறைவிழுந்தது போல இருந்தது வடிவாம்பாளுக்கு.

"பானூ..."

"என்ன பானூ... பூனை கண்ணை மூடிகிட்டா பூலோகம் இருண்டு போயிடுமா பாட்டி...?"

"உனக்கு யாருடி எல்லாத்தையும் சொன்னது?"

"யாரும் சொல்லல... நான் என் கண்ணால பார்த்தேன்."

"அப்ப ராத்திரி நீ பங்களாவுக்கு வந்தியா?"

"வந்தேன். அந்த கொடுமையைப் பார்த்தேன். அது என் மாமாவாதான் இருக்கணும்னு யூகிச்சேன். என் வாழ்நாள்ல அவர் உயிரோட இருக்கும்போதுதான் நான் அவரைப் பார்க்க முடியல. செத்தபிறகாவது எனக்குக் காட்டியிருக்கலாம் இல்லையா?"

"போதுண்டி.... அந்த சாபக் கதையை இன்னொரு முறை ஞாபகப்படுத்தாதே. பத்து மாசம் சுமந்திருந்தாலும் அவன் என் மகன் கிடையாது. இந்த வயித்துல ஆண் வாரிசே உதிக்கக் கூடாது. மீறி உதிச்சா அது சிவன் சொத்து. ஒரு மண்டல காலம் தாய்ப்பால் கொடுக்க மட்டும்தான் உரிமை. அப்புறம் தூக்கி கோவிலுக்கு கொடுத்துடணும். அந்த குழந்தையும் சிவன் சொத்தாகி ருத்ரனாகிடும்... அந்த ருத்ரனுக்கும் உலக வாழ்க்கையே கூடாது. ருத்ர வீணையை இசைக்கறதும், சிவ நாம ஜபம் பண்றதும்தான் அந்த ருத்ரனோட பணி.

உன் மாமன் அந்த பங்களாவை விட்டு ஒரு நாள்கூட வெளிய வந்தது கிடையாது. இந்த உலகம் எவ்வளவு பெரிசு... இந்த உலகத்துல என்னவெல்லாம் இருக்கு.. எதுவும் அவனுக்குத் தெரியாது. அவன் இருந்தது ஒரு வாழ்நாள் சிறை. அவனது ஒரே பணி ருத்ர வீணையை மீட்றதுதான். நான் அவன் தாய்னும்

அவனுக்குத் தெரியாது. உன் அம்மா தான் அவன் தங்கைன்னும் அவனுக்குத் தெரியாது. இன்னிக்கு இந்த ராகம் வாசின்னா வாசிப்பான். அதனால ஊர் மக்கள் குறையும் தீரும். மக்கள் தான், கோவில் கல்மண்டபத்துல உக்காந்துவிட்டு இருக்கற உன் தாய்கிட்ட வரிசைல நின்னு குறையா சொல்றாங்களே அதெல்லாம் எதுக்கு..? இதுக்குத்தானே...

எப்பவோ இந்த தோடிபுரத்து ஜனங்க அவ்வளவு பேரும் சாகக் காரணமா இருந்த ஒரு சம்பவத்துக்கு பரிகாரமா ஒரு தலைமுறை இல்ல 12 தலைமுறை இப்படி இதே தோடிபுரத்துக்கு ருத்ரனா இருந்து சேவை செய்யணும்கறதுதான் நேர்த்தி. அது என் வயித்துல பொறந்த ஆண்வாரிசோட முடிஞ்சது. எங்க தன் வயித்துல ஒரு ஆண் வாரிசு வந்துட்டா இந்த விஷயம் ஒரு தொடர்கதையாகிடுமோன்னு பயந்துதான் உன்னை பெத்துக்கவே உன் அம்மா தயங்கினா. தனக்கொரு ஆண் வாரிசு வேணும்னு ஆசைப்பட்ட உன் அப்பாவோட விருப்பத்தை நிறைவேற்றவும் அந்த விமலாவுக்கு இரண்டாம் கல்யாணம் பண்ணி வெச்சா. அப்படியும்கூட அவங்களுக்குப் பிறந்த அசோகனுக்கு சித்த பிரமை பிடிச்சு இங்க வந்தப்போ அவனை அவ தன் மகனா அழைச்சுக்கிட்டு வரலை. நம்ம திலகத்துக்கு தவிட்டுக்கு வித்து அவள் மகனாக்கித்தான் அழைச்சுக்கிட்டு வந்திருக்கா.

தினசரி தாசி பங்களாவுல பூஜைன்னு சொல்லிட்டு நானும் உன் அம்மாவும் போய்ட்டு வந்தது எல்லாம் அங்க இருக்கற பாபாவை வழிபடமட்டுமில்ல. உன் மாமனுக்கு சாப்பாடு போடவும்தான். முந்நூறு வருஷ கொடுமை இது... நான் செத்தா எனக்குக் கொள்ளி போட வேண்டியவனுக்கு நான் இன்னிக்கு மண் அள்ளிப் போட்டிருக்கேன். நான் எவ்வளவு பெரிய பாவி!" -

பாட்டியின் கேள்வி பானுவை குத்திக் கிழித்தது. 'ஒரு மர்மத்தின் பின்னால் இப்படி ஒரு சோகக் கதையா' என்று மனதுக்குள்ளும் நடுக்கம்.

இத்தனை பெரிய ரகசியத்தை தனக்கும் கூறாமல் மறைத்து அதே சமயம் தன்னைப் படிக்கவும் வைத்து பெரிய நிலைக்கு உயர்த்திய சுந்தராம்பாள், பானுவுக்குள் ஒரு அம்பாளாகத்தான் முதல் முதலாகத் தெரியத் தொடங்கினாள்.

"பாட்டி... இவ்வளவு விஷயம் இருக்கு. ஆனா, எனக்கு எதுவுமே தெரியாதபடியே பார்த்துக்கிட்டீங்க. ஏன்... பாட்டி? எனக்குத் தெரிஞ்சா என்ன ஆயிடும் பாட்டி?"

"ஒண்ணும் ஆகாது. உன் அம்மாவுக்கும் எனக்கும் சேர்த்து நீ பரிதாபப்படுவே. நான் போய் ஒரு நாள் பூஜை செய்யறேன்னு ஆரம்பிப்பே.

தப்பித்தவறிகூட நீ அந்த மாளிகை பக்கம் போய்டக் கூடாதுங்கறது உன் அம்மா விருப்பம். அவ உறுதியாக இருக்கா... உன் மாமனோட மரணத்தோட நம்ம பரம்பரை சாபம் நீங்கிட்டதா..."

"பெரிய சாபம்... புடலங்கா! இந்த விஷயம் மட்டும் மனித உரிமைக் கமிஷனுக்குத் தெரிஞ்சது... உன்னையும் என் அம்மாவையும் கட்டி வெச்சு அடிப்பாங்க. ஆடு மாடு கூட நாலு இடம் மேய்ஞ்சிருக்கும். ஆனா, ஒரு உயிருள்ள மனுஷனை இப்படியா ஒரு கைதி போல உள்ள வெச்சிருப்பீங்க...? ஏன்... அவர் வெளிப்படையா எல்லாருக்கும் தெரிஞ்சு அந்த ருத்ர வீணையை வாசிச்சா என்ன ஆயிடும்?"

"அடைச்சு வெச்சு தினசரி காவடி எடுத்த நானும் உன் அம்மாவும் இந்த கேள்வியை கேட்டுக்கிட்டு இருக்கமாட்டோம்னு நினைச்சியா பானு நீ..."

"அப்படின்னா என்ன காரணம்னு சொல்.."

"எல்லாம் அந்த ருத்ர வீணையைப் பாதுகாக்கத்தான் அது என்ன சாதாரண பொக்கிஷமா... சாட்சாத் அந்த பரமேஸ்வரன், பார்வதிதேவியை ஒரு துண்டு மரமாக்கி அதைக் கொண்டு அவர் கையால செய்த வீணையாச்சே! அதை அபகரிக்கவும் காலம் காலமா எவ்வளவு முயற்சிகள் தெரியுமா?"

"அப்படி என்ன பாட்டி அந்த வீணைல இருக்கு...?"

"அது சக்திடி... பார்வதிதான் அந்த வீணைன்னா அது எவ்வளவு பெரிய விஷயம்? இந்த ஊருக்கு வந்திருக்கிற உபாசகர்கிட்ட கேள்.... அவர் சொல்வார் அதோட பெருமையை. எப்பேர்ப்பட்ட வறட்சியையும் அந்த வீணையைக் கொண்டு அமிர்தவர்ஷினி வாசிச்சா போக்கிடலாம். செத்தவங்களுக்கு உயிர் தரலாம். பட்டமரத்தை துளிர்க்க வைக்கலாம்..."

-வடிவாம்பாள் அடுக்கியதெல்லாம் ஏற்கெனவே பானுவுக்கு தெரிந்திருந்தாலும் பாட்டி வாய் வழியாகத் தெரிய வரும்போது அது ஒரு தனி த்ரில்லாக இருந்தது அவளுக்கு.

"சரி, பாட்டி... மாமா இறந்துட்டாரு... இனி அதை யார் வாசிப்பா..? அம்மாவா?"

"இல்ல... பெண்கள் எக்காரணம் கொண்டும் அதை வாசிக்கக் கூடாது... ஆண்கள்தான் வாசிக்கணும். அப்படி வாசிக்க எல்லா ஆண்களாலயும் முடியாது. ருத்ர வீணையை ருத்ரர்கள்தான் வாசிக்கலாம்னு ஒரு விதி இருக்கு...

இதுவரை நம்ம பரம்பரைல 12 ஆண்கள் ராசிக்கொரு ருத்ரனா தோன்றி வாசிச்சு அந்த வீணையை பாதுகாத்ததோட ஒரு வட்டம் முடிஞ்சு போச்சு. இனி ஒரு ருத்ரன் வெளிய இருந்துதான் வரணும்..."

"வெளிய இருந்துன்னா...?"

"தெரியாது... அது அந்த தோடீஸ்வரன் பாத்து செய்யற ஒரு செயல். இதே ஊர்ல இருக்கற ஒருத்தன்கூட ருத்ரனா இருக்கலாம். வெளிய இருந்தும் வரலாம்... ஈஸ்வரனோட எண்ணம் யாருக்குத் தெரியும்..."

"அந்த வீணையை ருத்ரனைத் தவிர யாராலயும் அடையவோ வாசிக்கவோ முடியவே முடியாதா?"

"இப்படி நீ கேட்ட மாதிரி கேள்வி கேட்டு ஆசைப்பட்ட பல பேர் போன இடம் தெரியல. எனக்குத் தெரிஞ்சு இந்த விஷயத்துல மடாதிபதிகள்கூட பாதிக்கப்பட்டு இருக்காங்க. உபாசகர் நரசிம்மபாரதியோட குருவான ஜெயந்தி நாதர் அவர்கள்ல ஒருத்தர்..." - பாட்டி ஒரு புதிய விஷயத்தை பானுமுன் திறந்தார்.

"யார் பாட்டி... அந்த திருக்கடவூர் ஸ்ரீமடத்து சாமியாரா?"

"அவரேதான்... ருத்ர வீணை ஒரு சிவன் சொத்து உலகத்தோட சொத்து. அது மொத்த உலகத்துக்குப் பயன் படணும். இப்படி ஒரு ஊர்ல அடங்கிக் கிடக்கக் கூடாதுன்னு சொல்லி ருத்ர வீணையை எடுத்துக்கிட்டுப் போக இந்த ஊருக்கு வந்தவர்தான் அவர். பங்களா முன்னால போய் நின்ன வரை தான் அவர் அவரா இருந்தார். பிறகு அவர் கையும் காலும் விளங்காம போயிடிச்சு. சாகறவரை அது சரியாகலை. இதெல்லாம் அந்த நரசிம்மபாரதிக்கு தெரிஞ்சிருக்கறதால

தான் அந்த ஆள் இதுவரை நம்ம பங்களாவுக்குள்ள நுழையலை. நுழையவும் முடியாது..."

"அப்படி நுழைய விடாம தடுக்கற சக்தி எது பாட்டி?"

"பஞ்ச பூதங்கள்தான். அதுக்கு தலைவன் அந்த தோடீஸ்வரன்..."

"இதை எல்லாம் கொஞ்சம்கூட என்னால நம்ப முடியலை பாட்டி.."

"நம்பு... அதுவும் இவ்வளவு தூரம் ஆன பிறகும் நீ நம்பலைன்னா நஷ்டம் உனக்குத்தான்... எது எப்படியோ என் மகன் போனாலும் என் பேத்தி நீ தப்பிச்சியே... அந்த மட்டுல எனக்கு சந்தோஷம்தான்."

"நான் தப்பிச்சேனா?"

"ஆமா... என் மகளோட நம்ம பரம்பரை கடமை முடிஞ்சு போச்சு. மொத்தம் 12 ருத்ரர்கள்ங்கறதுதான் பேச்சு. இனி திரும்பவும் ஒரு முதல் ருத்ரன் வெளிப்படுவான்..."

"அது யார் பாட்டி?"

"யாருக்குத் தெரியும்... அது யாரா இருந்தாலும் வர்ற சிவ ராத்திரிக்குள்ள கட்டாயம் தெரிஞ்சிடும்."

"அதுக்கும் சிவராத்திரிதான் கணக்கா..?"

"இந்த ஊர் வரைல சிவராத்திரிதான் எல்லாம். சிவராத்திரிங்கறது இந்த ஊர் வரைல ஒரு பிரமாண்ட திருவிழா நாள். அந்த கைலாசமே இடம் பெயர்ந்து அன்னிக்கு தோடிபுரத்துக்கு வந்துடுது..."

"அப்ப அடுத்த ருத்ரன் யார்ங்கறது அன்னிக்கு தெரிஞ்சிடுமா?"

"கட்டாயமா தெரியும். தெரிஞ்சே தீரணும்..."

"அப்ப அதுவரை யார் பாட்டி வீணை வாசிப்பா..."

"தெரியல. அந்த குழப்பத்துக்கு பதில் தெரியாமதான் உன் அம்மாவும் வெளிய கிளம்பிப் போயிருக்கா?"

"எங்க...?"

"வேற எங்க... உன் அப்பாவைப் பார்க்க... அவர்கிட்ட எல்லா விஷயத்தையும் சொல்ல. பாவம் உன் அப்பா... உன் அம்மாவோட கடமை தெரிஞ்சு மனசு நிறைய ஆசையோட கல்யாணம் செய்துகிட்டவர். இந்த நாள்வரை என்கிட்டேயும்

சரி, சுந்தரம் கிட்டயும் சரி, உன் அப்பா அந்த பங்களா பத்தி ஒரு வார்த்தை கேட்டதில்லை... அவர் எனக்கு மருமகனா கிடைக்க கொடுத்து வெச்சிருக்கணும்..."

"அதுசரி பாட்டி... யார் வேணா ருத்ரனா இருக்கலாம்னு சொல்றே... ஏன் அது நம்ம அசோகனாவே இருக்கக் கூடாது...?"

"இல்லம்மா... அசோகன் வடிவத்துல பாபா வந்துட்டார். இந்த ஊர் கடமைக்கும் பாபாவுக்கும் நிறையவே சம்பந்தம் உண்டு. பாபாவாலதான் அந்த ருத்ர வீணை இமாலயத்துல இருந்து இங்க வந்தது. ஆகையால திரும்ப அதைத் தேடி ருத்ரன் வரும்போது தானும் இருக்கணும்னுதான் அவர் வந்திருக்காரோன்னு நான் நினைக்கறேன்..."

"ஏன் நம்ம பரம்பரையைச் சேர்ந்த அசோகனே பதிமூணாவது ருத்ரனா இருக்கக் கூடாது...?"

"வாய்ப்பு இல்லை. ஒப்படைச்ச பாபாவுக்கு திரும்ப எதுக்கு அந்த வீணை...?"

"அப்ப அவர் வந்திருக்க காரணம்?"

"நிச்சயம் நல்லதுக்குத்தான். ஆனா, அதை எப்ப, எப்படி அவர் செய்வாருங்கறது அவருக்கு மட்டும்தான் தெரியும்."

பாட்டி ஒரு சின்ன விஷயத்தைக்கூட விடவில்லை. சர்வத்துக்கும் விளக்கம் கூறி முடித்த நிலையில் பானுவுக்கு மிகவும் ஆயாசமாக இருந்தது. பரவசம் - குழப்பம் - ஆச்சரியம் - அதிர்ச்சி என்று எல்லா ஜாதி உணர்ச்சிகளும் அவளை ஆட் கொண்டு அவளை உருட்டிப் பிசைவது போலக்கூட இருந்தது. அவள் மனக் கண்ணில் சாமிநாதனும் சங்கரனும்தான் வேகமாக முன்வந்தார்கள். அவர்களைப் பார்த்து முதல் காரியமாக பாட்டி கூறியதை எல்லாம் அசை போட்டால்தான் மனது ஆறும் போல் தோன்றியது. கூடவே அந்த ருத்ரேஸ்வரும் விஸ்வரூபம் எடுத்தான்.

"பாட்டி... இந்த ஊருக்கு காசியில இருந்து ஒருத்தன் வந்திருக்கான். கேள்விப்பட்டியா?"

"சொல்லும்மா அந்த ருத்ரேஸ்வர் பற்றித்தானே கேட்கறே?"

"அவனேதான்... ராத்திரி அவன் என்ன செஞ்சான் தெரியுமா?"

"தெரியும்... ஒளிஞ்சிருந்து நாங்க புதைச்சத வேவு பார்த்தான்..." பாட்டி சொன்னவுடன் வாயைப் பிளந்து விட்டாள் பானு...

"அய்யோ... அவனைக் கண்டுபிடிச்ச உன்னால என்னைக் கண்டுபிடிக்க முடியலையா?"

"இல்லம்மா... அது எப்படின்னும் தெரியல. ஒருவேளை கெட்ட சக்திகளை மட்டும் உணர்ற சக்திய அந்த கடவுள் எனக்குக் கொடுத்திருக்காரோ என்னவோ?" பாட்டி சொன்னதும் பானுவுக்கு சரியாகத்தான் இருந்தது. இனி பாட்டியுடன் பேசக்கூடாது... பேச வேண்டியது தன் சகாக்களிடம் என்ற முடிவுடன் சிவராத்திரி என்றைக்கு என காலண்டரைப் போய் பார்த்தாள்... இடையில் சரியாக ஒரு வாரம் கூட இல்லை.

ஐயோ!



# 18

## அன்று

**சா**ஸ்திரிகள் வீட்டுக்குள் முத்துவிநாயகம் நுழையவும் ஒரே தர்பார்... முத்துவிநாயகம் பிள்ளையின் வருகையை துளியும் எதிர்பார்த்திராதபடி அப்பொழுதுதான் ருத்ர வீணை குறித்த வரலாற்றை எழுதிவரும் ஏட்டுக்கட்டை கையில் எடுத்திருந்தார்... தொட்டுத் தொட்டு மனதுக்குள் ஏகமாய் குழப்பங்கள். ஒருவர் மாற்றி ஒருவர் அவரை ஏதாவது ஒரு வகையில் குழப்பிவிட்டு போய்க் கொண்டிருந்தனர் இடையில் பாபாவைப்போல வந்தவரின் விளக்கத்தில்தான் ஓரளவு அவருக்குள் தெளிவு ஏற்பட்டிருந்தது.

அந்த தெளிவைத்தான் ஏட்டிலும் எழுதிப் பதிக்க ஆரம்பித்திருந்தார். ஆனால், அதற்கும் ஒரு பெரிய இடையூறு போல சங்கீத போஷகர் முத்துவிநாயகம் பிள்ளையின் விஜயம் அமைந்துவிட்டது.

சாஸ்திரிகள் நிமிர்ந்தார்

முத்துவிநாயகம் பிள்ளை ஒரு கழுகைப்போல அவரைப் பார்த்தார் கையெடுத்து கும்பிடவோ நமஸ்காரம் சொல் லவோ அவரது கர்வம் இடம் கொடுக்கவில்லை. இருந்தும் அருகிலுள்ள உதவியாளர் தீர்த்தமூர்த்தி என்பவர் முத்து விநாயகத்துக்கு மிருதங்கம் வாசிப்பவர் - பேசினார்

"இங்க நீர்தான் சதாசிவ சாஸ்திரிகளோ?"

"ஆமாம்... நீங்களெல்லாம் யார்?"

"அதுசரி... எங்களைத் தெரியவில்லையாக்கும்? அதிலும் அண்ணாவைத் தெரியாதவர்கள் கைலாயத்தில்கூட இருக்க முடியாது. அது தெரியுமோ உங்களுக்கு...?"

-தீர்த்தமூர்த்தி பெருமையாக பேசுவதாக கருதி உளறினார்.

"மன்னிக்கவும்... நான் பூலோகவாசி. எனக்கு இவர் யாரென்று தெரியாது. தெரிந்தால் தெரிந்திருக்கிறது என்று கூறுவதில் எனக்கு ஆட்சேபணையே இல்லை..." - சாஸ்திரிகளின் பதிலிலும் நல்ல கூர்மை.

முத்துவிநாயகம் பிள்ளைக்கு நெஞ்சில் குத்து விழுந்தது போல் இருந்தது. தீர்த்தமூர்த்திக்கும் கன்னத்தில் அறைவிழுந்த மாதிரிதான் இருந்தது.

"சாஸ்திரிகளே... உம்முடைய பேச்சில் குதர்க்கம் இருக் கிறது. இவர் யார் என்று தெரிந்தால் நீங்கள் ஆடிப்போய் விடுவீர்கள்."

"பீடிகை எதற்கு...? யார் இவர்? எதற்கு வந்திருக்கிறீர்கள் என்று கூறுங்கள்..."

"இவர்தான் தென்னகமாகிய இந்த தெட்சிண பூமிக்கே இசையரசர்... ராகங்கள் இவர் அழைத்தால் ஓடிவரும். இவரது இசை கேட்டு கல்லும் கரையும். சேர சோழ பாண்டிய மண்டலா திபதிகள் முதல் டெல்லி பேரரசர் வரை இவர் பிரசித்தம். இவர்தான் இசைக்கடல் முத்துவிநாயகம் பிள்ளை..."

-தீர்த்தமூர்த்தியின் கீர்த்திமிகு விளக்கம் கேட்டு கைகளைக் கூப்பி நமஸ்காரம் சொன்ன சாஸ்திரிகள், ஓடிச்சென்று ஒரு பாயை எடுத்து வந்து விரித்து அதில் முத்துவிநாயகம் பிள்ளையை அமரச் சொன்னார்.

பிள்ளையும் அவரை அளந்தபடியே அமர்ந்தார்.

முகத்தில் செருக்குக்கு குறைவேயில்லை.

"ஒரு பெரிய இசைமேதை என் இல்லம் தேடி வந்தது குறித்து மிகமிக மகிழ்ச்சி..."

சாஸ்திரிகளும் அவர் எதிரில் அமர்ந்தார் மற்றவர்கள் பிள்ளை எதிரில் அமர்வது மரியாதைக் குறைவு என்பதுபோல நின்றுகொண்டே இருந்தனர்.

பிள்ளைக்கோ தன் எதிரில் சாஸ்திரிகள் சரிநிகர் சமானமாக அமர்வது துளிகூட பிடிக்கவில்லை. இருந்தும் இது அவர் வீடு என்பதால் அதைத் தடுக்க முடியவில்லை. இதெல்லாம் தீர்த்தமூர்த்திக்கு புரிந்தது. மளமளவென்று விஷயத்திற்கு வரத் தொடங்கினார்.

*“சாஸ்திரிகளே... எங்கள் இசைக் கடலுக்கு இந்த ஊரின் ருத்ர வீணை இசை ஒரு புரியாத புதிராக உள்ளது. வீணை வாசிப்பதிலும் எங்கள் இசைக்கடல் பெரும் மேதை. எனவே ருத்ர வீணை பற்றி அறிய வந்திருக்கிறார்...”*

*“நல்லது... ருத்ர வீணை ஒரு அரிய பொக்கிஷம். இந்த தோடிபுரம் ஆலயத்தின் பொக்கிஷங்களில் ஒன்று. என்றோ அது களவாடப்பட்டு இங்கிருந்து எடுத்துச் செல்லப்பட்டிருந்தது. இன்று அது பாபாஜியின் அரிய முயற்சியால் பெரும் கருணையால் இந்த மண்ணுக்கே திரும்பி வந்துள்ளது... இதுதான் அதைப்பற்றிய சங்கதி...”*

*“மிகவும் சாமர்த்தியமாக பேசுகிறீர்கள் நீங்கள். இந்த விஷயங்களில் எல்லாம் எங்களுக்கு அக்கறையுமில்லை, நம்பிக்கையும் இல்லை... அந்த வீணையை வாசித்தால் மழை பெய்யும், வெயிலடிக்கும் என்றெல்லாம் கூறுகிறார்களே அதுதான்...”*

*- தீர்த்தமூர்த்தி என்ன கேட்க வருகிறார் என்று அவருக்கே விளங்காதது போல் இருந்தது அவர் பேச்சு.*

*“நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள்...? ருத்ர வீணை பற்றிய செய்திகள் பொய் என்றா?”*

*“அது பொய்யா மெய்யா என்று பார்க்க விரும்புகிறார் எங்கள் இசைக் கடல். ஒரு இசைக்கருவி இசையறிவு உள்ள மனிதன்முன் எப்படிச் சிறந்து விளங்கிட முடியும்?”*

*“ஓ... நீங்கள் அந்த வீணையை வெறும் இசைக் கருவியாகத்தான் பார்க்கிறீர்களா?”*

*“வீணை இசைக் கருவியல்லாமல் வேறு என்ன?”*

*“நீங்கள் தெரிந்துதான் பேசுகிறீர்களா? அது அந்த பரமனால் செய்யப்பட்டது. பார்வதிதேவிதான் அதன் மரத்துண்டு. அதில் உள்ள தந்திகள் அவளது நாடி நரம்புகள்...”*

*“என்ன உளறுகிறீர்கள்? இந்தக் கதையை உங்களுக்கு யார் சொன்னது?”*

*“தோடிபுரத்து ஸ்தல வரலாற்றிலேயே அவ்வாறுதான் எழுதப்பட்டுள்ளது...”*

*“அது இடைச்செருகலாக இருக்கும்... அந்த ஈசனுக்கு வீணை செய்வதுதான் வேலையா என்ன?”*

"சரி... இனி உங்களிடம் நான் அதுகுறித்து பிரஸ்தாபிக்க விரும்பவில்லை. நான் அந்த வரலாற்றை நம்புகிறேன். நீங்கள் நம்பாவிட்டால் அது உங்கள் இஷ்டம்..."

"இப்படிச் சொன்னால் எப்படி? ருத்ர வீணை பற்றி வேலை மெனக்கெட்டு அறிந்து கொள்ள வந்திருப்பவர் எங்கள் இசைக்கடல்... அவரிடம் அதன் பிரதாபம் பற்றிக் கூறுங்கள்."

"எனக்குத் தெரிந்ததை கூறிவிட்டேன். மேலும், உங்களுக்கு நம்பிக்கை இல்லாத ஒரு விஷயம் பற்றி தொடர்ந்து பேசுவது எந்த வகையிலும் எனக்கு அழகில்லை..."

"சரி... அது இப்பொழுது எங்கு உள்ளது?"

"அது நவரத்ன மாளிகையில் சிவன் பிள்ளையாகிவிட்ட வீரேந்திரன் வசம் உள்ளது."

"சிவன் பிள்ளையா... அது என்ன? புதுமையாக இருக்கிறதே..."

"புதுமைதான் வீரேந்திரன் தாசி மாலியின் மகன். தன்னையே அவன் சிவன் சொத்தாக்கிக் கொண்டு விட்டான். அதனால் அவனை சிவன் மகன் என்றேன்..."

"காரணம்?"

"இதை நீங்கள் கோவில்தாசியான வைஜெயந்தியிடமே கேட்கலாம். அவள் தாய் மாலியிடமும் கேட்கலாம். நான் மூன்றாம் மனிதன்."

"இல்லையே... வீணை தொடர்பாய் யாரிடம் எதைக் கேட்டாலும் உங்களிடம்தானே பேசச் சொல்கிறார்கள் நீங்கள்கூட அதன் வரலாற்றை எழுதுவது போல் தெரிகிறதே..."

"அதெல்லாம் உண்மைதான். ஆனால், அது தொடர்பாய் நான் பேசுவதை நீங்கள் தொடக்கத்திலேயே நம்பாமல் எதிர் பேச்சு பேசும்போது எனக்கு உங்களிடம் பேசவே ஈடுபாடு ஏற்பட மறுக்கிறது."

"இப்படி எல்லாம் சொல்லி நீங்கள் தப்பிக்க முடியாது. அந்த ருத்ர வீணையை எங்கள் இசைக்கடல் வாசிக்க விரும்புகிறார். அவர் வாசிப்பதால் அது இன்பமளிக்கிறதா, இல்லை யார் வாசித்தாலும் அது இன்பம் தருமா என்பதைப் பார்க்க வேண்டும்..."

"மன்னிக்க வேண்டும். அதை ருத்ரர்களே வாசிக்க முடியும். மற்றையோர் அதைத் தீண்ட முடியாது..."

“இது என்ன புதுக்கதை... ஒரு நாடோடி பாபா அதை வாசிக்கலாம்.... எங்கள் பிள்ளை வாசிக்கக் கூடாதா?”

“விதண்டாவாதம் செய்யாதீர்கள்.

பாபாஜி சித்தர் ஒருவரின் சிஷ்யர். அவரது ஆணைக்கு உட்பட்டே ருத்ர வீணையை சுமந்து கொண்டு இங்கு வந்தவர். தன் நலத்துக்காகவோ தன்னுடைய இசையறிவை வெளிக் காட்டவோ அதை அவர் ஒரு நாள்கூட பயன்படுத்தியதில்லை. தன் துணியைக்கூட தானே துவைத்துத்தான் போட்டுக் கொண்டார். இறுதிவரை அந்த வீணையைக் கொண்டு அவர் எதையும் பெறவில்லை.”

“பெறுவதற்கு அது என்ன அட்சய பாத்திரமா?”

“ம்ஹும்... உங்களுக்கு எப்படிச் சொல்லி புரிய வைப்பேன். அட்சய பாத்திரத்துக்கும் மேல் என்று நான் கூறினால் அதையும் ‘என்னால் நம்ப முடியாது’ என்பீர்கள் எதற்கு வீண் பேச்சு. இனி நீங்கள் எதைக் கேட்பதாக இருந்தாலும் வேறு யாரிடமாவது கேளுங்கள். என்னை விட்டுவிடுங்கள்.”

- சாஸ்திரிகள் சட்டென்று பேச்சுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தவராக எழுந்து நின்றார் அப்போதும்கூட முத்து விநாயகம் ஒரு வார்த்தைகூட பேசவில்லை. தாடையைத் தடவியபடியேதான் இருந்தார்.

“அப்படியானால் அந்த ருத்ர வீணை அட்சய பாத்திரம்போல ஒரு மந்திரப் பொருளா...?”

“தயவுசெய்து வேறு பேச்சு பேசுங்கள் அதைப்பற்றி பேசுவதை விடுங்கள்.”

“போகட்டும். அந்த பாபாஜி நிறைய ராகங்களை எழுதி வைத்திருக்கிறாராம். அதைக்கூட ஒரு சர்ப்பம் காவல் காக்கிறதாம்... அதையாவது நாங்கள் பார்க்கலாமா?”

“இனி இது தொடர்பாக நீங்கள் எதைப் பேசுவதையும் நான் விரும்பவில்லை.”

“நாங்கள் இந்த ஊரின் விருந்தினர்.”

“விருந்தினராக வந்தவர் விருந்தினராகவே இருந்துவிட்டு செல்வதுதான் உங்களுக்கு அழகு.’

“இதுதான் உங்கள் முடிவான பதிலா?”

“ஆமாம்...

"இனி உங்களிடம் நாகரீகமாகப் பேசிப் பயனில்லை. எங்கள் இசைக்கடலின் அதிகார பலத்தை நீங்கள் போகப் போக உணரலாம்." தீர்த்தமூர்த்தி அகந்தையுடன் பேசி முடித்துவிட்டு முத்துவிநாயகம் பிள்ளையைப் பார்த்தார் அந்த நொடி அவர்களுக்கு நடுவிலேயே அந்த சர்ப்பம் விறுவிறுவென்று ஊடே புகுந்து போய்க் கொண்டிருந்தது. அதைப் பார்க்கவும் அவர்கள் ஒருவரோடொருவர் நெருக்கி யடித்துக் கொண்டு நின்றனர்.

ஒரு வீட்டுக்குள் நாய்க் குட்டியானது வளைய வரும்... பூனைகள் வரும்... அதேபோல பாம்பு வருமா என்ன?

அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அந்த சர்ப்பம் பூஜை அறைக்குள் சென்று ஏட்டுக் கட்டின்மேல் ஏறி படம் விரித்தபடி அவர்களைப் பார்க்க ஆரம்பித்தது.

முத்துவிநாயகத்தால் திறந்த வாயை மூட முடிய வில்லை. ஆனால், சாஸ்திரிகளோ சகஜமாக குனிந்து தொடர்ந்து எழுதத் தொடங்கிவிட்டார். அவர்களும் ஏமாற்றமுடன் திரும்பி நடக்க ஆரம்பித்தனர்.

வீட்டுக்கு வெளியே வந்த முத்துவிநாயகம் பிள்ளை தீர்த்தமூர்த்தியை வெறித்தார்.

"அண்ணா..."

"என்ன அண்ணா... ஏய்யா இப்படியா நாத்திகன் மாதிரி பேசுவீர்?"

"அப்படிப் பேசினாலாவது அந்த ஆள் அதோட மகிமை பற்றி பேசி 'வாங்க உங்க கண் எதிர்க்க நிரூபிக்கறேன்'னு சொல்வான்னு பார்த்தேன். ஆனா, சாஸ்திரிகள் நான் எதிர் பார்க்காத முடிவை எடுத்துட்டார்."

"புடலங்கா ருத்ர வீணை பற்றி மலிவா நீர் பேசின பாவத்துக்கு உமக்கு மிருதங்கம் வாசிக்கற சக்தியே போகப் போறது பாரும்..."

"என்னண்ணா இது, சபிக்கறேள்...?"

"சபிக்காம... மிருதங்கம் நந்தி தேவரோட வாத்தியம். அதை வாசிக்கற நீர் ஈஸ்வரனை நம்பாம பேசினா என்ன அர்த்தம்?"

"அப்ப அங்க நீர் பேசியிருக்கலாமே... மௌனமாதானே இருந்தீர்?"

"நான் ஆழம் பார்த்தேன். இப்ப சொல்றேன். அந்த ருத்ர வீணை நிச்சயமா ஒரு மகா பெரிய சங்கதி. அதுல எனக்கு துளிகூட சந்தேகம் இல்லை... அந்த சர்ப்பம் காவல் காக்கற அந்த ராக மந்த்ர ஏட்டுக்கட்டும் எனக்கு வேணும்."

"எப்படிண்ணா... அந்த மனுஷன் பேசினத கேட்டீங்க தானே? கொஞ்சம்கூட பிடியே கொடுக்கலையே..."

"அரிய சங்கதிகளைக் காப்பாத்த நினைக்கறவங்க அப்படித்தான் நடந்துக்குவாங்க. எனக்கு எப்படியும் அது வேணும். அதைக் கொண்டு நான் அந்த ருத்ர வீணையை மீட்டணும். அந்த பாபா புரிஞ்ச அதிசயங்களை நானும் புரியணும்..."

"அப்ப நாம மாலிகிட்ட பேசறதுதான் ஒரே வழி..."

"அவகிட்ட வீணையைக் கேட்கலாம். ராகத்துக்கு எங்க போக... இங்க இவர்கிட்டதானே வந்தாகணும்."

"அந்த பொறுப்பையும் நீங்க பேசாம மாலிகிட்ட விட்டுடலாமே..."

"அவள் என் பேச்சைக் கேட்பாளா?"

"கேட்க வையுங்கோ பெரிய இசை மேதை நீங்க. இசைமேதை கிட்டதான் இசைச் சிறப்புள்ள விஷயங்கள் சேரணும். யார் கிட்டயோ இருக்கறதால அதுக்குத்தான் என்ன பயன்?"

"சரி, வா... மாலிகிட்டயே பேசுவோம்."

அவர்கள் பேசிக் கொண்டே கிளம்பியது உள்ளே சாஸ்திரிகள் காதிலும் விழத்தான் செய்தது. கலக்கத்துடன் திரும்பி ராகமந்த்ர ஏட்டுக்கட்டை பார்த்தார் சர்ப்பம் அவரையே பார்த்தபடி இருந்தது. 'நீ கவலைப்படாதே. நான் பார்த்துக் கொள்கிறேன்' என்று அது கூறுவதுபோல இருந்தது.

**ந**வரத்ன மாளிகை நோக்கி நடந்தபடி இருக்கும் முத்து விநாயகம் பிள்ளைக்கு ஆச்சரியமும் அதிர்ச்சியும் ஒருசேர எழும்பியது. அவரது குழுவினருக்கு, ஒரு அற்புதமான கட்டமைப்புள்ள மாளிகை ஒன்று இப்படி ஆற்றங்கரை ஓரமாகவும் மயானத்தை ஒட்டியும் இருப்பது ஏன் என்றே விளங்கவில்லை.

அதற்கெல்லாம் மேலாக அதற்கு நவரத்ன மாளிகை என்று எதனால் பெயர் வந்தது என்பதிலும் சொல்ல முடியாத அளவு குழப்பம்...

"அண்ணா... சாதாரணமாக மாளிகைகள் ஊருக்கு நடுவில் இருக்கும். இது என்ன இப்படி ஊருக்கு புறத்தில்?"

-தீர்த்தமூர்த்தியே நடக்கும்போது கேட்டார்.

"தோடிபுரம் விஷயமே வினோதமாகத்தான் இருக்கிறது. நவரத்ன மாளிகை என்றாலும் நவக்கிரக மாளிகை என்றாலும் ஒன்றுதான். கோள்களுக்கும் இதற்கும் ஒரு நெருங்கிய தொடர்பு இருக்கிறது. இதை மயன் கட்டியது என்றும் கேள்விப்பட்டிருக்கிறேன். எனவே உள்ளே போனால்தான் காரணம் முழுவதுமாக தெரியும்." என்றவர், தன் வெற்றிலைக் காவியை அப்படியே காறி உமிழ்ந்தார். அந்த சமயத்தில் மயானத்தில் வெட்டியான் 'வசம் அவன் சொந்தமாகிவிட்ட அந்த பிராமண சிறுவன் எருமுட்டைகளை அடுக்கிக் கொண்டிருந்தான். அவனது தேஜஸும் தோற்றமும் முத்து விநாயகம் பிள்ளைக்கே ஒரு ஆச்சரிய அதிர்வை உண்டு பண்ணியது. வெட்டியானும் அவர்கள் கூட்டமாக செல்வதைப் பார்த்தான்.

'இவர்கள் எங்கே ஊர்வலம் போலப் போகிறார்கள்?' அவனுக்குள்ளும் வியப்பு. அவர்களும் ஒரு வழியாக நவரத்ன மாளிகையை அடைந்தபோது அங்கிருந்து ஒரு பெரிய இரட்டைக் காளை பூட்டிய மாட்டு வண்டி, வண்டி கொள்ளாத படி வீட்டு சாமான்களோடு புறப்பட்டுக் கொண்டிருந்தது. முன்னம் பின்னும் மராத்திய வீரர்கள்.

தீர்த்தமூர்த்தி ஓடிப்போய் அவர்களிடம் கேட்டார்.

"என்ன இது... நீங்கள் யார்? எங்கு செல்கிறீர்கள்?"

"மாளிகைக் குடியிருப்பை அபராஜித வைஜெயந்தியார் தோடிபுரம் சந்நிதி தெருவுக்கு மாற்றிக் கொண்டுவிட்டார். இந்த வீட்டு உபயோகப் பொருட்கள் அங்குதான் செல்கின்றன..."

"அப்படியானால் மாலியும் வைஜெயந்தியும் இப்பொழுது இங்கு இல்லையா?"

"இல்லை. அவர்களும் அங்கே சென்றுவிட்டனர்."

"நாங்கள் உள்ளே சென்று பார்க்க ஆசைப்படுகிறோம்."

"யாரையும் உள்ளேவிடக் கூடாது என்பது மந்திரியார் கட்டளை."

"ஏன்... உள்ளே என்ன தங்கமும் வைரமுமா கொட்டிக் கிடக்கிறது?"

"எங்களுக்கு அதெல்லாம் தெரியாது. நாங்கள் அரண்மனை சிப்பந்திகள். எங்கள் வாயைப் பிடுங்காதீர்கள். நாங்கள் வருகிறோம்..."

அந்த வீரர்கள் வண்டியுடன் தங்கள் பயணத்தை தொடர்ந்தனர். முத்துவிநாயகம் பிள்ளைக்கு பெரிதும் ஏமாற்ற மாகிவிட்டது..

அங்கிருந்து புறப்பட்ட அவரை ராசிக் கிணறு ஒன்றில் குளித்துக் கொண்டிருந்த சிலர் மேலும் ஆச்சரியப்படுத்தி னார்கள். நின்று கவனிக்கத் தொடங்கினார். தீர்த்தமூர்த்தியும் வியப்பைக் காட்டினார்.

"அண்ணா... என்னண்ணா இது... அடுத்த புதிரா?"

"ஆமாம்... கோள்களின் துன்பங்களில் இருந்து விடுதலை பெற இந்த கிணற்று ஜலம் உதவலாம்..."

"அது எப்படி?"

"அது அப்படித்தான்... ஜோதிடரிடம் கேட்க வேண்டிய கேள்வியை என்னிடம் கேள். முட்டாள்..."

"இந்த ஊர் பெயர் தோடிபுரம் என்று இருப்பதை புதிர்புரம் என்று மாற்றிவிடலாம். திரும்பிய பக்கம் எல்லாம் ஆச்சரியங்கள் கொட்டிக் கிடக்கின்றன."

"விடக்கூடாது... விடவே கூடாது... இந்த எல்லா பெருமைக்கும் சிகரம் அந்த ருத்ர வீணைதான்."

"நீங்களும் அதை நம்பத் தொடங்கிவிட்டீர்களா?"

"முட்டாளே... பேசாமல் வா. இனி நீ, சொல்வதை மட்டும் செய்தால் போதும்..." - முத்துவிநாயகம் பிள்ளை ஒரு அதட்டு அதட்ட, தீர்த்தமூர்த்தி வாயை மூடிக் கொண்டார்.

**அ**து பெரிய தாழி! மூலக்கல் பாளையம் எனும் ஊரில் குயவர் ஒருவரால் செய்யப்பட்டிருந்தது. ஒரே சமயத்தில் அந்த தாழிப்பானைக்குள் பத்து மூட்டை நெல்லை கொட்டி வைக்கலாம். சாஸ்திரிகள் அப்படி ஒரு தாழி கேட்டு எவ்வளவோ நாளாகிவிட்டது. அன்று அந்த தாழியை ஒரு எருமை பூட்டிய

வண்டியில் கட்டி எடுத்துக் கொண்டு வந்து சாஸ்திரிகளிடம் அந்த குயவர் சேர்த்தபோது அதை தெருவில் போவோர் வருவோர் எல்லாம் பார்த்து வியந்தனர்.

"சாஸ்திரிகளே இந்த தாழிப்பானையை எங்கு வைப்பது?" என்று குயவரும் அவருடன் வந்த இரண்டு பணியாளர்களும் கேட்ட போது சாஸ்திரிகளுக்கே அதை எங்கே வைப்பது என்பது விளங்கவில்லை.

"இவ்வளவு பெரிய தாழியை வைக்க என் வீட்டில் இடம் இல்லை. கொல்லைப்புறத்தில் வைத்துவிட்டு செல்லுங்கள்" என்றார்.

"சாஸ்திரிகளே... இதன்மேல் ஆடுமாடுகள் மோதினால் உடைந்துவிடும். இப்பொழுதே பாதுகாப்பாக வைத்துவிடுவது நல்லது..."

"அது சரி... இடம் வேண்டுமே..."

"ஒன்று செய்யவா?"

"என்ன?"

"பேசாமல் கொல்லையில் குழிதோண்டி புதைத்து விடலாம். வாய் பாகம் மட்டும் தரையோடு தரையாக இருக்கும். உங்களுக்கு நெல் தேவைப்படும் சமயம் மர அகப்பையால் அள்ளி எடுத்துக் கொள்ளலாம். என்ன சொல்கிறீர்கள்..."

"நல்ல ஆலோசனைதான். அப்படியே செய்துவிடுங்கள்."

சாஸ்திரிகள் கூற, அங்கே ஒரு குழியைத் தோண்ட ஆரம்பித்துவிட்டனர் அவர்களும். அந்த வேளை பார்த்துத் தானா அந்த வாஸ்து நிபுணர் விநாயகராமன் வரவேண்டும்?

அவர்கள் குழிதோண்டுவதைப் பார்த்தவன் ஓடி வந்தான்.

"சாஸ்திரிகளே! என்ன இது... எதற்கு இவர்கள் இங்கே குழிதோண்டுகின்றனர்?"

"நெல்தாழியை புதைக்கத்தான்..."

"அதற்கு இது ஏற்ற இடம் இல்லை...

"வேறு இடம் என் வரையில் இல்லையே..."

"அதற்காக இங்கே குழி தோண்டுவதா? இது ஆபத்தை விளைவித்து விடும்..."

"போதும் வாஸ்து நிபுணரே, போதும். நீங்கள் முன்பு சொன்னதையே நான் இன்னும் மறக்கவில்லை. இதில் இது வேறா... போதும். தயவுசெய்து நீங்கள் செல்லுங்கள்."

“தயவுசெய்து சொன்னால் கேளுங்கள் இது தென் மேற்கு மூலை. இங்கே பூமிக்கடியில் குழிகள் இருக்கக் கூடாது. இங்கு நீரோ இல்லை பொருளோ எதுவும் இருக்கக் கூடாது. இங்கிருந்து எதை எடுத்துப் பயன்படுத்தினாலும் அது ஆபத்து நைருதியில் உயர இருந்துதான் எதுவும் கிட்ட வேண்டும்...”

“போதும்... தயவுசெய்து நீங்கள் இங்கிருந்து செல்லுங்கள். மனிதனின் சௌகர்யத்துக்குதான் இடம். இடத்தின் சௌகர்யத்துக்கு மனிதனல்ல.”

“தவறு... இடம்தான் சிரஞ்சீவி. இது இன்றும் இருக்கும்; நாளையும் இருக்கும். ஆனால், நீங்கள் அப்படி அல்ல. நான் அப்படி அல்ல...”

“தயவுசெய்து என்னைக் குழப்பாமல் செல்லுங்கள்.”

- இருவரிடையேயும் வாக்குவாதம் நடக்க நடக்க குயவன் தாழிப்பானையை குழிக்குள் இறக்கிப் புதைத்துவிட்டான். சுற்றிலும் மண்ணைப் போட்டு மெத்தி சமன் செய்ததோடு தாழிப்பானைமேல் மூட ஒரு வட்டப் பலகையையும் வைத்து தரையோடு தரையாக ஆக்கிவிட்டான்.

அதேவேளையில் அந்தப் பக்கமாக கோவில் பட்டரும் வந்தபடி இருந்தார். வீட்டு கொல்லைப் புறத்தில் சாஸ்திரிகளும் விநாயகராமனும் முட்டிக் கொள்வதை பார்த்தவர் என்ன என்று விசாரிக்க, விநாயகராமனும் ‘நீங்களே இந்த நியாயத்தை கூறுங்கள்’ என்று கூறி விஷயத்தைக்கூற, பட்டரும் “சாஸ்திரி களே... இவர் சொல்வதைக் கேளுங்கள். நைருதியில் எங்கும் எவரும் குழிகளை உருவாக்கி வைத்ததில்லை.” என்றார் பட்டரும் சேர்ந்து கொள்ளவும், சாஸ்திரிகளிடம் சுருதி குறைந்தது. அரை மனதாக மூட சம்மதித்தவர் குயவன் பக்கம் திரும்பினார். அவனும் புரிந்து கொண்டவன் போல் பேசினான்.

“சாமி... இப்பத்தான் தோண்டிப் புதைச்சோம். உடனேயே வெளிய எடுக்கச் சொல்லாதீங்க. கொஞ்சம் பொறுத்து எடுத்து வெச்சுடறோம். ஆனா ஒண்ணு... திரும்ப இந்த தாழியை வெளிய எடுக்கும்போது இது உடைஞ்சாலும் உடைஞ்சிட லாம்.”

“அது சரி... ஆனால், இங்கே குழி கூடாதாமே... தாழிப்பானையும் ஒரு குழி மாதிரிதானே?”

"அப்ப ஒண்ணு பண்ணுங்க. இதை மண்ணப் போட்டு மூடிடுங்க. புதுசா வேற ஒரு தாழி செஞ்சு எடுத்துக்கிட்டு வரேன். அதை நீங்க எங்க வைக்கணுமோ வெச்சுக்குங்க..."

"புதியதை பிறகு பார்த்துக் கொள்ளலாம். இதை முதலில் மூடிவிடுங்கள்..."

"மூடறோம். அதுக்கு முந்தி பசிக்கு கொஞ்சம் சாப்ட்டு இளைப்பாறிட்டு வர்றோம்." என்றனர் சாஸ்திரிகளும் அவர்களைப் போகவிட்டார் விநாயகராமனும், பட்டரும் ஒரு நல்ல காரியம் செய்துவிட்டவர்கள் போல அங்கிருந்து கிளம்பிச் சென்றனர். சாஸ்திரிகள் பார்வை அந்த தாழிப் பானை மூடியைத் திறந்து பார்த்தது. உள்ளே இறங்கி ஒருவர் படுத்துக் கொள்ளலாம். அப்படி ஒரு இடவசதி இருந்தது. 'இதைச் செய்யும்போதே புதைப்பதற்கு என்பது இதன் விதியாகிவிட்டது' என்று எண்ணியவருக்கு சிரிப்புதான் வந்தது.

திரும்பி உள் சென்றார். ருத்ர வீணை விலாச ஏட்டுக் கட்டுகள் அவரால் பனை ஓலைத் துண்டுகளாக நறுக்கப்பட்டு, பட்டுநூல் பிரியால் கட்டிக் கட்டி வைக்கப்பட்டிருந்தது. அவைகளை திரும்ப எடுத்து சீர் செய்யத் தொடங்கினார்.

**பு**திய வீட்டிற்கே தேடி வந்துவிட்ட முத்துவிநாயகம் பிள்ளையை மாலி கும்பிட்டபடி வரவேற்றாள்.

"தங்களை துளியும் எதிர்பார்க்கவில்லை..."

"எப்பொழுதும் எதிர்பாராததை செய்வதுதான் என் இயல்பு."

"தயவுசெய்து அமருங்கள். என்ன சாப்பிடுகிறீர்கள்?"

"உன் உபசரிப்புக்கு நன்றி மாலி. எனக்கு ஒரு விருப்பம். அதை மட்டும் நீ நிறைவேற்றினால் போதும்."

"என்னவென்று கூறுங்கள். முடிந்தால் செய்கிறேன்."

"எனக்கு அந்த ருத்ர வீணையைக் காண வேண்டும். அதை என் கையார வாசிக்க வேண்டும்."

- முத்துவிநாயகம் பிள்ளை சொன்னதைப் கேட்டு மாலிக்கு பகீர் என்றது.

"அது... அது..."

"அதற்கென்ன?"

"அது கோவில் சொத்து..."

"அதனால் என்ன... வாசித்துவிட்டு நான் திருப்பித் தந்துவிடுகிறேன்."

"இல்லை... அதை ருத்ரன்தான் வாசிக்கலாம்."

"யார் அது ருத்ரன்... உன் மகனா?"

"அதை வாசிக்க முனைந்தவன் ருத்ரன்..."

"நானும் முனைகின்றவன்தானே... நானும்தான் ருத்ரன்!"

"இல்லை... அதன் பின்னால் நிறைய உட்பொருள் உள்ளது. என் மகன்கூட அதை அபகரிக்க நினைத்த ஒருவன்தான். பின் அவன் சிவன் மகனாகிட, அவனை மட்டுமல்ல- என் வம்சா வளியையே அந்த வீணைக்கு ஒப்புக் கொடுத்துவிட்டோம்."

"நல்லது. தலைமுறை தலைமுறையாக அதை நீ உன்வசப்படுத்தி வைத்திருக்க இப்படி ஒரு ஏற்பாடா?"

"சத்தியமாக இல்லை... நான் சொல்வதை சரியாகப் புரிந்து கொள்ளுங்கள். அது ஈசனின் சொத்து. அதைப் பாதுகாப்ப வனும் ஈசன்தான்..."

"நல்லது... அப்படிப்பட்ட ஈசன் எங்காவது ஒரு இசைக் கருவியை பயனில்லாதபடி போட்டு வைக்க சம்மதிப்பானா?"

"அது பயன்பட்டபடிதான் உள்ளது. என் மகன் அதை இன்னும் வாசிக்கிறான். இப்பொழுதுகூட வாசிக்க உள்ளான்."

- மாலி சொல்லி வாய் மூடவில்லை. வீணை இசை கேட்க ஆரம்பித்தது. முத்துவிநாயகம் பிள்ளையும் அவர் சகாக்களும் அதன்பின் பேசவில்லை. அதன் ஒலிப்பில்தான் ஆழ்ந்து போனார்கள் அற்புதமான கல்யாணி ராகம், மனதிலும் அதன் எதிரொலித் தாக்கம். முத்துவிநாயகம் பிள்ளைக்கு மது குடித்து அதன் போதைக்குள் புதைந்து கிடப்பது போல் இருந்தது. மெல்ல நிமிர்ந்தவர், "இந்த வீணை இசை என்னை மயக்கிவிட்டது. என் கைகளாலும் இதை நான் வாசிக்க வேண்டும். இசை என்றால் என்னவென்றே தெரியாத உன் மகன் வாசிக்கலாம். நான் வாசிக்கக் கூடாதா?"

"அப்படி அல்ல... அதை ஒரு நாளும் ஒருபோதும் தன்னலத்திற்கு பயன்படுத்தக்கூடாது..."

"நான் வாசிக்கிறேன் என்பதில் எங்கே உள்ளது தன்னலம்?"

"ஏன் இல்லை... உங்கள் தனிப்பட்ட ஆசைக்காகத்தானே வாசிக்க நினைக்கிறீர்கள்..."

"வீணை வாசிக்க எண்ணுவது ஒன்றும் பாவச் செயல் அல்ல."

"இது வீணை மட்டுமல்ல... அதற்கும் ஒருபடி மேல்..."

"மாலி... நான் உன் குருவின் மகன். இந்த நாடே வியக்கும் ஒருவன். இசைக் கலைஞன். உன்னிடம் பொன் பொருள் கேட்கவில்லை. வீணையைத்தான் கேட்கிறேன்."

"சாதாரண வீணைகள் ஆயிரம் உள்ளன. அவ்வளவு ஏன் மாணிக்க வீணையே உள்ளது. மரகத வீணைகூட இருக்கிறது. அவைகளைக்கூட தருவிக்கிறேன். ஆனால் ருத்ர வீணை அருகில் செல்ல எனக்கு மட்டுமல்ல யாருக்கும் தகுதி கிடையாது."

"உளறாதே... எனக்கு ருத்ர வீணைதான் வேண்டும்."

"பிடிவாதம் வேண்டாம். தயவுசெய்து விட்டு விடுங்கள்."

"மாலி... என் வரையில் எப்பொழுதுமே வேண்டாம் என்றால் வேண்டும், இருக்கிறது என்றால் இல்லை. நான் அந்த ருத்ர வீணையை வாசிக்காமல் இந்த ஊரைவிட்டு செல்வதாக இல்லை..."

"அதற்கு கோவில் ஐதீகப்படி இடம் இல்லை."

"அதையும் பார்க்கிறேன்..." - ஆவேசமாக முத்துவிநாயகம் பிள்ளை மாலியின் புதிய வீட்டைவிட்டு கிளம்பினார். பார்த்துக் கொண்டேயிருந்த வைஜெயந்திக்கும் 'இது என்ன புதிதாக இப்படி ஒரு சிக்கல்' என்று கவலையாகியது. அடுத்து முத்துவிநாயகம் பிள்ளை என்ன செய்வாரோ ஏது செய்வாரோ என்று பயமாகக் கூட இருந்தது. அவள் பயந்தது சரிதான்.

முத்துவிநாயகம் பிள்ளைக்குள் ஒரு மிருகம் புகுந்து விட்டிருந்தது. அது தீர்த்தமூர்த்தியின் காதை கடித்தபடி இருந்தது. தீர்த்தமூர்த்தி முகத்தில் ஒரு புது பிரகாசம்!

மாலியோ சொல்ல முடியாத புழுக்கத்தில் இருந்தாள். முத்துவிநாயகம் பிள்ளையின் செயல் அவளுக்கு எரிச்சலையும் சந்தேகத்தையும் மூட்டியது. இவர் ஏதோ உள்நோக்கமுடன்தான் இப்படி எல்லாம் நடந்து கொள்கிறார் என்று நம்பினாள். இனியும் இவரிடம் மரியாதையாக பேசுவதில் பயனில்லை என்று அவரை மீறவும் அவள் தயாராகிவிட்டாள். அதை அவள் முகமும் எதிரொலித்தது.

முத்துவிநாயகம் பிள்ளை என்ன சொன்னாரோ தெரியாது. தீர்த்தமூர்த்தி கிளம்பிவிட்டார். அவர் எங்கே போகிறார் என்பதும் தெரியவில்லை.

"மாலி... நீ ஒரு கோவில்தாசி. ஆனால், ஊருக்கே ராணி போல நினைத்துக் கொண்டிருக்கிறாய். அந்த ருத்ர வீணையை உன் குடும்பம் மட்டும் வைத்துக் கொண்டு காலமெல்லாம் இந்த ஊரை அடக்கி ஆளலாம் என்று நினைக்கிறாய் நீ. ஆனால், நான் அதற்கு இடம் கொடுக்கமாட்டேன். உன் சூது எண்ணத்தை தஞ்சை அரசர் சாந்தாஜியிடம் கூறுவேன். அதன்பிறகு பார் என்ன நடக்கிறது என்று..." முத்துவிநாயகம் பிள்ளை மாலி எதிர்பார்க்காத ஒரு பதிலைக்கூற, மாலிக்கும் ஆவேசம் வந்தது.

"உலகமகா பாடகரே... நீர் ஒரு குருடர் என்பது உமது பேச்சால் விளக்கிவிட்டது. உண்மையில் எனது ஒரே மகனை நான் இழந்துவிட்டு நிற்கிறேன். இனி என் வம்சாவளியில் பிறக்கும் ஆண்மக்கள்கூட திருமணம் செய்து கொள்ளாமல் இந்த கோயில் மகனாக மாறி அந்த ருத்ர வீணையை பாது காத்தாக வேண்டும். இது ஒரு அவல நிலையா, இல்லை அரிய நிலைப்பாடா என்பது தெரியாமல் குழம்பியுள்ளேள். இப்படிப் பிறக்கும் பிள்ளைகளை தூக்கிக் கொடுக்க என் வம்சாவளி யில் எங்களைப்போல பெண்களைத் திருமணம் செய்து கொள்ளும் ஆண்களும் சம்மதிக்க வேண்டும் என்று ஒரு நிலைப்பாடு உள்ளது. மொத்தத்தில் நாங்கள் சிவனது பிள்ளைகளாகிவிட்டோம். சிவ வாழ்க்கையே எங்கள் வாழ்க்கை என்றாகிவிட்டது. இதெல்லாம் தெரியாமல் நீங்கள் அரசரிடம் போகிறேன், ஆட்டிக்குட்டியிடம் போகிறேன் என்கிறீர்கள். அதெல்லாம் எதற்கு? நேராக நவரத்ன மாளிகைக்கு செல்லுங் கள். உள்ளே நுழைந்து என் மகன் வீரேந்திரனை பிராண அறையில் சந்தியுங்கள். அதன்பின் வீணையை வாங்கி வாசிக்க முடிந்தால் வாசியுங்கள். அதை அடைய காபாலிகர்கள் முதல் பல மாயாவிகள் வரை முயன்று ஓடிவிட்டனர். நீங்களும் ஏன் மிச்சம் வைக்க வேண்டும்? செல்லுங்கள் துணிவிருந்தால்... இந்தாருங்கள் முத்திரை மோதிரம். உங்களை அந்த மாளிகைக் குள் யாரும் தடுக்கமாட்டார்கள் " என மாலியும் ஒரு மோதிரத்தை அவரை நோக்கி வீசி எறிந்தாள். முத்துவிநாயகம் பிள்ளையும் பொறுக்கிக் கொண்டார் புறப்பட்டார்!

**சா**ஸ்திரிகள் வீடு! சாஸ்திரிகள், முத்துவிநாயகம் பிள்ளை வந்து மோதியது வரை ஏட்டில் பதித்துவிட்டார். நூல் பிரியால் கட்டும்போது ஒருவன் ஓடிவந்தான். அவன் ஊர் தலையாரி கார்க்கோடகன்.

"சாஸ்திரிகளே... சாஸ்திரிகளே..."

"என்ன தலையாரி?"

"உங்களைக் கைதுசெய்து உங்கள் வசம் உள்ள ஓலைகளை எடுத்து வரும் ஒரு உத்தரவை நமது ஊர் தலைவர் இட்டுள்ளார். அந்த பாடகர் அவரிடம் என்ன சொன்னாரோ ஏது சொன்னாரோ... ஒன்று மட்டும் நிச்சயம். இந்த செயலை செய்ய ஊர் மல்லர்களிடம் பொறுப்பை விட்டுவிட்டார் தலைவர். அவர்களும் வந்தபடி உள்ளனர். நீங்கள் தற்காலிக மாக தப்பிவிடுங்கள். பிறகு பார்த்துக் கொள்ளலாம்."

"என்ன தலையாரி இது... நான் என்ன பிழை செய்தேன்?"

"நீங்கள் அந்த பாடகரை அவமதிப்பது போல் பேசி விட்டீர்களாம்."

"அவர்தான் என்னிடம் தவறாகப் பேசினார்... நான் எங்கே பேசினேன்?"

"அது எனக்குத் தெரியும். ஏழை சொல் அம்பலம் ஏறாது. நீங்கள் முதலில் வீட்டைப் பூட்டிக் கொண்டு புறப்படுங்கள்."

தலையாரி பேசிவிட்டு ஓடினான். சாஸ்திரிகளுக்கு 'என்னடா இது சோதனை' என்று குழப்பம்... தயங்கினார். கைக ளில் ஏட்டுக்கட்டு. அப்படியே குறுக்கும் நெடுக்கும் நடந்தவர் வாசற்புறம் சென்று கதவைத் தாழிட்டார். உள்ளே வந்தவர் பூஜை அறைக்குச் சென்று வணங்கினார். சர்ப்பமும் ராகமந்த்ர ஏட்டுக்கட்டின் மேல் இருந்தபடி பார்த்துக் கொண்டே இருந் தது. ஏனோ சாஸ்திரிகளுக்கு கண்கலங்கியது. அப்படியே கொல்லைப்புறம் வந்தவர் கொல்லைக் கதவையும் மூடினார். வேகமாக நடந்து வெளியேறப் பார்த்தவர் எதிரே நைருதியில் பூமியில் புதைக்கப்பட்ட அந்த தாழி! அதைப் பார்த்தபடி நின்றவர் காதில் மல்லர் கூட்டம் வந்துவிட்ட அரவம் கேட்டது. சட்டென்று அந்த தாழிக்குள் குதித்தவர் தலைக்கு மேல் பலகையைப் போட்டு மூடிக் கொண்டார். அதற்குமுன் அந்த பலகை மேல் மண்ணை அள்ளிப்போட்டு அது வெளியே தெரியாதபடி மறைத்தார். உள்ளே கும்மிருட்டு. ஒருவகையில் சமாதிக்குள் அடங்கியதுபோல ஒரு உணர்வு. மூச்சு முட்டியது. அதேசமயம் சரியாக தாழிப்பானை பலகைமேலேயே ஒருவன் வந்து நின்றான். சப்தம் கேட்டது.

"அந்த சாஸ்திரி இங்கேதான் எங்கோ ஒளிந்துள்ளான். அவனை விட்டுவிடக்கூடாது..." அவன் அலறுவதும் காதில் கேட்டது. சாஸ்திரிகளுக்கு எல்லாமே பயங்கரமான அனுபவம்.

மேலே நின்றுகொண்டிருப்பவனும் காலடியில் பலகை நசுங்கி சப்தமிடுவது உணர்ந்து குனிந்து பார்த்தான். பின் மண்ணை விலக்கி பலகையைப் பார்த்து அதையும் நீக்கிட, சாஸ்திரிகள் தெரிந்தார்.

"அட... நீ இங்கே ஒளிந்திருக்கிறாயா... உன் மனையில் இப்படி ஒரு ஏற்பாடா?" என்று கொக்கரித்தபடி அவரை அப்படியே குனிந்து மேலே இழுத்தான். சாஸ்திரிகள் கைவசம் இருந்த ஏடு உள்ளே விழ அவர் உருவம் மட்டும் மேல் எழும்பி யது. அவர்கள் அவரை முற்றிலுமாக நோட்டம் இட்டனர்.

"எங்கே அந்த ஏட்டுக்கட்டு...?"

"அது... அது..."

"என்ன... பாம்பு காவல் காக்கிறதா?"

"அ... ஆமாம்..."

"எடுத்துக் கொடு..."

"இல்லை... அந்த சர்ப்பம் அதற்கு அனுமதிக்காது."

"சர்ப்பத்தைக் கொன்றுவிட்டு நாங்கள் எடுத்துக் கொள்ளவா?"

"வேண்டாம்... உங்களுக்குத்தான் ஆபத்து..."

"ஒரு ஆபத்தும் இல்லை... உண்மையில் எங்களை ஊர்தலைவர் அனுப்பவில்லை. நாங்கள் பிள்ளையின் அடி யாட்கள். அவர் வாயால் சொல்வதை நாங்கள் தலையால செய்து முடிப்பவர்கள். இப்பொழுதுகூட உன்னை உயிரோடு விடுவது ஆபத்து என்பதால் இங்கேயே உன்னைக் கொல்லப் போகிறோம். அதை மறைக்க வசதியாக இங்கே ஒரு சவக்குழி தாழிப்பானை வடிவில் உள்ளது. இதில் போட்டு மூடிவிட்டால் விஷயம் முடிந்தது. யாராவது கேட்டால் ஊரைவிட்டு ஓடிவிட்டதாக சொல்லிவிடுவோம்."

"வேண்டாம்... வேண்டாம்... இதெல்லாம் பெரும்பாவம்..."

"அதை செய்வதுதானே எங்கள் தொழில்..."

"இல்லை... வேண்டாம்..." சாஸ்திரிகள் பேச்சு பலன் தரவில்லை. அப்படியே அவர் அலற அலற அடிவயிற்றில் ஒரு கட்டாரி ஏறியது. அதன்பின் அவரால் ஏதும் செய்ய இயல வில்லை. அப்படியே சுருண்டு விழுந்தவரை அந்த தாழிக் குழிக்குள் தள்ளியவர்கள், வேகமாக அதன் வாயை மூடி மண்ணையும் இழுத்துப்போட்டு மூடினர். ஒருவழியாக நிமிரவும், எதிரே முன்பு குழியில் புதைத்த அந்த குயவன்.

"அய்யா யார் நீங்கள்... இங்கே ஒரு தாழியை புதைத்தோமே, அது எங்கே?"

"அதுவா அதை எடுத்து உடைத்துவிட்டோம். இடத்தையும் மூடிவிட்டோம்.."

"நல்லது... புதிய தாழியைத்தான் நான் இனி செய்ய வேண்டும். ஆமாம் எங்கே சாஸ்திரிகள்...?'

"இப்பொழுதுதான் அவர் காசி யாத்திரை கிளம்பிச் சென்றார்."

"அடடே... தாழிப்பானைக்கு பணம்கூட வாங்க வில்லையே."

"மூன்று வருடம் கழித்து வாருங்கள். அவர் காசிக்குப் போய்விட்டு வர அவ்வளவு நாட்களாகும்."

குயவனும் அவன் சகாவும் முழித்தனர். அவர்களோ வீட்டுக்குள் நுழைய ஆரம்பித்தனர். அடுத்து அவர்கள் குறி அந்த ராகமந்திரன் ஏட்டின் மீதுதான்... உள்ளே வீட்டில் ஒருவரும் இல்லை.

வாசல்புறம் வில்வண்டி ஒன்று வந்து நிற்க, அதற்குள் சாஸ்திரிகள் மனைவி பாலா... அவள் கையில் சாஸ்திரிகளின் வாரிசு. பிறந்து சில நாள்கூட ஆகவில்லை. சாஸ்திரிகளிடம் சொல்லிக் கொண்டு குழந்தையையும் காட்டிவிட்டு தாய் வீடாகிய தஞ்சைக்கு செல்வதற்கு வந்திருந்தாள். சாஸ்திரிகள் மனைவி பாலாவுக்கு பக்கத்து கிராமத்தில் தாய்மாமன் வீடு உள்ளது. அவர்தான் அடைக்கலம் கொடுத்து பிரசவம் பார்த்தவர். அவரும் உடன் இருந்தார்... தாழிடப்பட்டிருக்கும் கதவை அவரே தட்டினார். பதிலில்லை. நெடுநேரம் தட்டிவிட்டு பின் பக்கம் சென்று பார்த்தபோது கதவு திறந்திருந்தது. உள்ளே நுழைந்தபோதே பகீர் என்றது. அந்த மல்லர்கள் இருவரும் வாயில் நுரை தும்ப விழுந்து கிடந்தனர்.

## இன்று

**ஊ**ர் கூட்டம் கூடியிருந்தது. பட்டர் நின்றுகொண்டிருந்தார் அவர் கைகளில் கோவிலில் கிடைத்த அந்த ஏடு!

விஷயத்தை தமுக்கு போட்டு சொல்லியிருந்ததால் ஊரில் பலர் வந்திருந்தனர். ஒருபுறம் சங்கரன், சாமிநாதன்,

உபாசகர். இன்னொருபுறம் ருத்ரேஸ்வர், மந்த்ரிணி. திருப்பதி போயிருந்ததால் கர்ணம் வரவில்லை. கணேசன் வந்திருந்தான். பிரசிடெண்ட் சார்பாக சாமிநாதன் வந்திருந்தான். தாசி சுந்தராம்பாளுக்காக எல்லோரும் காத்திருக்க, அவளும் தன் தாயுடன் வந்தாள். அவள் கண்களில் ஒரு இனம் தெரியாத சோகம். பட்டர், கூட்டத்தை ஆரம்பித்தார்.

“எல்லோரும் வந்தாச்சு. கூட்டத்தை தொடங்கலாம்.” என்று ஆரம்பித்ததார். பிறகு அவரே பேசினார்.

“ஒரு வாரத்துல சிவராத்திரி வரப்போறது. தோடிபுரத்துக்காரர்களுக்கு சிவராத்திரிதான் தீபாவளி. அந்த நல்ல நாள்ல பல அதிசயங்களும் நடக்கப் போறது. காசிக்கு அடுத்து பெரிய க்ஷேத்ரம் நம்ம தோடிபுரம்தான். ஸ்வாமி பேசற ஊர் இது. இந்த முறையும் ஸ்வாமி பேசிட்டார் - ஒரு ஓலை வடிவத்துல...! இந்த ஊரோட பொக்கிஷமான ருத்ர வீணையோட ருத்ரன் வருவான், உடையார் மண்டபத்துல அன்னிக்கு ராத்திரி அவன் ஊரறிய வீணை வாசிப்பான். அதைப் பாக்கற கேக்கற அவ்வளவு பேரும் கொடுத்து வெச்சவான்னு இதோ இந்த ஏடு சொல்றது...

அந்த ருத்ரன் யாருங்கறதுதான் தெரியாது...

இனி இது சம்பந்தமா நம்ம சுந்தராம்பா பேசினா நல்லது. ஏன்னா இந்த கோவில், இதோட சொத்தான அந்த தாசி பங்களா, அப்புறம் அந்த வீணை பத்தியெல்லாம் சுந்தராம்பாளுக்குத்தான் தெரியும்...”

- பட்டர் சிம்பிளாக சொல்லிவிட்டு ஒதுங்கி கொண்டார். சுந்தராம்பாள் முன்வந்தாள்.

“எல்லாருக்கும் நமஸ்காரம். ஒரு பெரிய பாரத்தை இறக்கிவெச்ச மன நிறைவோட பேசறேன் நான். எப்ப இப்படி ஒரு ஓலை வந்ததோ அப்பவே என்னோட கடமை முடிஞ்சு போச்சு. இனி என்கிட்ட யாரும் எந்தக் குறையையும் சொல்லத் தேவையில்லை. அதேசமயம் அந்த பங்களாவுல பாபா வழிபாட்டுக்கும் ஒரு முற்றுப்புள்ளி விழுந்தாச்சு. இது ஒரு முந்நூறு வருஷத்து விஷயம்.

எங்க பரம்பரையே இந்த ஓலையால விடுதலை அடைஞ் சிருக்கு. இவ்வளவு நாளா ருத்ர வீணை வாசிக்கப்பட என் பரம்பரை ஆண் வாரிசுகள்தான் காரணம். இப்போ அதுல ஒரு முடிவு வந்தாச்சு. எனக்கு ஆண் வாரிசு இல்லை. ஆகையால ருத்ர

வீணை விஷயமா ஒரு மாற்றம் ஏற்படணும். அது சிவன் சொத்து. அந்த சிவனே உரியவனை அனுப்பப் போறான். அவன் யார்னு எனக்கும் தெரியாது. ஆனா ஒண்ணு-அவன் நிச்சயம் சிவராத்திரிக்கு வந்துடுவாங்கறத நினைச்சு நானும் மகிழ்றேன். அதன்பிறகு புதிய பாதை... புதிய போக்கு... அதை எல்லாம் அந்த ருத்ரன்தான் தீர்மானிப்பான். உங்களோட சேர்ந்துண்டு அந்த நாள்ல ருத்ரனை எதிர்பார்த்து நானும் காத்திருக்கேன். சிவராத்திரியையும் உற்சாகமா கொண்டாடுவோம். எல்லோரும் தயாரா இருங்க..." -சுந்தராம்பாள் பேசி முடித்தாள்.

"ஆமா... ருத்ரன் நம்மள்ல ஒருத்தனா, இல்லை வெளிய இருந்து வருவானா?" - கூட்டத்தில் இருந்து ஒரு கேள்வி.

"தெரியாது."

"அப்ப நம்மள்ல ஒருத்தனாகூட இருக்கலாமா?"

"இருக்கலாம்..."

அவள் அப்படிக் கூறவும், கணேசன் தன்னை ஒரு முறை எண்ணிக் கொண்டான்.

"ஒரு விஷயம் மட்டும் நிச்சயமா என்னால சொல்ல முடியும். ருத்ரனுக்கு நிச்சயமா மேஷ ராசிதான் இருக்கும்."

அவ்வளவுதான்! சுந்தராம்பாள் சொன்னது பற்றி எரிய ஆரம்பித்தது. ருத்ரேஸ்வர் மந்த்ரிணியைப் பார்த்தான்.

"மந்த்ரிணி எனக்கும் மேஷ ராசிதான்..."

உபாசகர்கூட உற்சாகமானார். சங்கரனிடம் "சங்கரா... அடியேன்கூட மேஷ ராசிதான்" என்றார்

"இங்க நான் மட்டும் என்ன..." சங்கரனும் மேஷ ராசி என்றான்.

ஐயோ... இவர்களில் உண்மையில் யார் ருத்ரன்? இல்லை அவன் ஒரு புதியவனா?

ருத்ரேஸ்வர் தீர்மானமே செய்துவிட்டான். 'எத்தனை பேர் இருந்தாலும் சரி... அவ்வளவையும் ஒரு வாரத்தில் முடிக்க வேண்டும். அதற்கு என்ன வழி?' அவன் யோசித்த போது சற்று தூரத்தில் திலகம் கண்ணில் பட்டாள். சுந்தராம்பாளின் வலது கை! தவிட்டுக்கு அசோகனை வாங்கியவள்...

வேகவேகமாக ருத்ரேஸ்வர் ஒரு கணக்கு போட்டுவிட்டு திலகத்தையே உற்றுப் பார்த்தான்... அந்த அடுத்த கட்ட அதிசயம் நடக்கத் தொடங்கியது. அவள் தோட்டத்து குடிசை நோக்கி

நடக்க தொடங்க, ருத்ரேஸ்வரை மந்த்ரிணி பின்தொடரத் தொடங்கினாள்!

**தோ**ட்டத்துக் குடிசை!

ருத்ரேஸ்வர் வந்து அதிகபட்சமாக பத்து பதினைந்து நாட்கள் கூட ஆகியிருக்கவில்லை.

வந்த அன்றைக்கே கைவசம் உள்ள ஒரு பூசணி விதையை வெளியே வாசல்புறம் மந்திரம் ஒன்றை ஜெபித்துவிட்டு புதைத்திருந்தான். அது பதினைந்து நாளில் அசுர வளர்ச்சி கண்டு ஒரு தேங்காய் அளவு அதில் பூசணி கூட தென்பட்டது.

இயற்கைக்கு மீறின வளர்ச்சி.

மந்த்ரிணி கூட இது எப்படி சாத்தியம் என்று கேட்டிருந்தாள்.

"நாம தங்கியிருக்கிற இடம் தோஷம் உள்ள இடமா, இல்லை, வாஸ்து பலம் உள்ள இடமாங்கறதை ரொம்ப சிம்பிளா தெரிஞ்சுகக்தான் நான் பூசணி விதையை பௌர்ணமி அன்னிக்கு சந்திரஹோரைல போட்டேன். இது நல்ல வாஸ்து பலமுள்ள இடம். அதான் பிரமாதமா வளர்ந்திருக்கு" என்று மந்த்ரிணி முற்றிலும் எதிர்பார்த்திராத ஒரு பதிலைக் கூறியிருந்தான் ருத்ரேஸ்வர்.

மந்த்ரிணி அதைக் கேட்டு இப்படி எல்லாம்கூட வழி முறைகள் இருக்கின்றதே என்று வியந்திருந்தாள்.

இப்பொழுதும் அந்த பூசணிக் கொடியருகேதான் சென்று நின்று அதைப் பார்த்தாள்.

பின்னாலேயே மந்திரித்த கோழிபோல திலகம் வந்து கொண்டிருந்தாள்.

அவளைப் பார்த்தவளுக்கு வியப்பான வியப்பு.

"ஈஸ்வர்.."

"என்ன மந்த்ரிணி... சுந்தராம்பாளோட வலதுகை இங்க வராளேன்னு ஆச்சரியமா இருக்கா?"

"ஆமா... அதுவும் ருத்ரன் யார்ங்கற கேள்வி பிரமாதமா எழுந்திருக்கற இந்த காலகட்டத்துல இவ எதுக்கு இங்க...?"

"நான்தான் என் வசியப் பார்வையால அவளை இங்க வரவழைச்சுருக்கேன்" அதிர்ச்சியளித்தான் ருத்ரேஸ்வர்.

"எதுக்கு?"

"வேடிக்கை பார்... எவ்வளவு பேர் நமக்கு போட்டியா இருக்காங்க. அவ்வளவு பேரையும் ஒரு வழி பண்ண வேண்டாம்?"

"புரியலை..."

"உனக்குப் புரியாதுதான். அதனாலதான் நீ சிஷ்யையா இருக்கே. நான் குருவா இருக்கேன்..." - ருத்ரேஸ்வர் கூறி முடிக்க, திலகம் அவன் எதிரில் சிலைபோல வந்து நின்றாள்.

"வா திலகம்..."

-அவள் மௌனமாக அவனைப் பார்த்தாள்.

"நான்தான் இனி உன் குருநாதர். அந்த சுந்தராம்பா கிடையாது. என் பேர் ருத்ரேஸ்வர்." ருத்ரேஷ்வரின் ஆரம்பமே புதிராக இருந்தது.

"நல்லது... நான் என்ன செய்யணும்?" - திலகமும் திருப்பிக் கேட்டாள்.

"இனிமே எல்லாமே உன் கைலதான் இருக்கு திலகம்..."

"அப்படியா?"

"ஆமாம்... அந்த சுந்தராம்பா கிட்ட இருந்து நீ என்னத்த கண்டே? விளக்கு தூக்கிண்டு தினம் அந்த பங்களாவுக்குப் போனதுதான் மிச்சம். உன் எதிர்காலத்தைப் பத்தி கொஞ்சமாவது யோசிச்சு பார்த்தியா?"

"என் எதிர்காலம்...?"

"அதுவேதான். உனக்கு கல்யாணமும் ஆகலை. உறவுன்னும் யாரும் இல்லை. முதுமைல எப்படிக் காலம் தள்ளுவே?"

"அதனால்?"

"நான் சொல்றபடி கேள். நீ ஒரு மகாராணி ஆகிவிடலாம்."

"நிஜமாவா?"

"இந்த ருத்ரேஸ்வரை யார்னு நினைச்சே... நான் உத்துப் பார்த்தா போதும். பச்சை இலைகூட பத்தி எரியும். பார்க்கிறியா?"

-ருத்ரேஸ்வர் அடுத்த நொடியே அருகில் இருந்து பூசணிக் கொடியைப் பார்க்க, அது உடனே பற்றிக் கொண்டது.

மந்த்ரிணிக்கு கண்ணைக் கரித்தது.

திலகமோ நடுங்கி விட்டாள்

"பயப்படாம என் பேச்சைக் கேள் உன்னை வாழ வைக்கிறது என் பொறுப்பு..."

"சரி..."

"இனி நான்தான் உன் குரு. அந்த சுந்தராம்பா இல்லை. எங்கே இதை பதினாறு முறை சொல் பார்ப்போம்."

-ருத்ரேஸ்வர் கூறிட திலகமும் சின்னக்குழந்தைகள் ஒரே வரியை திரும்பத் திரும்பச் சொல்லி மனப்பாடம் செய்வது போல சொல்லத் தொடங்கினாள்.

"சரி.. நான் இப்ப சொல்றதை நீ நிறைவேத்தணும்."

"முடிஞ்சா நிறைவேத்தறேன்."

"முடிஞ்சாங்கற கேள்விக்கே இடமில்லை. நீ நிறைவேத்தியே தீருவே. முடியறதைத்தான் நானும் சொல்வேன்."

"நான் என்ன செய்யணும்?"

"எனக்கு அந்த தாசி பங்களாவுக்குள்ள இருக்கிற ருத்ர வீணை வேணும்."

"ஐயோ! அதை நானே பார்த்ததில்லையே..."

"இனிமே பார்ப்பே. நான் சொன்ன மாதிரி நடந்தா கட்டாயம் பார்ப்பே.."

"எப்படின்னு சொல்லுங்க..."

"அந்த பங்களாவுக்குள்ள சுந்தராம்பாளும், அவ வம்சாவளியினரும் போனாதான் எதுவும் நடக்காது இல்லையா?"

"ஆமாம்.."

"சுந்தராம்பா மகன் அசோகன்கூட உள்ள போகலாம் இல்லையா?"

"அ.. ஆமாம்!"

"அந்த அசோகனை சுந்தராம்பா உன்கிட்ட தவிட்டுக்கு வித்துட்டாதானே?"

"அ.. ஆமாம்..."

"ஆமாம்னு தயங்காம சொல். அதுதானே உண்மை?"

"ஆமாம்."

"எப்ப தவிட்டுக்கு அவனை நீ வாங்கிட்டியோ அப்பவே அவன் உனக்குத்தான் சொந்தம்."

"அசோகன் என் சொந்தமா?"

"அதுல சந்தேகமே வேண்டாம். அவன் உன் மகன். உன் மகனை இப்பவே போய் சுந்தராம்பாகிட்ட கேள்."

"கொடுப்பாளா?"

"கொடுக்கலேன்னா ஊர் பஞ்சாயத்துல சொல்வேன்னு சொல். தவிட்டுக்கு அவ எதனால வித்தாங்கற கேள்வி வரும். அதுக்கு பயந்துகிட்டே அவ சம்மதிச்சிடுவா."

"அசோகன் உங்களுக்கு எதுக்கு?"

"அவனும் ஒரு ருத்ரனோட அம்சம். உண்மையிலே யார் ருத்ரனோ அது எனக்குத் தெரியாது. ஆனா நான் ருத்ரனாகணும். அந்த வீணை எனக்கே கிடைக்கணும். அதுக்கு நான் அசோகன் கற தூண்டிலைப் போடப் போறேன்."

"அசோகன் இப்ப மனநிலை சரியில்லாமல்ல இருக் கான்?"

"அப்படித்தான் உனக்குத் தெரியும். ஆனா, அவன் உடம்புக்குள்ள இப்ப யார் இருக்காங்கறதே எனக்குத்தான் தெரியும். அந்த நபரை எப்படித் துரத்தறதுங்கறதும் எனக்குத் தெரியும்."

-ருத்ரேஸ்வர் எங்கே வருகிறான் என்பதை மந்த்ரிணியும் ஒருவாறு யூகித்தாள். அவளுக்கு பிரமிப்பாக இருந்தது.

திலகம் அதன் பிறகு எதுவும் பேசவில்லை. 'நிச்சயம் செய்து முடிப்பேன்' என்கிற பாவனையுடன் திரும்பி நடந்தாள்.

ருத்ரேஸ்வர் முகத்தில் வெற்றிப் புன்னகை!

**தி**லகம் வீட்டுக்குள் நுழைந்தபோது ராமச்சந்திரனும் விமலாவும் கூட தஞ்சாவூரில் இருந்து வந்திருந்தனர்.

திலகத்துக்கு மிக வசதியாக போய்விட்டது.

ராமச்சந்திரன், சுந்தராம்பாளிடம் கேட்டுக்கொண்டிருந் தார்.

"சுந்தரம்... இந்த ஊருக்கு அசோகன் வந்ததுல இருந்து ஏதாவது நல்ல மாற்றம் இருக்கா?"

"அதை நீங்களே போய் பார்த்தாதானே உங்களால தெரிஞ்சுக்க முடியும்?"

"அக்கா.. அவனோட படிப்பு பாழாகிக்கிட்டு இருக்கு. காலேஜ்ல எவ்வளவு நாள்தான் லீவு தருவாங்க. யோசிச்சுப் பாருங்க..."

- விமலா இடையிட்டாள்.

"எனக்கு அந்த அக்கறை எல்லாம் எதுவும் இல்லேன்னு நினைக்கறியா விமலா..."

"அய்யோ அக்கா! நான் அப்படிச் சொல்லலை. அவசரமாக நீங்க எங்களை வரச் சொன்னதையும், இங்க பல பேர் பலவிதமா பேசிக்கறதையும் பார்த்தா எனக்கு பயமா இருக்கு. ஒருவேளை அசோகனுக்கு இன்னும் குணமாகலை. அவனை இங்க இருந்து கூட்டிக்கிட்டு போ-ன்னு சொல்லிடு வீங்களோன்னுல்லாம் எனக்குள்ள ஒரு எண்ணம்." - விமலாவின் தாயன்பில் ஒரு தனி துடிப்பு.

சுந்தராம்பாள் லேசாக சிரித்தாள்

"சுந்தரம்... எங்களை எதுக்கு அவசரமா வரச் சொன்னே? என்ன விஷயம்?" - ராமச்சந்திரன் பக்குவமாக விசாரித்தார்.

"நமக்கெல்லாம் விடுதலை கிடைச்சாச்சுங்க... சுந்தராம்பாளின் அந்த ஒரு வரி பதிலால் அவரது புருவம் வளைந்தது.

"என்ன சொல்றே?"

"நான் இனி இந்த ஊரோட காவக்காரி கிடையாது. என் பொறுப்பு முடிஞ்சு போச்சு..."

"என்ன சுந்தரம் சொல்றே?"

"ஆமாங்க... முந்நூறு வருஷமா இந்த ஊரோட இருந்த எங்க குடும்ப கடமை ஒரு முடிவுக்கு வந்துடுச்சு. என் கணவரா இருந்தும் என் கடமை பற்றி நான் சொல்லாம ஒரு வார்த்தை நீங்க கேட்டதில்லை. எங்க உங்களுக்கு ஒரு ஆண்வாரிசு இல்லாம போயிடுமோன்னு பயந்து, நான் உங்களை விமலாவைக் கல்யாணம் பண்ணிக்க சொன்னப்பகூட நான் சொன்னா அர்த்தம் இருக்கும்னு கல்யாணம் பண்ணிக்கிட்டீங்க. விமலாவும் அதுக்கு ஒத்துழைப்பு தந்ததெல்லாம் நான் செஞ்ச பாக்கியம்."

"சுந்தரம்... இப்ப எதுக்கு அந்த பழைய கதையெல்லாம்?"

"இதுதான் அதை எல்லாம் பேசக் கிடைச்சிருக்கிற ஒரு நல்ல நேரம். சொல்லப் போனா இந்த நிமிஷம் நான் தாசி வம்சாவளியில வந்தவகூட கிடையாது. இனி உங்க மனைவி சுந்தரம்பா நான்.

ஒரு காலத்துல பெரிய கௌரவமா இருந்த பட்டம் தான் தாசிங்கற பட்டம்! காலப்போக்குல அதை கொச்சைப்

படுத்தி இறைவனுக்கு தாசியா இருந்தவங்களை தங்களுக்கு தாசியாக்கி- அவங்க வயித்துல அடிச்சு- தொடர்ந்து உயிர் வாழணும்னா உடம்பை வித்தாதான் வாழமுடியும்கற மாதிரி ஒரு சூழ்நிலையை உருவாக்கிட்டாங்க. எங்க குடும்பம் மட்டும் தோடீஸ்வரர் கோயிலாலயும் இந்த ஊராலயும் அதுல இருந்து தப்பிச்சது. இருந்தாலும் வெளிய சொல்ல முடியாத ஒரு கடமை எங்களுக்கு இருந்தது. ஒரு பெரிய பொக்கிஷத்தை நாங்க பாதுகாக்கற பொறுப்புல இருந்தோம். இயற்கையும் அதுக்கு துணை நின்னது. இன்னிக்கு எல்லாத்துல இருந்தும் விடுதலை."

"அப்படின்னா இனி நீ அந்த பங்களாவுக்கு தினசரி பூஜைக்குப் போக வேண்டாமா?"

"ஆமாம்... இனி நமக்கும் அந்த பங்களாவுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. அது இனி தோடீஸ்வரர் கோயில் சொத்து. அங்க இருக்கிற ருத்ர வீணையும் இனி பரிபூரண கோவில் சொத்து..."

-சுந்தராம்பாள் தன் வாயால் முதல் முறையாக ருத்ர வீணை பற்றி அப்பொழுதுதான் பேசினாள் அதுவரை மௌனமாக அங்கு நின்றுகொண்டிருந்த திலகமும் ருத்ர வீணை பற்றி சுந்தராம்பாள் பேசவும் கூர்மையானாள். நிமிர்ந்தாள்.

"சுந்தரம்... என்ன சொல்றே நீ...?"

"ஆமாங்க... நான் இனி இந்த ஊர்லகூட இருக்கத் தேவை இல்லை. உங்ககூட தஞ்சாவூருக்கே வந்துடலாம். பானுவுக்கும் கூட அவ விரும்பற இடத்துல கல்யாணம் செய்து வைக்கலாம். எங்க எனக்குப் பிறகு என்னைப் போல அவ இன்னொரு சுந்தராம்பாளா ஆயிடுவாளோங்கற பயமும் எனக்கு இல்லாம போயிடிச்சு. என்னோட நிச்சயம் இந்த பொறுப்பு முடிஞ்சு போயிடும்கற நம்பிக்கைலதான் உங்களை நான் கல்யாணம் செய்துகிட்டு பானுவுக்கும் அம்மாவானேன். ஆனாலும் ஒரு பயம். எங்க தப்பித் தவறி ஆணா அந்த குழந்தை அமைஞ்சிடு மோன்னு நான் பயப்படாத நாளில்லை.

நல்லவேளை பானு பிறந்தா அதே நம்பிக்கைலதான் அவளை சுதந்திரமா வளர்த்தேன் டாக்டருக்கும் படிக்க வெச்சேன்.. இப்ப என் கணிப்பும் நம்பிக்கையும் துளிகூட வீண்போகாத சூழ்நிலை உருவாகியிருக்கு..."

-சுந்தராம்பாளின் நீண்ட விளக்கம் ராமச்சந்திரனை வாயடைக்க வைத்துவிட்டது.

"அக்கா... எல்லாம் சரி! அசோகன் நல்ல விதமா குணமாகிட்டானா? அதைப்பத்தி நீங்க எதுவும் சொல்லவே இல்லையே.."

"கவலையே படாத விமலா வர்ற சிவராத்திரியோட எல்லாமே ஒரு முடிவுக்கு வருது. நாமளும் இந்த ஊரைவிட்டுப் போறோம். அசோகனுக்கு எதுவும் இல்லை. அவனுக்கு சித்த பிரமையெல்லாம் கிடையாது. அவனை பாபாஜி ஆக்கிரமிச்சிருக்கார். அவன் இப்ப நம்ம மகன் வடிவத்துல இருக்கிற தெய்வம். அவன் சாதாரண மனிதனா சிவராத்திரிக்குப் பிறகு மாறிடுவான். சிவராத்திரிதான் எல்லா விஷயங்களுக்கும் ஒரு முற்றுப்புள்ளி வைக்கப்போற நாள்."

"நானும் கேள்விப்பட்டேன் கோயில்ல ஒரு ஓலை வந்ததாகவும் சிவராத்திரி அன்னிக்கு ருத்ரன் வந்து ருத்ர வீணையை கோயில்ல வாசிக்கப் போறதா ஓலைல இருந்ததாகவும் எல்லோரும் பேசிக்கிட்டாங்க. அது யாருக்கா ருத்ரன்?"

"கடவுளுக்கு மட்டுமே தெரிஞ்ச விஷயத்தை என் கிட்ட கேட்கறியே...?"

"அப்படின்னா இவ்வளவு நாள் அதை வாசிச்ச ருத்ரன் யார்?" விமலா அப்பொழுதுதான் பாயிண்டுக்கே வந்தாள். சுந்தராம்பாள் காலில் முள் தைத்த மாதிரி அவளைப் பார்த்து விட்டு, "சொன்னா அதிர்ச்சியடையக் கூடாது" என்ற பீடிகை போட்டாள்.

"யாருக்கா?"

"என் அண்ணன்!" சுந்தராம்பாள் பதில் விமலாவை வாயைப் பிளக்க வைத்தது. திலகமும் அப்படியே ஒரு அடி பின் சென்றாள்.

"அப்படின்னா இப்ப அவர்..?"

"மனுஷ ருத்ரன் அவர், தேவ ருத்ரனான சிவன்கிட்ட போய் சேர்ந்துட்டார்."

"அக்கா..."

"போ விமலா... போய் தலைக்கு முழுக்கு போடு."

"அப்ப இவ்வளவு நாள் வீணை வாசிச்சது அவர்தானா?"

"ஆமாம். அதுக்காகவே என் தாய் வயித்துல வந்து பொறந்த ஒரு பாவி அவர்.."

"பாவியா?"

"பின்ன... இந்த பூமியில மனுஷனா பிறந்தும் மனுஷங்களுக்குண்டான எந்த ஆசாபாசங்களும் இல்லாம உற்றார் உறவினர்களோட ஒரு தொடர்பும் இல்லாம இந்த பூமி எவ்வளவு பெரிசு, இதுல யாரெல்லாம் இருக்கோம், எதெல்லாம் இருக்குன்னுகூட தெரிஞ்சுக்காம ஒரு மனுஷ உயிர் ருத்ர வீணை வாசிக்க மட்டுமே பிறந்துட்டு, அதோட கடமை முடிஞ்சு உடனே பூமியை விட்டும் போயிடுச்சுன்னா அதை பாவப்பட்ட ஜென்மம்னு சொல்லாம என்னன்னு சொல்ல?"

சொல்லும்போதே சுந்தராம்பாள் கண்களில் நீர் பெருக்கெடுத்துவிட்டது. அதற்கு மேல் வடிவாம்பாளின் முகத்திலும் குமுறல் ஆரம்பமானது. ராமச்சந்திரனே ஒரு வினாடி கலங்கிப் போனார். நெருங்கி வந்து சுந்தராம்பாளை தோளோடு அணைத்துக் கொண்டார். அவர் உடம்பெல்லாம் கூட ஒரு மெல்லிய நடுக்கம்.

"சுந்தரம்... உன்னை நான் மனைவியா அடைஞ்சதுக்காக ரொம்ப பெருமைப்படறேன். உன் குடும்பத்தோட தியாகத்தை நினைச்சா புல்லரிக்குது. ஒரு ஆண் வாரிசு வேணும்னுதான் ஒவ்வொரு பெண்ணும் துடிப்பா நீ மறுத்தப்போ நான் ஆச்சரியப்பட்டேன். சரியான காரணம் இருக்கும்னு எனக்குத் தெரியும். ஆனா, அதுக்குள்ள இப்படி மனசைப் பிசையற ஒரு ரணம் இருக்கிறது எனக்குத் தெரியாது."

"ஆமாக்கா... என்னால நினைச்சே பார்க்க முடியல..."

-விமலாவும் முன்வந்தாள் அதுவரை அவ்வளவையும் கவனித்தபடி இருந்த திலகமும் அவர்கள் எதிரில் மெல்ல முன்வந்தாள். அவர்களும் அவளை ஏறிட்டனர்.

"என்ன திலகம்?"

"வந்து..."

"என்ன... உனக்கும் இந்த தகவலெல்லாம் அதிர்ச்சி தரும்கறது எனக்குத் தெரியும். இனி நீயும் என் கூட பங்களாவுக்கு வர வேண்டிய அவசியமில்லை. உனக்குத்தான் நான் என்ன பண்ணப் போறேன்னு தெரியல..."

-சுந்தராம்பாள் சாதாரணமாக-ஆனால் நெகிழ்வாக சொல்ல, திலகத்திடம் இருந்து ஒரு அசாதாரணமாக பதில்.

“அதான் எனக்கு இந்த ஊருக்குள்ள நுழையும்போதே பண்ணிட்டீங்களே..”

சுந்தராம்பாளே அந்த பதிலைக் கேட்டு அதிர்வுடன் அவளை உற்றுப் பார்க்க-

“என்ன புரியலையா?”

“என்ன திலகம் நீ சொல்றே?”

“அசோகனை என்கிட்ட தவிட்டுக்கு வித்தீங்கல்ல?”

-திலகம் அப்படிச் சொன்ன நொடி விமலாவுக்கு உச்சந் தலையில் மரங்கொத்தி ஒன்று அமர்ந்து கொத்தியது போல இருந்தது.

“என்ன பாக்கறீங்க.. உங்களோட பல வருஷம் நான் இருந்திருக்கேன். எனக்குன்னு ஒரு தனி வாழ்க்கையை நான் நினைச்சுக்கூட பார்க்கல. இப்ப நீங்க எல்லாம் இந்த ஊரும் வேண்டாம், ஒண்ணும் வேண்டாம்னு போகும்போது எனக்கு என்ன வழி?

அதனாலதான் நான் என் மகனைக் கேட்கிறேன்.”

“என்னடி.... அசோகன் உன் மகனா?”

“இல்லையா பின்னே? தவிட்டுக்கு வித்தது அப்ப சாமியையும் ஊரையும் ஏமாத்தவா?”

“திலகம்...”

“கத்தாதீங்க... நான் ஒண்ணும் உங்க சொத்துல பாகம் கேட்கல. எனக்கு நீங்க கொடுத்ததைத்தான் நான் கேட்கறேன்.”-திலகம் குரலில் கடுமை கூடியது... சுந்தராம்பாள் அதற்குப் பிறகு அவளிடம் எதுவும் பேசவில்லை. விமலாவோ, “ஐயோ! என்னங்க இது? இவளுக்கு என்னங்க வந்துச்சு?” என்று அரற்ற ஆரம்பித்துவிட்டாள்.

ஆஸ்பத்திரியில் இருந்து உள்ளே நுழைந்து கொண்டிருந்த பானுவுக்கும் திலகத்தின் பேச்சும் தோரணையும் அதிர்ச்சி யாகத்தான் இருந்தது. எப்படி இப்படி மனம் மாறினாள் என்றும் அவளுக்குள் ஒரு கேள்வி!

# 19

## அன்று



உள்ளே இறந்துகிடந்த மல்லர்கள் ஒரு புறம்; பூஜை அறையில் ராகமந்திர ஏட்டுக்கட்டின் மேல் பாம்பு ஒருபுறம். வீட்டுக்குள் நுழைந்த உடனேயே சதாசிவ சாஸ்திரிகளின் மனைவியான பாலா அங்கே கண்ட காட்சி அவளை உறைய வைத்துவிட்டது.

கைகளில் சாஸ்திரிகளின் வாரிசு.

அதுவும் அழ ஆரம்பித்தது. பாலாவுக்கு தலையைச் சுற்றாத குறை. ஒன்றுமட்டும் அப்பட்டமாக விளங்கியது. நடக்கக்கூடாத ஒன்று நடந்திருக்கிறது அதே சமயம் சாஸ்திரிகள் என்ன ஆனார் என்று அவளால் விளங்கிக் கொள்ள முடியவில்லை.

சுற்றிச் சுற்றிப் பார்த்தாள் அழுத குழந்தையோடு அப்படியே கொல்லைப்பக்கம் எல்லாம் வந்தாள்.

“ஏன்னா எங்க போய்ட்டேள்?” என்று குரலும் கொடுத்தாள். வண்டியில் அமர்ந்திருந்த அவளது மாமனும் அப்போது உள்ளே வந்து உள்ளிருக்கும் மல்லர்களின் பிணங்களைப் பார்த்து நடுங்கிப்போனார்

“ஐயோ! என்ன நடக்கறது இங்கே?” என்றபடி அவரும் கொல்லைப்புறம் வந்தார் பாலா சொல்லி வைத்தமாதிரி தாழிப்பானையை போட்டு மூடியிருக்கும் அந்த மண்பரப்பு மேல் நின்றுகொண்டிருந்தாள் கீழேதான் அவளது உயிரே இருக்கிறது என்பது அவளுக்கு எப்படித் தெரியும்?

மாமா வரவும் பாலா கண்கள் கலங்கின

“பாலாமணி... எங்கே மாப்பிள்ளை உள்ளே என்னென்னவோ நடந்துவிட்ட மாதிரி இருக்கிறதே...”

"ஆமாம் மாமா, இவரையும் காணவில்லை. எனக்கு ஒரே குழப்பமாக இருக்கிறது." என்றாள் பாலா. அப்பொழுது தாழிப் பானையைக் கொண்டு வந்து புதைத்துவிட்டு மல்லர்கள் சொன்னது கேட்டு திரும்பிச் சென்றிருந்த குயவர்கள் திரும்பவும் வந்து கொண்டிருந்தனர். பாலா கைக்குழந்தையுடன் நிற்பதைப் பார்த்து தேங்கினார்கள்.

"என்னப்பா.. யார் நீங்கள்?"

"அம்மா எங்களைத் தெரியலீங்களா.. தாழிப்பானை கேட்ருந்தீங்களேம்மா.."

"இப்ப அதுக்கென்ன?.."

"என்னம்மா அப்படிச் சொல்லிட்டீங்க. எவ்வளவு அழகா அதைச் செஞ்சு கொண்டு வந்துருந்தோம் தெரியுமா? அதை இங்க போட்டு புதைக்கும்படி ஆயிடுச்சும்மா. சாமியையும் காணலை. எங்களுக்கு ஊதியம் தராமலே அவர்பாட்டும் காசிக்கு கிளம்பி போய்ட்டாரு..."

"என்னது காசிக்கா? யார் சொன்னது?"

"இங்க இரண்டு பேர் இருந்தாங்க. அவங்கதான் சொன்னாங்க."

"இது என்ன புதுக் கதை... பொண்டாட்டி நான் இங்கே இருக்கும்போது எனக்குத் தெரியாமல் அவர் எப்படி காசிக்கும் ராமேஸ்வரத்துக்கும் போக முடியும்...?"

"காதுல விழுந்ததை சொன்னோம். எப்படியோ அவர் போகாட்டி எங்களுக்கும் சந்தோஷம்தான். எங்க ஊதியத்தைக் கொடுத்தனுப்புங்க... வர்றோம்" என்றபடி அவர்கள் சென்றனர்.

காலடியிலேயே தாழிக்குள் சாஸ்திரிகள் மூச்சு அந்த ஏட்டுக்கட்டோடு அடங்கியிருந்தது. அதை உணராத பாலா, உணரமுடியாத பாலா- சாஸ்திரிகள் தன்னிடமும் சொல்லிக் கொள்ளாமல் காசிப்பக்கம் போய்விட்டதாக எண்ணி வாய்விட்டு அழுதாள்.

அதற்குக் காரணமாக உள்ளே இறந்துகிடப்பவர்களை நினைத்துக்கொண்டாள். "மாமா... யாரோ இரண்டு பேர் வந்து தகராறு பண்ணியிருக்கா. அப்ப மனைப்பாம்பு அவாளைக் கடிச்சு உயிரும் போயிடுத்து. அதைப் பார்த்துவிட்ட இவர் பயந்துகொண்டு எங்கேயோ போய்ட்டார்னு நினைக்கறேன்..." என்றபடியே அழ ஆரம்பித்தாள்.

மாமாவோ இறந்துகிடந்த அவர்கள் இருவர் உடலையும் இழுத்து வாசற்புறம் சென்று கிடத்தினார். பின் பாலாவை அழைத்து "குழந்தையை தூளில விட்டுட்டு ஆத்தை நன்னா அலம்பி விடு... நான் போய் தலையாரியைப் பார்த்து விஷயத்தை சொல்லிட்டு வரேன்..." என்று புறப்பட்டார்.

**பு**திய வீடு! வாசலில் காவலர்கள். பக்கவாட்டில் பல்லக்கு!

உள்ளே மாலியும் மாணிக்கவல்லியும் தோடீஸ்வரனுக்கு பூ கட்டிக்கொண்டிருக்க, வைஜெயந்தி பஞ்சணையில் சோர் வுடன் அமர்ந்திருந்தாள். அவள் வரையில் பாடகர் முத்து விநாயகம் பிள்ளை உருவாக்கிய தாக்கம் பெரிதாக இருந்தது.

இந்த ருத்ர வீணைக்குத்தான் எத்தனை போட்டி?

அது இந்த ஊருக்கு வந்ததில் இருந்தே தன் வாழ்க்கை அப்படியே தலைகீழாக மாறிவிட்டது போல தோன்றியது. ஒருபுறம் எவ்வளவோ நன்மைகள் நடந்துள்ளன. மறுபுறமோ தொட்டுத் தொட்டு பிரச்சினைகள்! இறுதியாக முத்து விநாயகம் பிள்ளை வந்து ருத்ர வீணையை வாசிக்காமல் போகப் போவதில்லை என்பது போல பேசவும் மனது அதில் போய் நிலை குத்தி நின்று கொண்டுவிட்டது.

ஆத்திரத்தில் முத்திரை மோதிரத்தைத் தூக்கிக் கொடுத்து முத்துவிநாயகம் பிள்ளையையே நேரில் போய் பார்க்கச் சொன்னது கொஞ்சம் அவசரப்பட்டு செய்துவிட்ட மாதிரியோ என்றுகூட தோன்றியது.

"அம்மா... நாம் நிம்மதியாகவே வாழ முடியாதா?" என்று பூ கட்டியபடி இருக்கும் இருவரையும் நெருங்கிக் கேட்டாள் வைஜெயந்தி.

"எனக்குள்ளும் அதே எண்ணம்தான்... சாண் ஏறினால் முழம் சறுக்குகிறது.

"இந்த பாடகரை நீ மதித்து பேசியதே தவறு. மிகவும் தவறான எண்ணத்துடன் அந்த மனிதர் வந்திருக்கிறார். அவரது சுயநலத்தை எண்ணினால் எனக்கு கொதிப்பாக வருகிறது..."

"வைஜெயந்தி... நீ வாயும் வயிறுமாய் இருப்பவள் அநாவசிய கவலைகள் உனக்கு எதற்கு? எதுவாக இருந்தாலும் நாங்கள் பார்த்துக்கொள்கிறோம்..." பாட்டி மாணிக்கவல்லி அவளது வயிற்றைப் பார்த்தபடியே சொன்னாள். அப்போது

ஊர்க்காவல் வீரர்களில் இருவர் அங்கே வந்து வணங்கிவிட்டு பேச ஆரம்பித்தனர்.

"அம்மா- நம்முடைய சாஸ்திரிகள் வீட்டில் பாடகர் முத்து விநாயகம் பிள்ளையின் ஆட்கள் இருவர் பாம்பு கடித்து இறந்துவிட்டனர். அதனால் அஞ்சிய சாஸ்திரிகள் காசிக்கு புறப்பட்டு போய் விட்டதாக தகவல்..." என்றனர். அடுத்த நொடி வைஜெயந்தியின் முகம் இருண்டு போனது.

"அய்யோடா...பாபாஜிக்கு பிறகு என் மேல் உண்மையான பரிவு காட்டும் ஒரே மனிதர் சாஸ்திரிகள்தான். அவர் காசிக்கு பயணப்பட்டுவிட்டாரா? என்ன கொடுமை இது..."

- ஆதங்கம் வெடித்தது வைஜெயந்தி உதட்டில். "அம்மா... ஊரே சாஸ்திரிகள் வீட்டு மனை நாகம் பற்றியும், அது காவல் காக்கும் ஏட்டை பற்றியும் பேசுகிறது. கடவுளே வந்தாலும் அந்த நாகத்தை ஏமாற்றிவிட்டு அந்த ஏட்டை எடுத்துச் செல்லுதல் இயலாது என்றுதான் எல்லோரும் கருது கிறார்கள்..."

- அவர்கள் சொன்னது இப்படி ஒரு காவல் என்றால் ருத்ர வீணைக்கு எவ்வளவு பலமான காவல் இருக்கும்? என்று கேட்டுக் கொண்டவள், அடுத்து பிள்ளை என்ன செய்யப் போகிறாரோ என்கிற குழப்பத்தில் விழுந்தாள்.

முத்துவிநாயகம் பிள்ளையோ தனியாளாக அந்த நவரத்ன மாளிகைமுன்.

இரவு நேரம்!

நவரத்ன மாளிகை அலாதியான அமைதியில் கிடந்தது. அங்கங்கே மாடங்களில் மட்டும் சில தீப்பந்தங்கள் எரிந்து கொண்டிருந்தன.

முகப்புக் காவலில் இப்பொழுது ஒருவன்தான் இருந்தான். அவன்கூட முட்டாக்கு போட்டு தூங்கி வழிந்தபடி இருந்தான். முத்துவிநாயகம் பிள்ளை அவன் முன்னால் தான் போய் நின்றார். அவனையும் தட்டி எழுப்பினார் அவன் தடுமாறினான் தத்தளித்தான்.

"நீங்கள்?"

"நான் யாராக இருந்தால் என்ன... இந்தா முத்திரை மோதிரம்... என்னை உள்ளே விடு..."

அவன் முத்திரை மோதிரத்தைப் பார்த்தான். மிரண்டான்.

"என்ன முழிக்கிறாய்?"

"இது எப்படி உங்களிடம்..?"

"உனக்கு அதை எல்லாம் நான் கூற விரும்பவில்லை. கதவைத் திற..."

"இந்த நேரத்திலா?"

"ஏன்...இந்த நேரத்திற்கென்ன...?"

"இல்லை... இது நீங்கள் நினைப்பதுபோல சராசரி மாளிகை இல்லை."

"நான் சராசரி மாளிகையாக இதை நினைப்பதாக உனக்கு யார் சொன்னது?"

"அப்படி இல்லை... இங்கே குடி இருக்கப் பார்த்த வைஜெயந்தி அம்மையாராலேயே இங்கே இருக்க முடிய வில்லை. போய்விட்டார்கள்..."

"அப்படியானால் உள்ளே ஒருவர்கூடவா இல்லை...?"

"ஆமாம்..."

"நீ பொய் சொல்கிறாய். உள்ளேதான் ருத்ர வீணை உள்ளது. அதை வாசிக்கும் தாசி மகனும் உள்ளான்..."

முத்துவிநாயகம் சொல்லி வாய் மூடுமுன் ருத்ர வீணை நாதம் ஒலிக்க ஆரம்பித்தது. ஸ்வர சுத்தமான ஆரம்பம். அந்த நிசப்தத்தில் அதன் தந்திகளின் நாதம் கரையில் ஏறும் பால் நுரை அலை போல விறுவிறுவென்று ஊடுருவிப் பரவியது.

முத்துவிநாயகம் பிள்ளை அப்படியே ஸ்தம்பித்து போய் நின்றார். அந்த காவல்காரன்கூட அவரோடு மோதிக் கொண் டிருந்ததை எல்லாம் மறந்தான். அப்படியே அந்த இசையில் மெல்ல விழ ஆரம்பித்தான்.

சிலபல வினாடிகள் அந்த இசையில் கரைந்த முத்து விநாயகம் பிள்ளை சட்டென்று சுதாரித்தவராக கதவை தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தார்.

வீரேந்திரன் வாசித்துக் கொண்டிருக்கும்போதே அவனைப் பார்த்து அவன் வாசிக்கும் அழகையும், அதன் பின் அந்த

வீணையையும் பார்த்துவிடும் துடிப்பு அவரிடம் அலை பாய்ந்தது.

மிகப் பெரிய அந்த மாளிகை. அவர் இதற்குமுன் பார்த் திராத ஒரு மாளிகையாக இருந்தது. ஒரு மாளிகை என்றால் முகத்துவாரம், வழிப்பாதை நுழைமுகம், பரந்து விரிந்த ஹால் - அதில் ஈசான்ய பாகத்தில் வாசல், அதை கடந்து உள் சென்றால் அங்கே நீர் நிலைகள், அப்படியே பக்கத்தில் அக்னி, அங்கே சமையல்கட்டு, சாப்பாட்டு அறை. இப்படியான அமைப்பே இல்லாமல் வட்ட வடிவத்தில் மேல்கூரை ஏராளமான தூண்கள் தாங்கி நிற்கும் ஒரு வித்தியாசமான உள்ளடக்கமாய் முத்துவிநாயகத்தை அந்த பங்களாவின் உள்கூடு வரவேற்றது. வீணை இசை என்னவோ சீராக கேட்டது. அதே சமயம் அவரை ஆவலாதி பிடுங்கித் தின்றது.

எங்கிருந்து வருகிறது சப்தம்? எங்கிருந்து வாசிக் கிறான் வீரேந்திரன் என்று கால்கள் நாலா பக்கமும் துழாவின. திறந்து கிடந்த அறைக்குள் எல்லாம் நுழைந்து திரிந்ததுதான் மிச்சம். வீணை இசை சப்தம் மட்டும் கேட்டது. ஆனால், வீரேந்திரனோ வீணையோ கண்ணில் படவில்லை.

ஆச்சரியம் அப்பி எடுத்தது. ஒரு மாயம்போல தோன்றியது. அப்படியே மெல்லிய தண்ணீர் சலசலத்து ஓடி வந்து விழும் சப்தமும் காதில் கேட்டது. ஆனால், தண்ணீரே கண்ணில் படவில்லை.

முத்துவிநாயம் பிள்ளையின் ஆசைத் துடிப்பு ஒரு வெறியாகவே உருமாறத் தொடங்கியது.

"ஏய் வீரேந்திரா... எங்கிருக்கிறாய் நீ?" என்று கத்தத் தொடங்கினார். வீணை இசை சப்தத்திற்கு நடுவில் அந்த சப்தத்தின் எதிரொலி மட்டுமே வெகு தூரத்திற்கும், வெகு நேரத்திற்கும் கேட்டது.

பிராண அறையில் வீரேந்திரன் வாசித்தபடி இருக்கி றான். அந்த அறைக்குள் பன்னிரு ராசிக் கிணறுகளுக்கும் இட்டுச் செல்லும் சுரங்க வழி துவாரங்கள் உள்ளன. அது போக காவிரி ஆற்றுக்கு செல்லும் ஒரு பாதையும் அதன் வழியாக வரும் நீர்த்தாரைகளும் ஒரு நீச்சல்குளம் போல தேங்கியிருக்க, அந்த குளத்தின் நடுவில் அமைக்கப்பட்டுள்ள கல்மேடை மேல்தான் வீரேந்திரன் அமர்ந்து வாசித்துக்

கொண்டிருந்தான் அந்த நீர்த்தாரைதுவாரங்கள் வழியாகத் தான் வீணை இசை உள் பரவி ராசிக்கிணறு வரை சென்று அங்கிருந்துதான் அனைவர் காதிலும் ஒலிக்கும்படியாக அது செயல்படுகிறது.

ராசிக் கிணறுகளின் பக்கவாட்டில் ராசி மூர்த்தி விக்கிரக சிலைகள் எல்லாம் வைக்கப்பட்டு அவைகளுக்கு பின்னாலேயே அந்த நீர் துவாரங்களும் அமைந்திருந்தன... அதன் வழியாகத் தான் சப்தம் கசிய வேண்டும். இதெல்லாம் அவ்வேளையில் முத்துவிநாயகம் பிள்ளைக்கு தெரிந்திருக்க நியாயமில்லை. பிராண அறையை வடிவமைத்த நோக்கமே அது மனிதர்கள் பார்வையில் படும் விதமாகவோ, அப்படி படும் விதத்தில் இருந்தால் அவர்கள் காவிரி நீரில் பிராண அறைக்குள் குளிக்கவும் வேறு விஷயங்களுக்கும் அந்த நீரை பயன்படுத்தவும் கூடும். இதனால் பிராண அறை சக்கர மேடையில் சுத்திகரிக்கப்படும் நீர் ராசிக் கிணறுகளுக்கு செல்லும்போது தோஷத்துடன்தான் செல்லும் என்பதால் பிராண அறை விஸ்வகர்மாவால் கட்டப்படும்போதே மனிதர்கள் அவ்வளவு சுலபத்தில் செல்ல முடியாதபடி கட்டப்பட்டிருந்தது.

குறிப்பிட்ட ஒரு இடத்தில் சென்று தரையில் அழுந்த ஒரு உதை உதைத்தால் எதிரில் சுவரில் ஒரு நபர் நுழையும் அளவு ஒரு இடைவெளி முப்பது விநாடி கால அளவுக்கு தோன்றி மறைந்து விடும். அதற்குள் உள்நுழைந்து விடவேண்டும். அதேபோல உள்ளிருந்து வெளியில் வரும் மார்க்கமும் முப்பது விநாடி கால அளவுதான்.

தரையை உதைப்பதில்கூட ஒரு நிதானம் உள்ளது. கூடுதலான விசையுடன் உதைத்தாலோ இல்லை குறைவான விசையுடன் உதைத்தாலோ அதனால் ஒரு பயனும் இல்லை. இப்படிப் பலவித சூட்சமங்களை உள்ளடக்கிய ஒரு மாளிகை அது. இது எதுவும் தெரியாததால் முத்துவிநாயகம் பிள்ளை யிடம் ஆசை மட்டும் பெருகி வழிந்தது. சுற்றிச் சுற்றிப் பார்த்தார். பேந்த பேந்த விழித்தார். கைகளைப் பிசைந்து கொண்டார்.

“வீரேந்திரா...வீரேந்திரா...” - என்று எவ்வளவு முடியுமோ அவ்வளவு கத்தினார். சுவரில் கை வைத்து வருடியெல்லாம் பார்த்தார். அவரால் எதையும் அறிய முடியவில்லை. அவர்

மனது அங்கு நடப்பதை ஒரு பெரிய மாய்மாலமாகத்தான் பார்த்தது.

"ஒன்றும் புரியவில்லையே... ஆள் இருப்பது போலவும் இருக்கிறது, இல்லாதது போலவும் இருக்கிறது. இங்கே நான் தனியாக வந்ததுதான் குற்றமோ..?"

கேள்வியும் முணுமுணுப்புமாக வெளியே வந்தவர் எதிரில் மீண்டும் அந்த சேவகன். அவனைப் பார்த்த மாத்திரத்தில் அவன் மேலங்கியைப் பிடித்த முத்துவிநாயகம் பிள்ளை "உண்மையைச் சொல்... வீணை இசை எங்கிருந்து வருகிறது. நான் அந்த வீணையைப் பார்க்க வேண்டும். அதை நான் வாசித்தே தீரவேண்டும்..." என்று ஒரு அலறு அலறினார். அவன் மரக் கட்டை போல நின்றான்.

அவரோ திரும்பி மேலே மாடங்களில் எரியும் தீப் பந்தங்களைப் பார்த்தார். பின் அருகாமை மரங்கள் உயர்ந்து, மாளிகை கூரை வரை பரவி இருப்பதையும் பார்த்தவருக்கு சட்டென்று ஒரு உபாயம் தோன்றியது.

தன்னிலை மறந்து வெகுவேகமாக ஓடி பக்கத்து மரத்தின் மேல் ஏறத் தொடங்கினார்.

"அய்யா... அதன் மேல் ஏறாதீர்கள். அது ஆபத்தான மரம்..." - அலறினான் சேவகன்.

"மரம் ஏறுவதில் என்னய்யா ஆபத்து... காதில் விழும் ஒலியை அது வரும் வழியைக் காணாமல் நான் திரும்ப மாட்டேன். ஒரு கண்ணாமூச்சி விளையாட்டு நடத்தும் உங்களுக்கெல்லாம் நான் பாடம் கற்பிக்காமல் விடமாட்டேன்..."

புலம்பியபடியே மரக்கிளையை பற்றிக் கொண்டு வேகமாக ஏறியவர், கிளையில் ஒரு இடத்தில் பெரிய அளவில் கட்டப்பட்டிருந்த தேன்கூட்டைக் கவனிக்கத் தவறிவிட்டார். அதன்மேல் அவர் கை படவும் பொளேரென்று அறை விழுந்தது போல தேனீக்கள் சிதற ஆரம்பித்தன. சேவகன் ஓடி ஒளியத் தொடங்கினான். முத்துவிநாயகம் பிள்ளை மேல் அவ்வளவு தேனீக்களும் படை எடுத்தன. கொடூரமான அதன் கொடுக்குக் கடி தாளாமல் அவரும் அலறியபடியே மரக்கிளையைப் பற்றிய கரத்தை விடவும், ஒரு பொட்டலம் போல் மேல் இருந்து கீழே விழுந்தவர், தொடர்ந்து அலறிய அலறல் சப்தம் ஊருக்குள்கூட கேட்கத் தொடங்கியது.

**ம**றுநாள்

தோடிபுரத்தில் மட்டும் பொழுது வெகு அமைதியாகத்தான் விடிந்தது. முத்துவிநாயகம் பிள்ளையின் சடலம் வீங்கிப்போய் ஒரு வஸ்திரம் போர்த்தப்பட்ட நிலையில் கல்மண்டபத்தில் கிடத்தப்படிருந்தது.

தகவல் அறிந்து மந்திரி மகாதேவரும் வந்திருந்தார் நடந்ததை எல்லாம் கேள்விப்பட்டு வெகுவாக வருத்தப்பட்டார்.

முதற்காரியமாக நவரத்ன மாளிகை பக்கமே ஒருவரும் இனி செல்லக் கூடாது என்று தண்டோரா போடப் பணித்தார்.

அடுத்து-உண்மை தெரியாமல் சாஸ்திரிகளை அழைத்து வர ஒரு குழுவை காசி நோக்கி அனுப்பி வைத்தார்.

ஊரைக் கூட்டி இனி தோடிபுரத்தில் யாராக இருந்தாலும் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று கட்டுப்பாடுகளையும் விதித்தார். அப்படியே சோமசுந்தரம் பிள்ளைக்கு ஆறுதல் கூறி முத்துவிநாயகம் பிள்ளைக்கான தகனக்ரியைகளையும் தோடிபுரத்திலேயே நிகழ்த்தி முடித்தார்.

முத்துவிநாயகம் பிள்ளை நினைவை மறவாமல் இருக்க கோவில் முகப்பு மண்டபத்திற்கும் அவரது பெயரே வைக்கப் பட்டது.

காலமும் உருண்டது!

வைஜெயந்தியும் ஒரு ஆண் குழந்தைக்கு தாயானாள். அந்தக் குழந்தைகக்கு ஏழு வயதாகும்போது வீரேந்திரன் விஷக்காய்ச்சல் கண்டு இறந்துபோனான். வைஜெயந்திக்கும் மாலிக்கும் வீரேந்திரன் பொருட்டு செய்து கொடுத்த சத்தியம்தான் முதலில் நினைவுக்கு வந்தது. பள்ளிக்கு அனுப்பி கலைகளில் தேர்ச்சி பெறவைக்க வேண்டியவனை வீரேந்திரன் இருந்த இடத்துக்கு அதுவும் அந்த பிராண அறைக்கு அனுப்பி வைக்க அவ்வளவு சுலபத்தில் மனம் வரவில்லை. இதனால் இரண்டு நாட்களுக்கு வீணை ஒலியே ஊருக்குள் கேட்கவில்லை. பதிலுக்கு தோடீஸ்வரர் ஆலயத்தில் உள்ள லிங்கத்துக்கு வியர்த்துக் கொட்டியது பட்டர் பதறிக் கொண்டு வந்து விஷயத்தை வைஜெயந்தியிடம் கூறினார். அதே போல கோவில் பசுவும் கோமாரி வந்து இறந்துபோனது. யானைக்கும் உபாதை ஏற்பட்டது. கோவில் கொடி மரத்தின் அருகில் கறையான்கள்

கூடி அதை அரிக்கப் பார்த்தன இதை எல்லாம் பார்த்த வைஜெயந்தி மனதைக் கல்லாக்கிக் கொண்டு மகனுடன் நவரத்ன மாளிகை ஏகினாள். அவனை பிராண அறைக்குள் விட்டு விட்டு திரும்பிப் பார்க்காமல் வந்தாள். அவள் அங்கிருந்து வீட்டிற்கு வருமுன் வீணை இசை ஒலி கேட்கத் தொடங்கியது. முதலில் இசையில் ஒரு சீர் இல்லை. சப்தத்திலும் ஒழுங்கு இல்லை. படுக்க வைக்கப்பட்ட வீணை மேல் விரல்கள் பட்டு எழும் ஒரு தினுசான சப்தமாகத்தான் அது இருந்தது. ஆனால், ஒரு அதிசயம் போல அன்று மதியமே அந்த சப்தத்தில் அனேக ஒழுங்குகள் ஏற்பட்டு ஒரு ஒழுங்குள்ள இசை வெளிப்படத் தொடங்கியது.

வைஜெயந்தி மகனும் ருத்ரன் வரிசையில் சேர்ந்து விட்டதை அது அப்பட்டமாக எதிரொலித்தது. வைஜெயந்தி அப்படியே மகாதேவரை கட்டிக் கொண்டு அழுதாள். அப்படியே மயங்கி விழுந்தவள் வயிற்றில் அடுத்த கரு...

அது ஒரு பெண்ணாக இருந்ததும் அவளும் வைஜெயந்தி போல கோயில் தாசியாக தொடர்ந்ததும் பின்னர் அவள் வயிற்றிலும் முதலில் ஒரு பெண், பின் ஒரு ஆண் மகவு என்று ஒரு வரிசை உருவாகத் தொடங்கியது. இங்கே ஆண்மகவு பிறக்கும்போது அங்கே ருத்ரனாக உள்ளவனுக்கு ஒரு முடிவு கச்சிதமாக நேருவதும் பேசி வைத்துக் கொண்டு செய்யப்பட்டது போலவே இருந்தது. ஆனால், அதுதான் காலத்தின் ஏற்பாடு. இல்லை என்றால் 'கடவுளின் கணக்கு' என்றும் கூறலாம்.

அந்த ஏற்பாடும், கணக்கும் தொடர்ந்து சென்றதில் மிகச் சரியாக 12 ஆவது தலைமுறையில் 12 ஆவது தாசியாக சுந்தராம்பாள் அமைந்தாள் முதல் குழந்தை மரபுப்படி பெண்ணாக பிறக்கும் என்பதால் முதல் பிரசவத்துக்கு அவள் அஞ்சவில்லை. ஆனால், அடுத்து ஆண் எனும்போது தயங்கி னாள். ஒரு சுற்று முடிந்துவிட்டது. தங்களுக்கு விடுதலை கிடைத்துவிடும் என்று உறுதியாக நம்பினாள். அது பலித்தும் விட்டது.

அன்றைய கதையின் தொடர்ச்சிக்கு ஒரு முடிவும் ஏற்பட்டுவிட்டது. ஒரு விஷயம் மட்டும் புரியாத புதிராகவே அமைந்துவிட்டது. அதுதான் சதாசிவ சாஸ்திரிகள் அவர் வீட்டுத் தோட்டத்திலேயே தாழிப் பானைக்குள் அடங்கிப்

போன கொடுமை. அதை ஒருவர்கூட உணரவில்லை. அவர் காசிக்கு போய்விட்டதாகவே கருதினார்கள். காசிக்கு போனவர் திரும்பாததால் அவர் அங்கே கங்கையில் மூழ்கி உயிர் நீத்திருக்க வேண்டும் என்றும் கருதினார்கள்.

மொத்தத்தில் காலம் தன் பாட்டையில் போய் ஜெயித்துவிட்டது. அந்த நாளிலும் சரி இந்த நாளிலும் சரி, மனிதர்கள் அதன் இழுவையில் பயணிப்பவர்கள் மட்டுமே!

## இன்று

பட்டர் வீட்டில் காயத்ரி கண்களுக்கு மருந்து போட்டபடி இருந்தான் சங்கரன். அதை சமையல்கட்டில் இருந்து பார்த்துக் கொண்டிருந்த மைதிலி முகத்தில் ஒரு குறுஞ்சிரிப்பு.

அன்றைய சந்தியாவந்தன கர்மாவில் இருந்த உபாசகர் அதை கவனித்தார். அவர் அப்படிப் பார்க்கும்போது அவளும் அவரைக் கை ஜாடை காட்டி அருகில் அழைத்தாள்.

அம்பாளின் அழைப்பு.

அதுவும் காயத்ரியை உச்சாடனம் செய்தபடி இருக்கும்போது... சிலிர்த்துப் போன உடம்போடும் பரவசமான எண்ணங்களுடனும் ஓடினார். சமையல்கட்டில் ஒருவரும் இல்லை. உபாசகரின் மனைவி மட்டும் சமையல்கட்டின் ஒரு மூலையில் கல் உரலில் அரிசி உடைத்துக் கொண்டிருந்தாள். கண் தெரியாவிட்டாலும் ஏதாவது ஒரு விதத்தில் உபயோக மாக இருக்க வேண்டும் என்கிற முனைப்பு அவளிடம் தெரிந்தது.

உபாசகர் மனைவியை ஒரு பார்வையும் காயத்ரியை ஒரு பார்வையுமாக பார்த்தபடி வாயைத் திறந்தார்.

“அம்மா உன்னைத்தான் நினைச்சு ஜெபிச்சுண்டு இருந்தேன் அப்போ நீயே கூப்பிடவும் எனக்கு ஜென்மமே சாபல்யம் அடைஞ்சுட்ட மாதிரி ஒரு பரவசம்...”

“ருத்ர வீணை விஷயத்துல நல்ல விதமா நடந்துக்கற அவ்வளவு பேருக்குமே ஜென்ம சாபல்யம்தான் நரசிம்ம பாரதி...”

“சந்தோஷம்மா... எதுக்கு கூப்ட்டேன்னு கொஞ்சம் நீ சொன்னா நல்லது...”

"ராஜராஜேஸ்வரியை விட்டுட்டு அவளோட ஸ்ரீபுரத்துல இருந்து நான் கிளம்பி வந்த மாதிரி சிவலோகத்துல இருந்து கால பைரவனும் வரப் போறான்..."

"என்னம்மா சொல்றே?"

"சொல்ல வேண்டியதைத்தான் சொல்லிண்டு இருக்கேன். அந்த கால பைரவனை பரிபாலிக்கற பொறுப்பை நான் உனக்கு தரப் போறேன்."

"அம்மா..!" - உபாசகர் உடம்பு நடுங்கியது.

"என்ன நரசிம்மபாரதி... நம்ப முடியலியா?"

"இல்லம்மா... பைரவ மூர்த்தியை நான் பரிபாலிக்கறதா... என்னம்மா இது? யாரை யார் பரிபாலிக்கறது... அந்த ஸ்வாமிதானே எல்லோருடைய விதியையுமே எழுதறவர். வீர சொரூபியான அவர்தானே இந்த லோகத்தையே பரிபாலிக் கறவர்?"

"இப்பகூட பரிபாலனத்துக்காகத்தான் வரார். அதான் உன் காதுல போட்டு வெச்சேன்..."

"உத்தரவும்மா... நீ சொல்றதை செய்றதுதானே என் வேலை. ஆனா, சத்திய ஆவேசமா வந்த என்னைக் கட்டிப் போட்டுட்டே. எனக்கு போட்டியா மனுஷா வந்தா மோதி ஜெயிக்கப் பார்ப்பேன். தெய்வம் நீயே வந்து நின்னு என்னை அப்படியே கட்டிப் போட்டுட்டே... என் சத்யமும் அப்படியே வவ்வாலாட்டம் தொங்கிண்டு இருக்கு..."

உபாசகர் உருக்கமாக பேசியதைக் கேட்டு ஒரு சிரிப்பு சிரித்த மைதிலி, "அப்பப்ப நேரடியா இல்லாம இப்படி மறைமுகமா 'எனக்கு அந்த ருத்ர வீணை வேணும். என்னை ருத்ரனாக விடு'ன்னு நீ சொல்லிண்டு இருக்கே... ஆனா பாவம் நீ..." - மைதிலி அப்படிக் கூறவும், உபாசகருக்கு உச்சந்தலையில் அவள் குட்டியது மாதிரி இருந்தது.

மலங்க மலங்கப் பார்த்தார். மைதிலி "பாவம் நீ..." - என்று எதை வைத்துச் சொன்னாள் என்பது மட்டும் விளங்கவில்லை. இடையில் "மைதிலி... மைதிலி." என்ற குரல் கொடுத்தபடி சங்கரன் சமையல் அறைக்குள் வந்து அங்கு பணிவோடு நிற்கும் உபாசகரை ஒரு மாதிரி பார்த்தான்.

"என்ன சங்கரா அப்படிப் பாக்கறே?"

"இல்ல... சந்தி பண்ணிண்டிருந்தவர் இங்க என்ன பண்றேள்?"

"அது- மைதிலி கூட பேசிண்டிருந்தேன்." - அவரையும் மீறி உண்மை வெளி வந்துவிட சங்கரனுக்கு சுரீர் என்றது.

"என்ன ஸ்வாமி சொல்றேள்...? மைதிலிகூட பேசிண்டு இருந்தேளா?"

"அதாவது ஊமை பாஷைல..." - உபாசகர் புரண்டு எழுந்து சமாளிக்க முனைந்தார். சங்கரன் ஒரு மாதிரி மைதிலியையும் பார்த்தபடி ஒரு செம்பில் தண்ணீர் எடுத்து ஒரு வாய் குடித்துவிட்டு பின் சிறிது தூரம் சென்று திரும்பவும் ஒரு பார்வை பார்த்துவிட்டு நடந்தான்.

"அம்மா... சங்கரனுக்கு சந்தேகம் வர ஆரம்பிச்சிடுத்து..." ரகசிய குரலில் உபாசகர் ஆரம்பித்தார். "வரட்டும்... இன்னும் நாலு நாள். அதுக்குள்றதான் எல்லாம் முடியப் போறதே..."

"இந்த நாலு நாளைக்கு நடுவுல பைரவ ஸ்வாமி எதுக்கு வரார்னு தெரிஞ்சுக்கலாமா?"

"நான் எதுக்கு வந்திருக்கேன்..?"

"என்னைக் கேட்டா... 'கலியுகத்துல எதுவும் நடக்கும்'னு சொல்வா. ஆனா, தெய்வமும் வந்து ஒரு மனுஷ ரூபத்துல சில நாடகங்கள் நடத்தும்கறது எனக்கு இப்பதான் தெரியறது."

"நம்ப முடியலை இல்ல...?"

"எப்படி நம்ப முடியும்? நீதான் அந்த பிராம்மின்னு நான் உரக்கச் சொன்னா நீதான் அதை ஒத்துண்டு எல்லோருக்கும் தரிசனம் தந்துடப் போறியா என்ன? நான் வேணா எல்லார் முன்னாலயும் பைத்தியக்காரன் ஆவேன்."

"ரொம்ப நொந்து போய் பேசறே நரசிம்மபாரதி. புறப்படு. சங்கரன் இப்ப வெளிய போறவன் இந்த வீட்டுக்கு இனி இப்ப இருக்கற சங்கரனா திரும்பி வரவே போறதில்ல... போய் அவனோடவே இரு."

"உத்தரவும்மா... உன்னண்ட ஒரே ஒரு கேள்வி மட்டும் கேட்கலாமா?"

"கேள்."

"நீ எல்லாம் வந்து நின்னுதான் அந்த ருத்ர வீணையை பாதுகாக்க முடியுமா? என்னை மாதிரியான உன் பக்தர்களுக்கு

நீ அனுக்கிரகம் பண்ணினா உன் எண்ணத்தை நாங்க முடிக்க மாட்டோமா?"

"சரியான கேள்விதான் கேட்ருக்கே.. நானே இங்க வந்திருக்கேன்னா அந்த வீணை எவ்வளவு பெரிய விஷயம்னு உனக்குத் தெரியலியா?"

"ஐயோ! அதுல என்ன சந்தேகம்... அம்பாளும் அரனும் ஒண்ணாக் கலந்து கிடக்கற ஒரே விஷயமாச்சே. கற்பக விருட்சத்துக்கும், காமதேனுவுக்கும் இருக்கற மதிப்பைவிட இதுக்கு நான் அதிக மதிப்பு தரேன். ஏன்னா அதெல்லாம் சந்தோஷமும் சௌக்கியமும்தான் தரும். ஆனா, இது அம்மையப்பனையே நமக்கு தர்றதே... இது எவ்வளவு பெரிசு!"

"அது பெருசுங்கறதுக்காக மட்டும் நான் வரலை. அதைவிட பெரிய ஒரு விஷயத்தை சாதிக்கவும் இது தருணம். அதுக்காகத் தான் வந்திருக்கேன்..."

"அதைவிட பெரிய விஷயமா?"

"ஆமாம்... இதுக்குமேல பேசாம புறப்படு. சங்கரன் மேல ஒரு கண்ணு இருக்கட்டும்..."

"சரிம்மா..." கைகளை கூப்பிக் கொண்டபடியே அப்ப டியே பின்னால் சென்ற உபாசகர், சங்கரனை பிடிப்பதற்காக தெருவில் இறங்கினார்.

ஆனால், சங்கரன் வெகு தூரம் போய்விட்டிருந்தான்.

**தி**லகம், ருத்ரேஸ்வர் முன்னால் நின்றுகொண்டிருந்தாள். ருத்ரேஸ்வர் முகத்தில் பூரிப்பு தவழ்ந்து கொண்டிருந்தது.

"சபாஷ் திலகம்... நான் கோடுதான் போட்டேன். ஆனா நீ அதுல ரோடே போட்டுட்டே.... இந்த திடசித்தம் உனக்கு மாறவே கூடாது. சுந்தராம்பா ஒருவேளை இந்த விஷயத்துல உன்னை ஏமாத்த நினைச்சா விட்டுடாதே. இறுக்கிப் பிடி. எனக்கும் அந்த அசோகன் வேணும். அதுவும் இன்னிக்கு சாயந்திரம் அவன் என்கிட்ட வந்தாகணும்."

ருத்ரேஸ்வர் கண்களில் அனல் பறந்தது. திலகம் தலை 'பூம்பூம்' மாடு போல ஆடியது. அந்த வேளை பார்த்து சாமிநாதன் வந்து கொண்டிருந்தான் அவன் காதிலும் ருத்ரேஸ்வர் பேசியது அரைகுறையாக விழுந்திருந்தது.

முகத்தில் அதன் எதிரொலிகள்.

சாமிநாதன் தன்னை கடந்து செல்லும் திலகத்தை ஒரு தினுசாகப் பார்த்தான். ஆனால், அவளோ இவனை தெரிந்து கொண்டது போலவே காட்டிக் கொள்ளவில்லை. அவனுக்கு வியப்பாக இருக்க-ருத்ரேஸ்வரும் அழைக்கத் தொடங்கி னான்.

"வாங்க சாமிநாதன்..."

"அப்பா உங்களைப் பாக்கணும்னார்..."

"அப்படியா... இப்ப நல்லா பேசறாரா?"

"பேச்செல்லாம் வரலை... ஜாடை காமிச்சுதான் சொன்னார் நீங்கதான் பெருசா சவால் விட்ருக்கீங்களே. சிவராத்திரிக்கு அவரை நாதஸ்வரம் வாசிக்க வைக்கறதா..."

-சாமிநாதன் குரலில் கொஞ்சம் போல கிண்டல் தொனித்தது. ருத்ரேஸ்வருக்கும் அந்த கிண்டல் குத்தியது.

"நான் நினைச்சா நாளைக்கே உங்க அப்பாவை பரிபூரணமா குணமாக்கிடுவேன் சாமிநாதன்."

"எங்க... சொல்றீங்களே தவிர பெருசா ஒரு முன்னேற்றமும் இல்ல."

-சாமிநாதன் சற்று கோபமாகவும் கூறிவிட்டு, வந்த வேலை முடிந்தது என்பது போல புறப்படவும், ருத்ரேஸ்வர் முகத்தில் அசடு வழிந்தது. மந்த்ரிணி முதல் தடவையாக அதைப் பார்த்து ஆச்சரியப்பட்டாள்.

"ஈஸ்வர்... இந்த சாமிநாதன் கொஞ்சம்கூட நம்மை மதிக்கத் தயாரா இல்லை. ஆரம்பத்துல இருந்தே நான் கவனிச்சுகிட்டு வரேன்..."

"காரணம் இருக்கு மந்த்ரிணி..."

"என்ன காரணம்?"

"இவனுக்கு அந்த சுந்தராம்பா பொண்ணுமேல காதல். ஆனா, அவளோ அந்த பட்டர் பையனை விரும்பறா..."

"இதெல்லாம் உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"வந்து பல நாள் ஆச்சு. எதை எல்லாம் தெரிஞ்சுக்கணும்னு நினைச்சேனோ அதை எல்லாம் தெரிஞ்சு முடிச்சாச்சு..."

"அதுல முக்கியமா ஏதாவது..?"

"இரண்டு விஷயம் ரொம்ப ரொம்ப முக்கியம் மந்த்ரிணி..."

-ருத்ரேஸ்வர் இடைவெளி விட்டுவிட்டு அவளை ஒரு பார்வை பார்த்தவன், "நான் இரண்டு பேரை என் வசப்படுத்தியே தீரணும்... அதுலதான் ருத்ர வீணை என் வசமாகறது இருக்கு..."

"அந்த இரண்டு பேர்?"

"ஒண்ணு, அசோகன். இன்னொண்ணு, அந்த மைதிலி..."

"மைதிலியா?"

"அவ உருவத்துலதான் மைதிலியா இருக்கா நான் ஏற்கெனவே சொன்ன மாதிரி அவ பிராம்மி..."

"பிராம்மியா... அப்படின்னா?"

"புராணம் படிக்காத உன்கிட்ட இதுதான் பெரிய தொல்லை. பிராம்மிங்கறவ சப்த கன்னியர்ல ஒருத்தி. பிரம்மாவோட அம்சத்த கொண்டவ. பிரம்மா படைக்கற பணியை செய்யற மூர்த்தி. அவர் அம்சமான பிராம்மியும் இங்கயே வந்துருக்கான்னா அவளும் எதையோ படைக்கவோ இல்லை படைச்சதை காக்கவோதான் வந்திருக்கணும்."

"பிராம்மி ஒரு தேவதையா?"

"பிராம்மி ஒரு தேவதை இல்ல. அவதாரம்! சக்தியோட அவதாரம். அவளோட ஸ்ரீபுரத்தைக் காவல் காக்கற தேவி அவ."

"நம்ப முடியல ஈஸ்வர். ஒரு அவதாரமே இந்த் தோடிபுரத்துக்கு வந்துருக்குன்னா அப்ப அந்த ருத்ர வீணை எவ்வளவு பெருசா இருக்கணும்."

"இப்பதான் நீ அந்த ருத்ர வீணையைப் புரிஞ்சுக்கவே ஆரம்பிச்சிருக்கே."

"நல்லது ஈஸ்வர். அசோகனை வசப்படுத்த திலகத்தை பயன்படுத்திட்டீங்க. மைதிலியை எப்படி வசப்படுத்தறது? அசோகனாவது சாதாரண மனுஷன்... ஆனா, மைதிலிய நீங்க பிராம்மின்னு சொல்றத பார்த்தா கிட்டயே நெருங்க முடியாது போல இருக்கே..."

"என்னால நெருங்க முடியாத எதுவும் இந்த உலகத்துல கிடையாது மந்த்ரிணி. பல விஷயங்கள்ல நான் அந்த விநாயகரைப் போல..."

"விநாயகரா?"

"ஆமாம்... முருகன் உலகத்தை சுத்திட்டு வரப் போனப்ப, சிவபார்வதியை மட்டுமே சுத்தி வந்து விநாயகர் தனக்கான பழத்தை வாங்கிக்கலையா? அப்படித்தான்..."

"அப்ப இப்ப எப்படி மைதிலியை வசப்படுத்த போறீங்க?"

"கோவில்ல வந்து பார்..." - புதிர் போட்டான் ருத்ரேஸ்வர். உடனேயே கோவிலுக்கும் புறப்பட்டான்.

"ஈஸ்வர்... அந்த கல்யாணசுந்தரத்தை சந்திக்க வேண்டாமா?"

"அவசியமில்ல... இனி அந்த ஆள் தயவு எந்தக் காலத்துலயும் தேவை இல்லை. இரண்டு பேரை அடக்கணும்; இரண்டு பேரை உள்ள அனுப்பணும். அப்படிச் செய்துட்டா வேலை முடிஞ்சது..."

-ருத்ரேஸ்வர் பூடகமாக பேசுவது மந்த்ரிணிக்கு ஓரளவு தான் விளங்கியது. போகப் போக பார்த்துக் கொள்ளலாம் என்று அவனுடன் கிளம்பிவிட்டாள்.

**கோ**வில்!

உள்ளே நுழையுமுன் வாசல்புறம் உள்ள குளத்தில் புருவத்தை நன்றாக கழுவிக் கொண்டான்.

கறுப்பாக மை கரைந்து குளத்து நீரோடு சேர்ந்தது.

மேலேறி வந்தவன் கோபுரத்தைப் பார்த்து கன்னத்தில் போட்டுக் கொண்டான்

அப்படியே உள்ளே நுழைந்தான்.

சுநாதமான மணியின் சப்தம் காதில் மோதியது.

பட்டரும் சந்நிதியில் இருந்தார்.

ருத்ரேஸ்வர் வரவும் வணங்கினார்.

"அர்ச்சனை செய்யணும்..." என்றான்.

"பேஷா... பேர், நட்சத்திரம் சொல்லுங்கோ."

"பேர் ருத்ரேஸ்வர சர்மா வாதூல கோத்ரம், பரணி நட்சத்திரம், மேஷ ராசி..."

"சர்மான்னா... நீங்க பிரஹச்சரணமா, வடமாவா?"

"வடமா இருந்தாலும் உங்களைப் போல குருக்கள், பட்டர்கள் குடும்பத்துலயும் சம்பந்தம் வெச்சுப்போம். என்

அண்ணாவோட மன்னி சிதம்பரம் தீட்சதர் குடும்பத்து பொண்ணு... என் மாமாவோட பார்யை திருக்கருகாவூர் சந்நிதி முறை உள்ளவாதான்..."

"பரவால்லியே... காசில இருந்தாலும் சம்பந்தமெல்லாம் இங்கதான் போல இருக்கே..."

"ஆமா நூறு ஏக்கர் நஞ்சை புஞ்சை இப்பவும் திருநெல்வேலி அம்பாசமுத்ரம் பக்கம் இருக்கு. அவ்வளவும் எனக்குத்தான். எனக்குன்னா என்னைக் கல்யாணம் பண்ணிக்க போறவளுக்கு..."

"அந்த பொண்ணு அப்ப ரொம்ப கொடுத்து வெச்ச வன்னுதான் சொல்லணும்."

"என் வரைல ஒரு உடல் ஊனமுள்ள பொண்ணைத்தான் கல்யாணம் பண்ணிக்க விரும்பறேன்."

"ஈஸ்வரா! இது என்ன சங்கல்பம்?"

"ஏன் ஸ்வாமி... எல்லோரும் அழகா கிழங்காட்டம் இருக்கறவாளையேதான் பண்ணிக்கணுமா? ஊனமுள்ள வாளுக்கு யார் கை கொடுக்கறதாம்."

"வாஸ்தவம்தான்... பெரிய பரோபகார எண்ணம்தான். ஹூம். உங்களைப் பண்ணிக்க யாருக்கு கொடுத்து வெச்சுருக்கோ..."

"நீங்க விரும்பினா உங்க பொண்ணுக்கேகூட அந்த சந்தர்ப்பம் கிடைக்கலாம்."

-பட்டர் திடுக்கிட்டுப் போய் நம்ப முடியாத திகைப்போடு பார்த்தார்.

"என்ன பார்க்கறேள். உங்க பெரிய பொண்ணு மைதிலியை நான் கல்யாணம் பண்ணிக்கறேன். உங்களுக்கு சம்மதமா...?"

- அவன் கேட்டுவிட்டான். ஆனால், பட்டருக்கு பேச்சே வரவில்லை. அப்படியே விக்கித்து போய் நின்றார். மந்த்ரி ணிக்கோ அவன் ஒரே தாவு தாவி எங்கோ போய்விட்டதாக தோன்றியது.

புத்தியை பயன்படுத்துவது பற்றி அவள் நிறையவே கேள்விப்பட்டிருக்கிறாள். ஆனால், ருத்ரேஸ்வர் அளவு ஒருவர் அதை பயன்படுத்த முடியுமா என்று எண்ணிப் பார்த்தாள். பட்டர் கிட்டத்தட்ட ஐஸ்க்ரீம் போல உருகிப் போயிருந்தார். ருத்ரேஸ்வருக்கு பதில்தர முடியாதபடி ஒருவித சந்தோஷம்,

தயக்கம் என்று பல உணர்வு நிலைகளில் அலைமோதிக் கொண்டிருந்தார்.

ருத்ரேஸ்வர் அவரை விடுவதாக இல்லை.

"நான் ஒரு அம்பாள் உபாசகன்கூட... என் ஜாதகப்படி எனக்கு யார் மனைவியா வந்தா நன்னா இருக்கும்னு உபாசனை பண்ணும்போது அம்பாள் கிட்டயே கேட்டேன். அப்போ, மைதிலி முகம்தான் அதுல வந்தது. அவ பேச முடியாத ஊமையா இருக்கலாம். ஆனா, அவ வேற ஒருத்தனுக்கு நிச்சயம் செய்யப்பட்டுட்டாலேயே அவ தோஷம் நீங்கி அவ பேச ஆரம்பிச்சுடுவான்னு அம்பாள் சொன்னா..."- என்று ருத்ரேஸ்வர் அடுத்து போட்ட குண்டு உபாசகரை வெகு வேகமாக சம்மதத்துக்கு பிடித்து தள்ளியது.

"நான் சொல்றதுல உங்களுக்கு நம்பிக்கை இல்லேன்னா இங்க சந்நிதியில நீங்க பூகட்டிப் போட்டுப் பாருங்கோ. நான் சொன்னபடிதான் வரும்..."

-ருத்ரேஸ்வர் கொஞ்சம் அவர்பக்கமும் சாய்ந்தான். எப்பொழுதும் பூகட்டிப் போட்டு இறைவனிடம் சம்மதம் கேட்பது என்பது ஒரு வித 'பாமர பிரசன்னம்' என்கின்றன ஜோதிட ஏடுகள்.

நூத்துக்கு நூறு சதம் இதில் தவறு வராது.

நம்மை நாம் அப்படியே தெய்வத்திடம் ஒப்படைத்து விட்டு நல்லதோ கெட்டதோ இனி நீ சொல்வதுதான் என்று சரணாகதி அடையும்போது நம்மிடம் 'நான்' விட்டுப்போகிறது.

பூ கட்டி கேட்பது என்பது இறைவனுடன் பேசி உண்மை அறிவது என்பதாகும். இதற்கு ருத்ரேஸ்வர் சம்மதித்தது தான் ஆச்சரியம். ஆனால், ஒருவித சூதுடன்தான் அவன் சம்மதித்திருந்தான். அது யாருக்கும் தெரியாது.

பட்டர் தயங்கினார்.

"என்ன தயக்கம்?"

"இந்த விஷயத்துல என் பையன் பொண்ணுகிட்டயும் ஒரு வார்த்தை பேசிட்டு அப்புறம் ஸ்வாமிகிட்ட உத்தரவும் கேட்கலாம்னு நினைக்கறேன்."

"தாராளமா ஆனா பஞ்சாங்கப்படி இப்ப அமிர்த நாழிகை நேரம் ஓடிண்டிருக்கு. எப்பவுமே நல்ல நேரம் நமக்குத்

தெரியவரும்போது நாம அதை பயன்படுத்திக்கணும். இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்தி மைதிலிதான் என் மனைவிங்கறத உறுதிப்படுத்திக்கத்தான் நான் விரும்பறேன். கல்யாணத்தை நீங்க எப்ப வேணா வெச்சுக்கலாம்..."

-ருத்ரேஸ்வரின் விளக்கமும், வளைத்துப் பிடிக்கும் லாவகமும் பட்டரை திணறச் செய்தது.

"என்ன யோசனை? இப்ப உத்தரவு கேட்டுப் பாருங்க. வந்ததுன்னா 'என் பொண்ணை உங்களுக்கே கல்யாணம் பண்ணித்தர்றேன்'னு இந்த சந்நிதில வச்சு வாக்கு கொடுங்கோ. இல்லேன்னா நான் போயிண்டே இருக்கேன்...

நான் ஒண்ணும் உங்க பொண்ணை வேலைக்காரி ஆக்கிக்கவும், உங்க சொல்ப நகை நட்டுக்காகவும் அவளைக் கல்யாணம் பண்ணிக்க பார்த்த அந்த துபாய்க்கார போலி மாப்ளை இல்ல...

என்னைப் பத்தி காசிக்கு போய் நன்னா விசாரிச்சுட்டு வந்து நீங்க கல்யாணம் பண்ணித் தந்தா போதும். நான் இவ்வளவு பேசக் காரணம், அமிர்த நாழிகைப் பொழுதுல ஒரு நல்ல காரியம் நடந்தா தொட்டுத் தொட்டு எல்லாமே நல்லா நடக்கும்கற என் ஜோதிட நம்பிக்கைதான்."

-ருத்ரேஸ்வர் போட்ட போடு ஒரு வழியாக வேலை செய்தது. பட்டரும் தோடீஸ்வரன் முன்னால் சென்று ஒரு பொட்டலத்தில் பூவை வைத்துக் கட்டினார். இன்னொன்றில் குங்குமத்தை வைத்துக் கட்டினார். அதை குலுக்கிக் கொண்டே வந்தவர், ஏதாவது சின்னக் குழந்தை வருகிறதா என்று பார்த்தார்.

மணிகண்டன்தான் வந்து கொண்டிருந்தான்.

அவர் வரையில் அவனும் ஒரு ஞானசம்பந்தன்.

"டேய் மணி! செத்த இங்க வா..."

"என்ன மாமா?"

"செத்த இந்த பொட்டலத்துல ஒண்ணை எடு."

"என்ன மாமா...! அக்காக்கு கல்யாணம் பண்றது சம்பந்தமாவா?"

-அவன் பொட்டில் அடித்தான். பட்டர் உலுக்கப்பட்ட நெல்லி மரம்போல ஆகிவிட்டார்.

"ஆமா! உனக்கு எப்படித் தெரியும்?"

"ஒரு யூகத்துலதான் கேட்டேன்?"

"யூகத்துலயா...? என்னமோ கூட இருந்து பார்த்தவன் பேசற மாதிரி இருக்கு. சரி, சரி. ஸ்வாமியை பிரார்த்தனை பண்ணிண்டு எடு."

"அவர் தான் மாப்பிள்ளையா?"

"அ... ஆமாம்."

-மணிகண்டன் ருத்ரேஸ்வரைப் பார்த்து சிரித்தான் ருத்ரேஸ்வரும் அவன் தலையைத் தடவி வருடி விட்டான். சிரித்தபடியே கண்களை மூடித் தியானித்தவன். "எங்கக்காக்கு நல்ல வரனா அமையணும்" என்றபடி ஒரு பொட்டலத்தை எடுத்துத் தந்தான்.

பட்டரும் பிரித்தார்.

சம்மதம் என்கிற உத்தரவு!

"ஆஹா... ஈஸ்வரன் உத்தரவு தந்துட்டான்"

-என்றார் மிக உற்சாகமாக. ருத்ரேஸ்வர் முகத்திலும் மலர்ச்சி. மந்த்ரிணி முகம் மட்டும் சற்று வாடியது.

"மாப்ளே..." என்றார் உடனேயே பட்டர்.

"சொல்லுங்க மாமா..."

"எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியல... நீ போடா மணிகண்டா..." என்றார். மணிகண்டனும் "இதைப் போய் நான் அக்கா கிட்ட சொல்றேன்..." என்றபடி ஓடினான்.

பட்டர் கண்களில் ஆனந்தக் கண்ணீர்.

"மைதிலி ரொம்ப கொடுத்து வெச்சவ. பாவம் வாயில்லாத பொண்ணு அவ. அவ எதிர்காலத்தை நினைச்சுதான் நானே கவலைப்பட்டுண்டு இருந்தேன். கடைசில பகவான் ஒரு நல்ல வழியை காமிச்சுட்டார் " என்று உணர்ச்சிவசப்பட்டார். ஓடிப்போய் நிறைய பூபழமெல்லாம் எடுத்து வந்து தந்தார்.

ருத்ரேஸ்வரும் அங்கேயே அவர் காலில் விழுந்து வணங்கி எழுந்தான். பிறகு புறப்படுவதாக கூறினான் "மாப்ள நீங்க மதியம் சாப்பிட அவசியம் ஆத்துக்கு வரணும்..." - பட்டர் உரிமை கொண்டாட ஆரம்பித்தார்.

"பாக்கறேன்.."

"இல்ல... அப்படிச் சொல்லப்படாது. என்வரைல தேடி வந்த தெய்வம் நீங்க.."

"இதெல்லாம் பெரிய வார்த்தை மாமா."

"சத்தியமான வார்த்தை இது."

"போதும். நான் இருந்தா அப்புறம் இப்படிப் பேசிண்டே இருப்பேள். கூட்டமும் நிறைய வர்றது. போய் தீபாராதனை காட்டுங்கோ. நான் புறப்படறேன்."

"அவசியம் சாப்பட வந்துடுங்கோ. எதிர்பார்த்துண்டே இருப்பேன்."

"முயற்சி செய்யறேன். நீங்களும் கொடுத்த வாக்குல இருந்து பிசகிடக்கூடாது..."

-என்றபடியே பிராகாரத்தை வலம் வரத் தொடங்கினான்.

மந்த்ரிணி முகத்தில் இறுக்கம்.

"என்ன மந்த்ரிணி உம்முன்னு இருக்கே?"

"ஸாரி ஈஸ்வர். நோ கமெண்ட்ஸ்."

"என்கூட இருந்துண்டு இப்படி எல்லாம் பேசக்கூடாது. நான் உன் குரு. குரு கேட்டா பதில் சொல்லணும்."

"சரி, சொல்றேன் நீங்க நிஜமாலுமே மைதிலிய விரும்பறீங்களா?"

"இல்லை."

"அப்புறம் எதுக்கு அவளைக் கல்யாணம் செய்துக் கணும்?"

"நான் மைதிலிய எங்க கல்யாணம் பண்ணிக்கப் போறேன்?"

"அப்ப அவ யார்?"

"அவ இப்ப பிராம்மி. சப்த கன்னி. அம்பாளோட பரிவார தேவதைகள்ல ஒருத்தி. அப்படி ஒருத்தியை நான் அடைய றேன்னா குறுக்குவழியில நான் ஒரு தேவசக்தி ஆகறேன்னுதான் அர்த்தம்."

"ஒரு பக்கம் ருத்ர வீணைக்கு குறிவைக்கும்போது மறுபக்கம் பிராம்மிக்குமா?"

"அப்படி இல்லை. இந்த நொடி ருத்ர வீணைக்கு அந்த பிராம்மி காவல். காவக்காரியை வசப்படுத்திட்டா வீணை தானா வசமாயிட்டு போறது."

-ருத்ரேஸ்வர் புத்திசாலித்தனமாகத்தான் பேசிக் கொண் டிருந்தான். ஆனால் கெட்டநேரம் என்று ஒன்று வந்துவிட்டால் அதுதான் எப்பொழுதுமே சக்திமிக்கதாக இருக்கும். அது

ருத்ரேஸ்வரையுடம் விட்டு வைக்கவில்லை. கோவிலுக்குள் நுழையும் முன்பு வரை மந்திர தந்திர யந்திர பலசாலியாக இருந்தவன் அதை குளத்து நீரில் முகம் கழுவும்போதே கழுவிவிட்டுத்தான் வந்திருந்தான். எனவே மற்றவர்கள் கவனிப்பதை அவன் உணரவேயில்லை.

குறிப்பாக யதார்த்தமாக அப்பாவைப் பார்க்க வந்த சங்கரன் காதில் ருத்ரேஸ்வரின் பேச்சு விழுந்து அவனுக்குள் நெருப்பை மூட்டியிருந்தது. அவர்கள் பேச்சும் கோயில் பிராகார வெளியில் தொடர்ந்தபடி இருந்தது.

"ஈஸ்வர்... உங்க செயல்பாடுகளை என்னால கொஞ்சம் கூட புரிஞ்சுக்க முடியல. ஒருபக்கம் திலகம் மூலமாக அசோகனையும் பிடிக்கற முயற்சி. இங்க மைதிலிக்கு வலை... மைதிலி மூலமா ருத்ர வீணையை அடையமுடியும்னா அசோகன் எதற்கு?"

"அவன்தானே பாபா?"

"அதனாலே?"

"பாபாவோட ஆன்மா சராசரி மனுஷ ஆத்மாக்கள் மாதிரி கிடையாது. இந்த பூமியில எல்லா மனுஷ ஆத்மாக் களுக்கும் கர்மக்கணக்குன்னு ஒண்ணு உண்டு. அதாவது பாவபுண்ணியம்! அதுக்கு தகுந்த மாதிரி அது சொர்க்க லோகத் துக்கும், பித்ரு லோகத்துக்ககும், மறுஜென்மம் எடுக்கவும் பார்க்கும்.

சித்தபுருஷர்கள், ரிஷிகள், ஆன்மாக்கள் அப்படி இல்லை. அவா கர்மக் கணக்கையே தங்கள் கைவசம் கொண்டு போயிடுவா. அதாவது தங்களுக்குள்ள தெய்வத்தன்மையை வளர்த்து அவர்களும் தெய்வமா ஆயிடுவா அப்படிப் பட்டவாளால எதையும் சாதிக்க முடியும். அதுக்கு யாராலயும் தடைபோட முடியாது.

விஸ்வாமித்திரர் இதுக்கு ஒரு நல்ல உதாரணம்.

மனச ஒருமிச்சா அதுக்கு எவ்வளவு சக்திங்கறதுக்கும் அவர்தான் உதாரணம். மனசு சிதறினா அது எவ்வளவு பெரிய வீழ்ச்சிங்கறதுக்கும் அவரே உதாரணம்.

தன் தவசக்தியால திரிசங்கு சொர்க்கத்தையே உண்டு பண்ணினவர். அங்க அவரே பிரம்மா; அவரே விஷ்ணு; அவரே சிவன். அவர்தான் மேனகை அழகுல மயங்கி சகுந்தலை பிறக்க

காரணமானவர். இதை எதுக்கு சொல்றேன்னா இங்க பாபாவும் ஒரு அற்புதமான தவசக்தி. இவர் வரையில் பூத உடல்தான் அழிஞ்சிருக்கு. ஆத்ம சக்தி அப்படியேதான் இருக்கு. அது இப்பவும் அந்த ருத்ர வீணைக்கு காவல்!"

"இப்படி ஒரு சக்திக்கு இரண்டு சக்தி காவல் இருக்கற ருத்ர வீணையை உங்களால மட்டும் எப்படி அடைய முடியும்?"

"முடியும். நிச்சயமா முடியும். இரண்டையும் நான் எனக்குக் கீழ கொண்டு வந்துட்டாலே போதும்."

"உங்களுக்கு வசப்படற அளவுக்கு அவங்க கீழான வங்களா?" மந்த்ரிணி கேள்வி ருத்ரேஸ்வர் முதுகில் சரே லென்று சூடு போட்டது போல ஒரு அவஸ்தையை உருவாக் கியது.

"மந்த்ரிணி! என்ன சொல்றே... எனக்கு வசப்படற அளவுக்குன்னா என்னை அல்பமானவனா நீ நினைக்கறியா?"

"தப்பா எடுத்துக்காதீங்க. நமக்கு சொந்தமில்லாததை அடைய நினைக்கறது திருட்டுத்தனம். இது உங்ககிட்ட இருக்கு. அவங்களோ நீங்க சொன்ன மாதிரி தேவசக்திகள். இதுக்கு முன்னால திருட்டுத்தனம் எப்படி ஜெயிக்க முடியும்?"

"முடியும்... முடிச்சுக் காட்றேன். நான்கூட ஒரு தேவ சக்திதான்! அந்த வீணை பொது சொத்து. அதைக் கொண்டு இந்த உலகத்துல மழையே இல்லாம பண்ணிடலாம். பெரிய பெரிய தலைவர்கள் இறந்தாலும் திரும்ப உயிர்ப்பிச்சிடலாம். யுத்த புத்தி உள்ளவனுக்கு சாந்தமளிக்கலாம். கோழையை வீரனாக்கலாம். வீரனைக் கோழையாக்கலாம்... இதை எல்லாம் செய்யாம ஒரு குக்கிராமத்துல அது ஒரு பங்களாவுக்குள்ள கிடக்கும். அதை வேடிக்கை பார்க்கச் சொல்றியா?"

"சரி... நீங்க அதை அடைஞ்சு உலகை வாழ வைக்கப் போறவர்னே வெச்சுப்போம்... இதை அந்த தேவசக்திகளுக்கு செய்யத் தெரியாதா?"

"மந்த்ரிணி! ஒரு விஷயத்தை புரிஞ்சுக்கோ... இந்த தேவசக்திகளுக்கு 'நான்'ங்கற திமிர் அதிகம்... இவாளுக்கு ஆட்டி வைக்கற ஆசைதான் எப்பவும்... அத விடு! நான் கொஞ்ச காலமா இந்த பூமியை ஆட்டி வைக்க விரும்பறேன். எப்பப் பார் கடவுள்தான் இந்த பூமியை ஆட்டிவைக்கணுமா? அதால முடியும்னா என்னால முடியாதா?"

-ருத்ரேஸ்வரிடம் 'நான்' எழும்பி நின்றது. கவனித்தபடி இருந்த சங்கரனும் அதைக் கேட்டு திடுக்கிட்டான். சங்கரனுக்கு பின்னாலேயே சற்று தள்ளி உபாசகர்.

மைதிலி அனுப்ப, சங்கரனையே தொடர்ந்தபடி இருப்பவர்.

"ஈஸ்வர்...! இப்படி கடவுளை, அதாவது தேவசக்திகளை கேள்வி கேட்கற நீங்க அந்த சக்தியாக மாறத்தானே ஆசைப்படறீங்க?"

"மந்த்ரிணி...! தேவசக்திங்கறது ரூபா மாதிரி. உன்கிட்ட இருந்தா நீ பணக்காரன். அதை நான் என் வசப்படுத்திட்டா நான் பணக்காரன். எப்பவும் நீதான் பணக்காரனா இருக்கணுமா நானும் கொஞ்ச நாள் இருக்கேனேங்கறதுதான் என் கட்சி."

"இப்படி நினைச்சவங்கதானே அசுரர்கள்...?"

"அசுரன், தேவன்கறது எல்லாம் வெறும் பெயர். என் வரைல தேவர்கள்தான் அசுரர்கள் அசுரர்கள் எல்லாம் தேவர்கள். நான் அசுரர்களைக் கொஞ்ச நாளைக்கு தேவர்களாக்கி பார்க்க விரும்பற ஒருத்தன்... அதுக்காகத்தான் ஆயிரம் சண்டி ஹோமம் பண்ணி அரிய பல சக்திகளை எனக்குன்னு சேர்த்து வெச்சிருக்கேன். எமன்கூட என்னை தொடறதுக்கு முந்தி என் சக்தியை பார்த்து பயந்து நிக்கணும். நான் சுலபமா செத்துட்டா அந்த சக்திக்கெல்லாம் அர்த்தமே இல்லாம போயிடும்... அப்படி அர்த்தமில்லாம பண்ண எந்த தேவசக்திக்கு தைரியம் இருக்கு?"

-ருத்ரேஸ்வர் பேச்சோடு மார்பை நிமிர்த்திய விதமும் கண்களை அகட்டிய விதமும் அசுர தோரணை என்பதற்கு சான்றாக இருந்தது.

மந்த்ரிணியால் அவன் பேச்சை ஒப்புக்கொள்ளவும் முடியவில்லை. ஒப்புக் கொள்ளாமல் இருக்கவும் முடியவில்லை. திணறினாள்.

"என்ன... பதிலைக் காணோம்?"

"எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியல."

"என்கிட்ட பேசி யாரும் ஜெயிக்க முடியாது. ஒண்ணு தெரிஞ்சுக்கோ. யார் ஒருத்தரால் எல்லாரையும் ஆட்டிப் படைக்க முடியறதோ அவர்தான் கடவுள் நான் இப்ப அப்படித்தான். போகப் போக பார். முதல்ல இந்த ஊர், அப்புறம் இந்த மாவட்டம், அப்புறம் இந்த தமிழ்நாடு, அப்புறம்

இந்தியான்னு என் ராஜ்யம் விஸ்தாரமாகிண்டே போகப் போறதை..."

-அவன் அப்படிச் சொல்லவும் தன்னையும் மீறி 'களுக்' என்று ஒரு சிரிப்பு வந்துவிட்டது மந்த்ரிணிக்கு. அது அவனையும் குத்தியது.

"நீ அடிக்கடி இப்படிக் கேலியா சிரிக்கறே...

"சிரிக்கற மாதிரிதான் இருக்கு உங்க பேச்சு...

"என்ன சொல்றே நீ.. என் பேச்சு சிரிக்கற மாதிரி இருக்கா?"

"கோவிச்சுக்காதீங்க ஈஸ்வர். ஆயிரம் சண்டி ஹோம பலன் அது இதுன்னு சொல்ற உங்களால அந்த தாசி பங்களாவுக்குள்ள நுழைய முடியலையே. அதை நினைச்சேன். அதான் சிரிப்பு வந்துடுச்சு..."

மந்த்ரிணி போட்டபோடு ருத்ரேஸ்வரை ஜிவுஜிவு என்று சிவக்க வைத்து விட்டது.

"முட்டாள் மாதிரி பேசாதே... மின்சாரத்தைக் கண்டு பிடிச்ச விஞ்ஞானிகூட கைல கிளவுஸ் போட்டுண்டுதான் அதைத் தீண்ட முடியும். இல்லேன்னா கருகி சாம்பல்தான். 'நான்தானே கண்டு பிடிச்சேன். என்னையே நீ தாக்கறியா'ன்னு அவன் அதுகிட்ட கேட்கல்லாம் முடியாது..."

"நீங்க என்ன சொன்னாலும் சரி.. உங்க கிட்ட நான் நிறைய முரண்பாட்டை பாக்கறேன். குழப்பத்தையும் பாக்கறேன். உங்க மாணவி நான். மனைவி இல்ல. மனைவியா இருந்தா வாயை மூடிக்கலாம். மாணவின்னா சந்தேகம் வரும். அதைக் கேள்வியா கேட்கத்தான் செய்வேன். நீங்க பதில் சொல்லித்தான் தீரணும்."

"அப்படியா?"

"அப்படியேதான் "

"மாணவி, மனைவின்னு கவிதையா பேசற அளவுக்கு வளர்ந்துட்டியா நீ...."

"நான் வளரலேன்னா நீங்க நல்ல குரு இல்லேன்னு ஆயிடும். பரவால்லியா?" - மடக்கினாள் மந்த்ரிணி.

"போதும் நிறுத்து. உன் கேள்விக்கு பதிலை இன்னிக்கு ராத்திரி தாசி பங்களாவுல சொல்றேன். அதிகபட்சம் 48 மணி நேரம். ருத்ரன் வர்றதும் ருத்ர வீணையை அடையறதும்

சிவராத்திரிக்கின்னு ஊர் வேணும்னா நினைக்கட்டும். ஆனா, அன்னிக்கு ஒரு பெரிய ஏமாற்றம் அவங்க அவ்வளவு பேருக்கும் இருக்கு. அதிகபட்சம் 48 மணி நேரத்துல அந்த ருத்ர வீணையை நான் அடைஞ்சு இந்த ஊரைவிட்டும் கிளம்பிக் காட்றேனா இல்லையா பார். இன்னிக்கு அதற்கான ஒத்திகையை நீ பார்க்கப்போறே!"

"ஒத்திகைன்னா...?"

"தாசி பங்களாவுல இருக்கிற வீணையை நீயும் நானும் பார்க்கறோம்..."

"நிஜமாவா...?"

"சத்தியமா.. நீ என்னை உசுப்பேத்திட்டே அதுக்குண்டான நல்லது கெட்டது இரண்டையும் என் கூடவே சேர்ந்து அனுபவி..."

-கோபமாக சொல்லிவிட்டு ஒரு சூறாவளி போல அங்கிருந்து நகர்ந்தான் ருத்ரேஸ்வர்.

ஒரு தூண் பின்னால் இருந்து கேட்டுக் கொண்டிருந்த சங்கரன் முகம் நெருப்பாகி இருந்தது.

**மா**ந்தோப்பு கல்மண்டபம்!

சங்கரன், சாமிநாதன், பானு, உபாசகர் என்று அவர்களின் கூட்டணி ஒன்றுகூடி இருந்தது. உபாசகர் அவர்கள் முன் குறுக்கும் நெடுக்கமாய் நடந்து கொண்டிருந்தார்.

"என்ன சாமி... செஸ் விளையாட்டுல செக் வைக்கற மாதிரி நமக்கெல்லாம் அந்த ருத்ரேஸ்வர் செக் வெச்சுட்டானா?"

"கிட்டத்தட்ட அப்படித்தான்... ஆனா..."

"என்ன ஆனா, ஆவன்னா... செக் வெச்சுட்டாலே அவன் கில்லாடிதான்."

"எதிரி இங்க பலசாலி. அவ்வளவுதான். உடனே கில்லாடி, அப்படி இப்படின்னு வாய் ஜாலம் பண்ணாதே,"

"கோபத்தை விடுங்க. இன்னிக்கு அவன் தாசி பங்களாவுக்குள்ள நுழைய முடிவு செய்துட்டான் வீணையும் அங்கதான் இருக்கு. ஒரு வேளை அவன் கொண்டு போய்ட்டா என்ன பண்றது-அதுக்கு பதில் சொல்லுங்க.."

"உள்ளேயே நுழைய முடியாது. அப்புறம் எங்க கொண்டு போறது."

"இது உங்க நம்பிக்கையா, தீர்மானமா?"

"இரண்டுமில்லை. அம்பாள் சொன்னது. அவ சொன்னா பொய் ஆகுமா?"

"அம்பாள் இப்ப உங்ககூடப் பேசற அளவுக்கு வந்துட்டாளா?"

"கிண்டலா. அவ உன்கூடகூடத்தான் பேசறா. ஆனா, உனக்குத்தான் புரியல."

"உபாசகர் ஸ்வாமி... போதும்! நாம இப்ப விவாதம் பண்ற நிலைல இல்ல. அதுக்கு நேரமும் இல்லை. எந்தக் காலத்துல தெய்வம் நேர்லல்லாம் வந்து பேசி இருக்கு." சாமிநாதன் வெடித்தான்.

"போதும் நிறுத்து. இது சினிமா டயலாக்! உனக்கு பார்க்க சக்தி இல்லாம இருக்கலாம். தேவை இல்லாம இருக்கலாம். தகுதி இல்லாம இருக்கலாம். இப்படிப் பல காரணங்கள் உனக்கு பின்னால இருக்கறத மறந்துட்டு தெய்வம் நேர்ல வர்றது கிடையாதுன்னுல்லாம் பேசாதே..."

"சரி... எனக்குதான் ஒரு எழவும் கிடையாது. நீங்கதான் சதா மந்திரம் சொல்ற உபாசகர் ஆச்சே. உங்களுக்கு காட்சி தந்தாளா அவ?"

"அதத்தான் சொன்னேன். ஆனா, நீதான் நம்பல..."

சாமிநாதன் திணறினான். "ஸ்வாமி... என்ன பேசறீங்க? சாமி கூட பேசற சக்தி உங்களுக்கு இருக்கும்போது, சாமியே உங்ககூட இருக்கும்போது இந்த ருத்ர வீணை பத்தி நாம எதுக்கு அநாவசியமா கவலைப்படணும்...?" இது பானுவின் மடக்கல்.

"சரியான கேள்விதான். உங்க கிட்ட இனி எதையும் ஒளிச்சு மறைச்சு பேசப்போறதில்ல. நான் வெளிப்படையாவே வர்றேன். இப்ப ஊர் பூரா எல்லாரும் கேட்டுண்டு இருக்கற ஒரே கேள்வி யார் ருத்ரன்கறதுதான் நம்மள்ல ஒருத்தர் கூட ருத்ரனா இருக்கலாம்கறதுதான் என் நம்பிக்கை. அதே சமயம் அந்த ருத்ரேஸ்வர் தன்னை ருத்ரனாக்கிக்க முயற்சி செய்யறான். அதை நாம தடுத்தே தீரணும். ஏன்னா அவன் ஒரு அசுரன்..."

"நடக்கறதுதான் நடக்கும்னு பேசிக்கிட்டே நம்ம விருப்பப்படி எல்லாம் நடக்கணும்னு ஆசைப்படற- குழப்பமான-

தெளிவே இல்லாத மனுஷங்க நாம எல்லாம்... சாமி... நீங்க உங்ககிட்ட அம்பாள் பேசின விஷயத்தை சொல்லுங்க... எங்க, எப்படிப் பேசினா?"

-சாமிநாதன் திரும்பவும் அழுத்தமாக மையத்துக்கு வந்தான். உபாசகர் அதைக் கேட்டு கண்களை அகலத் திறந்தார். ஒரு பெருமூச்சும் விட்டார். பிறகு சுற்றுச் சூழலை ஒரு பார்வை பார்த்துவிட்டு, "சங்கரா...! அதிர்ச்சியோ சந்தேகமோ கொள்ளாதே. அம்பாள் வேற எங்கயும் இல்லை. உன் தங்கை மைதிலி ரூபத்துலதான் வந்துருக்கா..." என்றார். சங்கரன் முகம் சுருங்கியது.

"அவ இப்ப பேசுவா. அவ இப்ப ஊமை இல்லை. இதையும் தெரிஞ்சுக்கோ..."

அது அங்குள்ள ஒவ்வொருவரையுமே அடுத்த கட்ட அதிர்ச்சிக்கு அழைத்து சென்றது.

"என்ன.. திகைப்பா இருக்கா? அம்பாள் வந்துட்டா விஷமே அமிர்தமாயிடும். ஊமைதானா பேசமாட்டா?"

"சரி... அம்பாளோட இந்த பிரசன்னம் எதுக்கு?"

"நம்ம அறிவால அதை ஒரு அளவுக்குதான் புரிஞ்சுக்க முடியும். ஒண்ணு மட்டும் நிச்சயம். ருத்ர வீணைக்கான ருத்ரன் வரும்போது சக்தி அம்சமான அவளும் இங்க இந்த மண்ணுல பிரசன்னமாகணும்னு இருக்கோ என்னவோ?"

"என்னென்னவோ சொல்றீங்க. ஒரு விஷயம் மட்டும் ஒத்துக்கற மாதிரி இருக்கு. நமக்கு இருக்கிற புத்தியால இங்க நடக்கறதை எல்லாம் எடை போட்டா குழப்பம்-இல்லேன்னா கேள்விதான் மிஞ்சம்."

"அது ஒரு பக்கம்... அம்பாளே இங்க இருக்கும்போது நாம எதுக்கு இப்படிக் கூடிப் பேசணும்? கவலையும் படணும்?"

"அதுவும் சரிதான். அதே சமயம் அவ சொன்னதை நாம கேட்க வேண்டாமா?"

"என்ன சொன்னா அந்த அம்பாள்."

"பைரவ மூர்த்தியும் பிரசன்னமாகப்போறதா சொன்னா."

"என்ன ஸ்வாமி என்னேன்னமோ சொல்றீங்களே..."

"ஒண்ணுதான் சொன்னேன். அதாவது பைரவமூர்த்தி பிரசன்னம்னு. அது எப்படின்னு பார்ப்போம். எதுக்குன்னும் பார்ப்போம்."

"ஏன் இப்படி எங்களை குழப்பறீங்க. இந்த அம்பாள், பைரவ சாமி எல்லாம் விடுங்க. அவங்க என் எதிர்க்க வந்து பேசாத வரை உங்க பேச்சு எங்களுக்கு சந்தேகத்துக்குரிய ஒன்றாகத்தான் இருக்கும். என்வரைல இன்னிக்கு அந்த ருத்ரேஸ்வர் தாசி பங்களாவுக்குள்ள புகுந்து வீணையை எடுக்கப் போறேன்னு சொல்லிட்டான். அதை நான் வேடிக்கை பார்க்க மாட்டேன். அது எங்க ஊர் சொத்து. சிவன்கோவில் சொத்து. இந்த ஊரை விட்டு அது வெளிய போகவே கூடாது. யாரா இருந்தாலும் சரி, அதைக்கொண்டு போக நான் விடமாட்டேன்."

-சங்கரன் உரத்தகுரலில் சபதம் போல சொன்னதைக் கேட்டு சாமிநாதனும் முன்வந்தான்.

"சபாஷ் சங்கரா... நானும் உன் கட்சி." என்றான்.

பானு தானும் அவர்கள் பக்கம் போய் நின்றாள்.

உபாசகர் அவர்களைப் பார்த்து சிரித்தார்.

"இந்த சமயத்துல நீங்க இப்படித்தான் நடந்துப்பேள்னா அதை யாரால மாத்த முடியும்?" என்று மட்டும் கேட்டுக் கொண்டார்.

மாந்தோப்பில் இளந்தென்றல். சில வினாடிகள் அவர்கள் நால்வரும் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு அதை எல்லாம் அனுபவித்தனர். அங்கங்கே பட்சிகளின் கூக்குரல்! எதுவும் பேசாமல் எதைப் பற்றியும் எண்ணாமல் அமைதியாக காற்று வாங்கிக் கொண்டு பட்சி ஜாலத்தை மட்டுமே ரசித்தால் என்ன என்றும்கூட ஒரு எண்ணம் அவர்களுக்குள்.

ஆனால், ஒரு இனம் தெரியாத மர்மம் மொத்த ஊரையே வளைத்திருக்கும்போது, அந்த மௌனமும் அமைதியும்கூட பயம் கலந்த ஒன்றாகத்தான் இருந்தது!

**ப**ட்டர் வீடு!

பூஜையில் இருந்தாள் மைதிலி. அருகே வந்து நின்றான் அசோகன். அப்படியே அமர்ந்தான் மௌனமாக அவளைப் பார்த்தான். அவளும் பார்த்தாள். கண்ணும் கண்ணும் சந்தித்துக் கொள்ள, மனதுக்குள் பேசிக் கொண்டனர்

**"நாள் நெருங்கி கிட்டே இருக்கு."**

**"ஆமாம். இன்னும் மூணரை நாள்தான்."**

"ருத்ரன் முந்தி வந்தாதானே நல்லது. இப்பவே தினசரி வீணை இசை ஆராதனைக்கு தடை ஏற்பட்டா நல்லதா? ஒரு நாள்கூட அந்த தோடீஸ்வரன் அதைக் கேட்காம இருக்கக் கூடாதே..."

"கேட்கும்... புதிய ருத்ரன் வந்துட்டான்."

"அப்பாடா... இப்பதான் எனக்கு நிம்மதியாச்சு. அப்ப சிவராத்திரிக்குதான் வருவான்கற அந்த நாடி வாக்கியம்..."

"சிவராத்திரியன்னிக்கு அவன் ஊரறிய வருவான். அதுதான் அதோட பொருள்."

"நல்லது... நிறைய தடைக்கட்டுகள் போடப் பட்டிருக்கே... அதெல்லாம்?"

"இன்னிக்கே எல்லா கட்டுகளும் எல்லாருக்கும் நீங்கும். புதிய ருத்ரன் இன்னிக்கு வாசிக்கப் போற ராகம் சுகத்தை யும், அமைதியையும், சாந்தத்தையும் கொடுக்கற ராகம்."

"எனக்கும் இனி பரிபூரண ஆத்ம சாந்தி கிடைக்குமா?"

"என்ன பாபா... உனக்குக் கூடவா குறை?"

"இது குறை இல்லை... என் கடமையை முழுசா செய்து முடித்த ஒரு நிறைவு எனக்கு வேணும்."

"நீயே ஒரு பரிபூரணன். முழுநிறைவானவன்தானே? உன் நினைவும் உன் வாழ்க்கையும் வரப்போற பலருக்கு வழிகாட்டணுமே. உன் சக்தி சித்த சக்தி. சித்த சக்திக்கு ஓய்வு ஏது? அது ஒரு தொடர்கதை."

"சந்தோஷம். எல்லாம் நல்லவிதமா நடந்து முடியட்டும். இந்த உடம்பு அந்த திலகத்துக்கு வேணுமாம். அதாவது இந்த உடம்புக்கு உரிய அசோகனை அவ சொந்தம் கொண்டாடறா. அசோகனும் போகட்டும். நடக்கறதை பார்க்கட்டும். நான் உத்தரவு வாங்கிக்கறேன்."

"போய்வா. ஒரு மகானா உன் சமாதி எப்பவும் வழி காட்டட்டும். தெய்வ சான்னித்யத்துக்கு மத மாச்சரியங் கள் ஒரு தடை கிடையாதுங்கறதுக்கு நீ ஒரு உதாரண புருஷன்!"

"எனக்கான மத நெறிதானே எனக்கு உயர்ந்ததா இருக்க முடியும். அதுல இருந்து அணுவும் விலகாம நான் செயல்படுவேன்."

"சந்தோஷம். ஒரு சித்தனுக்கும் ஒரு தேவதைக்குமான இந்த சந்திப்பும் மௌனத்துக்குள் நடக்கற இந்த பேச்சு

**வார்த்தைகளும் காலம் உள்ள அளவும் நிலைச்சிருக் கட்டும்..."**

**"அப்ப நான் உத்தரவு வாங்கிக்கறேன்... அல்லாவின் அருளால் எல்லாமே சிறக்கட்டும்."**

**"நிச்சயம் சிறக்கும்."**

-மௌனப் பேச்சு வார்த்தை முடிந்து அசோகன் புறப்பட்டான். வாசலைக் கடந்து தாசி பங்களா நோக்கி நடக்க ஆரம்பித்தான். போகும் வழியிலேயே மெல்லிய வீணை நாதம் கேட்கத் தொடங்கி விட்டது.

அங்கங்கே போவோர் வருவோர்கூட ஒரு வினாடி அதைக் கேட்டு நின்று பின் புறப்பட்டனர். அசோகனும் நின்றான். அண்ணாந்து வானைப் பார்த்தான். புன்னகைத்தான். கைகளை விரித்து வானம் நோக்கினான். அந்தி நோக்கி சரிந்தபடி இருந்த சூரியப் பந்துக்குள் அவன் பல இறை எழுத்துகள் தோன்றுவதைப் பார்த்தான். அப்படியே மண்டியிட்டான்.

உலகப் பொது மொழியான, பொது சக்தியான இசைவடிவம் நீக்கமற எங்கும் பரவ ஆரம்பித்தது. ஈ எறும்பு முதல் பறவை, மிருகம் வரை பாரபட்சம் இன்றி அந்த நாத வெள்ளத்தில் மூழ்கி மிதந்தன. எங்கும் அமைதி. பேரமைதி! வீணையின் போக்கில் பல இறை வாசகங்களை அது தன் தந்தி மொழியில் போதிக்கிற மாதிரிகூட அவனுக்கு தோன்றி யது. அப்படியே நிலத்தின் மிசை அவன் தலை தொட்டுச் சரிந்தது.

இங்கே இப்படி என்றால் சுந்தராம்பாள் இல்லத்தில் வேறு காட்சி. கொடி முல்லைப்பூக்களை கோத்துக் கட்டிக் கொண்டிருந்தவள் அப்படியே விக்கித்தாள். வடிவாம்பாளும் அருகில் வந்து நின்றாள். திலகம் முதல் ராமச்சந்திரன், விமலா என்று எல்லோருமே ஒன்றுகூடினர்.

"சுந்தரம்... இப்ப யார் வாசிக்கறது. ருத்ரன் வந்துட்டானா?"

"அப்படித்தான் நினைக்கறேன்..."

"சிவராத்திரின்னுதானே சொல்லப்பட்டிருக்கு"

"அது அவன் ஊரறிய தரிசனம் தரப் போற நாள் அதுக்காக அவ்வளவு நாள் ஆராதனை நடக்காம போகலாமா?"

"ஓ... அப்படி ஒரு விஷயம் இருக்கா?"

-அவர் முணுமுணுக்க, சுந்தராம்பாள் கண்களில் ஆனந்தக் கண்ணீர்.

வழக்கத்திற்கு மாறாக ராக வெள்ளத்திலும் ஒரு ஹிந்துஸ்தானியின் வெளிப்பாடு!

**கோ**விலில் பட்டர் முதல் பக்தர்கள் வரை அங்கங்கே நின்று காதைக் கொடுத்திருந்தனர் ஊருக்குள் நுழைந்து கொண்டிருந்த கர்ணமும் இசைகேட்டு தன்னை மறந்திருந்தார். அவர் வந்து கொண்டிருந்த வில்வண்டி மாடுகளின் கழுத்து மணிச் சப்தம் அந்த ராகத்துக்கு இணையொலி போல கேட்டது.

அருகில் அவர் மனைவி அன்னபூரணி "அன்னம்... ஊருக்குள்ள நுழையும்போதே ராக ஆலாபனை. எவ்வளவு சுகமா இருக்கு பாத்தியா... திருப்பதில எதையோ இழந்த மாதிரி இருக்குன்னு சொல்லிண்டே இருந்தியே... அது இதைத்தான்..."

கர்ணம் கொடுத்த விளக்கத்திற்கு தலையாட்டி சம்மதம் சொன்னாள் அன்னபூரணி...

"நல்லவேளை சிவராத்திரிக்குள்ற எப்படியும் திரும்பணும்னு நினைச்சோம். அதே மாதிரி வந்துட்டோம். ஊரே பரபரனு இருக்கிறதை பார்த்தேளா?" என்று அவள் கேட்டபோது போலீஸ் ஜீப் ஒன்றும் அவர்களைக் கடந்து போனது.

கர்ணம் முகத்தில் இதனால் ஒரு கேள்வி விழுந்தது.

"என்ன இது நம்ம ஊர்க்குள்ற போலீஸ் ஜீப்?"

**தோ**ட்டத்து குடிசையில் தியானத்தில் அமர்ந்து விட்டிருந்த ருத்ரேஸ்வர் காதுகளிலும் அந்த வீணை இசை பாய்ந்து கொண்டிருந்தது.

மந்த்ரிணிதான் ஏராளமான அதிர்ச்சியோடு இருந்தாள். தியானம் கலைந்து கண் திறந்த ருத்ரேஸ்வரைப் பார்த்தாள்.

பார்வையே 'ருத்ரன் வந்துவிட்டான் நீ என்ன செய்யப்போகிறாய்?' என்றுதான் கேட்டது.

"இது... இது ருத்ர வீணை இசையா?"

"சந்தேகமா... அது ஒண்ணுதானே தொலைதூரத்துல ஒலிக்கற ஒரு சப்தம் போல அமைதியாவும், அழுத்தமாவும் காதுல விழும்? இந்த பரவசத்தை வேற ஏதாலயாவது தரமுடியுமா?"

"உண்மைதான்... அப்ப ருத்ரன் வந்துட்டான்!"

"வந்தது மட்டுமில்ல... நீங்கதான் ருத்ரன்னு ஒரு ஓரத்துல உங்களுக்கு இருந்த நம்பிக்கையும் இதனால தவிடு பொடியாகிடுச்சு..."

-மந்த்ரிணி சற்று தொனி மாறிப் பேசினாள். 'உன்னால் இனி ஒன்றும் செய்ய முடியாது' என்று அவள் கேலி செய்கிறாற்போல கூட இருந்தது. "இல்ல மந்த்ரிணி... நீ என்ன நினைக்கறேன்னு எனக்கு தெரியும். அந்த ருத்ரன் யாரா இருந்தாலும் சரி. அவன் கதை இன்னிக்கு முடிஞ்சிடும். நான் தான் இனி ருத்ரன். இந்த ஊரையே சிவராத்திரி அன்னிக்கு ஏமாத்தப் போற ருத்ரன்!"

-கர்ஜித்தான் ருத்ரேஸ்வர்!

**போ**லீஸ் ஜீப் கல்யாணசுந்தரம் வீட்டு முன் நின்றது. உள்ளிருந்து சப்-இன்ஸ்பெக்டர் இறங்கி கல்யாணசுந்தரம் வீட்டினுள் நுழைந்தார். அவரைப் பின்தொடர்ந்தார்-அதே ஜீப்பில் இருந்து இறங்கிய தாசில்தார்.

அவர்கள் வருகையைப் பார்த்ததுமே ரங்காயிக்கு புரிந்துவிட்டது. கையை கோணலாக வைத்துக் கொண்டு ஓரளவு நடமாடிக் கொண்டிருந்த கல்யாணசுந்தரம் பேச முடியாத ஒரு குறையில் மட்டும்தான் இருந்தார்.

நாதஸ்வரத்தை அதன் உறையில் இருந்து பிரித்து வாயில் வைத்து சற்று சாதகம் செய்வோம் என்று அவர் எண்ணி அதற்காக முயன்று கொண்டிருக்க, எதிரில் சென்று இருவரும் நின்றனர்.

தீர்க்கமாக பார்த்தனர். கல்யாணசுந்தரத்துக்கு கைகளில் உதறல். ரங்காயி ஓடிவந்தாள்.

"வாங்க சாமி வாங்க... உக்காருங்க."

"இருக்கட்டும்மா நாங்க எதுக்கு வந்துருக்கோம்னு தெரியுமா?"

"தெரியுங்க... அந்த புதையல் பானை விஷயமாதானே?"

"ஆமாம்... அந்த புதையல் தங்கம் கிடைச்சிச்சா? உங்களுக்கான கெடு முடியப்போகுது."

"அது... அது..."

"சமாதானமே சொல்ல வேண்டாம். நாளைக்கு நாங்க வரும்போது ஒண்ணு அந்த தங்கம் இருக்கணும், இல்லே உங்க

வீட்டுக்காரரைக் கைது செய்யறதத் தவிர வேறவழி இல்லை... கலெக்டர் உறுதியா சொல்லிட்டார்..."

-அவர்கள் இருவரும் வந்த வேகத்தில் திரும்பினர் ரங்காயி கண்களில் நீர் சரசரவென்று பெருகியது. கல்யாணசுந்தரமும் அப்படியே சோர்ந்து விட்டார். அப்போது சாமிநாதனும் உள்ளே நுழைந்து கொண்டிருந்தான். நெற்றி கொள்ளாதபடி திருநீறு. முகத்தில் ஒருவித தெய்வீகக் கலை.

"சாமிநாதா.."

"தெரியும்மா போலீஸ் வந்துட்டுப் போறதைப் பார்த்தேன். கவலைப்படாதேம்மா. எல்லாம் நல்லபடியாயிடும்."

"என்னடா சொல்றே... ஆமா இது என்னடா சாமியார் மாதிரி..'

"நான் சாமியாரா...? தப்பா சொல்றம்மா. நான் சராசரி மனுஷன்... இன்னும் நான் எவ்வளவோ சாதிக்க வேண்டியது இருக்கு..."

"ஏண்டா.. உங்கப்பாவுக்கு இப்ப ஏற்பட்டுருக்கற நெருக்கடி தெரியும்தானே... பதட்டமே இல்லாம பேசறியேடா?"

"போம்மா... போய் அந்த சுந்தராம்பாம்மாவைப் பாரு. அவங்க நிச்சயம் காப்பாத்துவாங்க..."

"அவங்கதான் அருள்வாக்கு கேக்கறத நிறுத்திட்டாங்களே..."

"அது ஊருக்கு... உனக்கு இல்லம்மா.." சாமிநாதன் பதில் சொன்ன விதமே தனியாக இருந்தது! கல்யாணசுந்தரம் அப்படியே நொறுங்கிப் போய் உட்கார்ந்திருந்தார். சாமிநாதன் அவரைப் பார்த்து சிரித்தபடியே, "உங்களுக்கும் இன்னிக்கே எல்லாம் சரியாயிடும்" என்றான் அவன் சொன்னதன் உட்பொருள் அவர்கள் ஒருவருக்கும் விளங்கவில்லை.

**க**ர்ணம் வீட்டை அடைந்தபோது வீடு திறந்து கிடந்தது. உள்ளே கணேசன் இல்லை. வேலையாட்களையும் காணவில்லை. முன்பாவது சர்ப்பத்தின் காவல் இருந்தது. இப்பொழுது தான் அதுவும் போய் ஏட்டுக்கட்டும் போய் விட்டதே? கர்ணம், "கணேசா கணேசா" என்று குரல் கொடுத்துக் கொண்டே உள்ளே சென்றார் பின்தொடர்ந்தாள் அன்னபூரணி.

'ஆ' வென்று வீடு திறந்து கிடந்தது. ஆனால் பொருட்கள் அது அது அங்கங்கே இருந்தன.

"என்ன இது... வீட்டுக்கு காவலா இவன் இருப்பான்னு பார்த்தா எங்க போய்ட்டான் இவன். கணேசா கணேசா..." அவர் குரல்தான் திரும்ப எதிரொலித்தது.

"உன் பிள்ளை ஆனாலும் ரொம்ப பொறுப்பா நடந்துக்கறான். இது கிராமமாபோச்சு. இதுவே நகரமா இருந்தா இப்படிப் போட்டுட்டு போயிருந்தா என்னாயிருக்கும். யோசிச்சுப் பார் "

-புலம்ப ஆரம்பித்துவிட்டார். நல்லவேளை கணேசன் வந்து கொண்டிருந்தான். கூடவே இரண்டு பேர்! அவர்கள் கைகளில் மண்வெட்டி, கடப்பாரை.

உள்ளே நுழைந்தவன், அப்பா அம்மாவைப் பார்த்ததும் வாய் பிளந்தான்.

"அம்மா... அப்பா... இப்பத்தான் வர்றேளா?"

"ஆமாம். நீ எங்கடா வீட்டைத் திறந்து போட்டுட்டு போய்ட்டே....?"

"இதோ இவாளை கூட்டிண்டு வரத்தான்.

"இவா எதுக்குடா?"

"அது.. நம்ம பட்டராத்துல மைதிலியக்கா இருக்காளோல்லியோ..?"

"அவளுக்கென்ன?"

"அந்த அக்கா ஒரு வில்வ மரக்கன்னையும் தென்னங் கன்னையும் கொடுத்து நம்ம ஆத்து கொல்லைல நடச் சொன்னா. அதுக்கு குழி தோண்டத்தான்..."

"அவ எதுக்கு உன்கிட்ட மரக்கன்னு தரணும். அதத் தோண்ட இவா எதுக்கு...? ஒரு மரக்கன்னை உன்னால நடமுடியாதா?"

"இல்லப்பா... பாத்ரூம் தண்ணி சரியா போகாம தேங்கி நின்னு குட்டை மாதிரி இருக்கு. ஒரே கொசு வேற... அதுக்காக ஆழமா குழி தோண்ட வேண்டியிருக்கு. அதான் இவாளை கூட்டிண்டு வந்தேன்.." என்றவன் விறுவிறுவென்று நடந்தான். அவர்களும் பின்தொடர்ந்தார்கள் கர்ணத்திற்கும் அன்ன பூரணிக்கும் அவன் செயல் ஒரு நம்ப முடியாத ஆச்சரியமாக இருந்தது.

'திருப்பதி பயணம் எப்படி இருந்தது?'

'பெருமாள் சேவை ஆயிற்றா?' என்று ஒரு கேள்வி அவனிடம் இல்லை.

"என்னடி இது... இவன் நம்ம பிள்ளைதானா?"

"எனக்கும் அதான் சந்தேகம். கழுத்துல புதுசா ஒரு ருத்ராட்ச மாலை வேற... பட்டர் பொண்ணு எப்ப இருந்து மரக்கன்னெல்லாம் கொடுக்க ஆரம்பிச்சா? . ஒண்ணுமே புரியலியே..."

- இவர்கள் புலம்பல் இப்படி இருக்க-தோட்டத்தில் குழி தோண்டும் பணி தொடங்கியிருந்தது. கடப்பாரை குழி தோண்ட, மண்வெட்டி அள்ளி எறிய, கணேசன் 'உம் சீக்கிரம்' என்று துரிதப்படுத்த-கச்சிதமாக அன்று சதாசிவ சாஸ்திரிகள் தாழிப்பானைக்குள் அடங்கிய அதே இடம்!

மண்வெட்டிகள், அன்று உள் விழுந்து மூடிய மண்ணை கிட்டத்தட்ட முந்நூறு ஆண்டு காலகதிக்குப் பிறகு அள்ளி அள்ளி வெளியே எடுத்து ஓரமாய் ஒரு குறுமலை போல குவித்தன! நடுவில் ஒரு இடத்தில் 'நொட்' என்று ஒரு சப்தம் பேட்டது. கணேசனின் கவனமும் திரும்பியது. கூர்ந்து பார்த்தான். தாழிப் பானையின் ஒரு பாகம் தெரிந்தது. அடுத்த மண்வெட்டி வீச்சில் அந்த பாகம் நொறுங்கிப் போக உள்ளே ஒருவர் நுழையலாம் என்கிற மாதிரி ஒரு ஓட்டை விழுந்தது. மண்வெட்டியால் தோண்டியவன் அப்படியே பின்வாங்க, கணேசன் அங்கே அப்படியே மண்டியிட்டு அந்த துவாரம் வழியாக உள்ளே பார்த்தான்.

ஒரு எலும்புக்கூடும் சில ஏட்டுக் கட்டுகளும் அவன் கண்ணில் பட்டு அப்படியே ஆச்சரியமும் அதிர்ச்சியும் ஏற்படும்போது, கச்சிதமாக அவர்கள் வீட்டினுள் நுழைந்து கொண்டிருந்தார் உபாசகர்.

"அப்பாாாா...!" கணேசனின் அலறல் உள்ளிருந்த கர்ணத்தை இழுக்க, உபாசகர் காதிலும் விழுந்து அவரும் அவர்களுடன் சேர்ந்து கொல்லைக்கு ஓடி வந்தார். கணேசன் ஓரளவு வியர்ந்துவிட்டிருந்தான்.

ஆள்காட்டி விரலை நீட்டி தாழிப்பானையைக் காட்ட, அவர்கள் பார்வையும் உள்ளே சென்றது. உபாசகர் மட்டும் குறுஞ்சிரிப்பு சிரித்தார் மைதிலி சொன்னது காதில் எதிரொலித்தது.

'கர்ணம் ஆத்துக்கு போங்கோ. அங்க உங்களுக்கு ஒரு கடமை இருக்கு..!' - இதுதானா அந்தக் கடமை?

**வி**மலா அழுது வடிந்து கொண்டிருந்தாள். சுந்தராம்பாள் ஒரு மூலையில்... திலகம் கடற்கரை கண்ணகி சிலை போல தலைவிரிகோலமாக நின்றுகொண்டிருந்தாள். ராமச்சசந்திர னுக்கு அழுதே பழக்கமில்லை.

அவரே அழுது கெஞ்சிக் கொண்டிருந்தார்.

"திலகம்... உன் பேர்ல பேங்க்ல பத்து லட்ச ரூபாய்கூட போடறேன். தயவுசெய்து என் பிள்ளையை மட்டும் கேட்காதே.."

"பணம் என்க்கு கால் தூசுக்கு சமம். உயிரும் உறவும்தான் எனக்கு வேணும்."

"அந்த உறவை எங்க கூட இருந்து அனுபவி. எதுக்கு அவனை கூட்டிக்கிட்டு வெளிய போக நினைக்கறே?"

"அது என் சொந்த விஷயம். அதுக்கு நான் உங்களுக்கு விளக்கம் சொல்ல வேண்டிய தேவையில்லை..."

"திலகம்..."

"ஸ்ச்சூ."

- அவர்களின் வாக்குவாதத்துக்கு நடுவில் பானு சூறாவளி போல் உள்ளே புகுந்தாள். "அசோகனை உனக்குக் கொடுக்க முடியாது. நீ யார்கிட்ட போய் என்ன சொல்லணுமோ சொல்லிக்கோ. என்ன செய்யணுமோ செஞ்சிக்கோ போடி..."

"வேண்டாம். ஏற்கெனவே இந்த ஊர்ல ஒரு குடும்பம் புதையல் விஷயத்துல சிக்கிக்கிட்டு போலீஸ்காரங்க வந்த வந்து போய்க்கிட்டிருக்காங்க. என் விஷயத்துலயும் அவங்களை வரவெச்சுடாதீங்க."

"சரிதான் போடி. என் தம்பியை நாங்க உன்கிட்ட தவிட்டுக்கெல்லாம் விற்கலை. அப்படியே வித்திருந்தாலும் அதுக்கு யார் சாட்சி? போ.. போய் கம்ப்ளைண்ட் பண்ணு. நாங்க பாத்துக்கறோம்."

-பானுவிடம் ஆவேசம் கொப்பளித்தது

திலகத்துக்கே அவள் எதிர்ப்பு ஆச்சரியமளித்தது. நிஜமாலுமே அசோகன் கிடைக்காமல் போய்விடுவானோ என்று தோன்றிற்று.

ஆனால், அவளது எதிர்ப்புக்கு வேலையே இல்லாதபடி அசோகன் அங்கே பிரசன்னமாகி திலகத்திடம் சென்று நின்றான்.

ஸ்டைலாக கல்லூரி மாணவன் போல் நின்றவன் "திலகம்மா! வா போகலாம். இவங்க இல்லேன்னாலும் நான்தான் இனி உன் மகன். கிளம்பு..." என்று அனைவருக்கும் அதிர்ச்சியளித்தான்.

"டேய், டேய்! போகாதே நில்... விமலா கத்த, பானுவும் வழிமறிக்க, ராமச்சந்திரன், சுந்தராம்பாளிடம் சென்று கேட்டார்.

"சுந்தரம்... இங்க என்ன நடக்குது?"

"நல்லதுதாங்க நடக்குது. விட்ருங்க. அசோகன் நல்ல படியா திரும்பி வருவான். திலகம் இப்ப திலகம் இல்ல. அவ வசிய கட்டுக்குள்ள இருக்கா."

"வசியக்கட்டா... அப்படின்னா?"

"அது ஒரு குறுக்கு வழி. பாவம் அவ."

"அவளை வசியம் பண்ணினது..?"

"புதுசா இந்த ஊருக்கு ருத்ர வீணையைத் தேடி வந்திருக்கற அந்த ருத்ரேஸ்வர்."

"அய்யோ... அவனுக்கு இவன் எதுக்கு?"

"தப்பா கேக்கறீங்க. இவனுக்குத்தான் அவன் தேவை..."

"உனக்கு பயமா இல்லையா?"

"இப்பதான் நான் தெம்பாவே இருக்கேன்..."

"சுந்தரம்... நீ 'நான் இனி பழைய சுந்தரம் இல்லே'ன்னே... ஆனா, இப்ப நீ பேசறத பார்த்தா நீ மாறவே இல்லைங்கற மாதிரி தான் எனக்குத் தோணுது."

"எங்கங்க... புதுசா வந்துட்ட ருத்ரன்தான் என்னை பழையபடி மாத்திட்டானே?"

"அப்ப அது யார்னு உனக்கு தெரியுமா?"

"வேண்டாங்க... இதுக்கு மேல இதை பத்தி எதுவும் கேக்காதீங்க. சிவராத்திரி அன்னிக்கு நான் சொல்லாமலே உங்களுக்கு எல்லாம் தெரிஞ்சிடும்." - சுந்தராம்பாள் சொல்ல, விமலா கிட்டே வந்து 'அக்கா' என்று கட்டிக் கொண்டு அழ, பானுவும் சுந்தராம்பாளைப் பார்த்து, "அவளுக்கு கொஞ்சம்

கூட நன்றியில்லை. நீ ஏன் அவளை தடுக்கலே?" என்ற கேட்க, "நல்லது நடந்துகிட்டு இருக்கு... தடுக்கச் சொல்றியா?" என்று சுந்தராம்பாள் திருப்பிக் கேட்டாள்

"அம்மா... உனக்கு பேர் சுந்தராம்பாள்னு வெச்சதுக்கு பதிலா புதிராம்பாள்னு வெச்சிருக்கலாம்." சீறினாள் பானு. அதற்குமேல் அங்கே வாக்குவாதம் வலுக்காதபடி ஒரு அதிசயக் காட்சி போல ரங்காயியின் வருகை அவர்களை அமைதிப் படுத்தியது.

கல்யாணசுந்தரத்தின் மனைவி ரங்காயி, சுந்தராம்பாளை மிக மதிப்பவள்தான். ஆனால், இப்படி வீடு தேடியெல்லாம் வந்ததில்லை. இன்று வந்திருக்கிறாள் என்றால்..?

"அம்மா... போலீஸ்காரங்களோட தாசில்தாரும் வந்துட்டு போனாங்க. நாளைக்கு புதையல் பானையை எடுத்தபடி ஒப்படைக்கலேன்னா நிச்சயம் அரெஸ்ட் பண்ணிடுவோம்னு சொல்லிட்டாங்க. எனக்கு கையும் ஓடலை... காலும் ஓடலை. அதான் உங்கள பார்த்து சொல்லிட்டு போக வந்தேன்..." -என்று கண்களில் நீரோடு ரங்காயி சொல்லவும், சுந்தராம்பாளுக்கு அடுத்த நொடியே மைதிலி நினைப்புதான் வந்தது. அப்படியே "கவலைப்படாதீங்க... எல்லாம் சரியாயிடும்..." என்கிற பதிலும்...

பட்டர் வாசலையே பாத்தபடி நின்றுகொண்டிருந்தார். சங்கரன் அவரிடம் "யாருக்காக இந்த தவம்?" என்ற கேட்கவும், "சஸ்பென்ஸ்..." என்று சொல்லி சிரித்தார்."இதுல என்னப்பா சஸ்பென்ஸ்... யாராவது சாப்பிட வரேன்னு சொல்லி யிருக்காளா?"

"ஆமாம்..."

"யாரு?"

"உன் தங்கைக்கு கிடைச்சிருக்கற புது மாப்ளை."

"யாருப்பா அது?"

"அவ அதிர்ஷ்டக்காரிடா. மாப்ளை வரவும் எல்லாரை யும் வெச்சுண்டு சொல்லலாம்னு பார்த்தா ஆளைக் காணோமே..."

"யாருப்பா அது... சட்டுன்னு சொல்லுங்கோ" சங்கரனிடம் பதட்டம் தொற்றிக் கொண்டது. உள்ளே காயத்ரி, மைதிலி காதிலும் அவர் பேசியது விழுந்தது.

“புதுசா நம்ம ஊருக்கு வந்துருக்காரே... அந்த காசி பண்டிதர் ருத்ரேஸ்வர் சர்மான்னு... அவர்தான்!”

பட்டர் ருத்ரேஸ்வர் பேரைச் சொன்ன மறுநொடி பொளேர் என்று கன்னத்தில் அறைவிழுந்த மாதிரி இருந்தது.

மைதிலி மட்டும் அதிராமல் அதைக் கேட்டு சிரித்தாள்.

“அப்பா.. என்னப்பா இது? அந்த நபரைப் பத்தி உங்களுக்கு தெரியுமா?”

“ஏண்டா தெரியாம? பெரிய பண்டிதர். நிறைய சொத்து பத்து. எல்லாம் நான் பேசிட்டுதான் முடிவு பண்ணியிருக்கேன். அவ்வளவு எதுக்கு...? ஸ்வாமி கிட்ட உத்தரவு கேட்டேன். நல்ல உத்தரவு வந்துடுத்தே...” பட்டர் சொல்லவும், ஒரு மாதிரி விஷமமாக சிரித்தபடி அவரை நோக்கி வந்தான் அதுவரை கண்ணில் பட்டிராத அந்த மணிகண்டன் என்கிற சிறுவன்.

“தோ... இவன்தான் பூக்கட்டி போட்டப்ப அதை எடுத்தவனே... கேட்டுப் பாரு... மணிகண்டா சொல்லுடா...”

“அப்பா...”

“என்ன அப்பா... துபாய் வரன் மாதிரியே இதுவும் தப்பா போய்டும்னு பயப்படறியா?”

“அதைவிட இது...” சங்கரன் மோசம் என்று சொல்ல வாயெடுக்கும்போது சுந்தராம்பாள் வந்து நின்றாள்.

“வா சுந்தராம்பா... நல்ல நேரத்துலதான் வந்துருக்கே. மாப்ள வர்ற நாழி. நீயும் வந்துட்டே. எல்லாமே கூடி வர்றது.”

“மாப்ளையா?” - சுந்தராம்பாள் ஆச்சரியமானாள்.

“ஆமாம்... வேளை வந்தா எல்லாம் தேடி வரும்னு சொல்வாளே... அது இதுதான்...”

“அம்மா... இவர் மாப்ளையா பார்த்துருக்கறது யார்னு தெரிஞ்சா நீங்களே ரொம்ப அதிர்ச்சி அடைவேள்...”

சங்கரன், ருத்ரேஸ்வர் பேரைச் சொல்லாமல் வருத்தப்பட, பின்னால் தூணில் மைதிலி கரண்டியால் தட்டும் சப்தம்!

சங்கரன் திரும்பிப் பார்த்தான்.

அவள் அருகில் அழைத்தாள். சுந்தராம்பாளையும்.

இருவரும் அவளைத் தொடர்ந்தனர்.

பட்டர் வாசலில் திண்ணையிலேயே அமர்ந்துவிட்டார்.

உள்ளே -

மைதிலி முதல் முறையாக சங்கரன் முன் வாயைத் திறந்தாள்.

"சங்கரா... கவலைப்படாம போய் உன் வேலையைப் பார். குறிப்பா இன்னிக்கு ராத்திரி அந்த ருத்ரேஸ்வர் பங்களாக்குள்ற நுழையக் கூடாது. அதுக்காக உன்னால என்ன செய்ய முடியுமோ அதை எல்லாம் செய். இங்க இந்த விஷயம் பத்தி கவலையே படாதே..."

"மைதிலி நீ... நீ பேசுவியா?"

"ஏன்... உபாசகர் சொன்னப்போ நீ நம்பலையா?"

"அது... அது..."

"தெய்வம் மனுஷ ரூபத்துல வந்தா அது நம்ப முடியாததாகவும் மலிவாவும் போயிடறதா...?"

"மைதிலி..."

"போ போய் சொன்னதைச் செய். தோடிபுரம் வரலாற்றுல இனி நடக்கப்போற ஒவ்வொரு நொடிக்குமே அர்த்தம் அதிகம்."

மைதிலியின் மிக அழுத்தமான பதிலும் பார்க்கும் விதமும் சங்கரனை குறுக்கின. அதற்குமேல் பேச அவனுக்கும் தோன்றவில்லை. ஓசைப்படாமல் அவளைப் பார்த்து கைகளைக் கூப்பியவனாக கிளம்பிப் போனான்.

சுந்தராம்பாளும் கைகளைக் கூப்பியிருந்தாள்

"என்ன சுந்தராம்பா... ரொம்ப கவலைப்படறே போல இருக்கே?"

"ஆமாம், ஒரு பக்கம் கல்யாணசுந்தரம் பிரச்சினை. மறுபுறம் அசோகனை கேக்கற அந்த திலகம். எல்லாத்துக்கும் மேலா புதுசா வந்திருக்கற ருத்ரன். இனிதான் வரப்போறான்னு எல்லாரும் நினைக்கும்போது இப்படி முந்தியே வந்து வீணையும் வாசிச்சா அதை எப்படி எடுத்துக்கறது?"

"ஓ... உனக்கே விடை தெரியாம என்கிட்ட பதில் கேட்டு வந்துருக்கியா?"

"வேற யார்கிட்ட போவேன்? இந்த ஊர்ல இப்ப ஒரு பெரிய நாடகத்தை நீ நடத்திகிட்டு இருக்கே. பலருக்கு பல வேஷம் கொடுத்திருக்கே... காட்சிகள் சீரா போய்க்கிட்டிருந்தவரை புரிஞ்சது. ஆனா, இப்ப என்னாலேயே எதுவும் புரிஞ்சுக்க முடியலை..."

"அப்ப முடிவுப் பகுதியை நெருங்கியாச்சுன்னு அர்த்தம்."

"அம்மா... போறும். எனக்கு இப்ப சில விஷயங்கள் ரொம்ப முக்கியம். கரியாப் போன புதையல் பானை திரும்ப தங்கமாகணும். பாவம், அந்த நாதஸ்வர வித்வான் குடும்பம்."

"எனக்கும் தெரியும் சுந்தரம். நீ இனி எப்ப போய் அதை எடுத்துப் பார்த்தாலும் அதுல கரி இருக்காது. தங்கம்தான் இருக்கும்..."

மைதிலி நொடிப் போதில் விஷயத்திற்கு வந்தாள். அப்படியே ஒரு சில வினாடிகள் சுந்தராம்பாள் கண்களுக்கும் அம்பிகை ரூபத்தில் கிரீட குண்டலங்களுடன் காட்சியளித்தாள். சுந்தராம்பாளுக்கு உடம்பெல்லாம் சிலிர்த்து விட்டது!

கைகளைக் கூப்பியவள் கண்களில் பொலபொலவென்று கண்ணீர்.

"போ... போய் ஆக வேண்டியதைப் பார். இன்னிக்கு இரவு ஒரு முக்கியமான இரவு. எங்கெங்கே, யார் யாருக்கெல்லாம் நான் பூட்டு போட்டிருந்தேனோ அவங்க அவ்வளவு பேருக்கும் இன்னிக்கு பூட்டு விலகிடும்."

"அந்த ருத்ரன்...?"

"யார்னு தெரிஞ்சுக்க உனக்கும் துடிப்பா இருக்கா?"

"எப்படி இல்லாம போகும்? முந்நூறு வருஷம் 12 ருத்ரர்களைத் தந்த வம்சத்துல இருந்து வந்தவ நான். அடுத்து அந்த பொக்கிஷத்தை பாதுகாக்கற பொறுப்புக்கும் இந்த ஊருக்குத் தொடர்ந்து சேவையும் செய்யப் போற அந்த பாவப்பட்ட மனிதனை நான் யார்னு தெரிஞ்சுக்கலாமா?"

"பாவப்பட்ட சந்ததி உன் சந்ததி... இனி வரப்போற சந்ததி புண்ணியம் செய்த சந்ததி..."

"என்னம்மா சொல்றே?"

"ருத்ர வீணை இனி ரகசியமா இருக்காது. அதோட பயணம் வெளிப்படையானது. கோஹினூர் வைரம் மாதிரி இதுவும் வெளிப்படையா தன் பயணத்தை தொடரும். இதோட இசைச் சேவையும் தொடரும்."

"சரி... அந்த புண்ணிய ஆத்மா யாரும்மா..."

"இதே ஊர்லதான் அவன் இருக்கான். இந்த உடம்பு கூட இனி அவனுக்குத்தான் சொந்தம்."

"அம்மா "

"ருத்ரனோட சேர்றதுதானே சக்திக்கு அழகு...

"அப்படின்னா... அப்படின்னா..."

"யாரா இருக்கும்கற கற்பனை எல்லாம் எதுக்கு? புறப்படு. பாவம் கல்யாணசுந்தரம்!"

"மைதிலி புன்னகை நெளிய சொன்ன விதத்தில் நல்ல வாத்சல்யம். சுந்தராம்பாளும் கிளம்பினாள்."

காயத்ரி ஒரு மேஜை அருகில் மோட்டு வளையைப் பார்த்தபடி அமர்ந்திருந்தாள். துறுதுறுவென்று சுற்றிச் சுற்றி வருபவள்! ஒரு குருடியாக அவளைப் பார்க்க பாவமாக இருந்தது. அப்படியே 'இரவு எல்லோர் பூட்டும் திறக்கப்படும்' என்று மைதிலி சொன்னது நினைவுக்கு வந்து கொஞ்சம் தெம்பாகவும் இருந்தது!

காயத்ரி அருகே சென்று தலையை வருடித் தந்தாள்.

"யாரு...?"

"நான்தான் சுந்தராம்பா காயத்ரி."

"அம்மா... நீங்களா?"

"நானேதான்... எப்படி இருக்கே?"

"எங்கம்மா... கண்ணில்லாத குருடியாயிட்டேன். ஊர்லயும் ஏதேதோ நடக்கறது. அக்கா ஒரு ஊமைன்னா நான் ஒரு குருடு. பாவம் அப்பா!"

"பைத்தியம். அக்காவும் ஊமை இல்ல. நீயும் குருடு இல்ல. தைரியமா இரு..." என்று தலையை வருடியவளாக வாசல் தாண்டும்போது எதிரில் ருத்ரேஸ்வர்! கூட அதிசயமாக மந்த்ரிணி இல்லை. அவனோ நின்று சிரித்தான்.

"மாப்ளை வாங்கோ வாங்கோ... பட்டர் மத்தாப்பானார். சுந்தராம்பாளும் அவனைப் பார்த்து சிரித்தாள்.

"சுந்தராம்பா இவர்தான் மாப்ளை. மைதிலியைக் கல்யாணம் பண்ணிக்க பரிபூரணமா சம்மதிச்சு என் வயித்துல பாலை வார்த்தவர்..."

"தெரியுமே... கோவில்ல பல தடவை பாத்திருக்கேனே" என்றான் ருத்ரேஸ்வரும்.

"எப்படியோ என் பேச்சை மதிச்சு என் அழைப்பை ஏற்று சாப்பிட வந்ததுல ரொம்ப சந்தோஷம். மைதிலியும் விதம்

விதமா பண்ணி வெச்சிருக்கா. அவளுக்கு ஒரே வெட்கம்." - பட்டர் கொஞ்சம் பொய், கொஞ்சம் மிகை என்று அள்ளிவிட்டார்.

"மாமனார் ஆத்துல சாப்பிடறதுக்கென்ன - இனி இது என் அகம்" என்ற ருத்ரேஸ்வர், சுந்தராம்பாளைப் பார்த்து "உங்க கொடி இறங்கிடுத்து. என் கொடி ஏற ஆரம்பிச்சிடுத்து" என்றான். பட்டருக்கு முதலில் புரியவில்லை. பிறகு சமாளித்தான்.

"அதாவது அம்மாவோட சேவைதான் முடிஞ்சு போய்டுத்தே. அதைச் சொன்னேன். மாப்ளையா இந்த ஊருக்கு வர்ற எனக்கு நிறைய பொறுப்பு இருக்கு இல்லையா?" என்று சுந்தராம்பாளையும் ஒரு குத்துப் பார்வை பார்த்தான்.

"ஆமாம்... இனி எல்லாமே உங்க பொறுப்புதான்..." என்று சிரித்தபடியே கூறியவள், "அருமையான தேர்வு. அம்பாள் யாரை தேடறாளோ அவங்களே வசமா வந்து வலைல விழும்போது விடமுடியுமா?" என்று இரு பொருள்பட பேசிவிட்டு பட்டரிடமும் அவனிடமும் விடைபெற்றுக் கொண்டாள்.

அவளுக்கே சற்று குழப்பமாக இருந்தது. 'மைதிலி இவனை எப்படிச் சமாளிக்கப் போகிறாள்? அந்த ருத்ரன் யாராக இருப்பான்?'

கேள்வியில் ஊசலாடியபடியே நடந்தாள்.

வீட்டினுள் உபசரணை ஆரம்பமாகி விட்டிருந்தது. இலை போட்டு பரிமாறும்போது ருத்ரேஸ்வர், மைதிலியையே குத்துப் பார்வை பார்த்தான். அவளும் அசராமல் பார்த்தாள் பட்டர் மட்டும் தொண தொணவென்று பேசிக் கொண்டேயிருந்தார்.

"என் பொண்ணுக்கு பேச்சுதான் வரலையே ஒழிய கை மணத்துக்கு குறைவே கிடையாது. ஆத்து காரியம் எல்லாம் அப்படி பார்ப்பா..."

"ஆமாமா... சமையல் அமோகமா இருக்கு...

"ஆமா உங்களோடயே வருவாளே ஒரு பொண்ணு, அவ எங்க?"

"அவ வரலை... நான் என் சொந்த விஷயத்துல பிறரை அனுமதிக்கறதில்ல."

"நல்ல பாலிசிதான். அப்படிதான் இருக்கணும். அந்த பொண்ணு உங்க சிஷ்யையோ?"

"ஆமாம். மித்தாலஜி பத்தின ஆராய்ச்சில ஈடுபட்டிருக்கறவ."

"அப்படின்னா?"

"மித்தாலஜின்னா நம்ப முடியாத ஆனா நடக்கற விஷயங்கள்..."

"நம்ப முடியாத - ஆனா நடக்கற விஷயங்களா?"

"தோடிபுரத்துல இருந்துண்டு இப்படி ஒரு கேள்வி கேக்கறேளே. வீணை இசை ஊர்பூரா கேக்கறது. அதனால எவ்வளவோ நல்லதும் நடக்கறது. இதை அனுபவிக்க மட்டும்தான் முடியும். நிரூபிக்க முடியுமோ...?"

"ஓ... நீங்க எங்க ஊரை வெச்சே என்னை மடக்கிட்டேள். வாஸ்தவம்தான்! இந்த ஊர்ல இந்த மாதிரி விஷயங்கள்லாம் தண்ணி பட்டபாடு."

"அந்த தண்ணி பட்டபாடு மாதிரி உள்ள விஷயங்கள ஆராயறதுதான் அவளோட படிப்பு."

"ஆராய்ச்சி பண்ணி என்ன பண்ணப் போறா?"

"புத்தகமா எழுதுவா. எதாவது ஒரு பல்கலைக்கழகம் அதுக்கு டாக்டர் பட்டம் தரலாம்."

"இதுக்கெல்லாமா டாக்டர் பட்டம் தருவா?"

பட்டர் எவ்வளவு பெரிய கிணற்றுத் தவளை என்பது அவர் கேட்கிற தினுசிலேயே விளங்கிவிட்டது. ருத்ரேஸ்வர் சிரித்தான். சாப்பிட்டும் முடிந்தாகிவிட்டது. கைகழுவும்போது மைதிலி காதோரமாக குசுகுசுத்தான்.

"என்னைத் தடுக்க நீ வந்திருக்கே. ஆனா, நான் உன்னையே பிடிக்கப் போறேன்..."

அவளும் அவன் காதுபடவே திருப்பிக் கேட்டாள்.

"உண்ட வீட்டுக்கே இரண்டகமா?"

"நான் ஒண்ணும் கல்யாணம் பண்ணிண்டு உன்னைக் கைவிட்டுட மாட்டேன். காலமெல்லாம் என் காலை அமுக்க வைப்பேன். ஒரு தேவதை என் காலை அமுக்க நான் எவ்வளவு கொடுத்து வெச்சிருக்கணும்?"

"பகல் கனவு...!"

"பாக்கத்தானே போறே...?"

"முதல்ல உன் லட்சியத்தை அடைய முடியறதா பார்..."

“இன்னிக்கு ராத்திரி அடைஞ்சுடுவேன்...”

“ஆனா, என் ருத்ரன் முந்திண்டுட்டான்...

“அவன் யாருன்னுதான் எனக்குத் தெரியுமே...!”

- அந்த பதில் மைதிலியையே அதிர்ச்சிக்குள்ளாக்கி கூர்ந்து பார்க்கச் செய்தது.

ருத்ரேஸ்வர் சிரித்தான் பட்டர் வெற்றிலை பாக்கை எடுத்து நீட்டினார். போட்டுக்கொண்டான் காயத்ரி அருகே சென்றான். தலையை வருடிவிட்டான்.

“யாரு...?”

“உன் அத்திம்பேரா வரப் போறவம்மா...”

“ஓ... அப்பா சொன்ன நபர் நீங்கதானா?”

“நானேதான். கவலைப்படாதே.. இரண்டு நாள்ல உனக்குப் பார்வை வந்துடும்.”

“எப்படி.... நீங்க கண் டாக்டரா?”

“அதுக்கும் மேல...”

“அதுக்கும் மேலன்னா...?”

“கேள்விய விடு. சொல்றதக் கேள் அமைதியா இரு. உன்னால என்னை எந்தக் காலத்துலயும் மறக்க முடியாது. அப்படிப் பண்ணிடறேன்.”

“ரொம்ப சந்தோஷம். அப்படியே உள்ற ஒரு மாமி இருக்கா. அந்த மாமியும் என்னை மாதிரிதான்...”

“யாரது?” - அவன் ஆச்சரியமாகப் பார்க்க, ஒரு இருண்ட அறையில் குஞ்சுப் புறா போல அடங்கிக் கிடந்த உபாசகர் மனைவி மெல்ல எட்டிப் பார்த்து தன் மடிசார் புடவையின் தலைப்பை இழுத்துவிட்டுக்கொண்டே கைகளைக் கூப்பினாள்.

அவளைப் பார்க்கவும் ருத்ரேஸ்வர் புருவம் வளைந்து “நரசிம்மபாரதி ஆத்துக்காரியா?” என்றான்.

“ஓ... உங்களுக்கு உபாசகர் ஸ்வாமியை தெரியுமா?”

“நன்னா தெரியும். ஒண்ணா என்கூட படிச்சவர்தானே அவர்.”

“அப்படியா எங்காத்துக்காரரை உங்களுக்குத் தெரியுமா?”

“நன்னாத் தெரியும். கவலைப்படாதேள். நாளைல இருந்து நான்தான் இந்த உலகத்துக்கே சக்கரவர்த்தி. ஏன்

கடவுள்னே சொல்லலாம். என்னால தீர்க்க முடியாத பிரச்சினையே இல்லைன்னு ஆகப் போறது. உங்களுக்கும் கண் பார்வையை நான் தரேன்."

ருத்ரேஸ்வர் கர்வம் கொப்பளிக்க படு ஸ்டைலாகப் பேச, குத்துப் பார்வை பார்த்துக் கொண்டிருந்தாள் மைதிலி.

திரும்பவும் அவளை நெருங்கினான்.

"உன்னால என்னை எதுவும் பண்ண முடியாது. அந்த அம்பாளே என் தபசுக்கு கட்டுப்பட்டவ. ஒரு ஹோமம் இல்ல... 1008 சண்டி ஹோமம் பண்ணி கோடி நாம ஜபத்தை மட்டுமே அதே ஆயிரத்தெட்டு தடவை ஜெபிச்சிருக்கேன்.

என் ஜாதகப்படி எனக்கு இந்த பூமியில மனுஷாளால யும் சரி, மிருகங்களாலயும் சரி... விஷம், நெருப்புன்னு எதாலயும் மரணம் கிடையாது. என் ஜாதக கட்டம் அப்படி. என்னைக் கொல்ல அந்த கடவுளே வந்தாதான் உண்டு. ஆனா, அந்த கடவுள் வந்து கொல்ற அளவுக்கு நான் ஒண்ணும் நரகாசுரனோ இல்ல ஹிரண்யனோ இல்லை." என்றவன், பட்டர் நெருங்கி வரவும் பேச்சை முடித்துக் கொண்டான். அப்படியே அவரிடமும் சொல்லிக்கொண்டு புறப்படப் பார்த்தான்.

"ரொம்ப சந்தோஷம்... இந்த சிவராத்திரி முடிஞ்சுடட்டும். ஊரே 'யார் ருத்ரன், யார் ருத்ரன்?'கற கேள்வியில இருக்கு. இந்த ஊர் வரைல சிவராத்திரிதான் தீபாவளி மாதிரி. அதுலயும் இந்த சிவராத்திரி ரொம்ப விசேஷ ராத்திரி. அந்த ஈஸ்வரன்தான் ருத்ரனா வரப்போறதா எனக்குத் தோணறது. இந்த ஊரோட பொக்கிஷமான ருத்ர வீணையை வேற, அன்னிக்கு ஊரறிய வாசிக்கப் போறதா ஏடு வந்திருக்கு. காணக் கிடைக்காத காட்சி. நீங்களும் அவசியம் கலந்துண்டு அந்த கண்கொள்ளாக் காட்சிய பார்க்கணும்..." ருத்ரேஸ்வர் பதிலுக்கு சிரித்தபடியே "யார் கண்டா அந்த ருத்ரன் ஒரு வேளை நானா கூட இருக்கலாம்..." என்றான். பட்டர் அதிர்ந்தார்.

"ஊர்ல யாரைப் பார், நான் ருத்ரன், நான் ருத்ரன்னு சொல்லும்போது நான் சொல்லக்கூடாதா என்ன?" என்று அவர் அதிர்ச்சியைக் குறைத்தான்.

அவரும் சாவியோடு கோவிலுக்கு புறப்பட்டார். இருவரும் ஒன்றாகவே தெருவில் இறங்கி நடந்தனர் சிறிது தூரம்

சென்றவன் திரும்பிப் பார்த்தான். மைதிலி வாசலில் நின்று பார்த்துக் கொண்டே இருந்தாள். சிரிப்புதான் வந்தது.

தெருவிலும் நல்ல கூட்டம். பலர் பட்டரைப் பார்த்து கை எடுத்துக் கும்பிட்டனர்.

"என்ன விஷயம்?"

"ருத்ரன் வரப்போறானாமே. அதான் இரண்டு நாள் முந்தியே கிளம்பி வந்துட்டேன்."

"சரிதான். மாமாங்க கூட்டத்தை தூக்கி சாப்ட்டுடும் போல இருக்கே இந்த கூட்டம்" என்ற பட்டர், கோவிலுக்கு செல்லும் வலப்பக்க தெருவில் திரும்ப, ருத்ரேஸ்வர் நேராக நடையைத் தொடர்ந்தான். கூட்டம் கூட்டமாக மக்கள் வந்து கொண்டிருந்தனர் விஷயம் வேகமாக பரவிக்கொண்டிருப்பதை உணர முடிந்தது. இன்றைய இரவை விட்டால் அதன் பின் பிடிப்பது கடினம் என்றது உள்ளுணர்வு. கால்கள் அப்படியே காவிரிக்கரை பக்கம் நடைபோட்டது. ஒரு இடத்தில் கணேசனும் கர்ணமும் உபாசகருடன் தென்பட்டனர். அவர்களுக்கு சற்று தள்ளி பிணம் போல ஒன்று எரிந்தபடி இருந்தது.

அதைப் பார்த்த ருத்ரேஸ்வருக்கு சுருக்கென்றது. இது என்ன பட்டப்பகலில்... யார் இறந்து போனது?' அப்படியே ஒரு மரம் பின்னால் ஒளிந்தவனாக கவனிக்கலானான்.

உபாசகர் கைகளில் ஏட்டுக்கட்டு வைத்திருந்தார் அதை துல்லியமாக பார்க்க முடிந்தது. சிதையும் எரிந்தபடியே இருக்க, அதையே கர்ணமும், கணேசனும் வெறித்துவிட்டு பின் அவரோடு நடந்தனர்.

அருகில்தான் ஆற்றங்கரை... வழிநெடுக அரச மரத்தின் உதிர்ந்து போன, காய்ந்த இலைகள், அவைகளை மிதித்துக் கொண்டே நடந்தாலும் பேச்சில் கனபரிமாணமுள்ள பல விஷயங்கள் ருத்ரேஸ்வர் ஓசைப்படாமல் பின்தொடர்ந்தபடியே காது கொடுக்கலானான். உபாசகர்தான் பேசிக் கொண்டே போனார்.

"கர்ணம் ஸ்வாமி.. ஒரு பெரிய கர்மக்கணக்கை நீர் தீர்த்து வெச்சிருக்கீர் முந்நூறு வருஷத்துக்கு முந்தி காசிக்கு போய்ட்டதா உங்க உறவினர்களால நினைக்கப்பட்ட சதாசிவ சாஸ்திரிகளோட... எலும்புக்கூடு இது. அக்னில இது சேர்ந்த பிறகுதான் அவரோட... ஆத்மாவுக்கு சாந்தியே ஏற்பட்டிருக்கும்."

அவர் எழுதின இந்த 'ருத்ர வீணை விலாசம்' நூல் சரியான சமயத்துலதான் கிடைச்சிருக்கு. முந்நூறு வருஷம் முந்தி என்னவெல்லாம் நடந்தது, முந்நூறு வருஷம் கழிச்சு அதாவது இப்ப என்ன நடக்கும்கறது வரை இதுல அவர் தெளிவா குறிப்பிட்டிருக்கார். அதே போல ராக மந்திரம் ஏடு யாரால் எழுதப்பட்டது. அதுல உள்ள ராக குறிப்புகளால என்ன பலனும் விரிவா இதுல பல விஷயங்கள் இருக்கு. ஒரு உண்மைச் சரித்திரத்தை தன் கைலயே வெச்சுண்டு இவர் இந்த தாழிக் குள்ள அடங்கினதுதான் பெரிய கொடுமை. அதுபத்தி மட்டும் இதுல பெருசா தகவல்கள் இல்லை. இந்த விஷயம் நமக்கு மட்டும் தெரிஞ்சா போறும். சிவராத்திரி அன்னிக்கு ருத்ரன் வரும்போது அந்த ருத்ரன் கிட்டயே இந்த ஏட்டையும் ஒப்படைப்போம். இதன் மூலமா ருத்ர வீணை பற்றி உலகம் பூரா எல்லாருக்கும் எல்லாமும் தெரிய வரட்டும்..." என்று பேசிக்கொண்டே வந்த உபாசகரின் திருஷ்டியில் ருத்ரேஸ்வர் பின்தொடர்ந்து ஒட்டுக் கேட்டபடி வருவது புலனானது. அதை உணர்ந்தவர் புத்திசாலித்தனமாக ஒரு முடிவை உடனே எடுத்து அதை பலமான குரலில் சொல்லவும் செய்தார்.

"இந்த ஏட்டுல ருத்ரன் யார்ங்கற குறிப்பும் இருக்கு. எது பெரிய ரகசியமோ அதை அன்னிக்கே சாஸ்திரிகள் எழுதி வெச்சுட்டு மரிச்சுட்டார். ருத்ரன் யார்னு நினைக்கறேள்?" கர்ணத்தையும், கணேசனையும் பார்த்து கண்ஜாடை காட்டி பாவனைகளுடன் சொல்ல ஆரம்பித்தவர்,

"சங்கரன்தான் அந்த ருத்ரன்..." என்று உரத்த குரலில் கூறவும், ருத்ரேஸ்வர் முகம் இருண்டு போனது.

அப்படியே தேங்கி நின்றவன் முகத்தில் ஒரு தீர்மானம். உபாசகரும் திரும்பிப் பார்ப்பது தெரியாமல் திரும்பிப் பார்த்துவிட்டு தனக்குள் சிரித்துக் கொண்டார். பிறகு என்ன நினைத்தாரோ கர்ணத்தையும் கணேசனையும் முன்னே போகச் சொல்லிவிட்டு பின்னே திரும்பி வந்தார். ருத்ரேஸ்வர் அவர் திரும்பி வருவதை எதிர்பாராதபடி ஒளியப் பார்த்தான் இருந்தும் அகப்பட்டுக்கொண்டான். உபாசகரும் அவனை விடவில்லை.

"காசிப் பண்டிதரே.. எதுக்கு ஒளியறீர்? இப்படி திரும்பும்..."

- அவனும் திரும்பினான்.

"என்ன... ஒட்டுக்கேட்டுண்டே எங்களை பின்தொடர்ந்து வந்தியாக்கும்?"

- ருத்ரேஸ்வரும் சரேலென்று நிமிர்ந்தான்.

"ஒட்டு மட்டும் கேட்கல... யார் ருத்ரன்கறதையும் கேட்டுட்டேன்..."

"சபாஷ்... அப்ப இனி ருத்ர வீணை மேல இருக்கற ஆசையை விட்டுடுவேன்னு சொல்."

"அப்படின்னு அந்த ருத்ரன்கிட்ட போய்ச் சொல் நரசிம்ம பாரதி."

"நீ அப்ப திருந்தறதாவே இல்லைன்னு சொல்."

"ராஜாவுக்குதான் கிரீடம் அழகா இருக்கும். அதே போல அந்த ருத்ர வீணை என்கிட்ட இருந்தாதான் அதுக்குப் பெருமை. யாரோ ஒரு ருத்ரன் அதை வெச்சுண்டு ஊரைச் சுத்தறதால யாருக்கு என்ன பிரயோஜனம்?"

"அப்ப உன்கிட்ட கிடைச்சா இந்த உலகத்தையே ஒரு வழி பண்ணிடுவேன்னு சொல்."

"அதுல சந்தேகமே வேண்டாம். பேசாம என் சிஷ்யனாயிடு நரசிம்மபாரதி. அதால உனக்கும் வாழ்க்கை தரேன்..."

"கல்யாணத்துக்கு முந்தியே குழந்தைக்கு என்ன பேர் வைக்கலாம்கற மாதிரியே யோசிக்கிறியே...!"

"கொழுப்புக்கு இன்னொரு பேர் உன் அகராதில தன்னம்பிக்கையா?"

"முட்டாள்தனம், ஏமாற்றம் இதுக்கெல்லாமும் என் அகராதில ஒரு பேர் உண்டு. அது என்னன்னு தெரியுமா?"

"ஏன் தெரியாம... நரசிம்மபாரதின்னு என் பேரைச் சொல்வே."

"பரவால்லியே... கொஞ்சம் புத்தி கூட உனக்கு இருக்கே..."

"அதனாலதான் உனக்கு இப்பகூட நல்லது சொல்ல வந்திருக்கேன்..."

"எனக்கு நல்லத நீ சொல்றியா? பேஷ்..."

"அசுரனுக்கு சொல்ற நல்லது கடல்ல கரைக்கற பெருங்காயம் மாதிரின்னு எனக்குத் தெரியும். இருந்தாலும் அம்பாளோட உத்தரவை நிறைவேத்தணும் இல்லியா?"

"குதர்க்கம் போறும். ருத்ர வீணையை எப்படி அடையற துன்னு எனக்குத் தெரியும்."

"அப்ப அந்த பங்களாவுக்குள்ள போய் எடுத்திண்டிருக்க லாமே..."

"எப்ப எப்படி எடுக்கணும்னு இருக்கு இல்லியா?"

"அப்படிப் போட. உனக்குத் தைரியம் இல்லேன்னும் சொல்."

"என் தைரியத்த மட்டும் இல்ல. என் விஸ்வரூபத்தையே இன்னிக்கு நீ பார்ப்பே..."

"ருத்ரேஸ்வர்... நீ ஒண்ணும் கடவுள் இல்ல. நீயும் பரப்ரம்மத்துல ஒரு துளிதான். என்ன... கொஞ்சம் எச்சத் துளியா போய்ட்டே. உமிழ்ந்தாதான் சரிப்பட்டு வரும்கற மாதிரி நடந்துக்கறே. வரப்போற ருத்ரன் அந்த ஈஸ்வர அம்சம்..."

"இருக்கட்டும்... நானும் ஈஸ்வர அம்சம்தான்!"

"அதை நீ சொல்லக்கூடாது. உலகம் சொல்லணும்."

"நாம சொல்றதைத்தான் உலகம் சொல்லும். நாளைக்கு நானும் சொல்ல வைக்கறேன் பார்."

ருத்ரேஸ்வர் சளைக்காமல் பதில் சொன்னான். உபாசகருக்கே களைப்பாகிவிட்டது. சட்டென்று அவர் கையில் உள்ள ஏட்டுக்கட்டையும் தட்டிப் பறித்தான். உபாசகருக்கு அதிர்ச்சியாகியது.

"வேண்டாம்... அதைக் கொடுத்துடு..."

"முடியாது, உனக்குத் தெரிஞ்ச வித்தையை எல்லாம் காட்டு. அப்புறம் நான் யார்ங்கறத நான் காட்றேன்."

"வேண்டாம் ஈஸ்வர் சொன்னா கேள் அதைக் கொடுத்துடு."

"இது ருத்ரன் கிட்டதான் இருக்கணும். நான்தான் ருத்ரன். ஆகையால இது என்கிட்ட இருக்கட்டும்."

"வேண்டாம். என் சாபத்துக்கு ஆளாகாதே...

"தயாரா இருக்கேன் உன் சாபம் என்ன செய்யும்னு பாக்கறேனே..." இருவருக்கும் இடையே வாக்குவாதம் முற்றிக்கொண்டே போனது.

நல்லவேளை அங்கே சங்கரன் சரியான சமயத்தில் வந்து சேர்ந்திருந்தான். வந்தவன் ருத்ரேஸ்வரை முறைத்தான்.

"வா சங்கரா.... எதுக்கு இப்படி முறைக்கறே?"

"முறைக்காம... எங்க இருந்தோ வந்த நீ இந்த ஊர் சொத்தைக் கொள்ளையடிக்கப் பார்ப்பே. அதை வேடிக்கை பார்க்கணுமோ?"

"முட்டாள்தனமா பேசாதே. நான் உன் தங்கையை கல்யாணம் பண்ணிக்கப் போற உன் ஆத்து மாப்ளை. என் சக்தி பத்தி உனக்குத் தெரியது."

"நீ யாரா இருந்தா என்ன... உன்கிட்ட நேர்மை இல்லை. எல்லாத்துலயும் குறுக்கு வழில நுழையற உனக்கு என் தங்கை எந்த நாளும் பொண்டாட்டி ஆக மாட்டா..."

"அப்புறம்?"

"நான் என்ன கதையா சொல்றேன்... அப்புறம்கறே?"

"எனக்கு எல்லாமே கதைதான். ஏன்னா நான் ஒரு லட்சியப் பிசாசு. என்னோட குறி ருத்ர வீணை. அதுக்கு குறுக்க யார் வந்தாலும் சரி.... அவாளை சும்மாவிட மாட்டேன்..."

"எங்க இருந்தோ வந்த உனக்கே இவ்வளவு இருந்தா எங்களுக்கு எவ்வளவு இருக்கும்."

"அப்ப மோதறதுன்னு முடிவு பண்ணிட்டே நீ."

"மோதறது மட்டுமல்ல... உன்னை ஹதம் பண்ணாதான் என் ஆத்திரம் அடங்கும்."

"என் ஜாதகம் பத்தி உனக்குத் தெரியல. அதான் இப்படிப் பேசறே. ஆனா, உன் ஜாதகம் எனக்குத் தெரிஞ்சு போச்சு."

"என்ன மிரட்றியா?"

"இல்ல... இனிதான் நீ நான் மிரட்டப்போறத பார்க்கப் போறே..."

"அதையும்தான் பார்ப்போமே..."

சங்கரன் வேகமாகப் பாய்ந்து வந்தான். அருகில் ஒரு சிறிய பாறை. தரைக்கு ஒண்ணரை அடி உயரத்தோடு ஒரு கறுப்பு நாய் படுத்திருப்பது போல கிடந்தது. அதன் அருகே ஒதுங்கிய ருத்ரேஸ்வர், அதை உற்றுப் பார்த்துவிட்டு நாயை வருடிக் கொடுப்பது போலவே அதை வருட, அடுத்த நொடி நிஜமாலுமே அங்கே ஒரு கறுப்பு நாய் நாக்கைத் தொங்கப் போட்டபடி படுத்திருந்தது.

"உபாசகருக்கு பகீர் என்றது. பீதாம்பர ஜால வித்தை என்று ஒன்று உண்டு. அதில் கயிறு பாம்பாகும், கோழி முட்டை

எல்லாம் இரும்புக் குண்டாகும். குறுக்குவழிச் சித்துகள் அவை. அற்பப் பிசாசுகளையும் பேய்களையும் பயன் படுத்தி அவைகளை ஏவி விட்டு செய்வது இதில் ஒரு ரகம்."

ருத்ரேஸ்வரும் அப்படி ஒன்றைக் கையில் எடுத்து விட்டான். நாயும் சங்கரனை துரத்த ஆரம்பித்தது. சங்கரனும் தலைதெறிக்க ஓடினான். அது விடவில்லை. அதனிடம் குதிரையைவிட கூடுதல் வேகம். ஆவேசமான பாய்ச்சல். உபாசகருக்கு அதைத் தடுக்கும் மார்க்கம் தெரியவில்லை. திணறலோடு நின்றவரை நோக்கி விபூதி போல ஒன்றை ஊதிவிட்டான். அடுத்த நொடியே உபாசகர் மயங்கி விழுந்துவிட்டார். அவர் விழுவதைப் பார்த்து அசுரச் சிரிப்பு சிரித்தான். அதே சமயம் தொலை தூரத்தில் சங்கரன் அலறுவதும் காதில் கேட்டது. கிட்டத்தட்ட அவன் கதை முடிந்து விட்டதாகவே தோன்றியது.

ருத்ரேஸ்வர் முகத்தில் ஒருவித வெற்றிப் புன்னகை, கைவசம் உள்ள ஏட்டுக்கட்டைப் பார்த்தான். பெரிய ஒரு வெற்றியை அப்பொழுதே பெற்றுவிட்ட மாதிரிகூட இருந்தது.

**அ**ந்த வேளையில் சுந்தராம்பாளை ரங்காயி எதிர் பார்க்கவில்லை.

"வாங்க... வாங்க... என்று வரவேற்றாள். அவசர அவசரமாக பாயை எடுத்தெல்லாம் விரித்தாள்.

"இருக்கட்டும் ரங்காயி. நான் இப்ப அந்த கரிப் பானையைப் பார்க்கத்தான் வந்தேன். அது இங்க உங்க வீட்ல தானே இருக்கு...?"

"ஆமாம்மா நிலவறைல இதுக்கு முந்தி எப்படி வெச்சிருந்தோமோ அப்படியேதான் இருக்கு..."

"அதைக் கொஞ்சம் எடுத்துக்கிட்டு வர்றியா?"

"அது எதுக்கும்மா?"

"எடுத்துக்கிட்டு வாயேன்... சுந்தராம்பாள் கூறவும், ரங்காயி மறுத்துப் பேசாமல் அங்கிருந்து ஓடினாள். அந்த இடை வெளியில் சுந்தராம்பாள் கவனம் கல்யாணசுந்தரம் பக்கம் திரும்பியது. அவர் அவளை கண்கலங்கப் பார்த்தார்.

மெல்ல அருகில் சென்ற சுந்தராம்பாள், "உங்களுக்கு ஒரு பிரச்சினையும் வராது. சாமி உத்தரவு தந்துதான் நான் இங்க

வந்திருக்கேன்...” என்று கூறவும், பதிலுக்கு அவர் அவளைக் கண்ணீரோடு ஏறிட்டார்.

“இன்னிக்கு ராத்திரி பல அதிசயங்கள் நடக்கப் போறதாவும் எனக்கு தோணுது. அமைதியா இருந்த ஊர் இது. ருத்ர வீணை விஷயம் ஒரு மாற்றத்தை சந்திக்கற கால கட்டமா இந்த காலகட்டம் அமைஞ்சுட்டதால ஒரே சமயத்துல பல விஷயங்கள் அங்கங்க நடந்துகிட்டு இருக்கு. முக்கியமா இதுல எனக்கு விடுதலை கிடைச்சாச்சு. இனி நானோ என் குடும்பத்தவர்களோ இந்த ஊர்லயே இருக்கத் தேவையில்லை. எனவே உங்க உடம்பு குணமாகி நீங்களே இந்த ஊர்ல நிகரில்லாத தலைவரா திகழலாம். அதுக்கு நான் தடையா இருக்க மாட்டேன்...” என்ற சுந்தராம்பாளைப் பார்த்து மனம் குமுறி, “போதும் சுந்தராம்பா! உன் சொல்லால என்னைக் கொல்லாதே...” என்று மனம் நொந்ததில் சீரான பேச்ச சட்டென்று வெடித்து வெளிப்பட்டுவிட்டது. அந்த குரல் புதையலோடு வந்து நின்ற ரங்காயியையே ஒரு உலுக்கு உலுக்கிவிட்டது. “ஏங்க... நீங்களா பேசினீங்க... பேசினது நீங்களா?” என்று பல மாதிரி கேட்டவளை கல்யாணசுந்தரமும் தன்னையே நம்பாதது போல பார்த்துவிட்டு, “ரங்காயி...” என்றார் தெளிவாக.

“நீங்களா... நீங்களேதான்...”

“ஆமாம் புள்ள. சுந்தராம்பா பேசினது என் மனசை குத்துனுச்சு. தாங்க முடியாம பதில் சொல்லத் துடிச்சேன். சொல்லியும் முடிச்சுட்டேன். சுந்தராம்பா உனக்குதான் நான் நன்றிய சொல்லணும். ரொம்ப நன்றி, சுந்தராம்பா ரொம்ப ரொம்ப நன்றி...”

சுந்தராம்பாள் அதை காதில் வாங்கிக்கொண்டே புதையல் பானையின் வாயை மெல்ல திறந்தாள். திறந்த நொடி பளிச்சென்று கண்ணைப் பறித்தன தங்கக் காசுகள்! ரங்காயிக்கு ஒரு விநாடி மூச்சே நின்றுவிட்டது. கல்யாணசுந்தரமும் அப்படியே பேச்சுமூச்சற்றுப் போனார் சுந்தராம்பாள் முகத்திலும் மலர்ச்சி. ஒருவித நிம்மதிப் பெருமூச்சு.

“ரங்காயி... நம்ம கண்ணை கட்டுன ஒரு கட்டு நீங்கிடிச்சு. இனி இது எந்தக் காலத்துலயும் கரியாகாது. இதை அப்படியே போலீஸ் கிட்ட ஒப்படைச்சு நல்ல பேர் எடுத்துடுங்க. நானும்

சொல்றேன்" என்றபடியே புதையல் பானையை ரங்காயி வசம் ஒப்படைத்தாள்.

"அம்மா... என்னம்மா இதெல்லாம்?"

"இது எதுவா இருந்தா உனக்கென்ன? எல்லாம் நல்லபடியா ஆயிடிச்சுல்ல. அதுதான் நமக்கு வேணும். உள்ற பத்திரமா வை. நானும் புறப்படறேன்..."

"அம்மா இருங்கம்மா... ஒரு வாய் பாலாவது குடிச்சுட்டு போங்க..."

"இல்ல ரங்காயி... தலைக்கு மேல வேலை இருக்கு... ஊரே சிவராத்திரி பரபரப்புல இருக்கு..." என்றபடி கிளம்பப் பார்த்த சுந்தராம்பாளை, "ஒரு நிமிஷம்..." என்று எழுந்து வந்தே தடுத்தார் கல்யாணசுந்தரம். அவளும் நின்றாள்.

"ஆமா... தனியாவா வந்திருக்கே சுந்தராம்பா...?"

சுந்தராம்பாள் தலை ஆமோதித்தது.

"எங்க திலகம்?"

"அவ வரலை..."

"உன்னை இப்படித் தனியா பார்க்கும்போது எனக்கு என்னவோ மாதிரி இருக்கு. நீ நிஜமாலுமே ஒரு ராணி சுந்தராம்பா. நான் உன்னை எப்பவும் அப்படித்தான் பார்க்க விரும்பறேன்..."

- சுந்தராம்பாள் பதிலுக்கு நன்றி உணர்வை ஒரு சிரிப்பாக வெளிக்காட்டினாள். பின் எதுவும் கூறாமல் புறப்பட்டாள். இருவரும் வாசல் வரை சென்று அவளை வழியனுப்பினர். வாசலில் நின்றுகொண்டிருந்த வண்டியில் ஏறியவள் கல்யாணசுந்தரத்தைப் பார்த்து, "இந்த சிவராத்திரியில அங்க கச்சேரி அருமையா அமையணும்னு அந்த தோடீஸ்வரனை வேண்டிக்கிறேன்" என்றாள். அப்படியே "எங்க சாமிநாதன்?" என்று கேட்க, "அவன் இப்பல்லாம் வீட்லயே தங்கறது இல்ல..." என்றாள் ரங்காயி.

"சீக்கிரமா ஒரு கால்கட்டு போட்டுடுங்க... என்றபடியே வண்டிக்காரனைப் பார்க்க, அதுவும் கிளம்பியது.

கல்யாணசுந்தரத்துக்கு நெடு நாட்களுக்கு பிறகு தான் ஒரு முழுமையான மனிதன் ஆனது போல ஒரு உணர்ச்சி. ரங்காயியும் ஒரு பாரம் இறங்கிய தெம்போடு அவரை ஏறிட்டாள்.

“புதையல் தங்கமானதுகூட எனக்கு பெரிசாத் தெரியலை. உங்க மனசு இவங்க விஷயத்துல மாறினதுதாங்க பெரிசு. நான் இப்ப எவ்வளவு சந்தோஷமா இருக்கேன் தெரியுமா?” என்ற ரங்காயி, அதன் எதிரொலியாக ஆனந்தக் கண்ணீரையும் சிந்தினாள்.

**டி**ஸ்பென்சரி!

அவ்வளவா கூட்டம் இல்லை. பானு கதவை மூடி விடலாமா என்று யோசித்தபோது அங்கே மைதிலி உருவம் நிழலாடியது.

“மைதிலி...” பரவசமானாள் பானு. உள்ளே நுழைந்த மைதிலியும் நுழையும்போதே டிஸ்பென்சரி கதவை மூடிக்கொண்டே தான் நுழைந்தாள். பானுவுக்கு புரிந்துவிட்டது. அவள் எதையோ பேச நினைக்கிறாள்!

“என்ன மைதிலி... ஏதாவது முக்கியமான விஷயமா?”

“ஆமாம்.” மைதிலியின் குரல் அவளுக்குள் சிலிர்ப் பூட்டியது.

“நீ... நீ பேசறத கேட்கும்போது எனக்கு எவ்வளவு பரவசமா இருக்கு தெரியுமா?”

“உன்கிட்ட ஒரு உதவி கேட்டு வந்திருக்கேன் பானு...”

“என்கிட்ட உதவியா?”

“ஆமாம்... அவசியம் செய்யணும்.”

“என்ன மைதிலி நீ... மூணாவது மனுஷிகிட்ட பேசற மாதிரி பேசறே. நான் உன் தோழி...”

“இந்த உடம்புக்குத்தான் தோழி... என் ஆன்மாவுக்கு நீ இப்ப குழந்தைதான்...” மைதிலி சொன்ன ஜோரில் ஒரு நொடி.... ஒரே ஒரு நொடிதான் பிராம்மியாக நான்கு கரங்களுடன் காட்சி தந்து முடிக்க, பானுவுக்கு அப்படியே சப்த நாடியும் நொறுங்கிவிட்டது.

“மை... மை... மைதிலி...” என்று பெயரைக்கூட சொல்ல முடியாதபடி தொண்டையை அடைத்தது. மைதிலியும் ஒரு சிறு மண்கலயத்தை எடுத்து நீட்டினாள்.

“எ... எ... என்ன இது?”

“இதுக்குப் பேர் அமிர்த சஞ்சீவி... இதை நீ சங்கரனுக்கு கொடுக்கணும்...”

"சங்கரனுக்கு... அவனுக்கு என்ன?"

"அவன் இப்ப தாசி பங்களா போற வழியில ஏதாவது ஒரு புதர்ல பைரவ மூர்த்தியா கிடப்பான் ஆத்மாவால பைரவனான அவன் உடம்புல இந்த நிமிஷம் நாய்க்கடியோட விஷம்தான் பரவிகிட்டு இருக்கு. அதை தடுக்கத்தான் இந்த மூலிகை மருந்து."

"என்னென்னமோ சொல்றியே மைதிலி... சரி... நீங்க..."

"நான் எப்பவும் உன் மைதிலிதான். எனக்கு எதுக்கு மரியாதை. வேகமா போ. உபாசகரும் மயங்கித்தான் கிடப்பார். அவருக்கும் இதுல கொஞ்சம் கொடு. அப்படியே அவனோட மாந்தோப்பு கல்மண்டபத்துக்கு போயிடு. நான் ராத்திரி அங்க வருவேன். இன்னிக்கு ஒரு அசுரவதம் இருக்கு."

"மைதிலி..."

"புறப்படு பானு... காலத்தை இனி சரியாகவும் வேகமாகவும் பயன்படுத்திக்கணும்... அதுலதான் எல்லாமே இருக்கு."

"சங்கரனுக்கு எப்படி நாய் கடிச்சது? இதை நீயே ஏன் போய் கொடுக்கலை."

"எல்லாத்துக்கும் ஒரு சரியான பதில் இருக்கு பானு. ஆனா, அது இப்ப வேண்டாம். நீ இப்ப புறப்படறியா?"

"மைதிலி கொஞ்சம் அதட்டலுக்கு மாற, பானு படுவேகமானாள். மைதிலி கொடுத்த அந்த மருந்து மூக்குக்கு இதமான ஒரு வாசமாக கமகமவென்று இருந்தது. அந்த மண்கலயமும் சிறியதாக அழகான வேலைப்பாடுகளுடன் இருந்தது.

பானு திரும்பித் திரும்பி பார்த்துக் கொண்டே நடந்தாள்.

மைதிலி முகத்தில் அழியாத அதே புன்னகை!

ஒரு புதருக்குள் இருந்து முனகல் சப்தம் கேட்ட படி இருந்தது. அந்தப் பக்கமாக தேடியபடியே வரும் பானு வின் காதில் மெல்ல விழுந்த அந்த சப்தம் அவளது முகத்தில் ஒரு பெரிய பரபரப்பைத் தோற்றுவித்தது. பார்வை நாலாபுறமும் சுழன்றது.

அவ்வளவும் ஆவாரம் தழைப் புதர். காவிரி நீர் ஊட்டத்தில் அரக்கன் தலைபோல பொசிந்து கிடந்தது. அதில் ஒன்றில்தான் அவன் விழுந்து கிடந்தான். புதரை விலக்க முற்பட்டபோது

சின்னச் சின்ன பூச்சிகளும், வண்டுகளும் கலீர் என்று சிதறிப் பறந்தன. பானுவுக்கே மிக அச்சமாக இருந்தது. இருட்டு வேறு... சங்கரனின் முனகல் சப்தத்தை வைத்துத்தான் அடையாளம் கண்டுகொண்டாள். அப்படியே அவனை இழுத்து மடிமேல் போட்டாள். கரகரவென்று கண்களில் நீர் பெருக ஆரம்பித்து விட்டது.

"சங்கரன்... சங்கரன்... என்று கேவினாள் அவனோ, நாயால் பிடுங்கி குதறப்பட்டிருந்தான். தொட்ட இடமெல்லாம் சதை பிய்ந்து தொங்கி ஒரே ரத்தக்கசிவு.

மிருகங்களிலேயே எவ்வளவுக்கெவ்வளவு நன்றிக் குரியதோ அவ்வளவுக்கவ்வளவு விஷம் உடையது நாய். மற்ற மிருகங்களின் கடி வலியைத்தான் தரும். நாய்க்கடி மட்டும் ஒரு மனிதனை இன்னொரு நாயைப் போலவே மாற்றிவிடும். ஒரு டாக்டரான பானுவிற்கு அதை எல்லாம் நினைக்க நினைக்க உடனே அவனை ஆஸ்பத்திரிக்கு தூக்கிப் போகவேண்டும் என்றுதான் தோன்றியது.

மைதிலி கொடுத்த அந்த மண்கலய மருந்தை அவனுக்கு கொடுக்கத் தோன்றவில்லை. ஆனால், அவனோ அவள் மடியில் இருந்து சட்டென்று எழுந்தவன் பிளந்த வாயும், எச்சில் நாக்குமாக அவளை ஒரு மாதிரி பார்த்தான். 'ஹ... ஹ... ஹ...' என்று நாய்களைப் போலவே மூச்சும் இரைத்தது.

"சங்கரன்... என்ன இது... எதுக்கு அப்படிப் பாக்கறே?" அவள் கேள்வியை அவன் காதிலேயே வாங்கவில்லை. நாயைப் போலவே ஒரு பாய்ச்சலை உட்கார்ந்த இடத்தில் இருந்து பாய்ந்தான். அவளுக்கும் புரிந்துவிட்டது.

ராபிஸ் வந்து சரியாக ஊசிமருந்து இல்லாவிட்டால்தான் அதன் கிருமி ரத்தத்தில் கலந்து கடிபட்ட மனிதர் நாயைப் போலவே நடந்து கொள்வார். குரைக்க எல்லாமும் செய்வார்.

சங்கரனும் அம்மட்டில் மிக வேகமாக அந்தக் கட்டத்தை அடைந்துவிட்டதாகத் தோன்றியது. அதே சமயம் சங்கரன் திரும்பவும் அவளை நோக்கி வந்து அவள் அருகில் இருந்த கலயத்தை படுவேகமாகத் தாவி எடுத்து அதை கடகடவென்று குடிக்கவும் செய்தான்.

அவளுக்கு அவன் சங்கரனாகவே தெரியவில்லை. மனித உருவில் உள்ள ஒரு நாயாகத்தான் தெரிந்தான்.

"சங்கரா... கொஞ்சம் கோ ஆபரேட் பண்ணு. உனக்கு ஊசி போடணும். ஆண்ட்டி ராபிஸ் இஞ்ஜெக்ஷன் போட்டாத் தான் உனக்கு குணமாகும். இல்லேன்னா ரொம்ப ஆபத்து..." என்று அவள் சொல்வதை அவன் காதிலேயே வாங்கிக் கொள்ளவில்லை.

ஒரே தாவாகத் தாவி ஒரு நாயைப் போல அந்த இடத்தை விட்டு ஓடியே போனான். காட்டு மிருகம் ஒன்று நாட்டுக்குள் வந்துவிட்டு மனிதர்களைப் பார்த்து பயந்து திரும்பவும் காட்டுப் பக்கமே ஓடிவிட்டது போலத்தான் இருந்தது.

பானு ஏமாற்றமாக உணர்ந்தாள் அழுகையாகக் கூட வந்தது. திரும்பினாள். எதிரில் ஒரு சிலைபோல உபாசகர் வந்து கொண்டிருந்தார். இருட்டில் அவர் உருவம் முதலில் சரியாகப் பிடிபடவில்லை. கறுப்பாக யாரோ ஒருவர் பானுவைப் பிடிப்பதற்காக வருகிற மாதிரிதான் இருந்தது. அருகில் வரவும் தான் அவர் உபாசகர் என்பதே தெரிந்தது.

"சாமி, நீங்களா?" உபாசகரிடம் எந்தப் பதிலுமில்லை.

பானுவுக்குள் ஏற்கெனவே கலக்கம். அது தன்னை இரு மடங்காக்கிக் கொண்டது. உபாசகர் சிலை போல நின்றார்.

"சாமி... என்னாச்சு சாமி? நான் பானு... என்னைப் பாருங்க..." என்றாள். உபாசகர் சிலை போலவே நின்றார். சட்டென்று அவளுக்குள் மைதிலி சொன்னதுதான் நினைவுக்கு வந்தது.

சங்கரன் முதல் உபாசகர் வரை அவ்வளவு பேரையும் அழைத்துக் கொண்டு கல் மண்டபத்துக்கு அவள் வரச் சொல்லி யிருந்தாள். சங்கரன்தான் ஓடிவிட்டான். உபாசகரையாவது அழைத்துக்கொண்டு செல்வோம் என்று அவரைக் கையைப் பிடித்துக் கொண்டு அழைத்தபடியே நடந்தாள்.

**ந**ள்ளிரவு நேரம்!

ருத்ரேஸ்வர் தனது தோட்டத்துக் குடிசையை விட்டு வெளியில் வந்தான். வழக்கத்திற்கு மாறாக மேலே சட்டை போட்டிருந்தான். மந்த்ரிணியிடமும் பெட்டியில் எல்லா வற்றையும் எடுத்து வைத்துக் கொள்ளச் சொல்லியிருந்தான்.

அவள் இன்று அவனுக்கு எதிராக ஒரு வார்த்தை பேசவில்லை. தொட்டுத் தொட்டு எல்லாமே ஒரு முடிவுக்கு வரப் போகிறது. அதைக் கேள்விகளாய் கேட்டுப் புரிந்து

கொள்வதைவிட நடக்க நடக்க பார்த்துவிடுவதே உசிதமாய் அவளுக்குத் தோன்றியது.

தோட்டத்து குடிசைக்கு வெளியே வந்தவன், அப்படியே அண்ணாந்து பார்த்தான் வானில் ரோகிணி நட்சத்திரக் கூட்டம்! அவன் முகம் அதைப் பார்க்கவும் மலர்ந்தது.

இரவு நேரமாக இருந்தாலும் ஒரு பதினோரு பறவைகள் கொண்ட ஒரு கூட்டம் ஈசான்யத்தில் இருந்து நைருதி நோக்கி குறுக்குவெட்டாகப் பறந்து கொண்டிருந்தன. அவன் எதிர்பார்த்த அதே சகுனம்! அவன் முகத்தில் மேலும் மலர்ச்சி. பக்கத்து வாழைத் தோப்பில் கிளிகள் கூடி சப்தமிடும் அரவமும் கேட்டது. மந்த்ரிணி தொடர்ந்து கவனிக்க மட்டும் செய்தாள். அவனை ஒரு கேள்வி கூட கேட்கவில்லை. அது அவனையே என்னவோ செய்தது.

"என்ன மந்த்ரிணி... இனி என்கிட்ட பேசறது இல்லேங்கற முடிவுல இருக்கியா நீ?"

"  "

"இதுக்கும் உன்கிட்ட மௌனம்தான் பதிலா... பலே!"

"இந்தக் கேள்விக்கு மட்டும் சற்று கமுக்கமாகச் சிரித்தாள்."

"நீ ஒரு நல்ல சிஷ்யையன்னா நீ என்னைக் கேள்வி கேட்க வேண்டிய தருணமே இப்பதான்..."

"அப்படியா?"

"என்ன அப்படியா...?" இன்னும் சில மணி நேரங்கள்ல நான் ருத்ரனாகப் போறேன். எப்படின்னு கேட்க மாட்டியா?

"எனக்கு நம்பிக்கை இல்லாதபோது நான் எப்படிக் கேட்பேன்?"

"மந்த்ரிணி முதல் முறையாக அவனுக்கு எதிரான கருத்தைக் கூறினாள்."

"உனக்கு நம்பிக்கை இல்லையா?"

"ஆமாம்..."

"உனக்கு என் சக்தி பக்தி சரியா தெரியலை."

"உங்களைவிடப் பெரிய சக்தியா நான் தெய்வ சக்தியை நினைக்கிறேன். அந்த சக்திக்கு பூஜை பண்ணித்தான் நீங்களே

உங்களுக்கு சக்தியை தேடிக்கிட்டவர். அப்படியிருக்க, உங்களால எப்படி அந்த சக்தியை ஜெயிக்க முடியும்?''

''நீ புராணங்களை சரியாப் படிக்கலை. சூரபத்மனை ஏன் சிவனால அழிக்க முடியலை. எதுக்கு முருகனை பெற்றெடுத்தார் தெரியுமா?''

''புராணக் கதை எதுக்கு...? எப்ப ஒரு தெய்வமே காவலுக்கு இந்த ஊருக்கு வந்தாச்சோ அப்ப அதுதான் பெருசு. அதுதான் ஜெயிக்கும்!''

''பைத்தியக்காரி... காலநேரம் எனக்குத்தான் சாதகமா இருக்கு. இந்த ருத்ர வீணை விஷயத்துல நான் ஒவ்வொரு அடியையும் பார்த்து பார்த்துதான் வைக்கறேன். எவ்வளவு பெரிய வீரனா இருந்தாலும் தப்பான நேரத்துல யுத்தத் துக்குப் போனா தோத்துதான் போவான். எப்ப தொடங்கறோம் எப்படித் தொடங்கறோம்? இதுலதான் வெற்றி இருக்கு. மகாபாரதத்துல சகாதேவன் நேரம் குறிச்சுக் கொடுத்த கதை உனக்குத் தெரியுமா?''

''தெரியாது...''

''அது மட்டுமில்ல... காலநேரத்தோட சக்தியும் உனக்குத் தெரியலை. வெற்றிக்குன்னு ஒரு காலம் இருக்கு. அதுல போய் நாம நம்மை இணைச்சுண்டா போதும். மிச்சத்தை அது பார்த்துக்கும்.''

''என்னால நம்ப முடியலை...''

''பரவால்ல. நம்பாம இருக்கறதுதான் என் மாதிரி விஷயம் தெரிஞ்சவங்களுக்கு நல்லது. ஏன்னா கால நேர சக்தியை நீ தெரிஞ்சுக்கிட்டா அதைப் பயன்படுத்தி நீ என்னையேகூட அழிக்க முடியும். ஆகையால அதை நம்பாம இருக்கறதுதான் எனக்கு நல்லது.''

''உங்க முயற்சி... உங்க செயல்... இதுக்கு காலம் எந்த வகைல உதவிட முடியும்? எந்தக் காலத்துலயும் கத்தியால யாரைக் குத்தினாலும் ரத்தம் வரும். அவங்களுக்கும் வலிக்கும்.''

''முட்டாளே... குத்துப்படணும்னு இருக்கறவனைத்தான் குத்த முடியும். எல்லாரையும் குத்த முடியாது. என்மேல கத்திபடக்கூடாதுன்னா அந்த நொடி எதுக்கோ திரும்புவேன், கத்தி விலகிடும். அதுதான் காலத்தோட சக்தி...''

“இது சாமர்த்தியமான வாதம்...”

“வெச்சுக்கோ... இதுக்கு மேல விவாதம் பண்ண எனக்கும் விருப்பம் கிடையாது ஆனா ஒண்ணு மட்டும் நிச்சயம். நீ, நான் ருத்ர வீணையை திருடப் போற ஒருவன்னு தான் நினைச்சுகிட்டிருக்கே. இப்பகூட அதோட நாம ஊருக்குப் போய்டப் போறதாதான் நானும் உன்னை நினைக்க வெச் சுருக்கேன். ருத்ரன்கறவன் வெளிய எங்கயோ இருக்கறதாவும் நினைச்சிருக்கே. உண்மைல ருத்ரன் நான்தான்.”

“போதும் ஈஸ்வர். இன்னிக்கு பகல் பொழுதுல வீணை இசை கேட்டது உங்களுக்கு மறந்து போச்சு போல... ருத்ரன் வந்தாச்சு. சிவராத்திரின்னு சொன்னதுல வேற ஏதோ சூட்சுமம் இருக்கு...”

“அந்த ருத்ரன் யார் தெரியுமா?” ருத்ரேஸ்வரிடம் உடனேயே ஆவேசம் தொனித்தது. கண்கள் சிவந்துவிட்டன. அவளும் நடுங்கிப் போனாள். ருத்ரேஸ்வர் அடுத்த நொடியே “டேய் மணிகண்டா...” என்று அலறினான் சற்றுத் தள்ளி யாருக்கும் தெரியாதபடி இருளோடு இருளாக இருந்த மணிகண்டனும் உடனே வெளிச்சத்தில் மந்த்ரிணி பார்க்க வந்து நின்றான். வந்தவன் பவ்யமாகக் கைகளைக் கூப்பினான்.

“இவன்தான் அந்த ருத்ரன். தெரிஞ்சுக்கோ... இன்னிக்கு வாசிச்சது இவன்தான். ஊர் பூரா கேட்டது இவன் இசைச்ச ராகத்தைதான். நேற்றுவரைதான் சுந்தராம்பாள் சகோதரன் வாசிச்சான். ஒரு நாள் ஒருபொழுது தவறிடக் கூடாதுங்கற கணக்கு இவனாலதான் சரியாச்சு.

இவனை வரவெச்சு அதை ஒரு ரகசியம் போல வெச்சிண்டுருக்கறவ அந்த பிராம்மி. அதாவது மைதிலி. ஆனா, அவளுக்கே தெரியாம இவனை நான் வசப்படுத்திட்டேன். இன்னிக்கு இவன்தான் அந்த வீட்டுக்குள்ள போய் வீணையை எடுத்துக் கொடுக்கப் போறான். அது என்வசம் வந்தபிறகு நான்தான் ருத்ரன். இவன் உப ருத்ரன் இந்த திட்டம் பத்தி உனக்கு என்ன தெரியும்?”

“அப்ப அசோகனை திலகம் மூலமா கேட்டது எதுக்கு?”

“அவன் அசோகனா மட்டும் இருந்திருந்தா எதுக்கு கேக்கறேன்! அவனுக்குள்ளே பாபாங்கற ஒரு ஆத்மாவும் இருக்கே? அது என் முயற்சிக்குத் தடையா இருக்கக் கூடாதில்லையா?”

"அப்ப அசோகனை என்ன செய்வீங்க?"

"எதுவும் செய்யப் போறதில்லை. அவன் என் துருப்புச் சீட்டு. கோவில் சொத்தான வீணையை நான் திருடிட்டதா சுந்தராம்பா நாளைக்கு போலீஸுக்கும் கோவிலுக்கும் போக நினைக்கலாம். அப்ப அவளை கட்டிப் போடப்போற அஸ்திரம் தான் அசோகன்."

-ருத்ரேஸ்வர் சொன்னது மந்த்ரிணியை நிஜமாலுமே ஒரு உலுக்கு உலுக்கி விட்டது.

"அந்த மைதிலி, உபாசகர் இவங்கள்லாம் சும்மா விட்ருவாங்களா?"

"மைதிலியால் என்னைத் தவிர எல்லாரையும் கட்டிப் போட முடியும். அதுக்காகத்தான் அவளோட அப்பாகிட்ட தெய்வ சான்னித்யத்துல நான் அவளோட வருங்கால கணவன்கற நிச்சயத்தை உருவாக்கினேன். இந்த நொடி மைதிலிங்கறவ உடம்பு சாஸ்திர சம்பிரதாயப்படி எனக்கு நிச்சயிக்கப்பட்டது. ஆத்மாவில உள்ள பிராம்மி அவ விரும்பினா எனக்கு வாழ்க்கைப்படலாம். இல்லே விலகி ஓடணும். அது ஒண்ணு தான் அவளுக்கு வழி."

அவளுக்கும் ஒரு உண்மை தெரியும். என் விதி இப்ப முடியலைங்கற உண்மைதான் அது. அதே சமயம் எனக்கு மரணம் எப்படி வரும்கறதும் அவளுக்குத் தெரியும். அந்த விஷயத்துல நானும் ஒரு ஹிரண்யன்தான். யாராலயும் மரணமில்லாதபடி ஒரு வரபலம் இருந்ததாலதான் ஹிரண்யன் தன்னையே கடவுளா டிக்ளேர் பண்ணினான். நான் என்ன அவ்வளவு தூரத்துக்கா போய்ட்டேன்? கடவுள் இருக்கார். நான் என்னைக் கடவுள்னும் சொல்லிக்கலை. அந்தக் கடவுளுக்கும் என் அநேககோடி நமஸ்காரங்கள். அந்தக் கடவுள்கிட்ட நான் கொஞ்ச நாள் ருத்ரனா இருந்துக்கறேன்னுதான் சொல்றேன். அவ்வளவுதான்!"

சினிமா வில்லன் பேசுவது போலவும் இருந்தது ருத்ரேஸ்வர் பேச்சு.

மந்த்ரிணி மிரட்சியுடன் பார்த்தாள்.

ஒரு கால்மணி முன்பு காலாவதி ஆகிவிடுவான் என்று எண்ணியவன் மளமளவென்று காய்களை நகர்த்தி விசுவரூபம் எடுத்துவிட்டதைப் பார்த்து கிறுகிறுத்துக்கூடப் போனாள்.

அவன் ஏட்டுக்கட்டை எடுத்துக் காண்பித்தான்.

"இது என்ன தெரியுமா?"

"தெரியலை."

"முந்நூறு வருஷத்துக்கு முந்தி சதாசிவ சாஸ்திரிகள்ங் கறவர் எழுதின 'ருத்ர வீணை விலாசம்' கற ஏடு இது. அந்த வீணையோட சக்தியையும் போக்கையும் புரிஞ்சுக்க இது ஒண்ணு போதும். கச்சிதமா இது என் கைக்கு வந்தாச்சு."

என்னோட மோதின சங்கரனும் இப்ப உயிரோட இருக்கானோ, இல்லையோ... மீறி இருந்தாலும் இன்னும் ஒரு பத்து நாள்ல பரலோகம் போயே தீரணும். நாய்க்கடின்னா சும்மாவா? கூடவந்த உபாசகனையும் கட்டிப் போட்டுட்டேன்." - ருத்ரேஸ்வர் அங்கு தொட்டு இங்கு தொட்டு சங்கரன், உபாசகர் நிலை பற்றிக் கூறவும், மந்த்ரிணிக்கு குலையே நடுங்கியது.

"உபாசகர் உங்களைவிட அனுபவஸ்தர். வயசுல மூத்தவர். அவரை எப்படி உங்களால கட்டிப்போட முடிஞ்சது?" என்றாள் படுவேகமாக.

"என் சக்தி மொத்தத்தையும் ஒண்ணா திரட்டி நான் அதை சாதிச்சிருக்கேன்."

"அப்படின்னா...?"

"இந்த நிமிஷம் என்கிட்ட ஒரு மந்திர சக்தியும் கிடையாது. நானும் தெருவுல போற ஒருத்தனும் ஒண்ணு."

"அய்யய்யோ..."

"ஏன் பதர்றே? இன்னும் கொஞ்ச நாழில ருத்ர வீணை என் வசமாயிடும். அது வசமானா போதும். அவ்வளவு சக்தியும் வசமாயிடும். அதை நம்பித்தான் இந்த பிரயாசைல இறங்கி யிருக்கேன். விடியற்காலை வரை உபாசகரும் ஒரு சிலை மாதிரிதான் இருந்தாகணும். மொத்தத்துல எனக்கு எதிரான அவ்வளவு சக்திகளையும் கட்டிப் போட்டுட்டேன்."

- ருத்ரேஸ்வர் சகலத்தையும் கூறி முடித்தான். மந்த்ரிணிக்கும் அதற்கு மேல் அவனிடம் கேள்வி கேட்க எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை.

ருத்ரேஸ்வர் அவளை அலட்சியமாகப் பார்த்துவிட்டு கைக்கடிகாரத்தைப் பார்த்தான். மணி இரவு பத்து! திலகம், அசோகனுடன் வந்து கொண்டிருந்தாள்.

அதைப் பார்த்தவன் மந்த்ரிணியிடம் திரும்பி, "மந்த்ரிணி! நீ திலகம், அசோகனோட இங்க இரு. நானும் மணிகண்டனும் தாசி பங்களாவுக்குப் போறோம். நடுநிசிக்குள்ற அந்த வீணை என் வசமாயிடும். அதோட வருவேன். அதே சமயம் என் ஏற்பாடுபடி ஒரு குவாலிஸ் காரும் இங்க வந்துடும்.

பொழுது விடியும்போது அவ்வளவு பேரும் அந்த வீணையோட இந்த தஞ்சாவூர் மாவட்டத்தையே தாண்டியிருப்போம். ருத்ரன்னு ஒருத்தன் இருந்து அவன் தாசி பங்களாவுக்கு வந்து பார்த்தா, அங்க ருத்ர வீணை மாதிரியே ஒரு போலி வீணை இருக்கும். அதை நான் மந்திரசித்தியோட இருக்கும்போதே பண்ணிட்டேன். பாக்கறியா?"

ருத்ரேஸ்வர் கேட்கவும், மணிகண்டன் நகர்ந்து ஒரு மறைவான இடத்தில இருந்து அந்த வீணையுடன் வரவும் சரியாக இருந்தது. மந்த்ரிணி அப்படியே விக்கித்துப் போய்விட்டாள். அந்தப் போலி வீணையுடன் மணிகண்டனும், ருத்ரேஸ்வரும் நடக்க ஆரம்பித்தனர்.

**ம**யானம்!

அன்று எந்தப் பிணமும் விழுந்திராததால் புலையன் தன் குடிசைமுன் கட்டிலில் அமர்ந்திருந்தான். அவன் எதிரில் ஒரு வில்வமரம் மயானத்தை ஒட்டி வளர்ந்திருந்தது. கீழே சின்னதாய் ஒரு சிவலிங்கம். அதன்முன் ஒரு அகல்விளக்குகூட எரிந்து கொண்டிருந்தது.

அந்தப் புலையன் தோளிலும் பூணூல், உலகிலேயே பூணூல் போட்ட ஒரு புலையனாக அவன் மட்டுமே இருக்க வேண்டும்.

ஊருக்குள் கோயிலுக்குள் நுழையத்தான் லஜ்ஜையாக உள்ளது. ஆனாலும் நெஞ்சத்து சிவபக்திக்கு ஒரு வடிகால் வேண்டுமே?

அதுதான் வில்வ மரத்தடி சிவலிங்கம் அவனுக்கு ஒரு சிவாலயமாகி விட்டது. அது எப்படி என்று தெரியவில்லை. அவனிடம் அபார இசைஞானமும் இருந்தது.

எந்த வேலையும் இல்லாமல் இப்படி விச்ராந்தியாக அமர்ந்திருக்கும் போது பாட்டுப் பாடிக் கொண்டே இருப்பான். தோற்றமும் ஒரு சிவப்பழம் போலத்தான் இருக்கும்.

அப்பொழுதும் பாடிக் கொண்டுதான் இருந்தான் அப்படியே அவன் தலை அவ்வப்போது திருப்பி சுற்றுப்புறங் களையும் பார்த்தது. அப்போது ஓரிடத்தில் மைதிலி போய்க் கொண்டிருந்தாள். மயானப் பாதையில் நள்ளிரவில் ஒரு பெண் போகிறாள் என்றால் அவளை என்னவென்பது?

அவன் பாட்டு தடைபட்டு - எழுந்து அவளை நோக்கிச் சென்றான். "யாரது?" என்று குரலும் கொடுத்தான்.

அவளும் நின்று திரும்பிப் பார்த்தாள்.

ஒரே பார்வைதான்!

கையில் சூலமுடன் காளிமாதாவை பார்ப்பது போல ஒரு தோற்றம். வெலவெலத்து விட்டான் புலையன். அவளோ தொடர்ந்து நடந்தாள். அடுத்து சில நிமிடத்திலேயே ருத்ரேஸ்வரும், மணிகண்டனும்... அவனுக்குப் புரிந்துவிட்டது - இன்று இரவு என்னவோ நடக்கப் போகிறது என்று.

வானத்தைதான் அண்ணாந்து பார்த்தான். அப்படியே போய் கட்டிலில் அமர்ந்தவன் ஏதோ முடிவுக்கு வந்தவன் போல அங்கிருந்து கிளம்பி தாசி பங்களா செல்லும் பாதையில் அவனும் மறைந்தான்!

**க**ல் மண்டபம்!

பானு உபாசகருடன் காத்திருந்தாள். ஒருவரையும் காணவில்லை. அந்த இரவு நேரத்தில் அங்கே கொட்டக் கொட்ட முழித்தபடி அமர்ந்திருப்பது அவள் வரையில் மிகவும் கொடுமையாகக்கூட தோன்றியது.

அடிக்கொரு முறை கைக்கடிகாரத்தை பார்த்துக் கொண்டாள். ரேடியம் முட்கள் மணியை துல்லியமாக காட்டின. மனதில் அவசரம். இனம் புரியாத குழப்பம் வேறு.

அவ்வப்போது ஓடிப் போன சங்கரன் என்ன ஆனானோ, ஏது ஆனானோ என்கிற கவலை வேறு... அந்த நொடி அவள் முற்றிலும் எதிர்பாராத நிலையில் ருத்ர வீணையின் ராக ஒலி கேட்கத் தொடங்கியது. முதலில் நயன ரஞ்சனி ராகம்.

கேட்பவர் மனம் பரவசப்படும் அதேசமயம் கண்களிலும் ஒரு இனம் புரியாத குளுமை பரவும். பானு அப்படியே தன்னை மறந்து அதில் மூழ்க ஆரம்பித்தாள்.

**ப**ட்டர் வீடு!

*உபாசகரைக் காணாததால் கொட்டக் கொட்ட விழித்தபடி உட்கார்ந்திருந்தாள் உபாசகர் மனைவி.*

*சங்கரனைக் காணாத திகைப்போடும் அவனுக்கு கொஞ்சமும் பொறுப்பில்லை என்கிற வருத்தமுமாக பட்டர். அவனைத் தேடி அழைத்து வருகிறேன் என்று புறப்பட்டுவிட்ட மைதிலியும்கூட அவரை வருத்தப்பட வைத்திருந்தாள். ஒரு வயசுப் பெண்ணையா தேட அனுப்புவது என்று யாராவது கேட்டால்?*

*ஆனால், மைதிலி அவரைப் பார்வையாலேயே கட்டிப் போட்டுவிட்டுப் புறப்பட்டுவிட்டாள். அந்த சூழலில் அவர்களுக்குள்ளேயும் அந்த ராகம் ஊடுருவியிருந்தது. தூக்கம் வராமல் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்த காயத்ரி கூட எழுந்து உட்கார்ந்து கண்களைக் கசக்கிக் கொள்ள - மெல்ல பார்வை மங்கலாக தெரிய ஆரம்பிப்பது போல் இருந்தது. இதே நிலைதான் உபாசகர் மனைவியிடமும்!*

*“மாமா... மாமா... எனக்கு கொஞ்சம் கொஞ்சமா திடீர்னு பார்வை தெரியறது. எங்க அவர்? அவர் வந்துட்டாரா?” என்று அவள் ஒரு பறமும், காயத்ரி ஒருபுறமும் பரவசப்பட, பட்டர் ‘இது என்ன அதிசயம்’ என்று வாயைப் பிளக்க... சில நிமிடங் களிலேயே இருவருக்கும் முழு பார்வையும் பளிச்சென்று தெரிந்தது.*

*அப்படியே அதுவரை கேட்ட ருத்ர வீணையின் ராகத் திலும் ஒரு மாறுதல், ‘கல்யாண தாகினி’ ராகம் இசைக்கத் தொடங்கியது. எந்த ஒரு செயலாக இருந்தாலும் கல்யாண தாகினி வாசிக்கப்படும்போது அது நல்லபடியாகவும், வெற்றிகரமாகவும் நடக்கும். அப்படியே ‘ஸ்வரப்ரகாசினி’ ராகமும் ஒலித்தது. கேட்கும் உள்ளங்களில் கடவுள் தன்மையைத் தட்டி எழுப்பும் ராகம்.*

*இந்த ராகங்களின் விளைவு, கர்ணம் வீட்டுப் பூஜை அறையிலும் எதிரொலித்தது. திரும்பவும் அங்கே ராக மந்திர ஏட்டுக்கட்டு! அதன் மேல் அந்த நாகம்! கர்ணம் மனைவிதான் முதலில் பார்த்தாள். கர்ணத்தை எழுப்பிக் காட்டினாள்.*

*“அன்னம்... நமக்கு இனி நல்ல காலம். எப்படிக் காணாம போச்சோ அப்படியே திரும்பிடுத்து. போடி. போய் கற்பூர ஆரத்தி காட்டு” என்றார்.*

அன்னபூரணியும் சர்ப்பத்தோடு கூடிய அந்த ஏட்டுக் கட்டுக்கு கற்பூர ஆரத்தி காட்டத் தொடங்கினாள்.

ராக அலை ஊர் முழுக்க இப்படி மிதந்தபடி இருக்க, அங்கங்கே அவரவர் மனநிலைக்கும் மனக் குறைக்கும் ஏற்ப மாற்றங்கள். தாசி பங்களா முன் திலகம் கூட ஒரு மாயக்கட்டில் இருந்து விடுபட்டவள் போல தலையை உதறிக் கொண்டாள். அசோகனுடன் அந்த பங்களா முன் நிற்பது அவளுக்கே எதனால் என்று தெரியவில்லை.

ருத்ரேஸ்வரை பார்த்தபோது அவன் காதுகளை மூடியபடி இருந்தான். புத்திசாலி! இப்படி ஏதாவது நடக்கும் என்று தெரிந்து வைத்திருந்தான். ஆனால், மந்த்ரிணியிடம்கூட மாற்றம்.

"திலகம்! வா நாம போகலாம். சிவன் சொத்து குல நாசம். ஈஸ்வருக்கு வெறி பிடிச்சிருக்கு. இனியும் ஈஸ்வருக்கு உதவி செய்தா அந்த பாவம் நம்மை சும்மா விடாது" என்றபடியே மந்த்ரிணி, திலகத்தையும் அசோகனையும் இழுத்துக்கொண்டு ஓடினாள்.

ருத்ரேஸ்வரால் வேடிக்கைதான் பார்க்க முடிந்தது. எல்லா சக்தியையும் உபாசகரைக் கட்டிப்போட பயன்படுத்திவிட்டதால் தன்னை ஒரு சராசரி மனிதனாக உணர்ந்தவன் நடுநடுவே வீணை இசைக்கு மயங்கி ஆக்ரோஷத்தையும் இழக்கலானான்.

மணிகண்டனும் அவனோடு இருக்க விருப்பமின்றி திலகத்தையும் அசோகனையும் பின்தொடர்ந்து ஓடிவிட, எதிரில் பானு உபாசகரோடு வந்தபடி இருந்தாள் உபாசகரை ருத்ர வீணை ராகம் மீட்டு எடுத்திருந்தது. ஓடுபவர்களைப் பார்த்தவர் அர்த்தபுஷ்டியோடு பானுவைப் பார்த்தார்.

"ஸ்வாமி! நடக்கக் கூடாத ஏதோ நடக்கற மாதிரி தெரியுது. அதான் எல்லாரும் ஓடுறாங்க" என்றாள்.

"பைத்தியம்... அவங்க விட்டா போதும்னு திருந்தி ஓடறாங்க ருத்ர வீணை தன் சக்தியை இப்ப ஒவ்வொரு மூலை முடுக்குலயும் காட்டிண்டு இருக்கு. அதுதான் எனக்கு பிரக்ஞை கொடுத்தது. அடுத்து நடக்கப் போற அசுரவதத்தைப் பார் " என்று அவர் எந்த அர்த்தத்தில் சொன்னாரோ தெரியவிலலை. ஒரு பெண்ணின் அதீதமான சிரிப்பு சப்தம் அந்த நேரம் காற்றை ஊடுருவிக் குடாய்ந்தது.

பானுவுக்கோ உடம்பெல்லாம் நடுங்கியது. மைதிலிதான் தாசி பங்களா சமாதிக் கதவு முன் நின்று சிரித்துக் கொண் டிருந்தாள். எதிரில் ஒருவித திகைப்போடு ருத்ரேஸ்வர்.

“முட்டாளே... உனக்கு சாவு இல்லைன்னு உன் ஜாதகம் சொன்னதையும், உன் மந்திர சித்திகளையும் நம்பின நீ ருத்ர வீணையோட நாதம் எப்ப எப்படிச் செயல்படும்கறத கணிக்கத் தவறிட்டே.... என்னையே கட்டிப் போட்டுட்டதா உனக்குள்ள கர்வம் வேற... உன்னை ஹிரண்யனோட ஒப்பிட்டு பேசியிருக்கே. அது ஒரு வகைல சரிதான். ஹிரண்யனுக்கு நரசிம்ம மூர்த்தி. உனக்கு யார் தெரியுமா?”

அவள் கேட்ட நொடியே நாய் போல குரைத்துக் கொண்டு சங்கரன் அங்கே படுவேகமாக வந்து நின்றான். கண்களில் கொடூரம்! நாவில் ஈரப் பெருக்கு! சட்டை எல்லாம் கிழிந்து பார்க்கவே கோரமான தோற்றம்.

“நீ பார்க்கற சங்கரன் இப்ப சங்கரனுமில்ல; நாயுமில்ல, இரண்டும் கலந்த ஒரு கலவை. அந்த நரசிம்மம் மாதிரி... ஒரு பிராமண பிரம்மச்சாரி மேல நாயை ஏவிவிட்டதால உன் மந்த்ர சக்தியும், ஹோம பலன்களும் உன்னை விட்டு எப்பவோ போயாச்சு. இப்ப இவன் உன்மேல பாஞ்சா உன் நிலை என்ன தெரியுமா?”

அவள் ஆவேசமாகக் கேட்க, அவன் கண்களில் முதல் முறையாக பயம் தோன்றத் தொடங்கியது.

“உனக்கு எவ்வளவோ சந்தர்ப்பங்கள் கொடுத்தேன். உபாசகரும் புத்தி சொன்னார் உன் புத்திக்கு அது எதுவும் உறைக்கல. ருத்ரனாகறத ஒரு பெருமையா நினைச்சே. உண்மைல அது ஒரு தவம். லௌகீக பார்வை பார்த்தா சாபம்! தனக் கென வாழாம கோவிலுக்காகவும் ஜனங்களுக்காகவும் வாழற வாழ்க்கை அது. அப்படி ஒரு வாழ்க்கை வாழ உன்னால முடியுமா?” மைதிலி உச்சத்திற்கே போய்விட்டாள். மொத்த சக்தியும் போய், வீணை நாதமும் காதில் விழுந்து, மைதிலி யும் பிராம்மியாக நின்று கேள்வி மேல் கேள்வி கேட்க, அவனுக்குள்ளும் மெல்ல ஒரு மாற்றம். ஆனால், சங்கரன் அவன் முழுவதுமாக மாற இடம் கொடுத்துவிடாதபடி ஒரே பாய்ச்சலாக அவன்மேல் பாய்ந்தான். அடுத்த சில நிமிடங்கள் அங்கே ஒரு நாயுடன் ஒரு மனிதன் கட்டிப் புரண்டு

போரிடுவதுபோல ஒரு காட்சி அரங்கேற ஆரம்பிக்க, பானு கண்களை மூடிக்கொண்டாள்.

உபாசகரோ, "அம்மா! இவனை மன்னிச்சுவிட்டுடு... இனி இவனாலதான் என்ன பண்ணிட முடியும்?" என்று மைதிலியாகிய பிராம்மி முன் கைகளைக் கூப்பியதோடு மண்டியும் போட்டிருந்தார்.

அவளும் மெல்ல சாந்தமாகி குதறிக் கொண்டிருந்த சங்கரனைப் பார்க்க அவனிடமும் ஆவேசம் குறையத் தொடங்கியது. கிழித்துக் குதறப்பட்ட நிலையில் ஒரு மூலையாகப் பார்த்துப் போய் விழுந்தான் ருத்ரேஸ்வர்!

சிவராத்திரி ஊரே அமளிதுமளியில் இருந்தது. எங்கு பார் மனிதத் தலைகள். கல்மண்டபத்தை ஒட்டி கல்யாணசுந்தரம் நாதஸ்வரத்தை வெளுத்து வாங்கிக் கொண்டிருந்தார். முன்னால் ஊரே அமர்ந்து ரசித்துக் கொண்டிருந்தது. கல்மண்டபம் மட்டும் பட்டுப் பாய் விரிக்கப்பட்டு ருத்ரன் வந்து வீணை வாசிக்கத் தோதாக காத்துக் கிடந்தது.

கோயில் கோபுர முகப்பில் இருந்து அந்த மண்டபத்திற்கு வரும் வரை பாதை உருவாக்கப்பட்டு சிவப்புக் கம்பளமும் விரிக்கப்பட்டிருந்தது. பத்திரிகையாளர்களும், டி.வி. கேமராக் காரர்களும் சுற்றிச் சுற்றி வந்தபடி இருந்தனர். மைதிலி, காயத்ரியோடு அப்பாவுக்கு ஒத்தாசையாக சந்நிதியில் ஓடியாடிக் கொண்டிருந்தாள். அவ்வப்போது ஆவல் தாளாமல் வாசல் பக்கம் பார்த்தாள். யார் வந்தாலும் பார்வை வாசல் பக்கம்தான் சென்றது.

சின்ன சப்தத்திற்குகூட மொத்த கூட்டமும் திரும்பித் திரும்பிப் பார்த்தது. நேரம் செல்லச் செல்ல கூட்டத்தில் சரியான நெருக்கடி வேறு. உபாசகர் மௌனமாக தன் மனைவியுடன், வரப்போகும் ருத்ரனை தான்தான் முதலில் பார்க்க வேண்டும். முதல் வணக்கமும் தான்தான் கூற வேண்டும் என்கிற துடிப்பில் இருந்தார். ருத்ரேஸ்வர்கூட மனம் திருந்தியவனாக மந்த்ரிணி யோடு அமைதியாக ஓரிடத்தில் அமர்ந்திருந்தான்.

சுந்தராம்பாளும் பானுவும் வடிவாம்பாளும் தனியாக ஒரு இடத்தில் அமர்ந்திருந்தனர். சங்கரனையும், சாமிநாதனையும், கணேசனையும், அந்த மணிகண்டனையும்தான் காணவில்லை. இவர்களில் ஒருவர்தான் ருத்ரனோ? கேள்வி கொத்தி எழுந்தது.

பானுவுக்கு சங்கரனாக இருந்துவிடக்கூடாதே என்கிற கவலை. மைதிலிக்கோ சாமிநாதனாக இருந்துவிடக் கூடாதே என்கிற கவலை. காயத்திரிக்கும் கணேசனை நினைத்துக் கவலை!

நல்லவேளை... இவர்கள் யாரும் இல்லை என்பது போல அவர்கள் மூவரும் சிரித்தபடி கோவிலுக்குள் நுழைந்துகொண் டிருந்தனர். உபாசகரிடம் நெஞ்சத்துடிப்பு அதிகமானது.

வரும் ருத்ரன் யாராக இருந்தாலும் சரி... தன் சபதத்துக்கு அவன் துணை செய்ய வேண்டும். தன்னோடு தன் சொந்த ஊருக்கு வந்து சில காலம் தங்கி அந்த ஊரை வளப்படுத்த வேண்டும். அதற்கு ஒரு குந்தகமும் வந்துவிடக்கூடாது என்று பிரார்த்தித்து கொண்டார்.

அப்பொழுது நாதஸ்வர இசையையும் மீறி வீணை இசை கேட்க ஆரம்பித்தது. கல்யாணசுந்தரமும் தன் வாசிப்பை நிறுத்தினார். ருத்ர வீணை இசை துல்லியமாக பரவத் தொடங்கி யது. எங்கிருந்து வருகிறது என்பது முதலில் பிடிபடவில்லை. பிறகு நாயன்மார் சிலைகள் உள்ள வரிசையில் பாபா சிலைக்கு அருகில் என்று கண்டறிந்து எல்லோரும் பாய்ந்து அங்கே சென்றபோது ருத்ரவீணையும் கையுமாக **சாமிநாதன்!** முந்நூறு வருட ரகசிய வாசிப்பை இனி பகிரங்கமாக புரியப்போவது அவனும் அவனது வம்சாவளியினரும்தான். முன்போல சிறை இல்லை. கட்டுப்பாடு இல்லை. காவலுக்கு ஒரு ஊரே இருக்கும் ஒரு கட்டுக்கோப்பான சூழல்.

சாமிநாதன் அங்கே கையில் ருத்ர வீணையுடன் அமர்ந்து வாசித்துக் கொண்டிருந்தான். அப்படியானால் முன்பே வந்த சாமிநாதன்...? சங்கரனும் மற்றவர்களும் வேகமாக திரும்பிப் பார்த்தனர் தோடீஸ்வரர் சந்நிதிக்குள் ஒரு சாமிநாதன் நுழைகிற மாதிரி தெரிந்து, ஓடிப்போய் பார்த்தனர். ஆனால், உள்ளே ஒருவருமில்லை.

சங்கரனுக்கு அப்படியே சிலிர்த்தது. பானுவோ நிலை ஸ்தம்பித்தாள் சுந்தராம்பாள், வடிவாம்பாள் என்று எல்லோருமே அப்படியே பிரமிப்பில் புதைந்து போயிருந்தனர். வெளியே பாபா சிலை.

அருகிலோ சாமிநாதன் கைகள் ருத்ர வீணை மேல் விளையாடிக் கொண்டிருக்க, அற்புதமான கல்யாணி ராகம். மொத்த கூட்டமும் அமைதியில் புதைந்து போயிற்று.

உபாசகர் மட்டும் ஆனந்தக் கண்ணீரை அடக்க மாட்டாமல் மைதிலியைப் பார்த்தார். அவளிடமும் ஆனந்தக் கண்ணீர். தனக்குப் பேசவரும் என்பதையும் மறந்து ஜாடையால் பேச அவள் முனையவும்தான் அவளை விட்டு அவளை ஆட்கொண்ட பிராம்மி விலகிவிட்டது உபாசகருக்குப் புரிந்தது. சாமிநாதன் வடிவில் விலகிவிட்டது உபாசகருக்குப் புரிந்தது. சாமிநாதன் வடிவில் இதுவரை இங்கே இருந்ததும் யார் என்று அவருக்கு விளங்கிவிட்டது.

அதே சமயம் சந்நிதியில் ஒரு ஓலை இருந்ததை பட்டர் எடுத்து வந்து கைகள் நடுங்க கல்யாணசுந்தரத்திடம் நீட்டினார். அதில்...

**'நாதக்கலைஞன் புதல்வனே! இனி வீணா நாதத்துக்கும் உரிய ருத்ரன். ருத்ர வீணை தேடியே வந்த உபாசகனே இனி காப்பாளன். ருத்ர வீணையும் உலகைச் சுற்றி வரட்டும். அதன் இசை பரவும் இடமெல்லாம் இன்பம் துளிர்க்கட்டும். உற்ற துணையாக சிவமிருக்கும்!'** என்கிற எழுத்துகளுக்கு கீழே லிங்க முத்திரை

கல்யாணசுந்தரம் உரக்க அதை வாசித்து முடிக்க, "தென்னாடுடைய சிவனே போற்றி" என்றார் கர்ணம் ரோமாஞ்சனச் சிலிர்ப்போடு. "எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி..." என்கிற எதிரொலி வானம் வரை ஒலித்தது.

முற்றும்

